# குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு

## முதல் தொகுதி

உரையாசிரியர்
**புலவர் அ. மாணிக்கனார் M.A.,**
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
அ.மா.ஜெயின் கல்லூரி சென்னை.



**வர்த்தமானன் பதிப்பகம்**
ஏ. ஆர். ஆர். காம்ப்ளக்ஸ்,
141, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர்,
சென்னை - 600 017. ☎ 825 79 95

சிலப்பதிகாரம், மணிமேகலை, நாலடியார் முதலியவற்றின்
உரையாசிரியரும் ஜைனதத்துவ நூலாசிரியரும்
ஸ்ரீ புராணச் செம்மலும்
சொல்லரசருமான

**பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரனார் எம்.ஏ.,**

அவர்களின் மகனாரும்
வாணிகத்திறனும் நுண்மாண்நுழைபுலமும்
சுறுசுறுப்பும் உடைய

**ஸ்ரீ வர்த்தமானன்** M.Sc.,

அவர்களுக்கு இந்நூல்
மாலையைச் சூட்டுவதில் மகிழ்கிறேன்.

**–அ. மாணிக்கம்**

# பொருளடக்கம்


எண் பக்கம்

1. கந்தர் கலிவெண்பா ........................................ 7
2. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ........................ 58
3. மதுரைக் கலம்பகம் ........................................ 256
4. நீதிநெறிவிளக்கம் .......................................... 411
5. திருவாரூர் நான்மணிமாலை ............................ 513

# முன்னுரை

குமரகுருபர அடிகளின் பிரபந்தத் திரட்டு என்பது பதினான்கு நூல்களைக் கொண்டது.

குமரகுருபரரின் பாடல்களில் மிக்குக் காணப்படுவது இன்னோசை. செய்யுட்களின் பொருளில் நாம் செல்வதற்கு முன் நம்மைக் கவர்வது இந்த இனிய ஓசையே யாகும். ஓர் ஆற்றின் இன்னோசையை இவர் பாடல்களில் காணலாம்.

**கந்தர்கலிவெண்பா:** முதல் நூலான இக் கலி வெண்பா குமரகுருபரர் ஊமைத் தன்மைநீங்கிய போது பாடப்பட்ட முதல் நூலாகும். இந்நூல் பாராயண நூலாக விளங்குகிறது. பிற்காலத்தில் இதைப் பின்பற்றிக் கலிவெண்பா நூல்கள் பல தோன்றினமையே இந்நூலின் சிறப்பை விளக்கும்.

இதில் ஆசிரியர், முருகனின் பல்வேறு ஆற்றல்களையும், அப்பெருமானுக்குரிய வேல், சேவற்கொடி ஆகியவற்றையும் விளக்கும் அழகு வியக்கத்தக்கது. தெய்வயானை வள்ளி ஆகிய பெருமாட்டிகள் இதில் பாராட்டப்படுகின்றனர். அப்பெருமான் ஆறு முகங்கள் கொண்ட விதத்தையும், ஆசானாக இருந்து சிவபெருமானுக்குப் பிரணவ மந்திர உபதேசம் செய்தது பற்றியும் கூறப்படுவன நினையத் தக்கவை. இந்நூலின் கண்ணிகள். 122 சிவபெருமானின் இறை தத்துவம் இதில் முதற்கண் முருகப்பெருமானுக்கு எடுத்துரைக்கப்படுகின்றது. (1-36)

எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமை பாலிக்கப் பெற்றவர் குமரகுருபரர் என்பதனை இதனால் அறியலாம்.

**பிள்ளைத் தமிழ் இரண்டு:** இத்திரட்டில் இரண்டு பிள்ளைத் தமிழ்கள் உள்ளன. 1. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் 2.முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்.

தெய்வத்தையோ அரசனையோ மற்றும் உயர்ந்தோரையோ குழந்தையாய்ப் பாவித்துக் காட்டிச் செங்கீரை முதலிய பத்துப் பருவங்கள் அமையப் பாடுவது பிள்ளைத் தமிழ். இவ்விரண்டும் இனிய சந்தங்களுடன் தோன்றிய காலம் தொட்டு இன்று வரை சிறந்து விளங்குவன; பிள்ளைத் தமிழ்க்குரிய இலக்கணத்தை

முற்றும் கொண்டு விளங்குவன. குழந்தைகளின் இயல்புகளையும் விளையாடல்களையும் இவை இனிதின் புலப்படுத்தக் காணலாம்.

**கலம்பகங்கள் இரண்டு:** இத் தொகுப்பில் இரு கலம்பகங்கள் விளங்குகின்றன. அவை மதுரைக் கலம்பகம், காசிக் கலம்பகம். மதுரையைப் பற்றியும் மீனாட்சியம்மையைப் பற்றியும் சோமசுந்தரக் கடவுளைப் பற்றியும் மதுரைக் கலம்பகத்தில் காண்கின்றோம். கலம்பக உறுப்புகள் பதினெட்டு. அப் பதினெட்டும் இதில் இலங்குகின்றன. திருவிளையாடற்புராணச் செய்திகளை இதனுள் காணலாம். மதுரையின் சிறப்புப் பரக்கப் பேசப்படுகின்றது.

காசிக் கலம்பகத்தில் காசியைப் பற்றிய செய்திகளைக் காண்கின்றோம். காசியில் இறப்பவர்க்கு முத்தி கிடைக்கும் என்பது இதில் சுட்டப்படுகின்றது. திருப்பனந்தாள் மடத்தினைச் சார்ந்த ஒருமடம் இங்குள்ளது. கற்பனை, தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சியணி முதலிய அணிநயம் இதில் மிகுதி. பிச்சியார் கொற்றியார், மதங்கியார், மடக்கு, அம்மானை, சித்து, குறம் பற்றிய பாடல்கள் சுவை மிக்கவை.

**நீதிநெறி விளக்கம்:** இந் நூல் அறத்தைக் கூறுவதாகும். திருக்குறள் கருத்தை இந்நூலின் கண் விளக்கமாக ஆசிரியர் உரைத்துச் செல்கின்றார். பெரும்புலவர் தியாகராயச் செட்டியார் அவர்கள் 'திருக்குறள் பருவத்தில் பெற்ற பிள்ளை' என்று பாராட்டுவார். சமயச் சார்பு இல்லாது பொதுவான அறநெறி திருக் குறளில் கூறப்பட்டிருப்பது போல், இதிலும் கூறப்பட்டுள்ளது. பள்ளி மாணவர்களுக்குப் பாடமாக இந்நூல் அமைந்துள்ளது இதன் சிறப்பை விளக்குவதாகும்.

**நான்மணிமாலை:** வெவ்வேறான நான்கு மணிகளால் அமைக்கப்படும் மாலை போன்று, வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்பவை அமைய அந்தாதித் தொடையாய் அமையப் பாடப்படுவது இதன் இலக்கணம் ஆகும். இவர் பாடிய திருவாரூர் நான்மணி மாலையில் மேற்கூறப்பட்ட பாக்கள் அமைந்துள்ளதைக் காணலாம். திருவாரூர் - அத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவர் - அவர் நிகழ்த்திய திருவிளையாடல்கள் முதலிய செய்திகளை இந்நூலில் காண்கின்றோம்.

# 1. திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா

## இறைவர் இயல்பு

1. பூமேவு செங்கமலப் புத்தேளும் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும் - தேமேவு

2. நாதமும்நா தாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய் - ஆதிநடு

3. அந்தம் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தம் தணந்த பரஞ்சுடராய் - வந்த

4. குறியும் குணமும்ஒரு கோலமும்அற்று எங்கும்
செறியும் பரம சிவமாய் - அறிவுக்கு

### தெளிவுரை

1. பொலிவு பொருந்திய செந்தாமரையில் வீற்றிருக்கின்ற நான்முகனும் திருவருளால் அல்லாது உலகியல் அறிவால் தெளிவதற்கு அரிய யாப்பு அமைதி பொருந்திய தெய்வத்தன்மை கொண்ட பழைய வேதங்களும், தெய்வத்தன்மையுடைய

2. நாத தத்துவமும் அந்த நாத தத்துவத்தினது முடிவாய் விளங்கும் உண்மைப் பொருளும், குற்றம் நீங்கிய உயிர் அறிவும் காண்பதற்கு இயலாத அறிவின் வடிவாய்,

3. தோற்றம், நிலைபேறு, அழிவு என்னும் மூன்றும் கடந்த மெய்யறிவு இன்பமாய், இயல்பாகவே வினையினின்றும் நீங்கிய பேரொளிப் பிழம்பாய்,

4. உயிர் தனது அறிவால் இன்ன பெயர் உடையவன் என வழங்கி வருகின்ற ஒரு பெயரும் ஒரு குணமும் ஒரு தோற்றமும் இன்றி எங்கும் நிறைந்துள்ள மேலான சிவபரமாய்

**விளக்கம்**

அடி 1 முதல் 36 வரை சிவபெருமானுக்குரிய குணங்கள் முருகப்பெருமானுக்கு ஏற்றிக் கூறப்படுகின்றன. இருவருக்கும் வேற்றுமை இல்லாமை கருதி இவ்வாறு உரைக்கப்படுகின்றது.

1. குமர குருபரர் திருச்செந்தூர் ஆண்டவனின் அருளால் ஐந்து வயது வரை இருந்த ஊமை நீங்கப் பெற்றார். அப்போது அம்முருகனின் அருளை நினைந்து 'என்சொல்லிப் பாடுவேன்' எனத் திகைத்து நின்றார். அப்போது முருகப் பெருமான் தம் தோளினின்று ஒரு பூவை வீழ்த்தியருளினார். ஆதலால் வீழ்த்திய பூவையே முதன் மொழியாகக் கொண்டு பாடுக என்பது செந்திலாண்டவன் குறிப்பு எனக் கொண்டு பூ என்ற சொல்லை முன் வைத்துப் 'பூமேவு' எனத் தொடங்கிப் பாடுகின்றார். பூ என்பது மங்கலச் சொல். மங்கலச் சொல்லால் பாட வேண்டும் என்பது நூல் வழக்கு.

பூமேவு - பொலிவு பொருந்திய. பூ - பொலிவு. செங்கமலப் புத்தேள் - செந்தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன். புத்தேள் - தேவர்; நான்முகன். தேறரிய - தெளிந்து அறிய இயலாத. முருகனின் இயல்பை - குணங்களை - நான்முகனும் அறிந்து கொள்ள இயலாது.

பா - யாப்பு. பழமறை - பழமையுடைய வேதங்கள். தேமேவு - தெய்வத்தன்மை கொண்ட.

2. நாதமும் - நாத தத்துவமும், நவை தீர்ந்த - குற்றம் நீங்கப் பெற்ற. போதமும் - உயிர் அறிவும்.

3. ஆதி நடு அந்தம் கடந்த - முதலும் நடுவும் முடிவும் ஆகியவற்றைக் கடந்து. நித்தியானந்த போதமாய். நித்தியம்; (நிலைபேறு - சத்து) ஆனந்தம் - இன்பம். போதம் - மெய்யறிவு.

இம்மூன்றும் சச்சிதானந்தம் என்று அழைக்கப்படும். பந்தம் தணந்த - இயல்பாகவே பாசத்தினின்றும் நீங்கிய. பந்தம் - கட்டு; தளை.

4. குறி - பெயர். கோலம் - வடிவம். இறைவர்க்கு இட்டு வழங்கி வரும் பெயரும் கோலமும் இல்லை. ஆயினும் அவர்க்கு இட்டு வழங்குவன வெறும் உபசாரமாகும்.

குணம் என்றது மூன்று வகைப்படும். அவை: தாமதம், இராசதம், சாத்வீகம். இவை உயிர்களுக்கு அமையப் பெற்றிருப்பது போல் இறைவனுக்கு இல்லை. எனினும் அப் பெருமானுக்குச் சிறந்த குணங்கள் உள்ளன. அவை பின் வருமாறு:- 1. தன்வயத்தனாதல், 2. தூய உடம்பினன் ஆதல், 3. இயற்கையுணர்வினன் ஆதல், 4. முற்றுமுணர்தல், 5. இயல் பாகவே பாசங்களின் நீங்குதல், 6. பேரருள் உடைமை, 7. முடிவில் ஆற்றல் உடைமை, 8. வரம்பில் இன்ப உடைமை. இவை பற்றியே வள்ளுவர் 'எண் குணத்தான்' என்று சுட்டிப் போந்தார்.

இறைவனுக்கு ஒரு வடிவம் இல்லை. நாம் வடிவங்களாகக் கொண்டவை எல்லாம் உண்மையாகா. உபசாரமாக இங்ஙனம் உரைக்கின்றோம். எனவே மாணிக்க வாசகர், ''ஒரு நாமம், ஓர் உருவம் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ!'' என்றார். எங்கும் நிறைந்த பரம் பொருள், ஆதலால் 'எங்கும் நீக்கமற நின்ற நிலை காட்டி' என்றார்.

## இறைவர் இயல்பு

5. அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மனாதிகளுக்கு எட்டா வடிவாய்த் - தனாதருளின்

6. பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சம்என நிற்கும் தனிப் பொருளாய் - எஞ்சாத

7. பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வும்
காரணமும் இல்லாக் கதியாகித் - தாரணியில்

8. இந்திரசா லம்புரிவோன் யாவரையும் தான்மயக்கும்
தந்திரத்தில் சாராது சார்வது போல் - முந்தும்

9. கருவின்றி நின்ற கருவாய் அருளே
உருவின்றி நின்ற உருவாய்த் - திரிகரணம்

10. ஆகவரும் இச்சை அறிவு இயற்ற லால்லய
போகவதி காரப் பொருளாகி - ஏகத்து

## தெளிவுரை

(5) கால எல்லைக்கு உட்பட்ட எத்தகைய அறிவுக்கும் எட்டாத காலம் கடந்த பேரறிவுப் பொருளாய், உயிர்களை ஈடேற்றச் செய்தருளும் ஐந்தொழிலுக்கும் அப்பாற்பட்டதாய், கால எல்லைக்கு முற்பட்ட காலத்திலிருந்து மனம் முதலிய கருவிகளுக்கு எட்டாத வடிவாய்த் தன் கருணையால்

6. தன் பேரருளால் ஐந்து வகையான திருவுருவைக் கொள்ளும் பேரின்ப வடிவாய், எல்லா உயிர்களுக்கும் அடைக் கலமாகும் என்று விளங்கும் ஒப்பற்ற பொருளாய்க் குறைவில்லாத

7. நிறைவாய் எப்போது உள்ளதாய் பிறப்பும் இறப்பும் பற்றும் தான் தோன்றுதற்குக் காரணமும் இல்லாமல் கதியாய், இவ்வுலகத்தில்

8. இந்திர சால வித்தை செய்பவன் எல்லாரையும் மயக்குவதைப் போன்று தான் மனம் பொருந்தாது இருந்தும் அதனைக் காண்பவர்க்கு அவ்வித்தையில் மனம் பொருந்தி நிற்பவனாய்க் காட்டுமாறு போல

9. தனக்கு முந்தைய மூலப் பொருள் ஒன்றும் எதுவும் இன்றி எல்லாப் பொருட்களுக்கும் தானே மூலமாய், வினைவயத்தால் அன்றி அருள்வடிவமான வடிவாய் நிற்பதாய், உயிர் செயலாற்றுதற்கென மன மொழி மெய் என்னும் முக்கருவிகளும் அமைந்துள்ளதைப் போல் தனக்குள்ள

10. விருப்பம் அறிவு தொழிற்பாடு என்ற மூன்றினால் ஒடுக்கம் நுகர்வு செயற்பாடு ஆகிய மூன்றையும் செய்யும் பொருளாய்;

**விளக்கம்**

5. அறிவுக்கு அனாதியாய் - இறைவன் உயிர்க்கு அறிவும் உணர்வும் தந்த பின்னரே அவை இறைவனைப் பற்றி நினைக்கவும் அவன் புகழ் பேசவும் முற்படும். ஆதலால் 'அறிவுக்கு அனாதியாய்' என்றார். மனாதிகள் - மனம் மொழி மெய் என்பன. ஐந்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

6. பஞ்சவித ரூபம் - நான்முகன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன். தஞ்சம் - பற்றுக்கோடு; அடைக்கலம். தனிப் பொருளாய் - ஒப்பற்ற பொருளாய். எஞ்சாத - குறைவற்ற.

7. பூரணமாய் - நிறைவான பொருளாய். நித்தமாய் - நிலைபேறு உடையதாய். போக்குவரவு - இறப்பு, பிறப்பு. புணர்வு-சம்பந்தம். கதி - எல்லாப் பொருட்களும் புகுந்து அடைக்கலமாகும் இடம்; வீடுபேறு.

8. இந்திரசாலம் - இல்லாததை உள்ளதாகவும் உள்ளதை இல்லாததாகவும் காட்டும் ஒருவித்தை. இதைச் செய்பவன் மற்றவரை அதனுள் மயங்கச் செய்வன்; தான் மயங்கான் என்றாலும் பார்ப்பவர்க்கு அவனும் அதில் ஒன்றி நிற்பது போல் தோன்றும். அது போன்றே இறைவன் அனைத்தையும் படைத்தும் காத்தும் கரந்தும் விளையாடினாலும் அவன் அதில் ஒன்றான். இதனையே 'இந்திரசாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தந்திரத்தில் சாராது சார்வது போல்' என்பது விளக்கி நிற்கின்றது.

9. முந்தும் கரு - முற்பட்ட மூலம். உயிர்கள் யாவும் உடல் கருவி என்பனவற்றை அடைதற்கு முட்டை, வியர்வை, கரு, வித்து என மூலப்பொருட்கள் உள்ளன. இறைவனுக்கு அவ்வாறு இல்லை. ஆயினும் பிற பொருட்கள் தோன்ற அவன் காரணம் ஆகின்றான். எனவே 'கருவின்றி நின்ற கரு' என்றார்.

10. திரிகரணம் - மூவகையான கருவிகளான மனம் மொழி மெய். இவற்றைக் கொண்டே இறைவன் உயிர்களைச் செயல் படுத்துகின்றான். இதைப் போன்றே இறைவனும் விருப்பாற்றல், (இச்சா சத்தி), அறிவாற்றல் (ஞான சத்தி) தொழிலாற்றல் (கிரியா சத்தி) என்ற மூவகை ஆற்றலைக் கொண்டு காத்தல் முதலிய வற்றை இயற்றுகின்றான். இலயம் - ஒன்றுதல்; அதாவது காப்பது. அதிகாரம் - தொழில் ஆற்றச் செய்வது; அதாவது படைத்தல்.

### வினை மாசு நீங்கப் பிறவி கொடுத்தருளல்

11. உருவும் அருவும் உருவருவும் ஆகிப்
பருவ வடிவம் பலவாய் - இருள் மலத்துள்

12. மோகம்உறும் பல்லுயிர்க்கும் முத்தியளித் தற்குமல
பாகம்உற வேகடைக்கண் பாலித்துத் - தேகமுறத்

13. தந்த அருவுருவம் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்தம் உறவே பிணிப்பித்து - மந்த்ர முதல்

14. ஆறுஅத்து வாவும்அண்டத் தாரந்தவத்து வாக்களுமுன்
கூறத் தகும்சிமிழ்ப்பில் கூட்டுவித்து - மாறிவரும்

15. ஈர்இரண்டு தோற்றத்து எழு பிறப்புள் யோனி எண்பால்
ஆரவந்த நான்குநூறு ஆயிரத்துள் - தீர்வரிய

16. கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும் போல்
சென்மித்து உழலத் திரோதித்து - வெந்நிரய

**தெளிவுரை**

11. ஒப்பற்ற வடிவில் இருந்தே உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூவகை வடிவம் கொண்டு அவற்றால் உயிர்களின் தன்மைக்கு ஏற்ப அருள் வழங்கும் பல்வேறு திருவுருவங்களை உடையதாய்.

12. அறியாமையை விளைவிக்கும் ஆணவ மலத்துள் மயங்கும் அளவில்லாத உயிர்களுக்கு வீடுபேறு அளித்தற்

பொருட்டாக, அந்த ஆணவ மலம் நீங்குதற்குரிய பக்குவம் அடைய அருள் நோக்கம் செய்தருளி, அவை உடல் எடுக்கும் வண்ணம்

13. உதவிய சதாசிவத் திருவுருவைச் சார்ந்து உள்ள சுத்த அசுத்த பிரகிருதி மாயைகளின் வாயிலாக அவ்வந்நிலைக்குத் தக்கபடி கட்டுண்ணும்படி இறுகக் கட்டச் செய்து, மந்திரம் முதலான

14. ஆறு வழிகளுடனும் உலகத்தில் நிறைந்த பிற வழிகளுடனும் முற்கூறிய பிணிப்பில் அழுத்திக் கூட்டுறவு கொள்ளுமாறு செய்வித்து, மாறி மாறி வரும்

15. நான்கு வகைத் தோற்றத்தையுடைய ஏழுவகைப் பிறவிகளுடன் எண்பத்து நான்கு இலக்கம் பிறப்பு இறப்பு வேறுபாடுகள் திருவருளின் துணையால் அல்லாமல், போக்குதற்கு அரிய

16. இருவினைகளுக்கு ஈடாகக் காற்றாடியும் வண்டிச் சக்கரமும் போல் பிறந்து திரிந்து வருந்தும்படி மறைப்பைச் செய்து, அவற்றால் கொடிய துன்பங்களையும்

17. துறக்க இன்பங்களையும் நுகரும்படி செய்து இங்ஙனம் பக்குவம் அடைந்த நிலையில் வீடுபேற்றினை அடைவதற்குக் காரணமான சிவபுண்ணியம் சிறிது விளைதலும்.

**விளக்கம்**

13. உரு - உருவத்திருமேனி. அரு - அருவத்திருமேனி. உருவரு - அருவுருவத் திருமேனி. உருவம் நான்கு, அருவம் நான்கு, அருவுருவம் ஒன்று ஆக ஒன்பது திருமேனிகள்.

நான்முகன், திருமால், உருத்திரன், மகேசன் என்பவை உருவத் திருமேனிகள்.

சிவம், சத்தி, விந்து, நாதம் என்பன அருவத் திருமேனிகள்.

சதாசிவம் என்பது அவனது அருவுருவத் திருமேனி. இந்த ஒன்பது வடிவங்களையும் இறைவன் ஒருவனே கொண்டு விளங்குகிறான். அவன் உருவத் திருமேனிகளால் படைப்பு முதலியவற்றையும், அருவத்திருமேனியினால் ஒடுக்கத்தையும், அருவுருவத் திருமேனியால் அருளையும் செய்கின்றான். அவ்வவ் வடிங்கள் உயிர்களின் பக்குவங்களுக்கு ஏற்ப ஆட்கொள்ள வருவன பல. ஆதலால் 'பருவ வடிவம் பலவாய்' என்றார். அவ்வடிவம் பல என்பன போக வடிவம், யோக வடிவம், கோர வடிவம்.

உயிர் இன்பம் அடைவதற்குக் கொள்ளும் வடிவம் போக வடிவம். உயிர்களின் தீமைக்குத் தக்கவாறு தண்டித்தற்குக் கொள்ளும் வடிவம் கோர வடிவம். அவ்வுயிர்கள் மெய்யறிவு வரப் பெற்று வீடுபேறு அடைவதற்காகக் கொள்ளும் வடிவம் யோக வடிவாகும்.

இருள்மலம் - ஆணவமலம்; அது அறியாமையை விளைவித்து இருள்சூழச் செய்வது. அதில் மயங்கும் தன்மை யுடைய பல உயிர்க்கு வீடுபேறு அளித்தற் பொருட்டு இருள் என்பது மற்றப் பொருளைக் காட்டாது. ஆயினும் தன்னைக் காட்டும். ஆனால் ஆணவ மலமோ பிற பொருளையும் காட்டாது; தன்னையும் காட்டாது. இது தொன்மையாகவே உயிருடன் இயைந்து நிற்பது. நெல்லில் உமியும் செம்பில் களிம்பும் உள்ளது போல உயிருடன் இந்த ஆணவமலம் இருப்பதாகும். இறைவன் இவ்வுயிர்களின் ஆணவ மலத்தை அகற்றி வீடுபேறு அளிக்க முற்படுவான்.

மலபாகம் உறுதல் - ஆணவ மலம் தன்பலம் இழந்து நிற்பதாகும். 'யான்' என்ற அகங்காரமும் 'எனது' என்ற மமகாரமும் நீங்கித் திருவருள் வழி காட்ட நடக்கும் பக்குவமே மலபரிபாகம். கடைக்கண் பாலித்து - அருள் செய்து.

13. விந்து - சுத்த மாயை. இதனைக் 'குடிலை' எனவும் உரைப்பர். மோகினி - அசுத்தமாயை. மான் - பிரகிருதி மாயை.

சதாசிவத்தைச் சார்ந்திருப்பது சுத்தமாயை. அதைச் சார்ந்து அசுத்த மாயை உள்ளது. அதனைச் சார்ந்து பிரகிருதி மாயை இருக்கின்றது. பெந்தம் - கட்டு.

சுத்த மாயையான விந்து அழிவற்றது. அருவாய் விளங்குவது. மயக்கம் செய்யாதது.

மோகினி என்ற அசுத்த மாயையும் அழிவற்றது. அருவானது. வினைக்குப் பற்றுக் கோடானது. இது மயக்கத்தைச் செய்வது.

மான் என்ற பிரகிருதி மாயை அறியாமை, (அவித்தை) முனைப்பு, (அகங்காரம்) அவா, ஆசை, வெகுளி என்ற ஐவகைக் குற்றங்களும் உண்டாவதற்குக் காரணமாய் விளங்குவது.

14. மந்த்ரமுதல் ஆறு அத்துவா - மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா. அத்துவா - வழி.

உயிர்கள் மலபரி பாகம் அடைந்து சிவப்பேற்றை அடைய மேற் கூறப்பட்ட ஆறு அத்துவாக்களையும் கடத்தல் வேண்டும்.

மந்திரம் - தொடராய் இருப்பது. பதம் - சொல்லாய் இருப்பது. வன்னம் - எழுத்தாய் இருப்பது.

புவனம் - உலகம். தத்துவம் - வினை நீக்கம் பெற்று உயிர் உய்ய வழிகளை உடையது. இவை பொருள் வடிவானவை.

ஆறு அத்துவா பிண்டத்தில் உடம்பில் உள்ளது; பின்னர்க் கூறப்பட்டவை உலகத்தில் (அண்டத்தில்) உள்ளது. சிமிழ்ப்பு - கட்டு.

15. ஈர் இரண்டு தோற்றம் - நான்கு வகைப்பிறப்பு. அவை முட்டையினின்று தோன்றுபவை. கருப்பையில் தோன்றுபவை. வியர்வையில் தோன்றுவன. கிழங்கு வித்து முதலியவற்றினின்று தோன்றுவன.

ஏழு பிறப்பு - தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்பவை, நீர்வாழ்பவை, தாவரம்.

யோனி பேதம் - பிறவி வேறுபாடுகள் எண்பத்து நான்கு இலக்கம் (லட்சம்) யோனிபேதம் : உள்ளன. விளக்கம் பின்வருமாறு: தேவரில் பதினான்கு இலக்கம், பறவையில் பத்து இலக்கம், ஊர்வனவற்றுள் பதினொரு இலக்கம், நீர்வாழ்வன வற்றுள் பத்து இலக்கம், தாவரங்களில் இருபது இலக்கம் ஆக எண்பத்து நான்கு இலக்கப் பிறப்புக்கள்.

16. கன்மத்துக்கு ஈடாய் - இருவினைகளுக்கு ஏற்ப. கறங்கு - காற்றாடி. சகடம் - வண்டியின் உருளை. சென்மித்து - பிறந்து. திரோதித்து - மறைத்து. வெந்நிரயம் - வெம்மை + நிரயம்; கொடிய நரகம்.

17. துய்ப்பித்து - அனுபவிக்கும்படி செய்து. நற்காரணம் - சிவ புண்ணியம்.

## நல்லாறு தெரிந்தருள இறைவர் அருள்

17. சொர்க்காதி போகமெலாம் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்கா ரணம்சிறிது நண்ணுதலும் - தர்க்கம்இடும்

18. தொன்னூல் பரசமயந் தோறும் அதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து - முன்னூல்

19. விரதமுத லாயபல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியைகிரி யாயோகம் சார்வித்து - அருள் பெருகு

20. சாலோக சாமீப சாரூப மும் புசிப்பித்து
ஆலோகந் தன்னை அகற்றுவித்து - நால்வகையாம்

21. சத்திநி பாதம் தருதற்கு இருவினையும்
ஒத்துவரும் காலம் உளவாகிப் - பெத்த

22. மலபரி பாகம் வருமளவில் பன்னாள்
அலமருதல் கண்ணுற்று அருளி - உலவாது

**தெளிவுரை**

18. தம் தம் சமயங்களே சிறந்தவை என நிலை நாட்டும் பழைய நூல்களையுடைய மற்றச் சமயங்களில் எல்லாம், அந்த அந்தச் சமய நூல்களே மெய்ந்நூல் எனவுணர்ந்து அவற்றில் தோயும்படி செய்து,

19. அதன்பின் வேதங்களில் கூறியுள்ள பலவகை விரதங்கள் ஆச்சிரமங்கள் முதலானவற்றையும் கடைப்பிடிக்கும்படி செய்து, பின்னர் தவத்தின் பயனாக நிலையான பயனைச் செய்யும் சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றிலும் படிப்படியாகச் சேர்ப்பித்து அவை மூலமாகத் திருவருள் பொருந்திய

20. சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் மூன்றையும் அனுபவிக்கச் செய்து, தெளிந்த அறிவை விரிவைடையச் செய்து, நான்கு வகைப்பட்ட

21. அருட்பதிவை வழங்குவதற்கு நல்வினை தீவினை என்ற இருவினைகளையும் சமமாக எண்ணும் காலம் உண்டாகி, உயிரைக் கட்டுப்படுத்தும் வண்ணம் விளங்கிய

22. ஆணவ மலம் தன் வன்மை கெட்டு ஒழிதற்குரிய பக்குவநிலை வரும் வரை இவ்வாறு உயிர்கள் யாவும் பன்னெடுங் காலமாய்ப் பிறந்து இறந்து வருதலை அருட்பார்வையால் பார்த்து.

**விளக்கம்**

19. தொன்னூல் - பழைய நூல். பரசமயம் - அயல் சமயம். நன்னூல் - சிறந்த நூல். நாட்டுவித்து - நிலைபெறச் செய்து. சரியை கிரியை யோகம் - சரியை கிரியை யோகம். சார்வித்து - மேற்கொள்ளும்படி செய்து.

சரியை: நந்தவனம் அமைத்தல், பூக்கொய்தல், மாலை கட்டடல், அருள் நூல்களை ஓதுதல், உரைத்தல் கேட்டல், கோயிலை அடைதல், மெழுகுதல், விளக்கேற்றல், அடியவர்க்குத் தொண்டு செய்தல் முதலியன. இதைத் தாசமார்க்கம் (அடிமைநெறி) என்று உரைப்பர்.

கிரியை: உடலைத் தூய்மைப்படுத்திக் கொண்டு இறைவனை உள்முகமாய் நினைத்து உணர்ந்து இறைவர்க்குத் திருமுழுக் காட்டல், நறுமணப் பொருட்களை ஊட்டல், விளக்கிடல், மலர் சூட்டல் முதலியவற்றை மேற்கொள்ளல். இதனைப் புத்திர மார்க்கம் (மகவு நெறி) என்பர்.

யோகம்: இறைவனை உள்ளத்தில் மட்டும் வழிபடுதல். இவ்யோகம் எட்டு உறுப்புகளை உடையது. அவை இயமம், நியமம், முதலியன.

20. சரியை முதலிய நெறியில் நின்றதன் பயனாய்ச் சாலோகம் முதலியவை கிட்டப் பெறும்.

சாலோகம் - இறைவனின் இருக்குமிடத்திலிருந்து ஒருவர் மனையில் பணி செய்யும் தொண்டர்க்குள்ள உரிமை போல் எங்கும் தடையின்றிச் செல்லவும் அங்குள்ள பொருள் இன்பங் களை அனுபவிக்கவும் அடையும் நிலையாகும்.

சாமீபம் - வீட்டில் மைந்தர்க்கு இருக்கும் உரிமையைப் போன்று இறைவனுக்கு அண்மையில் இருந்து அங்குள்ள பொருள் இன்பங்களை அனுபவித்தல் ஆகும்.

சாரூபம்: ஒருவரோடு நெருங்கிப் பழகும் தோழர்க்கு இருக்கும் உரிமை போல இறைவரின் திருவடிவைப் பெற்று வாழ்வதாகும்.

சாயுச்சியம்: இந்த மூன்று வகைகளையையும் மேற்கொண்டு அனுபவித்ததன் வாயிலாக ஒருவர்க்கு ஞானமானது கிட்டும். ஞானம் என்பது இறைவனே குருவாக எழுந்தருளி அருள் உரை வழங்குதல். இதன் பயன் சாயுச்சியம் பெறுதல்.

இறைவர் திருவடிவில் கலந்து நிற்பது சாயுச்சியமாகும்.

ஆலோகம் - தெளிந்த அறிவு. அகற்று வித்து - அடையுமாறு செய்து. இது 'அலோகம்' என்பதன் திரிபாகக் கொள்வதுண்டு. அலோகம் - அறியாமை.

அகற்றுவித்து - நீக்கி

21. சத்தி நிபாதம் - சத்தி + நிபாதம்; அருள் பதிவு. சத்தி - அருள். நிபாதம் - பதிவு. இத்தகைய அருட் பதிவு நான்கு வகையில் அமையும். அவை மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்.

மந்ததரம் - வாழை மரத்தில் தீப்பற்றுதல் போன்றது.

மந்தம் - ஈர விறகில் தீப்பற்றுதல் போன்றது.

தீவிரம் - உலர்ந்த விறகில் தீப்பற்றுதல் போன்றது.

தீவிரதரம் - கற்பூரத்தில் தீப்பற்றுதலைப் போன்றது.

இருவினையும் ஒத்து வரும்காலம் - நல்வினை தீவினை என்ற இரண்டையும் ஒப்பக் கருதுதல். நன்மை வரும் போது அதை மகிழ்ந்து ஏற்பதோ, தீமை வருங்கால் அதற்கு வருந்தி வெறுப்பதோ இன்றி இரண்டையும் ஒன்றாக எண்ணுதல்.

பெத்தமலம் - உயிரைக் கட்டுப்படுத்தி நிற்கின்ற ஆணவ மலம்.

22. மலபரிபாகம் - மலம் அழிவதற்குரிய பக்குவநிலை. அலமருதல் - சுழலுதல். கண்ணுற்றருளி - இறைவர் பார்த்தருளி. உலவாது - கெடாது.

## மும்மலம் உடையவர்க்கு அருள் செய்யுமாறு

23. அறிவுக்கு அறிவாகி அவ்வறிவுக்கு எட்டா
நெறியில் செறிந்தநிலை நீங்கிப் - பிறியாக்

24. கருணை திருஉருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரன் என்று ஓர் திருப்பேர் கொண்டு - திருநோக்கால்

25. ஊழ்வினையப் போக்கி உடல்அறுபத் தெட்டுநிலம்
ஏழும் அத்து வாக்கள் இருமூன்றும் - பாழாக

26. ஆணவ மான படலம் கிழித்தறிவில்
காணரிய மெய்ஞ்ஞானக் கண் காட்டிப் - பூணும்

27. அடிஞானத் தால் பொருளும் ஆன்மாவும் காட்டிக்
கடியார் புவனம் முற்றும் காட்டி - முடியாது

28. தேக்குபர மானந்தத் தெள்ளமுதம் ஆகிஎங்கும்
நீக்கம் அற நின்ற நிலைகாட்டிப் - போக்கும்

29. வரவும் நினைப்பும் மறப்பும் பகலும்
இரவும் கடந்து உலவா இன்பம் - மருவுவித்துக்

**தெளிவுரை**

23. இடைவிடாமல் உயிர் அறிவுக்கு அறிவாகி, அவ் வுயிரின் அறிவிற்கும் அகப்படாத நிலையில் எங்கும் நிறைந்த நிலையினின்றும் நீங்கிப் பிரியாத

24. அருளே திருவடிவாய்க் கொண்டு, இவ்வுலகில் வெளிப்பட்டுக் குருபரன் என்ற ஒப்பற்ற பெயரைக் கொண்டு, தம் திருநோக்கத்தால்

25. பழவினையைப் போக்கி உடலின் கருவிகள் அறுபத் தெட்டும், மூலாதாரம் முதலாக உள்ள நிலங்களும் மந்திரம் முதலாக உள்ள ஆறு அத்துவாக்களும், அடியுடன் அழிந்து போக,

26. ஆணவத் திரையை அகற்றி உயிரது அறிவாற்றல் காண இயலாத அருள் ஞான ஒளியை அளித்து,

27. இறைவனின் திருவடிகளைக் காண முயலும் அருள் அறிவால் தன்னையும் உயிரையும் உள்ளபடி காணும்படி செய்து, காவலையுடைய உலகு அனைத்தையும் அறியும்படி செய்து, எங்கும் எப்போதும் நிறைந்திருப்பதான பேரின்பமும் தரும் தெளிந்த அமுதமாய் எவ்விடத்தும் நீக்கம் இன்றி நிற்கும் நிலை பேற்றையும் காட்டி, இறப்பும் பிறப்பும் நினைப்பும் மறப்பும் பகலும் இரவும் ஆகிய இவற்றைக் கடந்து அழியாத இன்பத்தைத் தந்தருளி (விளங்குகிறான் முருகன்)

**விளக்கம்**

23. அறிவுக்கு - உயிரின் அறிவுக்கு. பிறியா - பிரியாத.

24. காசினிக்கே - பூமியில்; வேற்றுமை மயக்கம். சிவ பெருமானே குருவாக எழுந்தருளுவார் என்பது ஆகம முடிபு. திருநோக்கால் - கண் தீட்சையால்.

25. ஊழ்வினை - பழைய வினை; சஞ்சித வினை. உடல் அறுபத்தெட்டு - பருவுடல், நுண்ணுடல் என்பனவற்றில் உள்ள கருவிகளைக் குறிக்கும். பருவுடல் கருவிகள் அறுபது; நுண்ணுடல் கருவிகள் எட்டு. எனவே இங்ஙனமான அறுபத்தெட்டு. நிலம் ஏழு - ஆதாரம் ஆறும்,அதற்கு மேல் விளங்கும் சூனிய ஆகாசமும். அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், சுழுத்தி, ஆஞ்ஞை,

26. துவாதசாந்தம் - ஆணவம். ஆணவமலம். படலம் - கண் ஒளியை மறைக்கின்ற நோய்.

27. அடிஞானம் - திருவடி ஞானம்; பதிஞானம். கடியார் புவனம் - காவல் மிக்க உலகம். பரமானந்தம் - பேரின்பம். போக்கு - இறப்பு.

28. வரவு - பிறப்பு. மறப்பும் - மறதியும். உலவா - அழியாத. மருவுவித்து - அடையுமாறு செய்து.

## இருமலம் ஒருமலம் உடையவர்க்கு அருளல்

30. கன்மமலத் தார்க்குமலர்க் கண் மூன்றும் தாழ்சடையும்
வன்மழுவும் மானுமுடன் மால்விடைமேல் - மின்னிடத்துப்

31. பூத்த பவளப் பொருப்பு ஒன்று வெள்ளி வெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி - மூத்த

32. கரும மலக் கட்டறுத்துக் கண்அருள்செய்து உள்நின்று
ஒருமலத்தார்க்கு இன்பம் உதவிப் - பெருகிஎழு

33. மூன்றவத்தை யும்கழற்றி முத்தருட னே இருத்தி
ஆன்றபர முத்தி அடைவித்துத் - தோன்றவரும்

**தெளிவுரை**

30. கன்மமும் ஆணவமலமும் உடைய பிரளயாகலர்க்குத் தாமரை போன்ற மூன்று கண்களும் பின்பக்கம் தாழும் சடையும், வன்மை பொருந்திய மழுப்படையும் மான் கன்றும் உடைய திருக்கைகளுமாய்ப் பெருமையுடைய ஆன் ஏற்றின் மீது மின்னற் கொடியை

31. இடப்பக்கத்தில் கொண்டு தோன்றிய பவள மலை ஒன்று வெள்ளிமலை மீது எழுந்தருளியது போன்று தெய்வ வடிவான திருமேனியைக் கொண்டு,

32. கால எல்லைக்கு அப்பாற்பட்ட ஆணவமும், அதனால் ஆன கன்மமும் என்ற இருகட்டுகளையும் வேர் அறுத்து அருள் செய்து, ஆணவ மலம் ஒன்று மட்டும் உடையவர்க்கு - விஞ்ஞானகலர்க்கு - அவர் உள்ளத்தில் இருந்து மெய்யுணர்வைத் தந்து அதன் பயனாகப் பேரின்பத்தையும் அருளி, மேலும் மேலும் பெருகி எழும்,

33. கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று நிலைகளினின்றும் விடுவித்து அத்தகையவரை முத்திப் பேறு அடைந்தவருடன் கூட்டி வீடுபேற்றை அளித்தருளி.

**விளக்கம்**

30. கன்மமலத்தார் - பிரளயாகலர்; கன்ம மலமும் ஆணவமலமும் உடையவர். இவர்களுக்கு கண் மூன்றும் நான்கு தோள்களும் உடையவனாய் உமை ஒரு பாகனாய் ஆனேற்றின் மீது எழுந்தருளி அருள்வான்.

இனி ஒருமலம் உடையவரான விஞ்ஞான கலர்க்கு உள்நின்று உணர்த்துவான். எனவே இறைவன் சகலர்க்குக் குருவாகவும், பிரளயாகலர்க்கு முன்னின்றும், விஞ்ஞானகலர்க்கு உள்நின்றும் அருள்செய்வான் என்க. வன்மழுவும் - வலிமை வாய்ந்த மழுப்படையும். மான் - கையில் இருக்கும் மான். மால் விடை - திருமாலான காளையூர்தி. மின் - உமையம்மையார்.

31. பூத்த - விளங்கிய. பவளப் பொருப்பு - பவள மலை. வெள்ளி வெற்பு - வெள்ளி மலை. மூத்த - அநாதியான.

32. ஒருமலத்தார் - விஞ்ஞானகலர்; ஆணவம் ஒன்று மட்டும் உடையவர். ஒரு மலத்தார்க்கு உள்நின்று இன்பம் உதவி என இயைக்க.

33. மூன்று அவத்தை - கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை. முத்தர் - மலங்களினின்று விடுபட்டவர். பரமுத்தி - மேலான முத்தி. அடைவித்து - அடையுமாறு செய்து.

## இறைநிலை!

34. யான்எனது என்று அற்ற இடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக - ஞானம்

35. திருஉருவா இச்சை செயல்அறிவு கண்ணா
அருள் அதுவே செங்கை அலரா - இருநிலமே

36. சந்நிதியா நிற்கும் தனிச்சுடரே எவ்வுயிர்க்கும்
பின்னம்அற நின்ற பெருமானே - மின் உருவம்

### தெளிவுரை

34. யான் என்ற தன் முனைப்பும், எனது என்னும் பொருள் விருப்பும் நீங்கிய இடமே திருவடியாகவும் பேசா அனுபூதியில் பிறக்கும் பேரின்பமே திருமுடியாகவும்

35. ஞானமே திருவடிவாகவும், விருப்பம், தொழில், அறிவு என்ற மூன்று ஆற்றல்களும் மூன்று கண்களாகவும் அருளே சிறந்த கைம்மலர்களாகவும், பொருந்திய இப்பேருலகமே

36. கோயிலின் திருமுன்பாகவும் கொண்டு எழுந்தருளிய ஒப்பில்லாத பேரொளிப் பிழம்பானவனே! எவ்வுயிர்க்கும் வேறுபாடு இல்லாது அருளும் பெருமை யுடையவனே!

**விளக்கம்**

34. யான்: ஒருவன் 'தான்' என்று கருதுவது தன்முனைப்பால் ஆவது; இதை அகங்காரம் என்பர். எனது: உலகில் உள்ள பொருள்களை 'எனது' எனக் கருதுவது மமகாரம் எனப்படும்.

இவ்விரண்டும் பிறவி எடுத்தற்குக் காரணம். இந்நிலை நீங்கின் இறைவனின் திருவருட்காட்சி ஏற்படும். இவ்விரண்டும் அற்ற இடம் திருவடி என்றார். மோனபரமானந்தம் - மௌனத்தால் விளையும் பேரானந்தம்; மேலான இன்பம்.

35. இச்சை செயல் அறிவு - விருப்பம், தொழில், அறிவு. இம்மூன்றும் முக்கண்கள். அருள் செங்கை இரு நிலம்: - கோயில் திருமுன்.

36. பின்னம் அற - வேறுபாடு நீங்க. முடிபு - போதம் முதலியனவாகி, பாவித்தல் முதலியன செய்து இடம் திருவடி முதலியனவாக நிற்கும் தனிச்சுடரே, பெருமானே!

## முருகனின் தோற்றம்

37. தோய்ந்த நவ ரத்நச் சுடர்மணியால் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும் - தேய்ந்தபிறைத்

38. துண்டம் இருமூன்று நிரை தோன்றப் பதிந்தனைய
புண்டரம் பூத்து நுதல் பொட்டழகும் - விண்ட

39. பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்கு
அருள் பொழியும் கண்மலர் ஈர்ஆறும் - பருதி

40. பலவும் எழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவும் மகரக் குழையும் - நிலவு உமிழும்

41. புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்ம விடாய் தீர்க்கும் திருமொழியும் - வில்மலிதோள்

**தெளிவுரை**

37. மின்னல் ஒளியில் தோய்ந்து வடிவு கொண்டது போன்ற ஒன்பது வகை மணிகள் அழுந்திய பசும் பொன்னால் ஆன ஒளிக்கிரணங்களை வீசும் அழகிய ஆறு முடிகளும், பதினாறு கலைகளினின்றும் குறைந்த ஆறு எட்டாம் பிறைத் துண்டுகள் வரிசைப்படப் பதித்தது போன்று திருநீற்றின் மூன்று ரேகை மலர்ந்த நெற்றியில் உள்ள பொட்டுக்களின் அழகும், தக்க காலத்தில் மலர்ந்த தாமரை மலர்கள் பன்னிரண்டு பூத்தாற் போன்று, அருள் பொழியும் பன்னிரண்டு கண் மலர்களும், கதிரவர் பன்னிருவர் தோன்றி ஒளிர்வது போல் விளங்கும் பன்னிரண்டு மகரக் குண்டலங்களும், நிலவு ஒளி என்று ஒளிரும் புன்னகை தோன்ற மலர்ந்த அழகு பொருந்திய குமுத மலர் போன்ற சிவப்பான திருவாயும், பிறவிப் பிணியைப் போக்கும் திருவாக்கும்,

**விளக்கம்**

37. நவரத்நம் - ஒன்பது மணிகள்: அவை வருமாறு: கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம். இம்மணிகள் பதிக்கப் பெற்ற பசும் பொன்னால் ஆன ஒளிவீசும் ஆறுமுடிகள்.

38. தேய்ந்த பிறைத்துண்டம் - துண்டமாகிய ஆறு பிறைகளை வரிசையாய்ப் பதித்தாற் போன்ற புண்டரங்கள். புண்டரம் - திருநீற்றுக் கீற்று. நுதல் - நெற்றி. பதித்தனைய துண்டம், புண்டரம் பூத்த நுதல் என இயைக்கலும் ஆம்.

39. பருவமலர்ப் புண்டரிகம் - தக்க காலத்தில் மலர்ந்த தாமரை மலர். பூத்தாங்கு - பூத்ததைப் போல். கண்மலர் ஈராறு - பன்னிரண்டு மலர்க் கண்கள்.

40. மகரக் குழை - மகரமீன் வடிவில் செய்யப்பட்ட காதணிகள். பன்னிரு கதிரவர்கள் ஒளி வீசுவது போல் அக்குழைகள் - காதணிகள் விளங்கின.

41. பூங்குமுதச் செவ்வாய் - குமுத மலர் போன்ற சிவந்த வாய். சென்ம விடாய் - பிறவிப்பிணி. வின்மலி தோள் - வில்லையுடைய தோள்.

## ஆறு முகங்கள்

42. வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைத் தடிந்து
தெவ்வர் உயிர் சிந்தும் திருமுகமும் - எவ்வுயிர்க்கும்

43. ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வு தரும் செய்ய மலர்முகமும் - சூழ்வோர்

44. வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும் - நேசமுடன்

45. பாச விருடுரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும் - நேசமுடன்

46. போகம்உறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும் - தாகமுடன்

47. வந்தடியில் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும் - கொந்துஅ விழ்ந்த

**தெளிவுரை**

42. (வில்லையுடைய தோள்கள் பொருந்திய) கொடிய அசுரர்கள் போற்றிப் புகழ்கின்ற சூரபன்மனைக் கொன்று அவனைச் சார்ந்து உள்ள பகைவரின் உயிரைப் போக்கிய வீரம் பொருந்திய திருமுகமும், எல்லாவுயிர்களுக்கும்

43 பழவினையைப் போக்கி என்றும் அழியாத பேரின்பப் பெருவாழ்வைத் தந்தருளும் சிவந்த தாமரை மலர் போன்ற திருமுகமும்,

44. உயிர்களை விட்டு நீங்காத ஆணவமான இருளை ஓட்டிப் பல கதிரவர்கள் ஒன்றாய்த் திரண்டாற் போல் ஒளிவீசும் நறுமணம் உடைய தாமரை மலர் போன்ற திருமுகமும்,

45. விட்டு நீங்காத பாச இருள் துரந்து பல கதிரவர்கள் போன்று ஒளி வீசும் மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற திருமுகமும்,

46. அன்புடன் தன்னைப் பெற்று மகிழ எண்ணும் வள்ளியம்மைக்கும் தெய்வயானை என்ற மங்கைக்கும் ஆர்வத்தை உண்டாக்கும் திருமுகமும்,

47. திருவருளைப் பெற வேண்டும் என எண்ணி வந்து நிற்கும் அடியவர் மனம் மகிழ அவர்கள் வேண்டிய வரங்கள் பலவற்றையும் வழங்குகின்ற தெய்வத் தன்மையுடைய தாமரை போன்ற திருமுகம் ஆகிய ஆறு திருமுகங்களும்

**விளக்கம்**

42. வெவ்வசுரர் - கொடிய அசுரர்கள். போற்றிசைக்கும் - போற்றிப் புகழும். வெஞ்சூரன் - சூரபன்மன். தடிந்து - அழித்து. தெவ்வுயிர் சிந்தும் - பகையுயிர்களை அழிக்கும். அவர்கள் சிங்கமுகன் முதலியவர்.

43. ஊழ்வினை - பழவினை. உலவாத - அழிவற்ற. செய்ய மலர் முகம் - சிவந்த தாமரை மலர் போன்ற முகமும்.

44. வடிக்கும் பழ மறைகள் - குற்றம் அறக் கற்பிக்கும் வேதங்கள். முடிக்கும் - ஐயம் இல்லாது முற்றுப் பெறச் செய்யும். விடுத்து அகலா - உயிர்களை விட்டு நீங்காத.

45. பாச இருள் - பாசமாகிய இருள். ஆணவத்தையும் அதனால் ஆய கன்மத்தையும் நீக்குதற்கே உயிர்களிடத்து மாயத் தத்துவங்கள் கூட்டப் பெறுகின்றன. அவை உயிர்க்கு அறியாமை முதலியவற்றை உண்டாக்குகின்றன. இவற்றை நீக்க ஒருமுகம் உள்ளது! நக்கீரப் பெருமானும் 'மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்' என்றார்.

46. வள்ளி நாச்சியாரும் தெய்வ யானையும் பல நாள் தவம் கிடந்து முருகப் பெருமானை அடைந்தனர். அன்னார்க்கு இன்பம் அளிக்க ஒரு முகம் அமைந்துள்ளது. போகம் - இன்பம். புத்தேளிர்

பூங்கொடி - தெய்வ மகளான தெய்வ யானை, புத்தேளிர் - தேவர். மோகம் அளிக்கும் - ஆர்வத்தைத் தரும். முகமதி - முழுமதி போன்ற முகம்.

47. அடியிற் சேர்ந்தோர் - அடைக்கலமாக வந்து சேர்ந்த அடியார்.

## பன்னிரு தோள்கள்

48. வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும்

**தெளிவுரை**

48. கொத்தாக மலர்ந்த தேன்மிக்க கடப்ப மலர் மாலையும் மணம் கமழும் குரவ மலர் மாலையும் மணந்து விளங்கு கின்றனவும் பலவற்றையும் தாங்குதற்குரிய வன்மை மிக்கதுமான பன்னிரு தோள்களும்

**விளக்கம்**

48. வேரி - தேன். விரைக்குரவு - மணத்தையுடைய குராமலர். புயசயிலம் - தோள்களாகிய மலை.

## பன்னிரு கைகள் ஆரமுதம்

49. தேவர்க்கு உதவும் திருக்கரமும் சூர்மகளிர்
மேவக் குழைந்துஅணைந்த மென்கரமும் - ஓவாது

50. மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர அணிந்த திருக்கரமும் - மார்பகத்தில்

51. வைத்த கரதலமும் வாமமருங் கில்கரமும்
உய்த்த குறங்கில் ஒருகரமும் - மொய்த்த

52. சிறுதொடி சேர் கையுமணி சேர்ந்ததடங் கையும்
கறுவு சமர் அங்குசம் சேர் கையும் - தெறுபோர்

53. அதிர்கே டகம்சுழற்றும் அங்கைத் தலமும்
கதிர்வாள் விதிர்க்கும் கரமும் - முதிராத

**தெளிவுரை**

49. பொருந்திய அரிய அமுதத்தைத் தேவர்க்குக் கொடுக்கும் திருக்கை ஒன்றும், தேவ மகளிர் அன்புடன் அணுக அவர்களைத் திருவுளம் குழைந்து தழுவிக் கொள்வதற்கு என மென்மையான திருக்கை ஒன்றும், இடைவிடாது.

50. மழை பெய்வதற்கு என உதவும் திருக்கை ஒன்றும், மலர் மாலைகளை ஒருங்கு அணிந்த திருக்கை ஒன்றும், மார்பில்

51. வைத்தருளிய திருக்கை ஒன்றும், இடையில் இடப்பக்கத்தில் வைத்த திருக்கை ஒன்றும்,

52. நிறைந்த ஓசையுடைய சிறிய உடுக்கை பொருந்திய திருக்கை ஒன்றும், ஒலி எழுப்புதற்கு உரிய மணியைப் பற்றி யிருக்கும் திருக்கை ஒன்றும், சினத்துக்கு உரிய போர் செய்வதற்கு என அங்குசம் அமைந்த திருக்கை ஒன்றும்,

53. அழிக்கும் போரில் ஒலிக்கின்ற கேடகம் என்னும் படையைச் சுழற்றும் திருக்கை ஒன்றும், படையைச் சுழற்றும் அழகிய திருக்கை ஒன்றும், ஒளிவீசும் வாளையுடைய திருக்கை ஒன்றும் ஆகப் பன்னிரு திருக்கரங்களும்

**விளக்கம்**

இப்பகுதியில் முருகப்பெருமானின் திருக்கைகளைப் புனைந்து உரைக்கின்றார்.

அப்பெருமானின் ஒரு கை தேவர்க்கு அமுதத்தை உதவியது. தெய்வ மகளிரைக் குழைந்து அணைத்துக் கொண்டது ஒரு கை. மழையைப் பெய்யச் செய்வது ஒரு கை. மலர்மாலைகளை அணிந்தது ஒரு கை. மார்பின் மீது வைத்துள்ளது ஒரு கை.

இடப்பக்க இடுப்பில் உள்ளது ஒரு கை. மேல் தொடையைத் தொட்ட வண்ணம் உள்ளது ஒரு கை. வீரவளையை அணிந்தது ஒரு கை. மணியை ஏந்தியது ஒரு கை. அங்குசத்தை உடையது ஒரு கை. கேடகத்தைச் சுழற்றுவது ஒரு கை. வாளையுடையது ஒரு கை.

49. ஆரமுதம் - நிறைந்த அமிழ்தம்; அரிய அமிழ்தம். சூர்மகளிர் - அஞ்சத்தக்க மடந்தையர். தெய்வ மங்கையர். மேவ - பொருந்த.

50. ஓவாது - இடைவிடாது. மாரி - மழை. பூந்தொடையல் - மலர்மாலை.

51. கரதலம் - கை. வாமமருங்கு - இடப்பக்கம் உள்ள இடை. குறங்கு - தொடை.

52. சிறுதொடிசேர் - சிறிய வீரவளை அணிந்த. மணி - உருத்திராக்க மணி. கறுவு சமர் - சினம் கொண்டு செய்யும் போர். அங்குசம் - தோட்டி என்ற கருவி.

53. விதிர்க்கும் - அசைக்கும். அங்கை - அகம் + கை; உள்ளங்கை.

(49-53) திருக்கைகளின் செயல்கள் திருமுருகாற்றுப் படையில் கூறப்பட்டுள்ளன. அவை வருமாறு:-

"விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒருகை, உக்கம் சேர்த்தியது ஒருகை.
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கிகின்மிசை அசைஇயது ஒருகை
அங்குசம் கடாவ ஒருகை, இருகை
ஐயிரு வட்டமொடு எஃகுவலம் திரிப்ப, ஒருகை
மார்பொடு விளங்க ஒருகை
தாரொடு பொலிய, ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப - ஒருகை
பாடுஇன் படுமணி இரட்ட, ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய, ஒருகை
வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட
ஆங்கப், பன்னிரு கையும் பாற்பட இயற்றி"

*(திருமுருகாற்றுப்படை - 107-118)*

## மார்பு

55. புரிநூலும் கண்டிகையும் பூம்பட்டு உடையும்
அரைஞாணும் கச்சை அழகும் - திருஅரையும்

55. இளமைத் தன்மை மாறாத குடம் போன்ற கொங்கைகளையும் சிவந்த வாயையுமுடைய கொடி போன்ற இடையையும் உடைய வள்ளியம்மையாரும் தெய்வயானை அம்மையாரும் விரும்பித் தழுவிக் கொண்டதும், அழகிய பொன் மணிகளால் ஆன அணிகளை அணிந்ததுமான அகன்ற மார்பும் பசும் பொன்னால் ஆன பூணூலும், உருத்திராக்க மணியும்.

**விளக்கம்**

முதிராத - இளமையுடைய. கும்பமுலை - குடம் போன்ற கொங்கை. செவ்வாய் - சிவந்தவாய். கொடி இடையார் - வள்ளியம்மை, தெய்வயானை. ஆகிய இருவர். வேட்டு அணைந்த - விரும்பித் தழுவிக் கொண்ட. அம்பொன்மணிப் பூண் - அழகிய பொன்னாலும் மணியாலும் அணிந்த அணி. புரிநூல் - பூண்நூல்; முப்புரி நூல். கண்டிகை - உருத்திராக்க மணி.

## திருவரை, திருவடி

56. நாதக் கழலும் நகுமணிப்பொன் கிண்கிணியும்
பாதத்து அணிந்த பரிபுரமும் - சோதி

**தெளிவுரை**

அழகிய பட்டாடையும், அரைஞாண் கயிறும், அரைக் கச்சு அணிந்த அழகிய இடையும்,

ஒலிக்கின்ற வீரக்கழலும், விளங்கும் மணிகள் பதிக்கப் பெற்ற பொன்னால் ஆன சதங்கையும் சிலம்பும் அணிந்த திருவடிகளும்.

**விளக்கம்**

56. நாதக்கழல் - நாத தத்துவமான கழல். நகு - விளங்கும். பொன்கிண் கிணியும் - பொன் சதங்கையும். பரிபுரம் - சிலம்பு.

## கடவுள் வடிவு

57. இளம்பருதி நூறுஆ யிரம்கோடி போல
வளம் தருதெய் வீக வடிவும் - உளம்தனில்கண்டு

58. ஆதரிப் போர்க்கு ஆருயிராய் அன்பரகத் தாமரையின்
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே - ஓதிய ஐந்து

**தெளிவுரை**

57. ஓர் இலக்கம் கோடி இளங்கதிர்கள் ஒளி பரப்பினாற் போல் ஒளி மிகும் தெய்வத் தன்மை கொண்ட திருமேனியும், இத்தகைய திருவடிவை உள்ளக் கண்ணால் பார்த்துக் காதலிப்பார்க்கு உயிர்க்கு உயிராய் விளங்கி அடியார் நினைத்த வடிவில் அவர்தம் உள்ளத் தாமரையில் வீற்றிருக்கும் கடவுள் தன்மை வாய்ந்த விளக்கு ஒளியானவனே!

**விளக்கம்**

57. இளம்பருதி - உதய சூரியன்.

58. ஆதரிப்போர் - அன்பு காட்டுபவர். அகத் தாமரை - உள்ளத் தாமரை.

## ஓங்கார ஒளி

59. ஓங்காரத்து உள் ஒளிக்கும் உள் ஒளியா ஐந் தொழிற்கும்
நீங்காத பேர்உருவாய் நின்றோனே - தாங்கரிய

**தெளிவுரை**

59. அன்புடையவரால் கூறப்பெறும் ஐந்து உறுப்புகளை யுடைய பிரணவத்தின் உள் ஒளியாய் அமைந்திருந்து படைப்பு

முதலிய ஐந்தொழிலையும் இயற்றுதற்கு நான்முகன் முதலிய ஐந்து கடவுளாகவும் அமைந்து விளங்கும் பெருவடிவைக் கொண்டு விளங்குபவனே!

**விளக்கம்**

ஓங்காரம் - பிரணவ மந்திரமான 'ஓம்' என்பது. அ, உ, ம, விந்து, நாதம் என்னும் ஐந்து உறுப்புக்களை உடையது. வட்ட வடிவமான ஒளி வடிவினதாய் விந்து தத்துவம் விளங்குகின்றது. அதன் நடுவே நாதம் விளங்குகின்றது. அதன் நடுவே 'அ'கரம் அமைந்து உகரம் தோன்றி 'ம'கரம் ஒளிர்கின்றது. இங்ஙனம் நூல்கள் உரைக்கும். அகரமாய் எழுந்து உகரமாகக் குவிந்து மகரமாக ஒடுங்கும் எனவும் நூல்கள் உரைக்கும்.

'அ'கரத்தில் நான்முகனும் 'உ'கரத்தில் திருமாலும், 'ம'கரத்தில் உருத்திரனும், விந்துவில் மகேசனும், நாதத்தில் சதாசிவமும் இருந்து முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற செயல்களை ஆற்றுகின்றனர். அகரம், உகரம், மகரம், என்னும் மூன்றும் கூடி 'ஓம்' என ஒலிக்கும் போது நாதமாய் இருக்கும்; வரிவடிவாகும் போது விந்துவாய் விளங்கும்.

இப்பிரணவத்தின் உள்ளொளியாய் விளங்குவது நுண்ணிய ஐந்தெழுத்து. ஐந்தெழுத்து - அதாவது சூக்கும பஞ்சாட்சரம். பஞ்சாட்சரம் என்பது 'சிவாயநம' என்பதாகும்.

## ஆறு அத்துவாக்களே திருமேனி

60. மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தம்உறும் வன்னமே தொக்காகப் - பந்தனையால்

61. ஒத்த புவனத்து உருவே உரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா - வைத்த

62. கலையே அவயவமாக் காட்டும்அத்து வாவின்
நிலையே வடிவமா நின்றோய் - பலகோடி

**தெளிவுரை**

60. தங்குவதற்கு அரிய பெருமை பொருந்திய மந்திரங்களே குருதியாகவும், சிறந்த சொற்களே பெருமை வாய்ந்த முடியாகவும், ஒன்றுக்கு ஒன்று தொடர்புடைய எழுத்துக்களே தோலாகவும், கட்டுக் கோப்பால்

61. ஒத்துள்ள உலகங்களின் வடிவங்கள் மயிராகவும், தத்துவங்களே ஏழுவகைத் தாதுக்களாகவும் இயல்பாய் வைக்கப் பெற்ற

62. ஐந்து வகைப்பட்ட கலைகளே உறுப்புகளாகவும் கொண்டு இந்த ஆறு வழிகளின் நிலைகளையே திருவுருவாகக் கொண்டு நிற்பவனே!

**விளக்கம்**

முருகப்பெருமானுக்கு மந்திரம் இரத்தம்; சிறந்த சொற்கள் முடி; எழுத்துக்கள் தோல்; உலக வடிவம் மயிர்; தத்துவங்கள் ஏழு தாது என அப்பெருமானின் வடிவு கூறப் பெறுகின்றது.

60. சோரி - இரத்தம்; குருதி. வான்பதம் - சிறந்த சொற்கள். மாமுடி - சிறந்த முடி; உயர்ந்த முடி. தொந்தம் உறும் - பிணிப்புடைய. வன்னம் - எழுத்துக்கள். தொக்காக - தோலாக; தொக்கு - தோல்.

61. ஒத்தபுவனம் - ஒன்றுடன் ஒன்று ஒத்த உலகங்கள். உரோமமா - உரோமமாக; மயிராக. தத்துவங்களே சத்த தாதுவா - தத்துவங்கள் ஏழுவகைப்பட்ட தாதுவாக அமைகின்றன.

62. கலையே - ஐந்துகலைகள். அவயவமா - ஐந்து வகைப்பட்ட உறுப்புகளாகவும். அத்துவா - வழி.

இறைவன் உயிர்கள் மாட்டுக் கொண்ட அன்பால் அவனிடமிருந்து வெளிப்படும் கருணை ஐந்து கலை வடிவம் பெறுகின்றது. அவை: 1. நிவிர்த்தி கலை, 2. பிரதிட்டா கலை, 3. வித்தியா கலை, 4. சாந்திகலை, 5. சாந்தியாதீத கலை.

இறைவன் உயிர்களுக்கு விடுதலை அளிப்பது நிவிர்த்தி கலை. உண்டான விடுதலை நிலைப்படுத்துதல் பிரதிட்டா கலை. உண்மைப் பொருள்களை உயிர்களுக்கு ஊட்டுவது வித்தியா கலை. உணர்த்திய பொருளில் ஒடுக்குங்கால் சாந்தி கலை. அடங்கிய உயிர் அமைதியானேன் என்னும் அறிவையும் கடந்து திருவருளில் திளைப்பது சாந்தியாதீத கலை. இறைவனின் அருளால் தோன்றிய சுத்த மாயையினின்று இந்த ஐந்து கலைகளும் தோன்றுகின்றன.

இவ்வைந்து கலைகளிலிருந்து மண் முதல் நாதம் ஈறான 36 தத்துவங்கள் தோன்றும். அவற்றினின்று 224 புவனங்கள் உண்டாகும். அவற்றின் அணுத்திரள் ஒலியினின்று அகரம் முதலிய 51 எழுத்துகள் தோன்றும். அவ்வெழுத்துக்களின் கூட்டால் 81 பதங்கள் தோன்றும். பதங்களின் சேர்க்கையால் 11 மந்திரங்கள் எழும். இங்ஙனம் தோன்றும் இவை ஒடுங்கும் விதம் வருமாறு:- மந்திரம் பதத்தில் ஒடுங்கும். பதம் எழுத்தில் ஒடுங்கும். எழுத்து புவனத்தில் ஒடுங்கும். புவனம் தத்துவத்தில் ஒடுங்கும். தத்துவம் கலைகளில் ஒடுங்கும். கலை திருவருட் சத்தியில் ஒடுங்கும். அச்சத்தியோ இறைவனில் ஒடுங்கும்.

உயிர்களை உய்விக்க இறைவன் கொண்ட இவ்வாறு வழிகளே இறைவன் வடிவு.

இவ்வழிகள் மூலமாக உயிர்கள் எவ்வாறு உய்கின்றன? உயிர்கள் மந்திரங்களால் சொற்களை அறியும். சொற்கள் மூலமாக எழுத்துக்களை அறியும். அவ்வெழுத்துக்கள் ஒலி வடிவானவை என்றும் அவ்வொலி பரவ இடமானது உலகு எனவும் அறியும். பின்னர் அவ்வுலகு தத்துவக் கூட்டால் ஆயது என அறியும்.அதன் பின்பு அத்தத்துவங்கள் கலைகளில் ஒதுங்குவதையும் அறியும். கலைகள் அருளிலும் அருள் சிவத்திலும் ஒடுங்கும் என்று அந்த உயிர் அறியும். இப்பெருமை வாய்ந்த பரம்பொருளின் ஆற்றலை உணர்ந்து உயிர் உய்தி பெறும்.

## அண்டத் திருவுரு

63. அண்டம் உருவாகி அங்கம் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுள் கரணமாய்த் - தொண்டுபடும்

64. ஆவிப் புலனுக்கு அறிவு அளிப்ப ஐந்தொழிலும்
ஏவித் தனிநடத்தும் எம்கோவே - மேவ

65. வரும்அட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானம்
தரும் அட்ட யோகத் தவமே - பருவத்து

**தெளிவுரை**

63. பல கோடி அண்டங்களையும் தன் திரு வடிவங்களாகவும், அவ்வண்டங்களில் உள்ள இயங்குவன இயங்காதனவற்றை உறுப்புக்களாகவும், காணப்படும் அறிவு விருப்பம் தொழில் என்ற மூன்று ஆற்றல்களையும் உள்கருவி களாய்க் கொண்டு, தொண்டைச் செய்யும்.

64. அடியவரின் அறிவுக்கு அனைத்தையும் அறிவித்துப் படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் அருளல் என்ற ஐந் தொழில்களையும் மற்றவரை ஏவிச் செய்விக்கின்ற எம் இறைவ! பொருந்தியுள்ள

65. எட்டுவகை உருவங்களையும் திருமேனியாய்க் கொண்டுள்ள வாழ்வே! மெய்ப்பொருளை உணரும் பேரறிவை வழங்கும் எட்டு வகைப்பட்ட யோகங்களால் பெறத் தக்க தவப் பொருளே!

**விளக்கம்**

63. இறைவனுக்குப் பல கோடி அண்டங்கள் உருவமாகும். உலகங்களில் உள்ள இயங்குபவை இயங்காதவை அவ்வுடலுக்கு உறுப்புகள்.

சராசரம் - சரம் + அசரம்; சரம் - இயங்குவன. அசரம் - நிலையானவை. கண்டசத்தி மூன்று - காணப்படும் ஆற்றல்களான

அறிவு, விருப்பம், தொழில். கரணம் - உள்கருவிகள். தொண்டுபடும் - தொண்டு செய்யும்.

64. புலனுக்கு - அறிவிற்கு. ஐந்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல். இந்த ஐந்தொழிலையும் நான்முகன் முதலியவர்களைக் கொண்டு நடைபெறச் செய்கின்றான் இறைவன்.

அட்ட மூர்த்தம் - நிலம், நீர், தீ, காற்று, விண், கதிரவன், திங்கள், இயமானன் (உயிர்) இவை இறைவனுக்கு எட்டு வடிவங்கள்.

## அரச அங்கங்கள்

66. அகலாத பேரன்பு அடைந்தோர் அகத்துள்
புகலாகும் இன்பப் பொருப்பும் - சுகலளிதப்

67. பேர்இன்ப வெள்ளப் பெருக்காறு மீதானம்
தேர்இன்பம் நல்கும் திருநாடும் - பார் இன்பம்

68. எல்லாம் கடந்த இருநிலத்துள் போக்குவரவு
அல்லாது உயர்ந்த அணிநகரும் - தொல்உலகில்

69. ஈறும் முதலும் அகன்று எங்கும்நிறைந்து ஐந்தெழுத்தைக்
கூறி நடாத்தும் குரகதமும் - ஏறுமதம்

70. தோய்ந்து களித்தோர் துதிக்கையினால் பஞ்சமலம்
காய்ந்தசிவ ஞானக் கடாக் களிறும் - வாய்ந்த சிவ

71. பூரணத்துள் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துள் கட்டும் நறுந்தொடையும் - காரணத்துள்

72. ஐந்தொழிலும் ஓவாது அளித்து உயர்த்த வான் கொடியும்
வந்தநவ நாத மணி முரசும் - சந்தமும்

73. நீக்கம் இன்றி ஆடி நிழல் அசைப்பான் போல்புவனம்
ஆக்கி அசைத்தருளும் ஆணையும் தேக்கமழ்ந்து

74. வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசும் தசாங்கம்எனப் பெற்றோனே - தேசுதிகழ்

**தெளிவுரை**

65,66. தன்னை அடைவதற்குரிய பக்குவத்தில் தன்னிடத்தினின்றும் நீங்காமல் பேரன்பு கொண்டுள்ளவரின் உள்ளத்தை இடமாகக் கொண்ட பேரின்பமாகிய **மலையும்** இன்பமும் அழகும் உடைய தன்னை வழிபடுதலால் வரும்

67. பேரின்பப் பெருக்கான **ஆறும்** , தத்துவங்களுக்கு மேலான பெருவெளியான ஆய்ந்து பெறக்கூடிய இன்பம் எல்லா வற்றையும் தரும் அழகிய **நாடும்**, உலகியல் இன்பம்

68. எல்லாவற்றையும் கடந்த மேலான வீடுபேற்றில் சிறப்பும் பிறப்பும் இல்லாத உயர்ந்த அழகிய **நகரமும்**, பழைய இவ்வுலகில்

69. முடிவும் முதலும் இன்றி எங்கும் நிறைந்து விளங்குகின்ற திருவைந்தெழுத்தைக் கூறிச் செலுத்தும் **குதிரையும்**, ஒன்றற் கொன்று உயர்வு எனக்கொள்ளும்

70. சமய நெறிகளில் அழுந்தி அவ்வச்சமயமே உண்மைச் சமயம் எனக்கொண்டு மகிழ்ந்தவர் பின்பு அவற்றினின்று நீங்கித் தன்னையே வழிபாடு செய்வதால் அவர்தம் ஐந்து மலங்களையும் நீக்கிய சிவஞானமான **மதயானையையும்,**

71. சிவபரம் பொருளான நிறைவுள் அழுந்திய நிறைவாய் அமைந்த நாராகவும் கொண்டு கட்டப்படும் நறுமணம் உடைய **மாலையும்**

72. வெளிப்படையாய் அமையும் படைப்பு முதலிய ஐந்தொழிற்கும் காரணமான நுட்ப ஐந்தொழிலையும் இடை விடாது நிகழ்த்தி நிமிர்ந்து விளங்கும் திருவருட் சத்தியான **கொடியும்**. தூமாயையினின்று தோன்றிய புதுமையுடைய நாத தத்துவமான **மணிமுரசும்**, என்றும்

73. தான் அசையாமல் நின்று கண்ணாடியின் நிழலை மட்டும் அசைத்துக் காட்டும் ஒருவன் போல் உலகைப் படைத்தும் காத்தும் நடத்தியும் தான் நடத்தும் திருவருள் **ஆட்சியும்** ஆகிய பத்து அரச உறுப்புக்களையும், தெய்வ மணம் கமழும்

74. இனிய பாக்களில் புலவர்கள் தனித்தனியே அமைத்துப் பாடி மகிழும்படி அப்பத்து அங்கங்களையும் பெற்றுள்ளவனே!

**விளக்கம்**

அன்பு செலுத்தும் அடியாரின் உள்ளத் தாமரையில் வீற்றிருக்கும் இன்ப மலை முருகப்பெருமான்.

இறைவனின் - மன்னனின், அரச உறுப்புகள் பத்து இங்குக் கூறப்படுகின்றன.

அன்பு செலுத்தும் அடியவர் உள்ளத்தில் அவன் தரும் இன்பமே **மலை.**

அடியாரிடமிருந்து பெருகி வரும் அன்பு பேர் **ஆறு.**

அப்பேராறு பாய்வதற்குரிய இடம் முப்பத்தாறு தத்துவங்கள் கடந்த மேல் இடமே அவனது **நாடு.**

அந்நாட்டில் உள்ளவர்க்குப் பிறப்பும் இறப்பும் இல்லை அத்தகைய இடத்தில் அவனது ஆட்சி நிலை பெற்றுள்ளது. அதுவே அவனது **நகர்.**

அந்நகரத்தில் உள்ளவர் திருவைந்தெழுத்தைக் கூறி உயிர்க்காற்றைச் செலுத்துவர். அக்காற்றே **குதிரை.**

இறைவன் பிற சமயங்களினின்று நீங்கி வந்தடைந்த போது அவன் தரும் சிவஞானமே **யானையாகும்.**

சிவபரம் பொருளை அறிய அறிய அதன் வாயிலாகச் சிவத்தின் பேரருள் தோன்றும். அன்பரின் அவ்வருளே மலராகவும், அன்பே நாராகவும் கொண்டு மாலை தொடுப்பர். அதுவே **மாலை.**

இறைவனின் திருவருளே **கொடி.**

சுத்த மாயையினின்று தோன்றும் பேரொலியே **முரசு** ஒலி யாகும். இறைவன் நினைவு அளவில் அனைத்தையும் செய்வன். அவ்வாறு செலுத்தும் ஆணையே அவன் **ஆணையாகும்.**

அகத்துள் - மனத்துள். இன்பப் பொருப்பு - இன்பமலை. சுகலளிதம் - சுகம் + லளிதம்; சுகம் - இன்பம்; லளிதம் - அழகு.

மீதானம் - மேல் இடம். போக்கு - இறப்பு. வரவு - பிறப்பு.

தொல் உலகு - பழைய உலகம். ஈறு - முடிவு. முதல் - தொடக்கம். ஐந்தெழுத்து - பஞ்சாட்சரம். குரகதம் - குதிரை. மதம் - சமயம்; யானைக்குரிய மதம் என்பது மற்றொரு பொருள்.

துதிக்கையினால் - வணங்கித் துதிப்பதால். தும்பிக்கையால் என்ற வேறு பொருள். பஞ்ச மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி, கடாக்களிறு - மதயானை; சிவஞானக் கடாக்களிறு.

போதம் - அறிவு. நார் - அன்பு. மலை நாட்டுக்குரிய நார் என்பது மற்றொரு பொருள்.

வான் கொடி - சிறந்த கொடி. நவநாதம் - புதிய நாத தத்துவம்.

ஆடி - கண்ணாடி. தான் ஆடிக் கண்ணாடியில் நிழலை அசையச் செய்பவன் போல். காய்ந்த - சினந்த.

பூரணம் - நிறைவு. போதம் - ஞானம்.

புவனம் ஆக்கி யசைத்தருளும் ஆணை - உலகங்களைப் படைத்து இயக்கியருளும் ஆணை. பனுவல் - நூல்.

தசாங்கம் - தசம் + அங்கம்; பத்து உறுப்புகள்.

## முருகனாக உருக் கொள்ளல்

75. பூங்கயிலை வெற்பில் புனைமலர்ப்பூங் கோதையிடப்
 பாங்குஉறையும் முக்கண் பரஞ்சோதி - ஆங்கு ஒரு நாள்

76. வெந்தகுவர்க்கு ஆற்றாத விண்ணோர் முறைக்கு இரங்கி
 ஐந்து முகத்தோடு அதோமுகமும் - தந்து

77. திருமுகங்கள் ஆறாகிச் செந்தழல்கண் ஆறும்
ஒருமுகமாய்த் தீப்பொறிஆறு உய்ப்ப - விரிபுவனம்

78. எங்கும் பரக்க இமையோர்கண்டு அஞ்சுதலும்
பொங்கும் தழல்பிழம்பைப் பொற்கரத்தால் - அங்கண்

79. எடுத்தமைத்து வாயுவைக்கொண்டு ஏகுதிஎன்று எம்மான்
கொடுத்து அளிப்ப மெல்லக் கொடுபோய் - அடுத்ததுஒரு

80. பூதத் தலைவகொடு போதிஎனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுஉய்ப்பப் - போது ஒரு சற்று

81. அன்னவளும் கொண்டு அமைதற்கு ஆற்றாள் சரவணத்தில்
சென்னியில் கொண்டு உய்ப்பத் திருவுருவாய் - முன்னர்

82. அறுமீன் முலைஉண்டு அழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்குஅணிந்த நாதன் - குறுமுறுவல்

83. கன்னியொடும் சென்று அவட்குக் காதல்உருக் காட்டுதலும்
அன்னவள்கண்டு அவ்வுருவம் ஆறினையும் - தன் இரண்டு

84. கையால் எடுத்து அணைத்துக் கந்தன்எனப் பேர்புனைந்து
மெய்ஆறும் ஒன்றாக மேவுவித்துச் - செய்ய

85. முகத்தில் அணைத்து உச்சி மோந்து முலைப்பால்
அகத்துள் மகிழ்பூத்து அளித்துச் - சகத்து அளந்த

86. வெள்ளை விடை மேல் விமலன் கரத்தில்அளித்து
உள்ளம் உவப்ப உயர்ந்தோனே - கிள்ளைமொழி

### தெளிவுரை

75. ஒளி திகழும் அழகிய கயிலாய மலையில் கட்டப்பட்ட மலர் மாலைகளை அணிந்த உமையம்மையார் தம் இடப்பக்கத்தில் இருக்கப் பெற்ற முக்கண்களையுடைய பேரொளி வடிவுடைய சிவன், அங்கு ஒருநாள்.

76. கொடிய அசுரர்கள் செய்த துன்பத்தைப் பொறுக்க மாட்டாது தேவர்கள் வந்து தம்மிடம் முறையிட்ட வேண்டு

கோளுக்கு ஐந்து முகங்களுடன் கீழ்நோக்கிய முகம் ஒன்றையும் கொண்டு,

77. ஆறு முகங்களுடன் கூடியவராய்ச் சிவந்த நெருப்பு வடிவான ஆறு நெற்றிக் கண்களினின்று ஒருங்கே ஆன தீப் பொறிகளை வெளிப்படுத்தினார்.

78. அவை ஆறும் விரிந்த உலகம் எங்கும் பரவ, அவற்றைக் கண்டு தேவர்கள் அஞ்சினர். அஞ்சவும் சீறும் அத்தீப்பொறியின் திரட்சியைத் தம் அழகான கையால்,

79. எடுத்து அடக்கி அம்மதியடையுமாறு செய்து காற்று இறையை நோக்கி, 'நீ இதைக் கைக் கொண்டு வா' என்று இறைவன் உரைத்தான். அக் காற்று இறைவன் அத்தீப் பொறிகளை மெல்ல எடுத்துக் கொண்டு போனான். பின்பு தன்னை அடுத்துள்ள

80. அக்கினித் தேவனை நோக்கி 'நீ இதைக் கொண்டு போவாய்' என்றான். அந்த அக்கினிக் கடவுள் அப்பொறிகளை எடுத்துக் கொண்டு போய்க் குளிர்ந்த கங்கையில் இட்டனன்.

81. இட, அக்கங்கையும் அத்தீப் பொறிகளின் வெப்பத்தை சிறிது கூடத் தாங்க மாட்டாதவளாய் நாணல் மிக்கு வளர்ந்த நீர் நிலையில் (சரவணப் பொய்கையில்) செலுத்தினாள். அப்போது அந்த ஆறு பொறிகளும் ஆறு இளங்குழந்தைகளாயின. முதலில்

82. கார்த்திகைப் பெண் அறுவரின் கொங்கைப் பாலை யுண்டன. தம் பிள்ளைமைத் தன்மைக்கேற்ப அழுது விளை யாடினன். நறுமணம் மிக்க கங்கையைத் தலையில் சூடிய சிவபெருமான் புன்முறுவலை உடைய

83. உமையம்மையுடன் அங்குப் போய் அவளுக்கு அன்பின் வடிவான அக் குழந்தைகளைக் காட்டினர். அப்பெருமாட்டியும் கண்டு அக்குழந்தை வடிவங்கள் ஆறினையும் தன் இரண்டு கைகளால்,

84. ஒரு சேர அணைத்து எடுக்க அந்த ஆறு திருவுருவங் களும் ஒன்றாயின. அதற்குக் 'கந்தன்' என்ற பெயரைச் சூட்டி

85. தன் சிவந்த முகத்தில் அணைத்து உச்சி மோந்து உள்ளத்தில் எடுத்து மகிழ்ச்சியுடன் தன் கொங்கைப் பாலை ஊட்டினாள். இவ்வுலகத்தை மூன்று அடிகளால் அளந்த திருமாலான

86. வெண்ணிறக் காளை ஊர்தியில் வீற்றிருக்கும் சிவ பெருமானின் திருக்கைகளில் அதனை அளித்தாள். இங்ஙனம் தாயும் தந்தையுமாகிய அவ்விருவருடன் ஒருங்கு வீற்றிருந்து, அவர்கள் உள்ளம் மகிழும்படி உயர்ந்து விளங்கிய பெருமானே!

**விளக்கம்**

75. பூங்கயிலை வெற்பு - அழகிய கயிலாய மலை. புனைமலர்ப் பூங்கோதை - உமையம்மையார். இடப்பாங்கு - இடப்பக்கத்தில். முக்கண் பரஞ் சோதி - மூன்று கண்களையுடைய சிவபெருமான்.

76. வெந்தகுவர் - கொடிய அசுரர்கள். முறை - முறையீடு. ஆற்றாத - பொறுக்க இயலாத. அதோமுகம் - கீழ் நோக்கிய முகம்.

77. செந்தழற் கண் ஆறு - சிவந்த தீக்கண் ஆறு. ஒருமுகமாய் - ஒருங்கே. தீப்பொறி ஆறு உய்ப்ப - ஆறு தீப் பொறிகளை வெளிப்படுத்த.

78. பரக்க - பரவ. இமையோர் - தேவர்கள். பொங்கும் - சீறி எழும். தழற்பிழம்பை - தீப்பொறிகளை.

79. 'கொண்டு ஏகுதி' - எடுத்துக் கொண்டு செல்வாயாக. எம்மான் - எம் சிவபெருமான். கொடு போய் - எடுத்துக் கொண்டு சென்று

80. 'பூதத்தலைவ கொடு போதி' அக்கினித் தேவனைப் பார்த்து வாயு நீ இதைக் கொண்டு செல்வாயாக என்று உரைத்தனன். தீக்கடவுள் - அக்கினித் தேவன். சீதப் பகீரதி - குளிர்ந்த கங்கையாறு.

81. அன்னவளும் - அக்கங்கையும். ஆற்றாள் - பொறுக்க இயலாதவளாய். சரவணம் - நாணற்புல் வளர்ந்துள்ள நீர்நிலை; சரம் + வனம். சரம் - நாணல். வனம் - நீர். சென்னியில் - தலையில். முன்னர் - முதலில்.

82. அறுமீன் - கார்த்திகைப் பெண் அறுவர். முலைஉண்டு - கொங்கைப் பாலையுண்டு. நறுநீர் முடிக்கணிந்த நாதன் - நறுமணம் பொருந்திய கங்கையாற்றைச் சடையில் அணிந்த சிவபெருமான்.

கார்த்திகைப் பெண்கள் தந்த பாலையுண்ட பின் உமை யம்மையார் பாலையும் உண்டனன். ஆதலால் 'முன்னர்', 'அறுமீன் முலையுண்டு' என்றார்.

83. கன்னி - உமையம்மை. காதல் உரு - மகனுடைய உருவத்தை. காதல் - பிள்ளை.

84. கந்தன் - சேர்க்கப்பட்டவன். உமையம்மையார் ஆறு குழந்தைகளையும் தன்னிரண்டு கைகளால் ஒருசேர எடுத்து அணைத்ததால் அக்குழந்தைகள் ஆறும் ஒன்றாயின. எனவே 'கந்தன்' என்ற பெயரைச் சூட்டினர். அந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன்றாகிக் கந்தன் என்று பேர் பெற்றனன்.

(கந்தபுரா - சரவண - 81)

**'சேயவன் வடிவம் ஆறும் திரட்டி நீ ஒன்றாச் செய்தாய்**
**ஆயத னாலே கந்தன்எனும் நாமம் பெற்றான்'**

*(திருவிளை - 17)*

சரவணப் பொய்கையில் தோன்றிய ஆறு வடிவங்களையும் இறைவன் அம்மைக்குக் காட்டினன். அவள் மிக்க அன்பால் அவ்வாறு திருவுருவங்களையும் ஒருசேர எடுத்து அணைத்துக் கொண்டாள்; உச்சி மோந்தாள்; தன் திருமுலைப் பாலை அளித்தாள். பின் இறைவனிடம் அளித்தாள். அப்பெருமானும் மகிழ்ந்து இருந்தார். இவ்வாறு அம்மை அப்பன் இருவரிடையே வீற்றிருந்தருளும் உயர்ந்தோனே! என்றார். சகத்து அளந்த - உலகத்தை அளந்த.

86. வெள்ளைவிடை - வெண்ணிறம் உடைய திருமால் ஆன காளை. விமலன் - குற்றம் அற்ற சிவபெருமான்.

## முருகப் பெருமானின் திருவிளையாடல்கள்

87. மங்கை சிலம்பின் மணிஒன் பதில்தோன்றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து - தங்கள்

88. விருப்பால் அளித்தநவ வீரர்க்குள் முன்னோன்
மருப்பாயும் தார்வீர வாகு - நெருப்பில் உதித்து

89. அங்கண் புவனம் அனைத்தும் அழித்துலவும்
செங்கண் கிடாய தனைச் சென்று கொணர்ந்து - எங்கோன்

90. விடுக்குதிஎன்று உய்ப்ப அதன் மீதுஇவர்ந்து எண்திக்கும்
நடத்தி விளையாடு நாதா - படைப்போன்

91. அகந்தை உரைப்ப மறை ஆதி எழுத்துஎன்று
உகந்த பிரணவத்தின் உண்மை - புகன்றிலை யால்

92. சிட்டித் தொழில் அதனைச் செய்வது எங்ஙன் என்று முனம்
குட்டிச் சிறைஇருத்தும் கோமானே - மட்டுஅவிழும்

93. பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரமம் மொழிந்தோனே - கொன்நெடுவேல்

### தெளிவுரை

87. கிளியின் மொழி போன்று பேசும் மொழியை உடைய உமையம்மையின் காற்சிலம்பினின்று சிந்தின ஒன்பது மணிகள். அவ்வொன்பது மணிகளினின்றும் தோன்றி உயர்ந்த மாதர் ஒன்பதின்மர். அவர்கள்

88. தாங்கள் நெடுநாட்களாகக் கருவுற்றிருக்கும் துன்பம் நீங்க மகிழ்ச்சியுடன் பெற்றவர் ஒன்பது வீரர். அவர்களுள் முதல்வன் நறுமணம் கமழும் மலர் மாலை சூடிய வீரவாகு என்பான். நாரத முனிவர் செய்த வேள்வியினின்றும் தோன்றி,

89. அழகிய உலகம் அனைத்தையும் அழித்துக் கொண்டு வரும் சிவந்த கண்ணையுடைய ஆட்டுக்கிடாயைப் போய்ப் பற்றிக் கொண்டு வந்து, ''என் இறைவ!

90. இதன் மீது அமர்ந்து செலுத்துவீராக!'' என்று கூறித் திருமுன்பு வேண்டி விட்டனன். அந்த ஆட்டுக் கிடாய் மீது ஏறி எட்டுத் திக்குகளிலும் கொண்டு செலுத்தி விளையாடும் தலைவ! நான்முகன்

91. எல்லாவற்றையும் படைக்கும் தேவன் நான் என்ற செருக்கினால் சிலவற்றை உரைத்தனன். உரைக்க, பழைய மறையின் முதல் எழுத்து என்று மகிழ்வுடன் கூறும் பிரணவத்தின் பொருளை நீவிர் கேட்டருள, அவனும் அதன் பொருளை உள்ளவாறு உணராமல் மயங்கி உரைத்தனன்.

92. பிரணவத்தின் உண்மைப் பொருளை அறியாத நீ படைப்புத் தொழிலைச் செய்வது யாங்ஙனம்? என்று முன்நாளில் அவன் தலையில் குட்டிச் சிறையில் அவனை இட்ட கோமானே! தேன் சிந்தும், அழகிய கொன்றை மலரைச் சூடிய முறுக்குடைய சடையை உடைய சிவபெருமான் நும்மைப் போற்றி வழிபடவும் அப்பெருமான் முன்பு பிரணவத்தின் பொருளைக் கூறி யருளியவனே!

**விளக்கம்**

கிள்ளை மொழி மங்கை - கிளிபோல் சொல் மிழற்றும் உமையம்மையார். அவரது கால் சிலம்பினின்று ஒன்பது மணிகள் சிந்தின. அவை பெண் வடிவு கொண்டன. அவர்கள் நவசத்திகள். அந்நவசத்திகள் வருமாறு:- 1. மாணிக்கவல்லி. 2. தரளவல்லி. 3. புட்பராக வல்லி. 4. கோமேதக வல்லி. 5. வைடூரிய வல்லி. 6. வைர வல்லி. 7. மரகத வல்லி. 8. பவள வல்லி. 9. இந்திர நீலவல்லி. அவர்கள் சிவபெருமானை வணங்கி அவரை விருப்புடன் நோக்க அவ்வளவில் கருக் கொண்டனர். அதைக் கண்ட உமையம்மையார் சினந்து அவர்கள் நெடுங்காலம் கருவுயிர்க்காது இருக்கச் செய்தார். அம்மங்கையர் நீண்ட காலம்

கருவுற்றிருந்தும் பெற்றெடுக்க இயலாது வருந்தி இறைவனையும் இறைவியையும் வேண்ட இறைவி அவர்கள் கருவுயிர்க்க அருள் செய்தார். அவர்கள் ஒன்பது வீரர்களைப் பெற்றனர். அவ்வொன்பது வீரர் வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராட்சசர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர்.

88. விருப்பால் - விருப்புடன். முன்னோன் - முதலில் தோன்றியவன். மருப்பாயும் தார் வீரவாகு - தேன் சிந்தும் மாலையைச் சூடிய வீரவாகு. நெருப்பில் உதித்து - நாரதர் செய்த வேள்வித் தீயினின்று தோன்றி.

89. அங்கண் புவனம் - அழகிய இடத்தையுடைய உலகம். உலவும் - திரியும். நாரதர் வேள்வியினின்று தோன்றிய ஆட்டுக்கிடாய் உலகம் முழுதும் திரிந்து அழிவு செய்து வந்தது. செங்கண் கிடாய் - சிவந்த கண்ணையுடைய ஆட்டுக்கிடாய். எங்கோன் - எம் இறைவ.

90. விடுக்குதி - ஏறிச் செலுத்துவாயாக. உய்ப்ப - விட. இவர்ந்து - அமர்ந்து. எண்திக்கும் - எட்டுத்திக்குகளிலும். படைப்போன் - நான்முகன்.

91. அகந்தை யுரைப்ப - செருக்குடன் வேதத் தொடக்கத்தைச் சொல்லத் தொடங்க. ஆதி எழுத்து - முதல் எழுத்தான ஓம் என்பது. பிரணவத்தின் உண்மை புகன்றிலை - பிரணவமான 'ஓம்' என்பதன் உண்மைப் பொருளைக் கூறவில்லை. ஆல் - அசை.

92. சிட்டித்தொழில் - ஸ்ருஷ்டித்தொழில்; படைப்புத் தொழில். எங்ஙன் - எவ்வாறு. முனம் - முன்பு. குட்டி - நான்முகனின் தலையில் குட்டி. சிறை இருத்தும் - சிறையில் இருக்கச் செய்யும். மட்டு - தேன்.

93. பொன்னங்கடுக்கை புரிசடையோன் - பொன் போன்ற அழகிய கொன்றை மாலையை அணிந்த முறுக்குண்ட சடையை யுடைய சிவபெருமான். போற்றிசைப்ப - சிவபெருமான் முருகனை வணங்கித் துதிக்க. பிரமம் - பிரணவப் பொருள்.

## அருட்செயலும் வெற்றிச் செயலும்

94. தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே - சீரலைவாய்த்

95. தெள்ளு திரைகொழிக்கும் செந்தூரில் போய்க்கருணை
வெள்ளம் எனத்தவிசின் வீற்றிருந்து - வெள்ளைக்

96. கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்தில் புக்கு இமையோர் வாழ - சயேந்திரனாம்

97. சூரனைச்சோ தித்து வருக என்று தடந்தோள் விசய
வீரனைத் தூதாக விடுத்தோனே - கார் அவுணன்

98. வானவரை விட்டு வணங்காமை யால்கொடிய
தானவர்கள் நாற்படையும் சங்கரித்துப் - பானுப்

99. பகைவன் முதலாய பலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய் - சகம்உடுத்த

100. வாரி தனில்புதிய மாவாய்க் கிடந்த நெடுஞ்
சூர் உடலம் கீண்ட சுடர்வேலோய் - போர்அவுணன்

101. அங்கம் இரு கூறாய் அடல்மயிலும் சேவலுமாய்த்
துங்கமுடன் ஆர்த்தெழுந்து தோன்றுதலும் - அங்குஅவற்றுள்

102. சீறும்அர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்தும் இளையோனே - மாறிவரு

103. சேவல் பகையைத் திறல்சேர் பதாகைஎன
மேவத் தனித்துஉயர்த்த மேலோனே - மூவர்

104. குறைமுடித்து விண்அங்கு டியேற்றித் தேவர்
சிறைவிடுத்துஆட் கொண்டு அளித்த தேவே - மறைமுடிவாம்

### தெளிவுரை

94. கொல்வதற்குக் காரணமான நீண்ட வேலை யுடையவனான தாருகன் என்ற அசுரனும், மாயையுடன்

பொருந்திய பெரிய கிரௌஞ்ச மலையும் பொடியாகும்படி வீரம் பொருந்திய கூர்மையான வேலை விடுத்தவனே!

95. தெளிந்த அலைகளை யுடைய மணிகளைக் கொழிக்கும் அழகிய கடலில் விளங்கும் திருச்செந்தூருக்குச் சென்று அருள் வெள்ளம் என அரியணையில் வீற்றிருந்து, வெண்மையான

96. யானையை யுடைய இந்திரனுக்கு அஞ்ச வேண்டா என்று ஆறுதல் கூறிக் கடல் சூழ்ந்து விளங்கும் மகேந்திர புரத்துக்குச் சென்று தேவர்கள் வாழ வெற்றியுடையவனாய்.

97. சூரபன்மனைக் கண்டு அவனிடமிருந்து தேவர்க்கு விடுதலை அளிக்கும் மனநிலை உள்ளதா! என்று ஆராய்ந்து தெளிந்து வரும்படி பெரிய தோளையுடைய வெற்றியுடைய வீர வாகுவைத் தூதாக அனுப்பியவனே! உடலால் அன்றி உள்ளத்தாலும் கரிய அசுரனான

98. வானவரைச் சிறையினின்று விடுத்து வணங்காததால் கொடிய அந்த அசுரனின் நால்வகைப் படைகளையும் அழித்துப் பானுகோபன்

99. முதலிய பகை அசுரர்களுடன் சிங்க முகனையும் அழித்து வெற்றி வாகை அணிந்து கொண்டவனே! உலகத்துக்கு ஆடை என விளங்கும்.

100. கடலில் புதிய மாமரமாய் நின்ற நெடிய சூரபன்மனின் உடலைப் பிளந்த நீண்ட ஒளிரும் வேலை உடையவனே! போரில் விருப்புடைய அந்த அசுரனின்

101. உடலானது இரண்டு பகுதியாய் ஒரு கூறு மயிலும் மற்றொரு கூறு சேவலும் ஆகிச் சிறப்புடன் ஆரவாரம் செய்யும்படி எழுந்து தோன்றின. அவ்வாறு தோன்றவும், அப்போது அவற்றுள்

102. சீறும் பாம்பையும் அழிக்கும் அழகிய மயிலை ஊர்தியாய்க் கொண்டு அதன் மீது ஏறிச் செலுத்திய என்றும் அழியாத இளமை யுடையவனே! உடல் கூற்றினின்று மாறி வரும்

103. சேவலாகிய அப்பகையை வலிமையுடைய கொடி என்று உயர்த்தியருளிய பெரியோனே! இங்ஙனம் பகையை அழித்தமையால் மும்மூர்த்திகளின்

104. குறைகளையும் முடித்து வான் உலகில் குடியேற்றினை. தேவர்களைச் சிறையினின்று விடுவித்த தேவனே!

**விளக்கம்**

கொன்நெடுவேல் - கொல்லும் தொழிலையுடைய நீண்ட வேல்.

94. தாரகன் - தாரகாசுரன், சூரபன்மனின் தம்பி. மாயத் தடங்கிரி - மாயையுடன் பொருந்திய பெரிய கிரௌஞ்ச மலை.

95. சிறந்த அலையுடைய பொன்மணி முதலியவற்றைக் கொழிக்கும் செந்தூர். தவிசு - அரியணை கடல் அருகே வெள்ள மென என்று ஒரு நயம்பட உரைத்தார்.

96. வெள்ளைக் கயேந்திரன் - வெண்ணிறம் உடைய ஐராவதம் என்ற யானையை உடைய இந்திரன். அஞ்சல் அளித்து - அஞ்ச வேண்டா என்று ஆறுதல் கூறி. கடல் சூழ் மயேந்திரம் - கடலால் சூழப்பட்டு விளங்கிய மகேந்திரபுரம்; சூரபன்மனின் தலைநகர். சயேந்திரன் - வெற்றி உடையவன்.

97. சூரனைச் சோதித்து வருக என்று - சூரபன்மனிடம் போய்த் தேவரைச் சிறையினின்று விடுவிக்கிறாயா என்று வினவி. சோதித்து - வினாவி. தடந்தோள் விசயவீரன் - பெரிய தோளையும் வெற்றியையும் உடைய வீரவாகு தேவர். கார் அவுணன் - கரிய அசுரன்; சூரபன்மன். உடலால் அன்றி உள்ளத்தாலும் கருமை யுடையவன்.

98. தானவர் - பகைவர். நாற்படையும் - காலாள் முதலிய நான்கு வகைப் படைகளையும். சங்கரித்து - அழித்து. பானுப் பகைவன் - பானுகோபன்.

99. வாகை - வெற்றி மாலை. முடித்தோய் - அணிந்தவனே. சகமுடுத்த - உலகத்தைச் சூழ்ந்துள்ள.

100. வாரி - கடல். புதிய மாவாய் - புதிய மாமரமாய்; புதுமையாவது. வேர் மேலேயும் மற்றப் பகுதிகள் கீழுமாகச் சூரன் நிற்றல். அவுணன் - அசுரன்; சூரபன்மன். சூர் உடலம் - சூரனின் உடம்பு. கீண்ட - பிளந்த.

101. அங்கம் இரு கூறாய் - உடம்பு இரண்டு கூறாக. அடல்மயிலும் - வலிமையுடைய மயிற் பறவையும். சேவல் - கோழி. ஆர்த்து எழுந்து - ஆரவாரித்து எழுந்து.

102. சீறும் அரவை - சீறிவரும் இயல்பு கொண்ட பாம்பை. பொருத - கொன்ற. சித்ர மயில் - அழகிய மயில். வாகனமா - ஊர்தியாக. இளையோன் - என்றும் இளமையுடையவன்.

103. சேவற்பகை - பகைவனான சூரபன்மனே சேவல் வடிவு கொண்டதால் 'சேவற்பகை' என்றார். பதாகை என்றது பெரிய கொடியை.

தனித்து உயர்த்த - மற்றக் கொடிகள் எல்லாம் தனக்குத் தாழ்ந்து நிற்ப; அவற்றுக்கு எல்லாம் மேலாக உயர்த்திய. மூவர் - நான்முகன், திருமால், உருத்திரன்.

104. குறை முடித்து - வேண்டுதலை முடித்து. தேவர் சிறை விடுத்து - தேவர்களைச் சூரபன்மனிடமிருந்து விடுவித்து.

மறைமுடிவாம் - வேதத்தின் முடிந்த பொருளை

### தெய்வயானை வள்ளியம்மையை மணத்தல்

105. சைவக் கொழுந்தே, தவக்கடலே, வான் உதவும்
தெய்வக் களிற்றை மணம் செய்தோனே - பொய்விரவு

106. காமம் முனிந்த கலைமுனிவன் கண்அருளால்
வாமமட மானின் வயிற்றுஉதித்துப் - பூமருவு

107. கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனல் புனம்காத்து இனிது இருந்து - மேன்மை பெறத்

108. தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந் தோனே - உள்ளம் உவந்து

105. வேதங்களின் முடிவான சைவ சமயத்தின் கொழுந்தைப் போன்றவனே! மக்கள் செய்யும் அரிய தவங்களாம் பேராறுகளுக்கு முடிவாய் உள்ள அருட்கடலே!

வேண்டும் போது மழையைத் தரும் தெய்வக் கற்பையுடைய தெய்வ யானையை மணம் செய்து கொண்டவனே! நிலை யின்மையை உடைய

106. உலகத்துப் பற்றை விட்ட கலைகளை உணர்ந்த சிவமுனிவரின் பார்வைச் சிறப்பால் அழகிய இளம்பெண் மானின் வயிற்றில் தோன்றிப் பூக்கள் நிறைந்த

107. காட்டில் வாழும் குறவர்கள் மகிழ்ச்சி மிக அழகிய குயில் போன்ற குரலால் பறவை ஓட்டிக் காவல் மேற் கொண்டிருந்த மேன்மை உண்டாக

108. தெள்ளிய தினைமாவையும் தேனையும் அன்புடன் அளித்த வள்ளியம்மையான பூங்கொடியை மணம் செய்து கொண்டவனே!

**விளக்கம்**

105. வான் உதவும் தெய்வக்களிறு - தேவர் உலகில் தோன்றிய தெய்வ யானை அம்மையார்; தன் கற்பின் மேன்மையால் வேண்டிய போது மழையை வருவிக்கும் தெய்வ யானையம்மை! பொய் விரவு - நிலையற்ற

106. காமம் முனிந்த - உலகப்பற்றை விடுத்த. கலை முனிவன் - கலைகளை உணர்ந்த முனிவன்; சிவமுனிவன். கண் அருளால் - பார்வையால் துய்த்த கருணையால். தேவர்கள் கண்ணால் இன்பம் அனுபவிப்பவர். ஆதலால் அவர்களைப் போன்ற இச்சிவ முனிவரும் பார்வையால் துய்த்தார்.

107. கானக் குறவர் - காட்டில் வாழும் குறவர். களிகூர - மகிழ்ச்சி அடைய. ஏனற்புனம் - தினைப்புனம்.

108. பரிந்தளித்த - அன்புடன் அளித்த. வள்ளிக் கொடி - வள்ளிநாய்ச்சியார்.

## அடியார்க்கு அருள் செயல்

109. ஆறு திருப்பதி கண்டு ஆறுஎழுத்தும் அன்பினுடன்
கூறும் அவர் சிந்தைகுடி கொண்டோனே - நாறுமலர்க்

110. கந்திப் பொதும்பர்எழு கார்அலைக்கும் சீர் அலைவாய்ச்
செந்திப் பதிபுரக்கும் செவ்வேளே - சந்ததமும்

### தெளிவுரை

109. மனம் மகிழ்ந்து திருப்பரங்குன்றம் முதலிய ஆறு திருப்பதிகளுக்கும் போய் அப்பெருமானுக்குரிய ஆறு எழுத்துக் களையும் அன்புடன் உரைப்பவரின் உள்ளத்தில் குடிகொண்டிருப் பவனே!

110. நறுமணம் வீசும் மலர்களையுடைய பாக்கு மரச் சோலையையும் மேகம் வரை எழுந்து அலை மோதும் சிறந்த கடற்கரையையும் கொண்டு விளங்கும் திருச்செந்தூரான திருப் பதியை ஆண்டருளும் செவ்வேளே!

### விளக்கம்

109. ஆறுதிருப்பதி - திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவிநன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை, இந்த ஆறு பதிகளையும் ஆறு படைவீடு என்பது வழக்கு. ஆறு எழுத்து - 'சரவணபவ' என்பது. கந்திப் பொதும்பர் - பாக்குமரச் சோலை.

## வேண்டுதல்

111. பல் கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல் கோடி விக்கினமும் பல்பிணியும் பல் கோடி

112. பாதகமும் செய்வினையும் பாம்பும் பசாசும்அடல்
பூதமும் தீ நீரும் பொருபடையும் - தீதுஅகலா

113. வெவ்விடமும் துட்ட மிருகம் முதலாம்எவையும்
எவ்விடம் வந்துஎம்மை எதிர்த்தாலும் - அவ்விடத்தில்

114. பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில் வேலும் - கச்சைத்

115. திருவரையும் சீறடியும் செங்கையும் ஈராறு
அருள்விழியும் மாமுகங்கள் ஆறும் - விரிகிரணம்

116. சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓர்ஆறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற - வந்து இடுக்கண்

117. எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்து
உல்லாச மாக உளத்திருந்து - பல்விதமாம்

118. ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்
பேசும்இயல் பல்காப் பியத்தொகையும் - ஓசை

119. எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து - ஒழுக்கமுடன்

120. இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் - தம்மை விடுத்து

121. ஆயும் பழைய அடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் - சேய

122. கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன் நின்று அருள்.

எப்போதும்,

111. பலகோடிப் பிறப்பாகிய பகையும் அகால மரணமும், இழிநிலைக்கு ஆளாக்கும் எண்ணற்ற பாவச் செயல்களும், பல வகை நோய்களும், பலகோடி

112. தீமைகளும், சூனியம் முதலிய செய்வினைகளும், பாம்புகளும், பிசாசும், வலிமையுடைய பூதங்களும், அக்கினி நீரும் போரிடும் படையும், தீமை நீங்காத

113. கொடிய விடமும் கொடிய விலங்கு முதலியனவும் எங்கு வந்து எம்மை எதிர்த்தாலும், அங்கு

114. பசுமைநிறம் வாய்ந்த மயில் ஊர்தியும் பன்னிரண்டு திரண்ட தோள்களும் பயத்தைப் போக்குகின்ற கூர்மையுடைய வேலும் கச்சை அணிந்த

115. திரு அரையும், சிறிய அடிகளும், சிவந்த கைகளும், விரியும் கதிர்கள்

116. வெளிப்பட அணிந்த திருமுடிகள் ஓர் ஆறும் எல்லாத் திக்குகளிலும் எமக்கு முன் தோன்றக் காட்சி தந்தருளி

117. துன்பங்களை எல்லாம் தூளாகுமாறு அழித்து, எல்லா வரங்களையும் தந்தருளி எம் உள்ளத்தில் எழுந்தருளிப் பல வகையான

118. ஆசுகவி முதலிய நான்கு வகைப்பட்ட கவிகளும், ஒரே நேரத்தில் எட்டு வகையான வினாக்களுக்கு விடை அளிக்கும் அட்டாவதான நினைவாற்றலும், நின் புகழைப் பரக்கப் பேசும் இயல்புடைய பல காப்பியங்களின் தொகுதியும், ஓசையுடைய

119. எழுத்து முதலிய ஐந்து இலக்கணமும், முற்றக் கற்று முதிர்ந்த தமிழ்ப்புலமையையும், நல்ல ஒழுக்கத்தையும் தந்தருளி,

120. இப்பிறப்பில் தோன்றும் அகப்பற்று புறப்பற்று என்னும் இரண்டையும் போக்கி, ஆணவமலம் கன்மம் மாயை ஆகிய மூன்று மலங்களையும் அகற்றித் தன் முனைப்பை நீக்கி

121. திருவருள் உணர்வுடனே ஞான நூல்களை ஆராயும் இயல்புடைய பழைய அடியாருடன் என்னையும் சேர்த்து அவர்கள் அனுபவிக்கும் பேரின்பத்தை அனுபவிக்கச் செய்து, நீண்ட தொலைவு

122. நல்ல மணம் கமழும் அழகிய தாமரை மலர் போன்ற திருவடிகளைக் கண்டு மகிழும்படி செய்து எளிய என்னை

ஆளாகக் கொண்டு அடியவனான எனக்கு முன்னின்று நும் திருவருளைத் தந்தருளுவீராக!

**விளக்கம்**

111. பல்கோடி சன்மப் பகை - வினை நீங்கும் வரை பிறவி தொடரும் இயல்புடையது. எனவே பல கோடி சன்மப்பகை என்றார். சன்மம் - பிறவி. அவமிருத்து - அவம் + மிருத்து; அகால மரணம் இழிநிலைக்கு ஆளாக்கும். விக்கினம் - இடையூறு.

112. பாதகம் - மகாபாதகம், அதிபாதகம், உபபாதகம் ஆகிய மூன்று பாதகங்கள். செய்வினை - சூனியம் முதலியன; ஏவல் என்பதுமிது. பசாசு - பைசாசம் என்பதன் திரிபு. படை - ஆயுதம்.

113. வெவ்விடம் - கொடிய நஞ்சு. துட்டமிருகம் - துஷ்ட மிருகம்; கொடிய விலங்கு.

114. எம்மை என்ற பன்மை அடியாரை உளப்படுத்தியது.

115. திண் தோள் - வளமையான தோள். ஈர் ஆறு - பன்னிரண்டு.

116. இடுக்கண் - இடையூறு துன்பம்.

117. பொடிபடுத்தி - தூளாக்கி. உல்லாசமாக - மகிழ்ச்சி யாக.

118. ஆசு முதல் நாற்கவியும் - ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, அகல கவி என்ற நான்கு வகைப்பட்ட கவி. அட்டாவ தானம் - ஒரே நேரத்தில் எட்டுச் செயல்கள் நிகழ அவற்றைப் பற்றி எண்மர் வினவ எட்டு வினாக்களுக்கும் விடையளிக்கும் திறம். அவதானம் - கவனம். சீர்ப்பேசும் இயல்பு - இறைவன் புகழைப் பேசும் இயல்பு. ஓசை - ஒலி.

119. எழுத்து முதலாம் ஐந்து இலக்கணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்து இலக்கணம். பாலித்து - அளித்தருளி.

120. இருவாதனை - அகப்பற்று, புறப்பற்று என்ற இரு துன்பங்கள். மும்மைப் பெருமலம் - ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்கள். மோசித்து - அகற்றி.

121. பழைய அடியார் - தொன்றுதொட்டு வரும் அடிமைத் திறம் பூண்டவர். துய்ப்பித்து - அனுபவிக்கும்படி செய்து. சேய - சிவந்த. பரபோகம் - மேலான இன்பம்.

122. கடியேற்கும் - நறுமணம் பொருந்திய. பூங்கமலக்கால் - தாமரைமலர் போன்ற திருப்பாதத்தைக் காட்டி.

*திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா மூலமும் உரையும் முற்றின*

# 2. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

'பிள்ளைத் தமிழ்' என்பது தமிழில் உள்ள தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று. இது வழிபடும் தெய்வம், அல்லது பெரியோர் மன்னர் வள்ளல் முதலியவருள் ஒருவரைப் பிள்ளையாகப் பாவித்துப் பத்துப்பருவம் அமைத்து நூறு ஆசிரிய விருத்தங்களால் பாடப்படுவது. இந்நூல் ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என இரண்டு வகைப்படும்.

ஆண்பால் பிள்ளைத்தமிழ் காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்ற பத்துப் பருவங்களை உடையதாய்ப் பாடப்படும்.

பெண்பால் பிள்ளைத்தமிழ், காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, கழங்கு, அம்மானை, ஊசல் என்ற பத்துப்பருவம் அமையப் பாடப்படும்.

ஒவ்வொரு பருவமும் பத்துப்பத்துப் பாக்களைக் கொண்டது.

'கடுங்கொலை நீக்கிக் கடவுள் காப்புச்,
செங்கீரை,தால், சப்பாணி, முத்தம்,
வாரா னை, முதல் வகுத்திடும் அம்புலி,
சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னப்
பெறுமுறை ஆண்பாற் பிள்ளைப் பாட்டே'

''அவற்றுடன்,
பின்னைய மூன்றும் பேதையர்க் காகா;

ஆடும் கழங்குஅம் மானை, ஊசல்,
பாடும் கவியால் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத் தான்கிளை அளவாம்
(இலக்கண விளக்கப் பாட்டியல் 434, 435)

1. காப்புப்பருவம்: இஃது இரண்டாம் திங்களில் நிகழ்வது. பிள்ளையைக் காக்குமாறு காத்தற் கடவுள் முதலிய தேவர்களை வேண்டுதல்.

2. செங்கீரைப்பருவம்: இஃது ஐந்தாம் திங்களில் நிகழ்வது. ஒருகாலை மடக்கி, ஒருகாலை நீட்டி இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்ந்து முகம் அசைய ஆடுதல்.

3. தாலப்பருவம்: எட்டாம் திங்களில் நிகழ்வது. 'தாலாட்டையேல்' 'தாலாட்டையேல்' என்ற அடுக்கு, தாலோ, தாலேலோ என இணைந்தும் தனித்தும் அமையும்.

4. சப்பாணிப்பருவம்: ஒன்பதாம் திங்களில் நிகழ்வது. இரண்டு கைகளையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கொட்டும் பருவம்.

5. முத்தப்பருவம்: பதினொன்றாம் திங்களில் நிகழ்வது. குழந்தையை முத்தம் தரும்படி தந்தை தாய் முதலியவர் வேண்டுதல்.

6. வருகைப்பருவம்: பன்னிரண்டாந் திங்களில் நிகழ்வது. சிறுநடை நடக்கும் பருவம்.

7. அம்புலிப்பருவம்: பதினைந்தாம் திங்களில் நிகழ்வது. வானில் உள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாட வருமாறு செவிலித்தாய், முதலியவர் அழைத்தல்.

8. அம்மானைப்பருவம்: குழந்தையை நோக்கித் தாயார் முதலியவர் அம்மானை ஆடும்படி கூறுதல்.

9. நீராடற்பருவம்: பிள்ளையை நோக்கி மகளிர் ஆற்று வெள்ளத்தில் நீராடும்படி கூறும் பருவம்.

10. ஊசல் பருவம்: குழந்தையை ஊஞ்சலில் அமர்த்தி ஊஞ்சலை ஆடும்படி செய்யும் பருவம்.

இறுதியில் உள்ள மூன்று பருவங்களும் ஐந்து ஆண்டு முதல் ஒன்பது ஆண்டு வரை நிகழும் செயல்களாகச் சொல்லப்படும்.

## 2. விநாயகர் வணக்கம்

### (ஆசிரிய விருத்தம்)

2. கார்கொண்ட கவுள்மதக் கடைவெள்ள முங்கட்
கடைக்கடைக் கனலுமெல்லை
கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி
கடைக்கால் திரட்டவெங்கோன்
போர்கொண்ட வெண்டோட் பொலங்குவடு பொதியும்வெண்
பொடிதுடி யடித்துவைத்துப்
புழுதியாட் டயராவொர் அயிராவ ணத்துலவு
போர்க்களிற் றைத்துதிப்பாம்
தார்கொண்ட மதிமுடி யொருத்தன் திருக்கண்மலர்
சாத்தக் கிளர்ந்துபொங்கித்
தவழுமிள வெயிலுமழ நிலவுமள வளவலால்
தண்ணென்று வெச்சென்றுபொன்
வார்கொண்டு அணந்தமுலை மலைவல்லி கர்ப்பூர
வல்லிஅபி ராமவல்லி
மாணிக்க வல்லிமர கதவல்லி அபிடேக
வல்லிசொல் தமிழ்தழையவே.

**தெளிவுரை**

(அடி3) மாலையைச் சூடியிருக்கின்ற பிறையைச் சடை முடியில் கொண்டிருக்கின்ற ஒருவனான சிவபெருமானின் கண்களை மூடுதலால், மேல் எழுந்து நிறைந்து தவழும் இளவெயிலும் இளமையான நிலவும் கலத்தலால் குளிர்ந்த தாகவும் வெம்மை உடையதாகவும் காணப்படும்.

(அடி4) அழகிய கச்சணிந்த கொங்கைகளையுடைய மலைமகள் அவள். கர்ப்பூர வல்லி, அபிராமவல்லி, மாணிக்க வல்லி, மரகத வல்லி, அபிடேக வல்லி என அழைக்கப்படுபவள். அம்மீனாட்சியம்மை மீது பாடப்படுகின்ற பிள்ளைத் தமிழ் நூல் தழைத்துச் சிறக்கும்படி,

(அடி1) கரிய நிறம் கொண்ட கன்னத்தினின்றும் பெருகு கின்ற ஊழி மதப் பெருக்கும் கண்களினின்று பிறக்கின்ற ஊழிக் காலத்தீயும் தம்தம் வரம்பைத் தாண்டாதவாறு அகன்ற குழைந்த செவிகளால் எடுத்து வீசப்படும் ஊழிக்காற்றுத் தடுக்கும். தடுக்க.

(அடி2) எம் சிவபெருமானது போர்ச் செயலைச் செய்கின்ற எட்டுத் தோள்களிலும் அணிந்துள்ள வெண்மையான திருநீற்றை மேலான திருவடிகளால் மிதித்துப், புழுதியாக்கி விளையாடுகின்ற ஒப்பில்லாத அயிராவணம் என்னும்படி உலவும் போரிடவல்ல யானை முகக் கடவுளின் திருவடிகளை வணங்குவோம்.

**விளக்கம்**

(1அடி)) கார் கொண்ட மதம் - கரிய நிறம் உடைய மதநீர். கவுள் - கன்னம். கடை வெள்ளம் - ஊழி முடிவு காலத்து வெள்ளம். கட்கடைக்கனல் - கண்ணின் கடையில் தோன்றும் ஊழிக்காலத்தீ, மதமும் கண்ணில் உள்ள சினத்தீயும் மிகுதி யானதால் ஊழியிறுதியில் தோன்றும் வெள்ளமாக உருவகம் செய்யப்பட்டுள்ளன. கடை - ஊழியின் முடிவு. தடவுக் குழைச் செவி - பெரிய இலை போன்ற காது. குழை - தாமரை இலை. கடைக்கால் - ஊழிமுடிவில் வீசும் காற்று. திரட்ட - வெளியே பரவாமல் தடுக்க. எங்கோன் - சிவபெருமான்.

(2அடி) எண்தோள் - எட்டுத்தோள். பொலங்குவடு - மேருமலை. பொதியும் - மறைத்த. வெண்பொடி - வெண்ணீறு. துடி அடி - விநாயகரின் துடியைப் போல் உள்ள அடி. விநாயகர் களிறு என்று கூறப்படுதலால் அத் தொடர்பு நோக்கித் 'துடி போன்ற அடி' எனப்பட்டது. துடி - பறை. அடிவைத்து - கால்களை வைத்து. புழுதியாட்டு அயரா - புழுதியில் விளையாடி.

புழுதியில் விளையாடுதல். யானைகளுக்கு இயல்பு. அயரா - அயர்ந்து. அயிராவணத்து - அயிராவணம் என்ற யானையைப் போல். இந்த யானை இரண்டாயிரம் கொம்பையுடையது. சிவபெருமானுக்கு உரியது; வெள்ளை நிறம் கொண்டது. விநாயகர் தம் உடலில் திருநீற்றை அளைந்து மேனி முழுவதும் வெண்நிறம் பெற்றதால் அயிராவணம் உவமையாக்கிக் கூறப் பட்டது. களிற்றை - விநாயகரை.

ஊழி வெள்ளத்தையும் ஊழித்தீயையும் கடவாது திரட்டத் துவைத்து அயரா உலவு களிற்றைத் துதிப்பாய் என இயையும்.

(அடி3) தார் கொண்ட மதி - முடிமாலையாகக் கொண்ட பிறைச் சந்திரன். தார் - முடிமாலை. திருக்கண் மலர் சாத்த - (அம்மையார்) கண்களை மூட. கதிரவன் வலக்கண்ணாகவும் சந்திரன் இடக்கண்ணாகவும் தீ நெற்றிக்கண்ணாகவும் விளங்கு பவன். வலக்கண்ணும் இடக்கண்ணும் அம்மையின் மார்பின் மீது படுதலால் வெம்மையும் தண்மையும் ஓரிடத்துத் தோன்றுவன ஆயின. தண் என்று வெச்சென்று - குளிர்ச்சியுடையதாயும் வெம்மையுடையதாயும்.

(அடி4) வார் - மார்புக் கச்சு. அணந்த முலை - மேல் நோக்கியுள்ள கொங்கை.

மலைவல்லி - மலையரசனின் மகளாகத்தோன்றியதால் மலைவல்லி. சோம சுந்தரக் கடவுளுக்குக் கர்ப்பூர சுந்தரர் என்ற பெயர் உண்டு. ஆதலின் கர்ப்பூர வல்லி என்ற பெயர் உண்டு மீனாட்சிக்கு. அபிராம வல்லி - பேரழகுடைய கொடி போன்றவள். மாணிக்க வல்லி - மாணிக்கக் கொடி போன்றவள். மரகத வல்லி - மரகதக் கொடி போன்ற பச்சை நிறம் உடையவள். அபிடேக வல்லி - திருமுடியை உடையவள். அபிடேகம் - முடி. சொல்தமிழ் - பாடப்படும் பிள்ளைத் தமிழ் நூல். புகழையுடைய தமிழ் நூல்.

பிள்ளைத் தமிழ் சிறப்புற முடிவு பெறக் களிற்றை ஒத்த விநாயகரைத் துதிப்போம்.

# 1. காப்புப் பருவம்

## திருமால்

3. மணிகொண்ட நெடுநேமி வலயம் சுமந்தாற்றும்
மாசுணச் சூட்டுமோட்டு
மால்களிறு பிடர்வைத்த வளரொளி விமானத்து
வாலுளை மடங்கல்தாங்கும்
அணிகொண்ட பீடிகையின் அம்பொன்முடி முடிவைத்தெம்
ஐயனொடு வீற்றிருந்த
அங்கயற் கண்ணமுதை மங்கையர்க் கரசியையெம்
அம்மனையை யினிதுகாக்க
கணிகொண்ட தண்டுழாய்க் காடலைத் தோடுதேங்
கலுழிபாய்ந் தளறுசெய்யக்
கழனிபடு நடவையில் கமலத் தணங்கரசொர்
கையணை முகந்துசெல்லப்
பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்
பணைத்தோள் எருத்தலைப்பப்
பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே. 1

### தெளிவுரை

(அடி3) முடிமாலையாய்க் கட்டப்பட்ட குளிர்ந்த துளசிக் கூட்டம் அலைந்து ஓடும் தேன் வெள்ளம் பரந்து சேற்றைச் செய்ய அதனால் வயல் ஆகிய வழியில் தாமரை மலரில் தங்கியுள்ள பெண் தெய்வமான திருமகள் ஒரு கையை அணையாய் வைத்துத் தொடர்ந்து செல்லவும்.

(அடி4) பாம்பு கொண்ட வளைவான படங்கள் அமைந்த பாயின் சுருள் திரண்ட தோளை வருத்தவும் பழமையுடைய வேதங்கள் முறையிட்டுப் பின் செல்லவும். இனிய தமிழ்ப் பாடலின் பின்பு சென்ற மிக்க பசிய நிறம் வாய்ந்த மேகத்தை ஒத்த திருமால்,

(அடி1) பல வகையான மணிகளைத் தன்னுள் கொண்ட நீண்ட கடலால் சூழப்பட்ட பூமண்டலத்தைத் தாங்கி நிற்கும் ஆதி சேடனாகிய பாம்பின் உச்சி மீது பெருமையும் மயக்கமும் பொருந்திய ஆண் யானைகளின் தோள்களால் தாங்கப்படும் பெருகும் ஒளியுடைய விமானத்தில் வெண்மையான பிடரி மயிரையுடைய சிங்கங்கள் தாங்கும்.

(அடி2) அழகிய பொன்னால் ஆன முடியைத் தன் திருமுடியில் கவித்து எம் இறைவனான சிவபெருமானுடன் அரசு வீற்றிருந்த அழகிய கயல் மீன் போன்ற கண்களையுடைய அமுதம் போன்றவளைப், பெண் அரசியை, எம் தாயை இனிதாகக் காத்தருளுக.

**விளக்கம்**

(அடி1) மணி - முத்து முதலிய ரத்தினங்கள். நெடுநேமி - ஆழம் உடைய கடல். வலயம் - பூமி. சுமந்தாற்றும் - சுமக்கும். மாசுணச் சூட்டு மோட்டு மால் களிறு பிடர் வைத்த - ஆதிசேடனின் தலையின் உச்சியில் பெருமையையும் மயக்கத்தையும் உடைய களிறுகள் தம் கழுத்தில் வைத்த. விமானம் - இந்திர விமானம். வால் உளை மடங்கல் - வெண்மையான மயிரை உடைய சிங்கம்.

(அடி2) அணி கொண்ட - அழகுடைய. பீடிகை - இருக்கை. அம்பொன் முடி - அழகிய பொன்னால் ஆன முடி. முடி வைத்து - தன் திருமுடியில் கவித்து. எம் ஐயன் - எம் சிவபெருமான். அங்கயற்கண் அமுது - மீனாட்சி.

(அடி3) கணிகொண்ட - முடி மாலையாகக் கொண்ட 'கண்ணி' என்பது 'கணி' என வந்தது. துழாய்க்காடு - துளசி யாகிய காடு. அது திருமால் மார்பில் அணிந்த துளசித் தொகுதி. தேம்கலுழி - தேன் வெள்ளம். காட்டினை அலைத்து ஓடும் வெள்ளம் என்க. அவ்வெள்ளம் பாய்வதால் வழியானது சேறாகிக் கழனியாய் ஆயது. அளறு - சேறு. கழனி - வயல். நடவை - வழி. கமலத்து அணங்கு - தாமரையில் வீற்றிருக்கும் திருமால். கையணை முகந்து - கையாகிய அணையைப் பற்றிக் கொண்டு.

(அடி4) முடவு - வளைவு. படப்பாய் - படமாகிய படுக்கை. பணைத் தோள் - பருத்த தோள். எருத்து அலைப்ப - தோளை வருத்த. பைந்தமிழ் - பசுமையான தமிழ்ப்பாடல். பச்சைப்பசுங் கொண்டல் - மிகப்பசிய மேகம் போன்ற திருமால். பைந்தமிழ்ப் பின் சென்ற கொண்டல் - திருவெஃகாவில் வீற்றிருக்கின்ற பெருமாள் 'கணிகண்ணன் போகின்றான்' என்ற திருமழிசை ஆழ்வார் பாடலைக் கேட்டுத் 'தம்படுக்கையைச் சுருட்டிக் கொண்டு அவ்வாழ்வாருடன் சென்றார் என்பது வரலாறு.

(முடிபு) கலுழி அளறு செய்ய, அணங்கரசு செல்ல, சுருட்டு அலைப்ப, மறைகள் முறையிடச் சென்ற கொண்டல். அம் மனையை இனிது காக்க என இயைகின்றது. (1)

## சிவபெருமான்

### (சந்த விருத்தம்)

4. சிகர வடவரை குனிய நிமிர்தரு
செருவில் ஒருபொரு வில்லெனக் கோட்டினர்
செடிகொள் பறிதலை அமண ரெதிரெதிர்
செலவொர் மதலைசொல் வைகையில் கூட்டினர்
திருவு மிமையவர் தருவும் அரவொலி
செயவ லவர்கொள நல்குகைத் தீட்டினர்
சிறிய வெனதுபுன் மொழியும் வடிதமிழ்
தெரியும் அவர்முது சொல்லெனச் சூட்டினர்
பகரு மிசைதிசை பரவ விருவர்கள்
பயிலு மியறெரி வெள்வளைத் தோட்டினர்
பசிய அறுகொடு வெளிய நிலவிரி
பவள வனமடர் பல்சடைக் காட்டினர்
பதும முதல்வனும் எழுத அரியதொர்
பனுவ லெழுதிய வைதிகப் பாட்டினர்

பரசும் இரசத சபையில் நடமிடு
பரத பதயுகம் உள்ளம்வைத் தேத்துதும்
தகரம் ஒழுகிய குழலும் நிலவுமிழ்
தரள நகையுமெ மையனைப் பார்த்தெதிர்
சருவி யமர்பொரு விழியு மறுகிடை
தளர வளர்வதொர் செவ்விமுற் றாக்கன
தனமு மனனுற வெழுதி எழுதரு
தமது வடிவையும் எள்ளிமட் டூற்றிய
தவள மலர்வரு மிளமி னொடுசத
தளமின் வழிபடு தையலைத் தூத்திரை
மகர மெறிகட லமுதை அமுதுகு
மழலை பழகிய கிள்ளையைப் பேட்டனம்
மடவ நடைபயில் பிடியை விரைசெறி
வரைசெய் புயமிசை வையம்வைத் தாற்றிய
வழுதி யுடையகண் மணியொ டுலவுபெண்
மணியை யணிதிகழ் செல்வியைத் தேக்கமழ்
மதுர மொழுகிய தமிழின் இயல்பயில்
மதுரை மரகத வல்லியைக் காக்கவே. (2)

**தெளிவுரை**

(அடி4) மயிர்ச்சாந்து அணிந்து ஒழுகுகின்ற கூந்தலும் முத்தைப் போன்ற பற்களும், இறைவனை நோக்கி எதிராக நின்று போர் செய்யும் கண்களும்,

வருந்தும் இடையானது தளரும்படி வளர்ந்துள்ள ஒப்பற்ற பருவம் நிரம்பாத கனமான கொங்கைகளும், மனம் பொருந்த எழுதிப் பார்த்தும் எழுத இயலாததும் வடிவங்களையும் இகழ்ந்து தேனை ஊற்றுகின்ற வெண் தாமரையில் தங்கியிருப்பவளான நாமகளும் நூற்றிதழ்த் தாமரையான செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியும் வழிபடும் மங்கையைத் தூவும் அலைகளையுடைய.

(அடி4) மகர மீன்கள் மோதும் திருப்பாற்கடலில் தோன்றிய அமுதம் போன்றவளை, அமுதம் ஒழுகும் இளங்குதலைச் சொற்கள் பழகும் கிளியை, பெண் அன்னம் போன்ற இளமை யுடைய அழகிய நடையைப் பழகும் பெண் யானையை, மணம் உடைய மலையை ஒத்த தோளில் பூமியைத் தாங்கி ஆட்சி செய்த பாண்டியனின் கண்மணியுடன் விளங்கும் பெண்மணியை, அழகு விளங்கும் செல்வம் உடையவளை, தேன் போல் மணம் கமழும் இனிமை முதிர்ந்த தமிழின் இயல்புடன் பழகியுள்ள மதுரை மரகத வல்லியைக் காக்கும் பொருட்டாக.

(அடி1) உச்சியையுடைய வடக்கு மலையான மேருவை வில்லாய் வளையும்படி ஏற்பட்ட போரில் ஒப்பில்லாத போர் செய்யக் கூடிய வில்லாய் வளைத்தவர். (திரிபுரங்களை அழித்தவர்) நாற்றம் உடைய பறிக்கப் பெறும் தலைமயிரை யுடைய சமணர்களுக்கு எதிராகச் சொற்போர் செய்யத் திருஞான சம்பந்தர் ஆன இளைஞரின் 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் பதிகத்தை வைகை ஆற்றில் கூட்டியவர், செல்வப் பெருக்கத் தையும் தேவர்களின் கற்பக மரத்தையும் அரன் நாமத்தை உச்சரிக்கத் திறம் உள்ளவர்க்குத் தரும் கையெழுத்தை யுடையவர், அற்பமான என் சொல்லையும் ஆய்ந்து எடுத்த தமிழ் முழுவதும் தெரிந்த புலவரின் பழைமையான சொற்களைப் போல் தலைமேற் கொண்டவர்,

(அடி2) படியும் இசை எல்லாத் திக்குகளிலும் பரவுமாறு 'அசுவதரன்' 'கம்பளன்' என்ற இருவரும் பயில்கின்ற இசையின் இலக்கணத்தை அறிந்த வெண்ணிறம் பொருந்திய சங்குக் காதணி அணிந்தவர்; பசுமையான அறுகம்புல்லுடன் வெண்மையான நிலவை விரிக்கும் செம்பவளக் காட்டைப் போல் நெருங்குகின்ற பல சடைக் கூட்டங்களை உடையவர்.

தாமரையின் தலைவனான நான்முகனாலும் எழுத இயலாத வேத நெறியுடன் கூடிய பாடலை உடையவர், துதிக்கப் பெறுகின்ற வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடும் பரத நாட்டியத்துடன் கூடிய இரு திருவடிகளையும் மனத்தில் கொண்டு வணங்குவோம்.

**விளக்கம்**

(முடிபு) மரகத வல்லியைக் காக்கப் பரதம் பயிலும் திருவடிகளை மனத்துள் கொண்டு வணங்குவோம் என முடிகின்றது.

(அடி1) சிகரம் - உச்சி. வடவரை - மேருமலை. செருவில் - திரிபுராதிகளை அழிக்க எண்ணிய போரில். கோட்டினர் - வளைத்தவர். செடி - நாற்றம். பறிதலை அமணர் - தம் தலை மயிரைத் தாமே பறித்துக் கொள்ளும் அமணர். இவ்வாறு மயிர் பறித்தல் அவர்களுக்கு ஒரு நோன்பு. அமணர் எதிர் - சமண சமயத்தவர்க்கு எதிரே. எதிர்செல - நீரின் எதிரே செல்ல. மதலை - மகன்; திருஞான சம்பந்தர். 'சொல்' - சொல்லால் ஆன பதிகம்; அது 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் பதிகம். கூட்டினர் - கூடச் செய்தவர்.

திருவும் - செல்வமும். இமையவர் தருவும் - கற்பக மரமும். அர ஒலி - 'ஹர' என்ற ஒலி. இவ்வொலியை எழுப்புபவர் திருமால் பதவி, இந்திர பதவி ஆகியவற்றை அடைவர் என்பர். கைத்தீட்டு - கையெழுத்து. வடிதமிழ் - தெளிந்த தமிழ். முதுசொல் - தேவாரப் பாடல் முதலியன.

(அடி2) பகரும் இசை திசை பரவ இருவர்கள் - பாடும் இசையானது எல்லாத் திசைகளிலும் பரவும்படி பாடும் அசுவதரன், கம்பளன். இயல் - இயல்பு. வெள் வளைத் தோட்டினர் - வெண்மையான சங்குக் காதணியை அணிந்தவர். அறுகு - அறுகம்புல். வெளிய - வெண்மையான. நிலவிரி - நிலவு ஒளியை விரிக்கும். பவளவனம் - பவளக் காட்டை. அடர் - ஒத்த. பதுமமுதல்வன் - தாமரை நாயகன்; பிரமன். பனுவல் - 'கொங்குதேர்' எனத் தொடங்கும் பாடல். வைதிகம் - வேத நெறி. இறைவன் திருவாயினின்றும் வருபவை யாவும் வேதம் ஆதலால் வைதிகப் பாட்டினர் என்றார். இரசதசபை - வெள்ளியம்பலம். இது மதுரையில் உள்ளது. பதயுகம் - இருதிருவடிகள். ஏத்துதும் - வணங்குவோம்.

(அடி3) தகரம் - மயிர்ச்சாந்து. எம்ஐயனை - சிவ பெருமானை. சருவி - பின்னிவிட்டு. எழுதரு - மற்றவரால் எழுத

இயலாத. மறுகிடை - மறுகு + இடை; வருந்தும் இடை. செவ்வி முற்றா - இளமை முற்றாத. மனன்உற - மனத்தில் பொருந்த. எள்ளி - இகழ்ந்து. மட்டு - தேன். தவள மலர் - வெண்மையான மலர். இளமின் - இளமையுடைய மின்னல் போன்ற நாமகள். சததளமின் - நூறு இதழ்களையுடைய தாமரையில் உள்ள திரு மகள். தையல் - மீனாட்சி. தூத்திரை - தூவும் அலை.

(அடி4) மகர எறிகடல் அமுதை - மகர மீன்கள் மோதும் திருப்பாற்கடலில் தோன்றிய அமுதத்தை. அமுது உகு - அமுதம் ஒழுகும். கிள்ளை - கிளி. பேட்டு அனம் - பெண் அன்னம். மடவ நடை பயில் பிடி - இளைய அழகிய நடையைப் பழகும் பெண் யானை. வரை செய் - மலை போன்ற. புயமிசை - தோளின் மீது. வையம் வைத்தாற்றிய - உலகத்தைச் சுமந்த. வழுதி - மலயத் துவச பாண்டியன். தேக்கமழ் - தேன் போல் நறுமணம் உடைய. மதுரம் ஒழுகிய - இனிமை பொருந்திய. மரகத வல்லி - மரகதக் கொடி போன்ற மீனாட்சி. (2)

## சித்தி விநாயகப் பெருமான்

### (வேறு)

5. கைத்தல மோடிரு கரடக் கரைத்திரை
  கக்குக டாமுடைக் கடலிற் குளித்தெமர்
சித்தம தாமொரு தறியில் துவக்குறு
  சித்திவி நாயகன் இசையைப் பழிச்சுதும்
புத்தமு தோவருள் தழையத் தழைத்ததொர்
  பொற்கொடி யோவென மதுரித் துவட்டெழு
முத்தமிழ் தேர்தரு மதுரைத் தலத்துறை
  முத்தன மேவுபெ ணரசைப் புரக்கவே. (3)

**தெளிவுரை**

புதிய அமுதமோ அல்லது அருள் தழைத்து ஓங்குமாறு தளிர்த்திருக்கின்ற ஓர் அழகிய கொடியோ எனச் சொல்லும்படி,

இனிமையாய்ப் பெருக்கெடுத்து ஓடும் மூவகையான தமிழையும் தெளிந்து உணர்கின்ற மதுரைப் பதியில் எழுந்தருளியுள்ள மூன்று கொங்கைகள் உள்ள பெண் அரசியான மீனாட்சியம்மையைக் காக்கும் பொருட்டு, துதிக்கையோடு இருசெவியடிகளிலும் உள்ள சுவட்டில் அலை பெருக்கும் மத நீரையுடைய கடலில் குளித்து எம் போன்ற அடியாரின் மனம் எனக் கூறப்படுகின்ற கட்டுத்தறியில் கட்டப்படும் சித்தி விநாயகரின் புகழ்ச்சியைச் சிறப்பாகப் பேசுவோம்.

**விளக்கம்**

கைத்தலமோடு - துதிக்கையுடன். கரடம் - மதநீர் பாயும் சுவடுகள்; இவை செவியடிகள். தறி - யானை கட்டும் தறி. துவக்குறு - கட்டப்படும். மதுரித்து - இனித்து. உவட்டெழு - பெருக்கெடுக்கின்ற. பழிச்சுதும் - போற்றுவோம்; வணங்குவோம். முத்தனம் - மூன்று + தனம்; மூன்று கொங்கைகள். பெண்ணரசு - மீனாட்சி.

(முடிபு) பெண் அரசைப் புரக்கச் சித்தி விநாயகரை வணங்குவோம் என முடிகிறது. (3)

## முருகப் பெருமான்

### (வேறு)

6. பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமோர்
பகடு நடத்திப் புலோமசைச் சூர்ப்புயல்
பருகி யிடக்கற் பகாடவிப் பாற்பொலி
பரவை யிடைப்பற் பமாதெனத் தோற்றிய
குமரி யிருக்க கலாமயில் கூத்தயர்
குளிர்புன மொய்த்திட் டசாரலிற் போய்ச்சிறு
குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு
குமர னைமுத்துக் குமாரனைப் போற்றுதும்

இமிழ்திரை முற்றத் துமேருமத் தார்த்துமுள்
எயிறுகு நச்சுப் பணாடவித் தாப்பிசைத்
திருக விறுக்கித் துழாய்முடித் தீர்த்தனொடு
எவரு மதித்துப் பராபவத் தீச்சுட
அமுதுசெய் வித்திட் டபோனகத் தீச்சுடர்
அடரு மிருட்டுக் கிரீவமட் டாக்கிய
அழகிய சொக்கற் குமால்செயத் தோட்டிகல்
அமர்செய் கயற்கண் குமாரியைக் காக்கவே. (4)

(அடி3) ஒலிக்கும் அலைகளையுடைய திருப்பாற்கடலில், மேருமலையை மத்தாக நிறுத்தி முள் போன்ற பற்களினின்று வெளிப்படும் நஞ்சுடைய படக் கூட்டத்தை உடைய வாசுகி என்ற பாம்பான கயிற்றை இறுகக் கட்டித் துளசி மாலையை முடித் திருக்கின்ற திருமால் முதலிய தேவர்கள் யாவரும் கடைதலால் அவமதிப்பு அடையுமாறு ஆலகால நஞ்சு சுடுவதற்கு வர,

(அடி4) தேவர்கள் முதலியவர் அச்சத்தைப் போக்கிக் காத்திட அந்த நஞ்சை உணவாகக் கொள்ளப் பக்கத்தே இருந்த உமையம்மையால் தடுக்கப்பட்டுச் சூரியன் சந்திரன் ஒளியைப் போக்கும் இருளை உடையதாகிக் கழுத்தில் நிற்கும்படி அருளிய அழகிய சொக்கலிங்கப் பெருமானுக்கு ஆசையை விளைவிக்க, அந்தக் காதில் அணிந்த தோட்டுடன் பகைத்துப் போர் செய்யும் கயல்மீன் போன்ற கண்களையுடைய மீனாட்சியைக் காக்கும் பொருட்டு,

(அடி1) வண்டுகள் மொய்க்குமாறு மதம் பெருகி ஊற்றும் ஒப்பற்ற ஐராவதம் என்ற யானையைச் செலுத்தி, இந்திராணியான கருக்கொண்ட மேகம் குடிக்கும்படி, கற்பகச் சோலையில் நிறைந்திருக்கின்ற கடலில் தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைப் போலத் தோன்றியவளான

(அடி2) தெய்வ யானை என்னும் இளம் பெண் மணம் பெற்றிருக்கவும், தோகையையுடைய மயில்கள் கூத்து ஆடும் குளிர்ச்சியான தினைப்புனம் நிறைந்த மலைப்பக்கம் போய்ச்

சிறிய குறவர் குடியிலே தோன்றிய வள்ளி நாயகி என்ற பெண்ணுக்கு வணக்கம் செய்ய ஏங்கி நின்ற குமரனை - முத்துக் குமரனை வணங்குவோம்.

**விளக்கம்**

பமரம் - வண்டு. 'ப்ரமரம்' என்பது பமரம் என வந்தது. கடாம் - மதம். பகடு - ஐராவதம் என்னும் யானை. புலோமசை என்னும் தெய்வ மகளான மேகம். புலோமசை - இந்திராணி. பரவை - கடல்; இந்திரன். ஆர் - தெய்வப் பெண். புயல் - எழுவாய். இந்திரன் கருமையான நிறத்தையுடையவன். பற்பமாது - தாமரையில் வீற்றிருக்கும் மாதான திருமகள். இந்திரனிடத்துத் தெய்வயானை தோன்றினாள்.

(அடி2) குமரி - தெய்வயானை. கலாமயில் - தோகை யுடைய மயில். கலாம் - கலாபம் என்பதன் விகாரம். தோகை என்பது பொருள். குளிர்புனம் - குளிர்ச்சியுடைய தினைக் கொல்லை. குறவர் மகள் - வள்ளி. சலாம் இடற்கு - வணங்குதற்கு; சலாம் - வணக்கம். ஏக்கறு - ஆசையால் தாழ்ந்து. முத்துக்குமரன்- இத்தலத்தில் - அம்பிகை திருக்கோயிலின் பிரகாரத்தில் வாயு மூலையில் வீற்றிருப்பவள். போற்றுதும் - வணங்குவோம்.

(அடி3) இமிழ் - ஒலிக்கும். முற்றும் - பரப்பு. மந்தர மலையை மத்தாக்கியதாகக் கூறுவதாயினும் அது மேருமலையின் சிகரமாதலால் மேருவை மத்தாகக் கூறுதல் வழக்கம். ஆர்த்து - கட்டி. முள் எயிறு உகு நச்சு - முள்ளைப் போன்ற பற்களினின்று வெளிப்படும் விடம். பணாடவித் தாம்பு - படக் கூட்டங்களை யுடையகயிறு. அதாவது ஆதிசேடன். வாசுகி என்ற பாம்பைக் கயிறாகக் கட்டினர் எனக் கூறுவதே மரபு. ஆயினும் ஆதி சேடனைக் கயிறாகக் கொண்டதாகவும் கூறப்படும் என்பதற்கு இது சான்று. துழாய் முடித் தீர்த்தன் - துளசி மாலையை அணிந்த திருமால். மதித்து - கடைந்து. பராபவத்தீ - பராபவம் + தீ; அவமானத்தீ. அவமானம் என்பது இங்கு ஆலகால நஞ்சுக்கு அஞ்சியது.

(அடி4) அமுது செய்வித்திட்ட போனகம் - உணவாக உண்ணச் செய்த நஞ்சு. சுடர்சுடரும் - சந்திர சூரியர்களையும் வருத்தும். கிரீவம் - கழுத்து. அழகிய சொக்கர் - சோம சுந்தரப் பெருமானின் பெயர். சொக்கர் - மிக்க அழகு உடையவர். தோட்டு இகல் - காதணியை மோதும். (4)

## 7. பிரம தேவர்

### (ஆசிரிய விருத்தம்)

7. மேகப் பசுங்குழவி வாய்மடுத் துண்ணவும்
விண்புலம் விருந்தயரவும்
வெள்ளமுதம் வீசும் கருந்திரைப் பைந்துகில்
விரித்துடுத் துத்திவிரியும்
நாகத்து மீச்சுடிகை நடுவட் கிடந்தமட
நங்கையைப் பெற்றுமற்றந்
நாகணைத் துஞ்சுதன் தந்தைக்கு வந்துதவு
நளினக் குழந்தைகாக்க
பாகத்து மரகதக் குன்றொன்றொர் தமனியக்
குன்றொடு கிளைத்துநின்ற
பவளத் தடங்குன் றுளக்கண்ண தென்றப்
பரஞ்சுடர் முடிக்குமுடிமூன்று
ஆகத் தமைத்துப்பி னொருமுடிதன் முடிவைத்து
அணங்கரசு வீற்றிருக்கும்
அபிடேக வல்லியை யளிக்குலம் உழக்குகுழல்
அங்கயற் கண்ணமுதையே. (5)

### தெளிவுரை

(அடி3) பக்கத்தே பச்சை மலை ஒன்று ஒரு பொன் குன்றோடு சேர்ந்து நின்ற பவளப் பெருமலை தன் மனத்தினிடத் தாக எண்ணி, அந்தப் பரஞ் சோதியில் தலைக்கு அறிகுறியாக மூன்று முடிகளைத்

(அடி4) தன் மார்பில் அமைத்துக் கொண்டு, பின்பு வேறொரு முடியைத் தனது தலையில் அணிந்து, தெய்வ அரசியாக வீற்றிருக்கின்ற அபிடேக வல்லியை, வண்டுக் கூட்டங்கள் ஒலிக்கும் கூந்தலை யுடைய அங்கயற் கண்ணான அமுதை,

(அடி1) மேகமான இளங்குழந்தை வாய் வைத்துக் குடிக்கவும், தேவர்கள் விருந்து உண்ணவும், வெண்மை நிறமுடைய அமுதத்தை எறிகின்ற கரிய கூந்தலையுடைய கடல் என்ற பச்சை உடையை விரித்து உடுத்திப் படத்தின் பொறி விரிகின்ற,

(அடி2) ஆதிசேடன் மேல் உச்சிக்கு நடுவில் தங்கிய இளைய மங்கையான பூமி தேவியைப் பெற்று, பின் அழகிய ஆதிசேடனை பள்ளியில் உறங்குகின்ற தன் தந்தையான திருமாலுக்கு மகிழ்ந்து கொடுத்த, தாமரையில் வீற்றிருக்கின்ற குழந்தையான பிரமன் காத்தருளுக.

**விளக்கம்**

(அடி1) மேகப்பசுங்குழவி - மேகம் என்ற பசிய குழந்தை. விண்புலம் - வானவர். வெள்அமுதம் - வெண்மையான அமிர்தம். பைந்துகில் - பசிய ஆடை. உத்தி - படப்பொறி.

(அடி2) நாகத்துமீ - ஆதிசேடனாகிய பாம்புக்கு மேல். சுடிகை நடுவண் - உச்சிக்கு நடுவில். நங்கை - பூமிதேவி. தன் தந்தை - திருமால்; அவர் பிரமாவின் தந்தை. நளினக் குழந்தை - தாமரை மலர் மீது வீற்றிருக்கும் பிரமன்.

(அடி3) பாகத்து - பக்கத்தில். தமனியக் குன்று - பிரமன். பவளத் தடக்குன்று - பவளம் போல் சிவந்த பெரிய மலை போன்ற சிவபெருமான். சிவபெருமானின் வலப்புறத்துப் பிரமனும் இடப்புறத்துத் திருமாலும் தோன்றுவர் என்பது மரபு. முடிமூன்று - மூன்று நகில்கள்.

(அடி2) ஆகத்து - மார்பில் வீற்றிருக்கும் - கவலையற்று இருத்தல். அளிக்குலம் - வண்டின் கூட்டம். (5)

## (8) தேவேந்திரன்

### (வேறு)

8. சுழியுங் கருங்கட் குண்டகழி
சுவற்றுஞ் சுடர்வேல் கிரிதிரித்த
தோன்றற் களித்துச் சுறவுயர்த்த
சொக்கப் பெருமான் செக்கர்முடி
பொழியுந் தரங்கக் கங்கைவிரைப்
புனல்கால் பாய்ச்சத் தழைந்துவிரி
புவனந் தனிபூத் தருள்பழுத்த
பொன்னங் கொடியைப் புரக்கவழிந்து
இழியுந் துணர்க்கற் பகத்தினற
விதழ்த்தேன் குடித்துக் குமட்டியெதிர்
எடுக்குஞ் சிறைவண் டுவட்டுறவுண்டு
இரைக்கக் கரைக்கு மதக்கலுழிக்
குழியுஞ் சிறுக ணேற்றுருமுக்
குரல்வெண் புயலும் கரும்புயலும்
குன்றம் குலைய உகைத்தேறும்
குலிசத் தடக்கைப் புத்தேளே. (6)

**தெளிவுரை**

(அடி3) வடிந்து ஒழுகும் பூங்கொத்துக்களையுடைய கற்பக மரத்தின் நறுமணம் உடைய மலர் இதழில், தேனைக் குடித்துக் குமட்டுதலைச் செய்து, வாந்தி பண்ணும் சிறகுகளையுடைய வண்டுகள் வெறுக்கும்படி குடித்து, ஒலிக்கும்படி கரையப் பண்ணும் மதநீர்ப் பெருக்கமும்,

(அடி4) சூழ்ந்துள்ள சிறிய கண்களையும் இடியேற்றின் ஒலியையும் உடைய வெண்மேகம் போன்ற ஐராவதத்தையும் கரிய மேகத்தையும் மலைகள் நடுங்கும்படி ஏறிச் செலுத்தும் வச்சிரப் படையைத் தாங்கும் இந்திரன்,

(அடி1) சுழி எறியும் கரிய இடம் அகன்ற ஆழமான கடலை வற்றும்படி செய்த ஒளிரும் வேற்படையை மேருமலையைச் செண்டால் மாறுபடுத்திய முருகப் பெருமானுக்குத் தந்து மீன் கொடியை உயர்த்திய சொக்கநாதரின் சிவந்த முடியினின்றும்

(அடி2) வழியும் கங்கையாகிய வாசனை நீரைக் கால்வாய் வழியே பாய்ச்சுவதால் செழித்துப் பரந்த மண்உலகத்தைத் தானே படைத்து அருள் கனிந்த பொற்கொடியை (மீனாட்சியை)க் காப்பானாக!

**விளக்கம்**

(அடி1) கருங்கண் - கரிய இடம். குண்டகழி - ஆழமான கடல் ஆகிய அகழி. சுவற்றும் - வற்றச் செய்யும். சுடர் - வேலை. கிரிதிரித்த - மலையைச் செண்டினால் அடித்த. செக்கர்முடி - சிவந்த முடி.

(அடி2) கால் பாய்ச்ச - காலில் பாய்ச்ச; 'வாய்க்கால் வழியே பாய்ச்ச' என்பது மற்றொரு பொருள். பொன்னங்கொடி - பொன்கொடி போன்ற அங்கயற் கண் அம்மை. சிவபெருமான் இறைவியுடன் ஊடல் கொண்ட காலத்தில் அவளை வணங்குவார். இதை மனத்தில் கொண்டு இச்செய்தி கூறப்படுகின்றது. கொடி யாகக் கூறியதற்கு ஏற்ப நீர் பாய்ச்சலும் மலர்தலும் பழுத்தலும் கூறப்பட்டன. காக்க - காப்பானாக.

(அடி3) துணர் - மலர்க்கொத்து. நறவு - வாசனை. எதிர் எடுக்கும் - கக்கும். உவட்டுற - தெவிட்ட. இரைக்க - ஒலிப்ப. கரைக்கும் - கரைந்து ஓடும்படி செய்யும். சிறை வண்டு - இறகை யுடைய வண்டுக் கூட்டம். மதக்கலுழி - மதநீர் வெள்ளம்.

(அடி4) குழியும் - சூழ்ந்துள்ள. சிறுகண் - சிறிய கண். உருமு - இடியேறு. வெண்புயல் - ஐராவதம் என்ற யானை. குலிசம் - வச்சிராயுதம். புத்தேள் - இந்திரன். அவன் உகைத்து ஏறுவதால் இன்னும் என்ன துன்பம் வருமோ என மலைகள் நிலை குலைந்தன. குலிசம் - வச்சிராயுதம். (6)

## 9. திருமகள்

(வேறு)

9. வெஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும் படப்பாயல்
மீமிசைத் துஞ்சுநீல
மேகத்தின் ஆகத்து விடுசுடர்ப் படலைமணி
மென்பரல் உறுத்தநொந்து
பஞ்சூட்டு சீறடி பதைத்துமதன் வெங்கதிர்ப்
படுமிள வெயிற்குடைந்தும்
பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழல் ஒதுங்குமொர்
பசுங்கொடியை யஞ்சலிப்பாம்
மஞ்சூட் டகட்டுநெடு வான்முகடு துருவுமொரு
மறையோ திமஞ்சலிக்க
மறிதிரைச் சிறைவிரியு மாயிர முகக்கடவுள்
மந்தா கினிப்பெயர்த்த
செஞ்சூட்டு வெள்ளோ திமம்குடி யிருக்கும்வளர்
செஞ்சடைக் கருமிடற்றுத்
தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை மும்முலைத்
திருவைப் புரக்கவென்றே. (7)

**தெளிவுரை**

(அடி3) மேகங்களைச் செறித்த உள் இடத்தையுடைய நீண்ட வானத்தின் உச்சியை ஊடுருவித் தேடிய, வேதம் ஓதும் ஓர் அன்னப்பறவையான பிரமன் (இறைவனின் முடியைக் காண முடியாமல்) தவிக்க, மடங்கி விழும் அலைகளாகிய சிறகுகள் விரியப் பெற்ற ஆயிரம் முகங்களையுடைய தெய்வமாகிய மந்தாகினி என்ற பெயரையுடைய

(அடி4) சிவந்த உச்சியையுடைய வெண்மையான அன்னப் பறவையானது குடிகொண்டிருக்கின்ற வளரும் சிவந்த சடையினையும் கருமையான கழுத்தையும் கொண்ட சிவபெரு

மானுக்கு, முன் போரில் எதிர்த்து நின்ற தெய்வத்தை மூன்று முலைகளையுடைய அங்கயற்கண் அம்மையைக் காப்பாற்றுக என்று,

(அடி1) கொடிய உச்சியையுடைய நீண்ட உடம்பையும் விரிக்கும் படத்தையும் உடைய பாம்புப் படுக்கையின் மீது துயில்கின்ற நீல நிற மேகம் போன்ற திருமால் மார்பிலே அணிந்துள்ள மிக்க ஒளியுடைய கௌத்துவ மணியான மென்மை யான பருக்கைக் கற்கள் அழுத்தலால், வருந்தி,

(அடி2) செம்பஞ்சுக் குழம்பு பூசப்பட்ட சிறிய அடிகள் துடித்தும், அதனுடைய கொடிய கிரணங்களால் ஏற்படும் இள வெயிலுக்கு வருந்தியும், பசிய துளசி மாலையின் தொகுதி பரப்பும் குளிர்ந்த நிழலில் போய்த் தங்கும் ஒரு பசுமையான கொடி போன்ற திருமகளை வணங்குவோம்.

**விளக்கம்**

(அடி1) படப்பாயல் - ஆதிசேடன் என்ற படுக்கை. மீமிசை - மேல்; ஒருபொருட்பன்மொழி. நீல மேகத்தின் - நீல நிற மேகம் போன்ற திருமாலின். ஆகத்து - மார்பில். சுடர்ப்படலை - கதிர்களின் தொகுதி. மணி மென்பரல் - மணியாகிய மென்மை யான பருக்கைக்கல். மணி - கௌத்துவமணி அது திருமாலின் மார்பில் அணியப்படுவது.

(அடி2) பஞ்சுஊட்டு - செம்பஞ்சை ஊட்டும். சீறடி - சிறிய அடிகள். பதைத்தும் - துடித்தும். அதன் வெங்கதிர் - அந்தக் கௌத்துவ மணியின் கொடிய கதிர். உடைந்தும் - வருந்தியும். பைந்துழாய்க் காடு - திருமால் மார்பில் உள்ள துளசி மாலையின் மிகுதி.

(அடி3) துருவும் - ஆராயும். ஒரு மறை ஓதிமம் - அன்னப் பறவையின் வடிவு எடுத்த வேதம் ஓதும் பிரமன். மஞ்சு ஊட்டு அகடு நெடு வான் முகடு - மேகங்களைச் செறித்த உள் இடத்தை யுடைய நீண்ட வானின் உச்சி.

மறிதிரைச் சிறை - மடிந்து விழும் அலைகளையுடைய திரையாகிய சிறை. 'ஆயிரம் முகம் உடைய ஓதிமம் கடவுள் மந்தாகினிப் பெயர்த்த ஓதிமம் என இயையும்'. ஓதிமம் - என்றது கங்கையை. கங்கை ஆயிர முகம் உடையது என்பது மரபு.

(அடி4) செஞ்சூட்டு வெள் ஓதிமம் - சிவந்த சூட்டையுடைய வெண்மையான அன்னப் பறவை.

தேவுக்கு முன்நின்ற தெய்வம் - சிவபெருமானுக்கு முன் நின்ற அங்கயற்கண் அம்மை; இவ்வம்மையார் திக்கு விசயம் செய்த போது சிவபெருமானின் முன் நின்றார் என்பதாம். புரக்க என்றே - காப்பாற்றுக என்று. (7)

## 10. கலைமகள்

10. வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்பும் சுரும்பர்பாட
விளைநறவு கக்கும் பொலம்பொகுட்டு அலர்கமல
வீட்டுக் கொழித்தெடுத்துத்
தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலின் அன்பினைந்
திணையென வெடுத்தவிறைநூல்
தெள்ளமுது கூட்டுணுமொர் வெள்ளோதி மத்தினிரு
சீறடி முடிப்பம்வளர்பைங்
கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை யொழுகுதீங்
கிளவியும் களிமயிற்குக்
கிளரிளஞ் சாயலு நவ்விக்கு நோக்கும்விரி
கிஞ்சுகக் சூட்டரசனப்
பிள்ளைக்கு மடநடையும் உடனாடும் மகளிர்க்கொர்
பேதைமையு முதவிமுதிராப்
பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொருபாண்டிப்
பிராட்டியைக் காக்கவென்றே. (8)

**தெளிவுரை**

(அடி3) தன்னிடம் வளர்கின்ற பச்சைக்கிளிக்கு இளமை யாகிய இனிய திருந்தாச் சொல்லாக வெளிவரும் இன் சொல்லையும், களிப்புடன் கூடிய மயிலுக்கு விளங்கும் இளமை யான சாயலையும், மானுக்குப் பார்வையையும், மலர்ந்த முருக்கம் பூவைப் போன்ற உச்சிக் கொண்டையையுடைய அரச அன்னப் பிள்ளைக்கு

(அடி4) மட நடையையும் தந்து, முதிர்ச்சி அடையாத பிள்ளைப் பருவத்திலேயே கொடைத் தன்மையும் கொண்டுள்ள ஒப்பில்லாத பாண்டி மாதேவியைக் காப்பாயாக என்று,

(அடி1) வெண்மையான நிறம் உடைய தகட்டு வடிவில் செய்யப்பட்ட நீண்ட இதழ்களை விரித்து இனிய இசையைப் பாட விரும்பும் வண்டுகள் பாடுவதால் விளைந்த தேனைச் சொரியும் பொன்மயமான கொட்டையை யுடைய மலர்ந்த தாமரையான வீட்டிலிருந்து கொழித்து எடுத்து

(அடி2) தெள்ளிப் புடைக்கும் தமிழாகிய கடலின் 'அன்பின் ஐந்திணை' எனத் தொடங்கும் இறையனார் அகப் பொருள் என்ற தெளிந்த அமுதைக் கொள்ளை கொண்டு உண்கின்ற ஒப்பில்லாத வெள்ளை அன்னமான கலைமகளின் இரு திருவடிகளையும் தலை மேற்கொண்டு வணங்குவோம்.

**விளக்கம்**

(அடி1) வெள்ளித் தகட்டு நெட்டு ஏடவிழ்த்து - வெள்ளித் தகட்டைப் போன்ற நீண்ட இதழ்களை மலர்த்த - இது வெண்டாமரை. கக்கும் - சொரியும். சுரும்பர் - வண்டு.

(அடி2) தெள்ளித் தெளிக்கும் தமிழ்க்கடலின் அன்பின் ஐந்திணை என எடுத்த இறைநூல் - மிகத் தெளிவாக வடித் தெடுக்கும் தமிழ்க்கடலினின்று எடுக்கப்பட்ட அன்பின் ஐந்திணை எனத் தொடங்கும் அகப்பொருள் நூல். இறைநூல் - இறையனார்

அகப்பொருள் நூல். தெள்ளமுது - தெளிவான நூலான அமுது. முடிப்பம் - தலையில் சூடுவோம்.

(அடி3) கிள்ளைக்கு - கிளிக்கு. மழலைப் பசுங்குதலை - இளைய திருந்தாத சொல். நவ்வி - மான். குதலை - இளைய திருந்தாத சொல். கிஞ்சுகச் சூட்டு - முள் முருக்கம்பூவைப் போன்ற உச்சிக் கொண்டை.

(அடி4) பிள்ளைமை - இளமைப்பருவம். அரசனப் பிள்ளை - அன்னத்தின் குஞ்சு கமல வீட்டிலிருந்து தமிழ்க்கடலில் வடித் தெடுத்த இறை நூல் தெள்ளமுதத்தை உண்ணும் வெள்ளோதிமம் என்பது குறிப்பால் கலைமகளைக் குறித்தது. (8)

## 11. துர்க்கை

11. வடிபட்ட முக்குடுமி வடிவேல் திரித்திட்டு
வளைகருங் கோட்டுமோட்டு
மயிடங் கவிழ்த்துக் கடாங்கவிழ்க் குஞ்சிறுகண்
மால்யானை வீங்கவாங்கும்
துடிபட்ட கொடிநுண் ணுசுப்பிற் குடைந்தெனச்
சுடுகடைக் கனலிதூண்டும்
சுழல்கண் முடங்குஉளை மடங்கலை யுகைத்தேறு
சூரரிப் பிணவுகாக்க
பிடிபட்ட மடநடைக்கு ஏக்கற்ற கூந்தல்
பிடிக்குழாம் சுற்றவொற்றைப்
பிறைமருப் புடையதொர் களிற்றினைப் பெற்றெந்தை
பிட்டுண்டு கட்டுண்டுநின்று
அடிபட்ட திருமேனி குழையக் குழைத்திட்ட
அணிமணிக் கிம்புரிக்கோடு
ஆகத்த தாகக் கடம்பா டவிக்குள்விளை
யாடுமொர் மடப்பிடியையே. (9)

**தெளிவுரை**

(அடி3) பிடியைப் போன்ற இளநடைக்கு நிகர்ஆகோம் என்று தாழ்ந்து வருந்திய கூந்தலையுடைய பெண்கள் கூட்டம் சூழவும், ஒன்றாகிய பிறைச் சந்திரன் போல் வளைந்த கொம்பை யுடைய ஓர் ஆண் யானையைப் பெற்று எம் தந்தையான சோம சுந்தரக் கடவுள் 'வந்தி' என்ற மூதாட்டி தந்த பிட்டை வாங்கி அவளது அன்புக்குக் கட்டுப்பட்டு நின்று,

(அடி4) பாண்டிய மன்னன் பிரம்பின் அடியைப் பொறுத்த அழகிய உடல், காஞ்சியில் உள்ள கம்பையாற்றில் சிவலிங்கப் பூசை செய்யும் போது வெள்ளம் வந்ததால் இறுக்கமாகத் தழுவிய காரணத்தால் குழையுமாறு செய்த, அழகிய மணிகள் அழுத்திச் செய்த கிம்புரி என்னும் பூணை அணிந்த யானைக் கொம்பாகிய கொங்கைகள் மார்பில் இருக்க,

கடம்ப வனத்தில் விளையாடும் ஒப்பற்ற இளம் பெண் யானையான மீனாட்சியம்மையை

(அடி1) கூர்மையுடைய மூன்று தலையுடன் கூடிய வடித்த சூலப்படையைச் சுழற்றி, வளைந்துள்ள கொம்பின் சிறப்புடைய எருமைக் கடா ஆன அசுரனைத் தொலைத்து,

மதம் சொரியும் சிறிய கண்களையுடைய மயக்கத்தைச் செய்யும் யானையான தனங்கள் பருத்ததால் வளைந்த,

(அடி2) உடுக்கையைப் போன்றதும் கொடி போன்றதுமான சிறிய இடைக்குத் தோற்றது என்று எண்ணிச் சுடுகின்ற கடையூழித் தீயைத் தூண்டும் சுழல்கின்ற கண்களையும் வளைவான பிடரியையும் உடைய சிங்கத்தை ஏறிச் செலுத்தும் அச்சத்தைத் தரும் பெண் சிங்கமான துர்க்கை காப்பாளாக!

**விளக்கம்**

(அடி1) வடிப்பட்ட - வடிக்கப்பட்ட; கூர்மையான. முக்குடுமி - மூன்று தலைகள். முக்குடுமி வடிவேல் - திரிசூலம்.

மோட்டு மயிடம் - பெரிய வயிற்றையுடைய மகிடாசுரனை. கவிழ்த்து - அழித்து. கடாம் கவிழ்க்கும் - மதநீரைச் சொரியும். மால்யானை - மயக்கத்தையுடைய யானை (கொங்கை) வீங்க - பெருத்து.

(அடி2) துடிபட்ட - உடுக்கையைப் போன்ற. நுசுப்பிற்கு - மென்மையான இடைக்கு. உடைந்தென - தோற்றதாக. சுடுகடைக் கனலி - சுடுகின்ற கடையூழித் தீயைத் தூண்டும். சுழல்கண் - சுழல்கின்ற கண்ணை உடைய. முடங்கு உளை - வளைந்த பிடரிமயிர். மடங்கலை - சிங்கத்தை. உகைத்து ஏறு - ஏறிச் செலுத்துகின்ற. சூர் அரிப்பிணவு - அச்சத்தைத் தரும் பெண் சிங்கமான துர்க்கை.

(அடி3) பிடிபட்ட - பிடியைப் போன்ற. மடநடைக்கு - இளைய நடைக்கு. பிடிக்குழாம் - பெண்கள் கூட்டம். சுற்ற - சூழ. ஒற்றைப் பிறை - ஒரு பிறைச்சந்திரன். மருப்பு - கொம்பு. ஓர் களிற்றினைப் பெற்று - ஓர் ஆண்யானையைப் பெற்று. எந்தை - எம் சிவபெருமான். பிட்டு உண்டு - வந்தி என்பவள் தந்த பிட்டினை உண்டு. கட்டுண்டு - அவளது அன்புக்குக் கட்டுப்பட்டு.

(அடி4) அடிபட்ட - பாண்டியன் அடித்த அடியை ஏற்றுக் கொண்ட. கிம்புரிக் கோடு - பூணை அணிந்த கொம்பு. கடம்பாடவிக்குள் - கடம்ப + அடவிக்குள்; கடம்பவனத்துள். மடப்பிடி - இளமையுடைய பெண் யானை போன்ற அங்கயற்கண் அம்மை. (9)

## 12. சத்தமாதர்கள்

### சந்த விருத்தம்

12. கடகளி றுதவுக பாய்மிசைப் போர்த்தவள்
கவிகுவி துறுகலின் வாரியைத் தூர்த்தவள்
கடல்வயி றெரியவொள் வேலினைப் பார்த்தவள்
கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள்

இடியுக வடலரி யேறுகைத் தார்த்தவள்
எழுதரு முழுமறை நூலினிற் கூர்த்தவள்
எயிறுகொ டுழுதெழு பாரினைப் பேர்த்தவள்
எனுமிவர் எழுவர்கள் தாண்முடிச் சூட்டுதும்
குடமொடு குடவியர் பாணிகைக் கோத்திடு
குரவையு மலதொர்ப ணாமுடிச் சூட்டருள்
குதிகொள நடமிடு மாடலுக் கேற்பவொர்
குழலிசை பழகளி பாடிடக் கேட்டுடை
மடலவிழ் துளபந றாவெடுத் தூற்றிட
மழகளி றெனவெழு கார்முகச் சூற்புயல்
வரவரு மிளையகு மாரியைக் கோட்டெயில்
மதுரையில் வளர்கவு மாரியைக் காக்கவே. (10)

## தெளிவுரை

(அடி3) குடக் கூத்தும் இடைப் பெண்டிரின் கைகளைக் கோத்தாடும் குரவை என்ற கூத்துமல்லாமல் படத்தை உடைய தலையின் உச்சியில் நின்று கருணை மேல் எழும்படி நடம் செய்யும் ஆட்டத்துக்கு ஏற்ப ஊதிய ஒப்பில்லாத குழல் ஓசையைப் பழகிய வண்டுகள் பாடக் கேட்டு,

(அடி4) மலர்ந்து மடல்கள் விரியும் துளசி மாலையானது தேனைச் சொரியுமாறு இளம் ஆனை போல் எழுகின்ற கார் காலத்துக் கருப்பம் கொண்ட மேகம் ஆன திருமால் தோன்ற வரும் அவன் பின்பு வந்த இளங்கன்னியைச் சிகரம் உடைய மதிலை உடைய மதுரையில் வளர்கின்ற அங்கயற்கண்ணியைக் காக்கும் பொருட்டு.

(அடி1) மதயானை தந்த தோல் ஆகிய நிலை அங்கியை போர்த்தவள், குரங்குகள் குவித்த சிறு கற்களால் மன்னார் குடாக்கடலை மேடாக்கியவள் (அணையிட்டவள்) கடலினது வயிறு எரியுமாறு ஒள்ளிய வேற்படையைப் பார்த்து ஏவியவள் நறுமணம் வீசுகின்ற கற்பகத் தருவின் மலரை மாலையாகக் கட்டி முடியில் அணிந்தவள்

(அடி4) இடியும் சிதறும்படி வலிய ஆண் சிங்கத்தைச் செலுத்தி முழக்கம் புரிந்தவள் எழுதுதற்கு அருமையான வேத நூல்களில் நிறைந்த அறிவுடையவள். பன்றியாகிக் கொம்பினால் உழுது ஏழ் உலகங்களையும் பேர்த்தெடுத்தவள் என இங்ஙனம் கூறப்படுகின்ற ஏழு மாதர்களின் திருவடிகளையும் நம் தலை மேற்கொண்டு பணிவோம்.

**விளக்கம்**

(அடி1) கடகளிறு - மதயானை. கபாய் - சட்டை. மிசை - உடல்மீது போர்த்திக் கொண்டவள். வாரியைத் தூர்த்தவள் - கடலைத் தூர்த்தவள். (அணை கட்டியவள்) கடல்வயிறு - கடலின் உள்ளிடம். ஒள் வேலினைப் பேர்த்தவள் - ஒளியுடைய வேலைப் பார்த்து ஏவியவள். கடிகமழ் - நறுமணம் வீசுகின்ற. தரு - கற்பக மரம். தார்முடிச் சேர்த்தவள் - மாலையாய்க் கட்டித் தலையில் அணிந்து கொண்டவள்.

(அடி2) இடியுக - இடியும் சிதறுமாறு. அடல்அரி - வலிமையுடைய ஆண்சிங்கம். உகைத்து ஆர்ந்தவள் - செலுத்தி ஆரவாரம் செய்தவள். கூர்த்தவள் - அறிவு உடையவள். எயிறுகொடு - கொம்பைக் கொண்டு. எழு பாரினைப் பேர்த்தவள் - ஏழு உலகங்களையும் பேர்த்து எடுத்தவள்.

(அடி3) குடமொடு - குடம் என்னும் கூத்துடன். இக்கூத்து திருமாலுக்குரியது. இக்கூத்து ஆடுமாறு: தலையில் அடுக்குக் குடம் இருக்க, இரண்டு தோள்களிலும் குடம் இருக்க, இரண்டு கைகளிலும் குடங்களை ஏந்தி வானில் எறிந்து ஆடுதல். குடவியர் - இடைச்சியர். பாணி - கைகள். குரவை - குரவைக் கூத்து. ஓர்பணா முடிச் சூட்டு - காளிங்கனது முடி. குழல் - வேய்ங்குழல். அளி - வண்டு.

(அடி4) மடல் அவிழ் - இதழ் மலர்கின்ற. துளபநறா - துளசியின் தேன். மழகளிறு என எழு கார் முகச் சூழ்புயல் - இளங்களிறு போல எழுகின்ற கார்காலத்துக் கருப்பம் கொண்ட மேகமான திருமால். கவுமாரியை - அங்கயற்கண் அம்மையை. கோட்டு எயில் - சிகரத்தையுடைய மதில்.

சிவன் யானைத் தோலைப் போர்த்தவர். அவரது செயல் இங்கு மகேசுவரியின் செயலாக உரைக்கப்பட்டது. கடலைத் தூர்த்தது நாராயணன் (இராமபிரானின்) செயல். இது இங்கு நாராயணியின் செயலாகக் கூறப்பட்டது. கடல் எரிய வேல் ஏவியது முருகனின் செயல், இது இங்கு கௌமாரியின் செயலாகக் கூறப்பட்டது. கற்பக மரத்தின் மாலை அணிவது இந்திராணியின் செயல், சிங்கத்தை ஊர்தல் காளியின் செயல். வேதநூல்களின் கூர்மையான அறிவுபெறுதல் அபிராமியின் செயல். பன்றி வடிவு கொண்டு கொம்பினால் பூமியை மீட்டது திருமால் செயல் அது வராகியின் செயலாகக் கூறப்பட்டது.

குடக் கூத்தும் குரவைக் கூத்தும் காளிங்கன் மேல் ஆடிய கூத்தும் ஆகியவற்றுக்குத் தக்கபடி கண்ணன் குழல் ஊதினார் என்பதும் அந்த இசையைக் கேட்டு அது போலப் பாடிய வண்டுகட்குப் பரிசாகத் தேனைத் துளசி வார்த்தன என்பதும் இங்கு உணரத்தக்கவை. சூற்புயல் - திருமால். (10)

## 13. முப்பத்து மூவர்

### வேறு

13. அமரில் வெந்நிடும் உதியர் பின்னிடுமொர்
    அபயர் முன்னிடுவ னத்தொக்க வோடவும்
அளவு மெம்முடைய திறையி தென்னகுடி
    அரசர் எண்ணிலரொர் முற்றத்து வாடவும்
அகில மன்னரவர் திசையின் மன்னரிவர்
    அமர ரென்னுமுரை திக்கெட்டும் மூடவும்,
அமுத வெண்மதியின் மரபை யுன்னியுனி
    அலரி யண்ணன்முழு வெப்பத்து மூழ்கவும்,
குமரி பொன்னிவயை பொருநை நன்னதிகள்
    குதிகொள் விண்ணதியின் மிக்குக்கு லாவவும்
குவடு தென்மலையி னிகர தின்மைசுரர்
    குடிகொள் பொன்மலைது தித்துப்ப ராவவும்,

குமரர் முன்னிருவ ரமர ரன்னையிவள்
　　குமரி யின்னமுமெ னச்சித்தர் பாடவும்
குரவை விம்மவர மகளிர் மண்ணிலெழில்
　　குலவு கன்னியர்கள் கைக்கொக்க வாடவும்
கமலன் முன்னிவிடு மரச வன்னமெழு
　　கடலி லன்னமுட னட்புக்கை கூடவும்
கரிய செம்மலொடும் இளைய செம்மல்விடு
　　கருடன் மஞ்ஞையொரு கட்சிக்கு ளூடவும்
கடவி விண்ணரசு நடவும் வெம்முனைய
　　களிறு கைம்மலை செல் கொப்பத்து வீழவும்
கனக மன்னுதட நளினி துன்னியிரு
　　கமல மின்னுமொரு பற்பத்துள் மேவவும்
இமய மென்னமனு முறைகொ டென்னருமெம்
　　இறையை நன்மருகெ னப்பெற்று வாழவும்
எவர்கொல் பண்ணவர்க ளெவர்கொல் மண்ணவர்கள்
　　எதுகொல் பொன்னுலகெ னத்தட்டு மாறவும்
எழில்செய் தென்மதுரை தழைய மும்முலையொடு
　　எழுமெ னம்மனைவ னப்புக்கொர் காவலர்
இருவ ரெண்மர்பதி னொருவர் பன்னிருவர்
　　எனும விண்ணவர்கள் முப்பத்து மூவரே. (11)

## தெளிவுரை

(அடி1) போரில் முதுகிட்டு ஓடும் அச்சேரர் அவரை அடுத்து முதுகுகாட்டும் சோழர் இவர்கள் தாங்கள் எண்ணிய காட்டில் ஒருசேர ஓடவும், 'எங்கள் திறைப்பணம் இங்கு உள்ளது; அளந்து எடுத்துக் கொள்ளுங்கள்' எனக் கூறி அளவு இல்லாத முடியரசர்கள் அரண்மனை வாயிலில் வாடி நிற்கவும், பூவுலக மன்னர்கள் அவர்கள், திசை காக்கும் காவலர்கள் இவர்கள் தேவர்கள் என்று சொல்லும் சொல் எட்டுத் திக்குகளிலும் நிறையவும், அமுதக் கலையையுடைய சந்திர குலத்தை எண்ணி எண்ணிக் கதிரவனாகிய தேவன் முழு வெம்மையுள் மூழ்கவும்,

(அடி2) குமரியாறு, காவிரி, வைகை, தாமிரபரணி என்னும் நல்ல ஆறுகள், குதிக்கும் இயல்புடைய வானகங்கையை விட மிகுந்து உலாவவும், பொதிய மலையின் உச்சிக்கு மற்ற மலைகளின் குவடு ஒப்பற்ற தன்மையைக் கூறித் தேவர்கள் வாழ்கின்ற பொன் மலை (மேரு மலை) போற்றித் துதிக்கவும், விநாயகர் முருகப்பெருமான் ஆகியவரை முன் பெற்றவள் தேவர்களையும் பெற்ற தாய் இவள் இன்னமும் குமரியாகவே விளங்குகின்றாள் என்று சித்தர்கள் பாடவும்,

தெய்வ மங்கையர் குரவைப் பாட்டும் பெருகப் பூவுலகில் உள்ள அழகிய கன்னியர்கள் கைகோத்து ஆடவும்,

(அடி3) நான்முகன் எண்ணிச் செலுத்தும் அரச அன்ன மானது மதுரைப் பதியில் உள்ள எழுகடலின் அன்னத்துடன் நட்புக் கொண்டு ஒழுகவும்,

கருமை வாய்ந்த திருமாலும் முருகப்பெருமானும் விடும் கருடனும் மயிலும் ஒரு கூட்டில் விளையாடவும்,

இந்திரன் செலுத்தி நடத்தும் கொடிய போர்முனையில் உள்ள ஐராவதம் என்ற யானை மற்ற யானைகள் விழும் பள்ளத்தில் விழவும்,

பொன் தாமரை பொருந்திய அகன்ற தீர்த்தத்தில் படிந்து திருமகள் கலைமகள் ஆகிய இருவரும் ஒரு தாமரைப்பூவில் இருக்கவும்,

இமயமலை மன்னனைப் போல் மனுமுறைப் படி அரசு புரியும் பாண்டிய மன்னரும் எம் இறைவனை நல்ல மருமகனாகப் பெற்று வாழவும்,

தேவர்கள் யாவர், மண்ணவர் யாவர், தேவர் உலகு எது, மண்ணுலகு எது எனப் பிரித்தறிய முடியாது தடுமாறி நிற்கவும்,

அழகுடைய தென் மதுரை தழையும்படி மூன்று கொங்கை களுடன் தோன்றிய என் தாயின் அழகுக்கு நிகரற்ற காவல் செய்பவர்கள் அசுவினி தேவர் இருவரும், எட்டு வசுக்களும்,

பதினொரு உருத்திரரும், பன்னிரு சூரியரும் என்று கூறப்படும் முப்பத்து முக்கோடி தேவர்களுமாவார்களாக!

**விளக்கம்**

(அடி1) அங்கயற்கண் அம்மைக்குக் காவலர் முப்பத்து மூவர் என இயையும்,

வெந்நிடும் - வெந் + இடும்; முதுகு காட்டும். உதியர் - சேர மன்னர். பின்னிடும் - முதுகிடும். அபயர் - சோழர். முன்னிடு வனத்து - தாம் போய் அடைய வேண்டும் என எண்ணிய காட்டில். ஒக்க - ஒருசேர. அளவும் - அளக்கும். திறை - கப்பப் பொருள். முற்றத்து வாடவும் - அரண்மனை முற்றத்தில் வாடவும். அகில மன்னர் - மண் உலகில் உள்ள பலவேறு நாட்டு மன்னர். திசையின் மன்னர் - திக்குப் பாலகர். அலரி அண்ணல் - கதிரவன். வெப்பத்து மூழ்கவும் - அழுக்காறு கொள்ளவும். ஒளியால் தன்னைவிடத் தாழ்ந்த சந்திரன் அம்பிகையின் தோற்றத்தால் இத்தகைய சிறப்பை அடைந்ததால் கதிரவன் சந்திரனைப் பார்த்து அழுக்காறு கொண்டான்.

(அடி2) குமரி - குமரியாறு. பொன்னி - காவிரி. வயை - வையை; சந்தம் பற்றி 'வயை' என வந்தது. பொருநை - தாமிர பரணி. குதிகொள் விண்நதி - குதித்து ஓடிவரும் வானகங்கை. விண் நதியின் மிக்கு - வான கங்கையை விடச் சிறப்பு அடைந்து. அங்கயற்கண் ஆட்சியில் உள்ளமையால் அவ்வாறுகள் சிறப்புப் பெற்றன. தென்மலையை ஒத்த மலை உலகில் இல்லாமையால் மேருமலை அம்மலையைத் துதித்துப் போற்றவும். தென்மலை - பொதியமலை. குவடு - மலை. பொன்மலை - மேருமலை. குமரர் இருவர் - விநாயகர், முருகன். குரவை - குரவைப் பாட்டு. விம்ம - மிக.

(அடி3) கமலன் - தாமரையில் உள்ள பிரமன். முன்னி விடு - எண்ணிச் செலுத்தும். எழுகடல் - மதுரையில் உள்ள ஒரு நீர்நிலை. நட்புக்கை கூடவும் - நட்புக் கொண்டு பழகவும். கரிய செம்மல் - திருமால். இளைய செம்மல் - முருகன். கட்சி - பறவைக்கூடு.

கடவி - செலுத்தி. விண்ணரசு - தேவர் தலைவனான இந்திரன். மஞ்ஞை - மயில். கட்சிக்குள் ஊடவும் - கூட்டுக்குள் கருடனும் மயிலும் விளையாடவும். கொப்பம் - யானையைப் பிடிப்பதற்காக வெட்டப்பட்ட பெரிய குழி. கைம்மலை - கையையுடைய மலை போன்ற யானை. கனகமன்னுதட நளினி - பொற்றாமரைக் குளம். இருகமல மின்னும் - வெண்டாமரையில் வீற்றிருக்கின்ற கலை மகளும், செந்தாமரையில் வீற்றிருக்கின்ற திருமகளும். பற்பம் - பத்மம்; தாமரை. திருமகளும் கலைமகளும் ஒரு தாமரையில் வீற்றிருக்கவும்.

(அடி4) இமயம் என்ன - இயமமலை மன்னனைப் போல். மனு முறைகொடு - மனு முறைகொண்டு. எம் இறையை - எம் சிவபெருமானை. நன் மருகு என - நல்ல மருமகனாக. பண்ணவர் - தேவர். மண்ணவர் - மனிதர்கள். பொன் உலகு - தேவர் உலகம். தட்டு மாறவும் - தடுமாறவும். தழைய - சிறந்தோங்க. மும் முலையோடு - மூன்று கொங்கைகளுடன் அம்மனை - தாய்; மீனாட்சி. இருவர் - அசுவினி தேவர். எண்மர் - அட்ட வசுக்கள். பதினொருவர் - ஏகாதச ருத்திரர். பன்னிருவர் - துவாத சாதித்தர்.

(11)

## செங்கீரைப் பருவம்

### ஆசிரிய விருத்தம்

14. நீராட்டி யாட்டுபொன் சுண்ணம் திமிர்ந்தள்ளி
நெற்றியில் தொட்டிட்டவெண்
நீற்றினொடு புண்டரக் கீற்றுக்கும் ஏற்றிடவொர்
நித்திலச் சுட்டிசாத்தித்
தாராட்டு சூழியக் கொண்டையும் முடித்துத்
தலைப்பணி திருத்திமுத்தின்
தண்ணொளி ததும்பும் குதம்பையொடு காதுக்கொர்
தமனியக் கொப்புமிட்டுப்

பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
பாலமுதம் ஊட்டியொருநின்
பால்நாறு குமுதம் கனிந்தாறு தேறல்தன்
பட்டாடை மடிநனைப்பச்
சீராட்டி வைத்துமுத் தாடும் பசுங்கிள்ளை
செங்கீரை யாடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை யாடியருளே. (1)

**தெளிவுரை**

14. (1) நீரிலே முழுக்காட்டிப் பூசக்கூடிய அழகிய நறுமணப் பொடியைப் பூசி, நெற்றியில் அள்ளித் தொட்டிட்ட வெண்மை யான நீற்றுடன் திரிபுண்டரமாக இடப்பட்ட வரைகட்கும் தக்கபடி ஒரு முத்துச் சுட்டியை அணிந்து,

(2) மாலை சூடிய உச்சிக் கொண்டையும் முடித்துத், தலைக்குரிய அணியையும் சிறப்புடன் அமைத்து, முத்தினது குளிர்ந்த ஒளி பெருகும் குதம்பை என்ற காதணியுடன் காதுக்கு ஒரு கொப்பையும் அணிந்து,

(3) பாராட்டுகின்ற பாண்டியன் பெருந்தேவியானவள் தன் கொங்கைப் பாலை உண்பித்து, நிகரில்லாத இன் மணம் கமழ்கின்ற செங்குமுத மலர் போன்ற செவ்வாயில் கனிந்து ஊறுகின்ற தேனானது (சொள்ளு நீரானது) தனது பட்டாடையை நனைக்க,

(4) சிறப்புச் செய்து முத்தம் இடப்படுகின்ற பச்சைக் கிளியே, செங்கீரை ஆடுவாயாக! மலயத்துவச பாண்டியனுக்கும் இமயமலை மன்னனான இமவானுக்கும் நிகர் இல்லாத மகளாகப் பிறந்தவளே! செங்கீரை ஆடுவாயாக!

**விளக்கம்**

(1) ஆட்டு பொன் சுண்ணம் - அரைக்கப்படும் அழகிய சுண்ணம். திமிர்ந்து - பூசி. தொட்டிட்ட வெண்ணீறு - வெண்

ணீற்றுத் திலகம். புண்டரக் கீற்று - வெண்ணீற்றுப் புண்டரம். ஏற்றிட - பொருந்த.

(2) தார் - மாலை. ஆட்டு - அசைக்கும். சூழியக் கொண்டை - உச்சிக் கொண்டை. தலைப்பணி - தலைக்குரிய அணிகள். அவை சீதேவி முதலிய அணிகள். தமனியக் கொப்பு - பொன் கொப்பு. இவ்வணி காதின் மேற்பக்கம் அணிவது.

(3) பெருந்தேவி - மலயத்துவசப் பாண்டியனின் மனைவி காஞ்சன மாலை. குமுதம் - வாய். தேறல் - வாய்நீர்; ஜொள்ளு நீர். துன்பட்டாடை மடி - பெருந்தேவியின் பட்டாடைமடி.

(4) முத்தாடுதல் - முத்தம் இடுதல். கிள்ளை - விளி. பொன்மலை மன்னன் - இமவான். செல்வி - மகள். செங்கீரை ஆடியருள் - செங்கீரை ஆடுவாயாக; செவ்வையான சொற்களைக் கூறியருளுக எனவும் உரைப்பர். இதுவே உ.வே.சா அவர்களின் கருத்து. முன் முன்னுரையில் ஒரு காலை மடக்கி ஒருகாலை நீட்டி இருகைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்ந்து ஆடுதல் என உரைக்கப்பட்டதை இங்கு நினைவு கூர்க. பெருந்தேவி நீராட்டித் திமிர்ந்து சாத்தி முடித்துத் திருத்தி இட்டு ஊட்டிச் சீராட்டி முத்தாடும் கிளியே செங்கீரை ஆடியருளுக என இயைக்க. (1)

15. உண்ணிலா வுவகைப் பெருங்களி துளும்பநின்
றுன்றிருத் தாதைநின்னை
ஒருமுறை கரம்பொத்தி வருகென வழைத்திடுமுன்
ஒடித் தவழ்ந்துசென்று
தண்ணுலா மழலைப் பசுங்குதலை அமுதினிய
தாய்வயிறு குளிரவூட்டித்
தடமார்ப நிறைகுங் குமச்சேறு அளைந்துபொன்
தாள்தோய் தடக்கைபற்றிப்
பண்ணுலாம் வடிதமிழ்ப் பைந்தாமம் விரியும்
பணைத்தோள் எருத்தமேறிப்
பாசொளிய மரகதத் திருமேனிப் பச்சைப்
பசுங்கதிர் ததும்பமணிவாய்த்

தெண்ணிலா விரியநின் றாடும் பசுந்தோகை
செங்கீரை யாடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை யாடியருளே. (2)

**தெளிவுரை**

(1) மனத்தில் ஒளிர்கின்ற பெருமகிழ்ச்சி ததும்ப நின்று நின் சிறந்த தந்தையார் நின்னை ஒரு முறை கை வளைத்து வருக என்று அழைத்தற்கு முன்னம் தவழ்ந்து ஓடிச் சென்று

(2) குளிர்ச்சியுடைய இளமையாகிய இனிய மழலைச் சொல் என்ற அமுதை இனிய தாயினது வயிறு குளிருமாறு ஊட்டி, பெரிய மார்பில் அணிந்துள்ள குங்குமச் சேற்றில் படிந்து அழகிய முழங் கால் அளவு படியும் பெருங்கையைப் பற்றி,

(3) இசை பொருந்திய வடித்த தமிழால் ஆன் மாலை படர்ந்துள்ள பருத்த தோளின் வழியே பிடரியில் ஏறி, பசிய ஒளியுடைய மரகதத்தைப் போன்ற திருமேனியில் மிகப் பசுமை யான ஒளி நிறையுமாறு,

(4) முத்துக்கள் போன்ற பற்களையுடைய வாயில் தெளிந்த நிலவு போன்ற நகை பரவ நின்று ஆடும் மயிலே! பாண்டிய மன்னனுக்கும் இமயமலை மன்னனுக்கும் ஒப்பற்ற செல்வியே! செங்கீரையாடியருளுவாயாக!

**விளக்கம்**

(1) உள் நிலாவுவகை - மனத்துள் பொருந்திய மகிழ்ச்சி. துளம்ப - ததும்ப. தாதை - மலயத்துவச பாண்டியன். கரம் பொத்தி - கையை வளைத்து.

(2) தண் உலா - குளிர்ச்சியுடைய. மழலைப் பசுங்குதலை அமுது - மழலைச் சொல்லான அமுது. குதலை - எழுத்தின் வடிவு பெறாத சொல். தாய் - காஞ்சன மாலை. தாள்தோய் தடக்கை - முழங்கால் அளவு நீண்ட கை. பண் உலாம் - இசை பொருந்திய.

வடிதமிழ் - தெளிந்த தமிழ். பைந்தாமம் - பசுமையான மாலை. பணைத்தோள் - பருத்த தோள். எருத்தம் - பிடரி. பாசொளி - பசுமையான ஒளி.

(4) தெண்ணிலா - தெளிவான நிலவு ஒளி. பசுந்தோகை - பச்சைமயிலே! பொன்மலை மன்னன் - இமவான். ஒருசெல்வி - ஒப்பில்லாத செல்வியே! (2)

16. சுற்றுநெடு நேமிச் சுவர்க்கிசைய வெட்டுச்
சுவர்க்கால் நிறுத்திமேருத்
தூணொன்று நடுநட்டு வெளிமுகடு மூடியிரு
சுடர்விளக் கிட்டுமுற்ற
எற்றுபுன லில்கழுவு புவனப் பழங்கலம்
எடுத்தடுக் கிப்புதுக்கூழ்
இன்னமுத முஞ்சமைத் தன்னைநீ பன்முறை
இழைத்திட அழித்தழித்தோர்
முற்றவெளி யில்திரியு மத்தப் பெரும்பித்தன்
முன்னின்று தொந்தமிடவும்
முனியாது வைகலும் எடுத்தடுக் கிப்பெரிய
மூதண்ட கூடமூடும்
சிற்றில்விளை யாடுமொரு பச்சிளம் பெண்பிள்ளை
செங்கீரை யாடியருளே
தென்னற்கு மம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை யாடியருளே. (3)

**தெளிவுரை**

(1) சூழ்ந்துள்ள நீண்ட சக்கரவாள மலை என்னும் சுவருக்குப் பொருத்தமாக அடை சுவர்களாக எட்டு மலைகளை நிறுத்தி மேரு என்ற மலையான தூணை நடுவில் நிறுத்தி வானம் என்ற வெளியுச்சியை மூடி

(2) முழுதும் மோதும் ஊழி வெள்ளத்தில் கழுவப்படும் புவனங்களாகிய பழைய பாத்திரங்களை வரிசையாய் அடுக்கிப் புதிய உணவுப் பொருள் ஆன இனிய அமுதத்தையும் ஆக்கி,

தாயான நீ இங்ஙனம் பல முறை செய்து வரவும் அவற்றை அடிக்கடி அழித்து விட்டு

(3) ஒரு முற்ற வெளியான தில்லையில் திரிகின்ற ஊமத்தம் பூவை அணிந்திருக்கும் பெரும்பித்தன் ஆகிய கூத்தப்பெருமான் உன் முன் நிலையில் நின்று கூத்தாடவும், அவனை வெறுக்காமல் நாள்தோறும் அவற்றையெல்லாம் மீண்டும் வரிசையாய் அமைத்து,

(4) சிறிய வீடு கட்டி விளையாடும் ஒப்பற்ற இளமையுடன் கூடிய பச்சிளம் பெண் குழந்தையே! செங்கீரை ஆடியருளுவாய்! பாண்டிய மன்னனுக்கும் இமவானுக்கும் மகளானவளே! செங்கீரை ஆடியருளுவாய்!

**விளக்கம்**

(1) சுற்று நெடு நேமிச் சுவர் - சூழ்ந்துள்ள நெடிய சக்கரவாள மலையாகிய சுவர். நேமி - சக்கரவாள மலை. சக்கரவாள மலைக்குச் சார்பாக எட்டுக் குல மலைகளை நிறுத்தி நடுவில் மேருமலை என்ற தூணை நிறுத்தி, வானத்தை மூடி, சூரியன் சந்திரன் ஆகிய விளக்குகளை ஏற்றி ஊழி வெள்ளத்தால் தூய்மை செய்யப்படும் உலகங்கள் என்ற பாண்டங்களை வரிசையாய் அடுக்கி இனிய உணவைத் தாயானவள் - அங்கயற்கண்ணி - சமைக்க, அவற்றைப் பல முறை அழித்து விளையாடல் செய்கின்றான் சிவபெருமான் என்க.

சுவரைச் சார்த்தி அமைத்த கால்களின் மேல் பரப்பில் சுமை தாங்கும்படி அமைத்தலும், நடுவில் ஒரு தூண் நடுதலும் ஒரு வகைச்சிற்பம் என்பர். வெளி முகடு - வானத்தின் உச்சி. இருசுடர் - கதிரவன் சந்திரன். முற்ற - முழுவதும்.

(2) எற்றுபுனல் - அலை மோதும் நீர்; அந்நீர் ஊழிப் பெரு வெள்ளம். புவனப் பழங்கலம் - உலகங்களாகிய பழைய பாத்திரங்கள். கூழ் - உணவு. புனலில் கழுவுதல் என்பது ஊழி முடிவில் தோன்றும் வெள்ளத்தில் உலகம் அமிழ்தலைக் குறித்தது. இழைத்திட - செய்ய.

(3) வெளியில் முற்ற - வெளி முழுவதும். தொந்தமிடல் - கூத்தாடல். மூதண்டம் - பழைய அண்டத்தை (உலக வீட்டை)

(4) சிற்றில் - அண்டங்கள்; சிறிய இல்லங்கள். பச்சிளமை - மிக்க இளமை. பெண்பிள்ளை - பெண்குழந்தையே! (3)

17. மங்குல்படு கந்தரச் சுந்தரக் கடவுட்கு
மழகதிர்க் கற்றைசுற்றும்
வாள்நயன மூன்றும் குளிர்ந்தமுத கலைதலை
மடுப்பக் கடைக்கணோக்கும்
பொங்குமதர் நோக்கிற் பிறந்தவா னந்தப்
புதுப்புணரி நீத்தமையன்
புந்தித் தடத்தினை நிரப்பவழி யடியர்பால்
போகசா கரமடுப்ப
அங்கணெடு ஞாலத்து வித்தின்றி வித்திய
அனைத்துயிர் களும்தளிர்ப்ப
அருள்மடை திறந்துகடை வெள்ளம் பெருக்கெடுத்து
அலையெறிந் துகளவுகளும்
செங்கயல் கிடக்கும் கருங்கண் பசுந்தோகை
செங்கீரை யாடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை யாடியருளே. (4)

**தெளிவுரை**

(1) இருள் பொருந்திய கழுத்தையுடைய சோமசுந்தரக் கடவுளுக்கு இளைய கதிர் பொருந்திய ஒளி வடிவமான கண் மூன்றும், குளிர்ந்து அமுத கலையைத் தலைக் கொளலால், கடைக் கண்ணால் பார்க்கின்ற

(2) மிக்க அழகையுடைய பார்வையில் தோன்றிய இன்பப் புதுக்கடல் வெள்ளமும் நம் தலைவனின் உள்ளக் குளத்தை நிறைப்ப, வழிவழி வந்த அடியார் இன்பக்கடல் பெருக்க,

(3) அழகிய இடம் அகன்ற பூமியில் விதை இல்லாமல் விதைத்த எல்லா உயிர்களும் தழைப்ப, அருளாகிய மடையைத் திறந்த ஊழி வெள்ளம் பெருகி அலை வீசிப் புரள,

(4) உகளும் செங்கயற்கண் கிடக்கின்ற கரிய கண்ணை யுடைய பச்சை மயில் போன்றவளே! செங்கீரை ஆடுவாயாக! பாண்டிய மன்னனுக்கும் இமவானுக்கும் தோன்றிய மகளே செங்கீரை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. மங்குல் - இருள்; கருமேகமுமாம். கந்தரம் - கழுத்து. சுந்தரக் கடவுள் - சோமசுந்தரக் கடவுள். வாள் - ஒளி. நயனம் மூன்றும் - மூன்று கண்களும்; சூரியன், சந்திரன், அக்கினி, ஆகிய மூன்று கண்கள். அமுத கலை தலைப்ப - அமுத கலையைத் தலைக் கொள்ளலால்.

2. ஆனந்தப் புதுப்புணரி நீத்தம் - பேரின்பப் புதுக்கடல் வெள்ளமும். பார்வையால் அடியாரிடம் இன்பக்கடல் உண்டாக. அடியர் - ஆன்மாக்கள். போக சாகரம் - இன்பக்கடல்.

3. வித்திய - விதைத்த. உகளும் - துள்ளும்; உலவும்.

4. செங்கயல் - செந்நிறக் கயல்மீன். பசுந்தோகை - பச்சை மயில். அமுத கலை தலைமடுப்ப, தடத்தினை நிரப்ப, சாகரம் அடுப்ப, உயிர்களும் தளிர்ப்ப, அருள் மடை திறந்து கடை வெள்ளம் பெருக்கெடுத்து அலை எறிந்து உகள உகளும் கருங்கண் என்னும் செங்கயல் கிடக்கும் கருங்கண் என்றும் கூட்டுக. (4)

18. பண்ணறா வரிமிடற்று அறுகால் மடுப்பப்
பசுந்தேறல் ஆறலைக்கும்
பதுமபீ டிகையுமுது பழமறை விரிந்தொளி
பழுத்தசெந் நாவுமிமையாக்

கண்ணறா மரகதக் கற்றைக் கலாமஞ்ஞை
கணமுகில் ததும்பவேங்கும்
கார்வரையும் வெள்ளெனவொர் கன்னிமா டத்துவளர்
கர்ப்பூர வல்லிகதிர்கால்
விண்ணறா மதிமுயல் கலைகிழிந் திழியமுத
வெள்ளருவி பாயவெடிபோய்
மீளும் தகட்டகட் டிளவாளை மோதமுகை
விண்டொழுகு முண்டகப்பூந்
தெண்ணறா அருவிபாய் மதுரைமர கதவல்லி
செங்கீரை யாடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை யாடியருளே. (5)

**தெளிவுரை**

1. இசை நீங்காத வரிகளையுடைய கழுத்தைக் கொண்ட வண்டுகள் உண்ணும்படி இனிய தேன் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் தாமரை என்ற தவிசும் பழைய வேதங்கள் ஒளி விரிந்து ஒளி பழுத்த பிரமனின் செந்நாவும்,

2. இமையாத கண்களையுடைய மரகதம் போன்ற தொகுதியான தோகையையுடைய மயில் கூட்டமான மேகத்தைக் கண்டு ஏங்குவதற்கு இடமான கரிய மலையும் வெறுமையாயின எனக் கூறுமாறு ஒரு கன்னி மாடத்தில் வளர்கின்ற கற்பூர வல்லி,

3. ஒளியைத் தருகின்ற வானத்தில் நீங்காத சந்திரனின் முயற்கலையைக் கிழித்து ஒழுகும் நிலவான வெண்மையான அருவி பாயும்படி தாவிப் பின் மீள்கின்ற தகடு போன்ற வயிற்றை யுடைய வாளைமீன்கள் மோதுதலால் மொட்டு விரிந்து தாமரைப் பூவின்

4. தெளிந்த தேன் அருவி வழிகின்ற மதுரையில் வீற்றிருக் கின்ற மரகதவல்லியே! செங்கீரை ஆடியருளுக! பாண்டிய மன்னனுக்கும் இமவானுக்கும் ஒப்பற்ற மகளே! செங்கீரை ஆடியருளுவாயாக!

**விளக்கம்**

1. பண் - இசை. அறுகால் - ஆறுகால்களையுடைய வண்டு. வரி - ஒருவகையான பாடல். பசுந்தேறல் - பசுமையான தேன். பதும பீடிகை - திருமகள் வீற்றிருக்கும் செந்தாமரை மலர் ஆகிய ஆசனம். முதுமறை - மிகப்பழைய வேதம். செந்நா - கலைமகள் வீற்றிருக்கும் பிரமனது நாக்கு.

2. இமையாக்கண் - மயிலின் தோகையில் உள்ள கண்கள். ததும்ப - ஒலிக்க. கார்வரை - விந்தமலை. வெள்ளென - நாணத்தால் வெண்ணிறம் அடைய.

அங்கயற்கண் அம்மை கன்னிமாடத்தில் வளர்வது நோக்கி, 'இம்மாடம் பெற்ற பேறு யாம் பெறவில்லையே' என்று திரு மகளைத் தாங்கும் தாமரையும், கலைமகளைத் தாங்கும் பிரமன் நாக்கும், துர்க்காதேவியைத் தாங்கும் விந்தமலையும் நாணம் கொண்டன என்பது கருத்து.

3. மதிமுயற்கலை - முயலையுடைய மதிக்கலை என்று மாற்றிக் கொள்க. வெடிபோய் - துள்ளி. தகடு அகடு - வெள்ளித் தகடு போன்ற வயிறு. வாளை மீன் பாய்வதால் மதியின் கலை கிழிந்து அமுதம் பாய்ந்தது.

4. நறா அருவி - தேன் அருவி. (5)

## வேறு

19. முகமதி யூடுஎழு நகைநில வாட
முடிச்சூ ழியமாட
முரிபுரு வக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்பொ டசைந்தாட
இகல்விழி மகரமும் அம்மக ரம்பொரும்
இருமக ரமுமாட
இடுநூ புரவடி பெயரக் கிண்கிண்
எனுங்கிண் கிணியாடத்

துகிலொடு சோர்தரு கொடிநுண் மருங்குல்
துவண்டு துவண்டாடத்
தொந்தி சரிந்திட வுந்தி கரந்தொளிர்
சூலுடை யாலடைமற்று
அகில சராசரம் நிகிலமொ டாடிட
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை. (6)

**தெளிவுரை**

1. முகம் என்னும் சந்திரனிடத்தில் தோன்றும் பற்களின் ஒளி விளங்கவும், முடியில் அணியும் உச்சிக் கொண்டை ஆடவும், வளைந்த புருவமாகிய கொடியும் நெற்றியில் அணியப்பட்ட சுட்டி என்னும் நகையும் அசைந்து ஆடவும்,

2. போரிடும் கண்கள் என்ற மகர மீன்களும் அந்த மகர மீன்கள் போரிடுகின்ற இரு மகர வடிவில் செய்யப்பட்ட காதணிகளும் ஆடவும், அணிந்த சிலம்புத் திருவடிகள் அசைதலால் 'கிண்கிண்' என்று ஒலிக்கின்ற கிண்கிணி என்னும் அணிகள் ஆடவும்,

3. ஆடையுடன் தளர்கின்ற கொடியைப் போன்ற நுண்ணிய இடையானது துவண்டு தளர்ந்து ஆடவும், வயிறானது சரியக் கொப்பூழ் மறைந்து விளங்குகின்ற கருப்பம் உற்ற ஆல இலையைப் போன்ற வயிற்றில்

4. உலகத்தில் உள்ள இயங்கும் பொருள் இயங்காப் பொருள் என்பவை எல்லாம் ஆடும்படி செங்கீரை ஆடியருளுக. உலகு தழைக்கும்படி முடி சூடிய அங்கயற்கண் அம்மையே! செங்கீரை ஆடியருளுக.

**விளக்கம்**

1. முகமதியூடு - முகம் என்ற சந்திரனிடத்தில். நகை - பற்கள். நிலவு ஆட - நிலவு ஒளி எழ. முடிச்சூழியம் - உச்சிக் கொண்டை. முரி - வளைந்த.

2. விழிமகரம் - கண் என்ற மீன். இருமகரம் - இரண்டு மகர வடிவில் உள்ள காதணிகள். கண்ணை மகர மீனுக்கு உவமையாகக் கூறுவது மரபில்லை. ஆயினும் மீன் என்ற பொதுமைக் கருத்தால் இப்படி உவமை கூறப்பட்டது. நூபுரம் - காலணி. கிண்கிணி - ஒருவகைக் காலணி.

3. துகில் - ஆடை. சோர்தரு - தளர்கின்ற. கொடி - நுண்மருங்கில். கொடி போன்ற நுட்பமான இடை. உந்தியில் எல்லாவற்றையும் கரந்து ஒளிரும் கருவையுடைய ஆலிலை போன்ற வயிறு. ஆலடை - ஆலமர இலை.

4. அகிலம் - அழிவற்றவை. நிகிலம் - உலக யாவையும். (6)

20. தசைந்திடு கொங்கை யிரண்டல வெனவுரை
தருதிரு மார்பாடத்
தாய்வரு கென்பவர் பேதைமை கண்டு
ததும்புபு னகையாடப்
பசைந்திடு ஞால மலர்ந்தமை வெளிறியொர்
பச்சுடல் சொல்லவுமோர்
பைங்கொடி ஒல்கவு மொல்கி நுடங்கிய
பண்டி சரிந்தாட
இசைந்திடு தேவை நினைந்தன வென்ன
இரங்கிடு மேகலையோடு
இடுகிடை யாட இயற்கை மணம்பொதி
இதழ்வழி தேறலினோடு
அசைந்தொசி கின்ற பசுங்கொடி யெனவினிது
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை. (7)

**தெளிவுரை**

1. தசையுடன் கூடிய கொங்கைகள் இரண்டல்ல, மூன்று எனச் சொல்லப்படும் அழகிய மார்பு ஆடவும், தாயே வருக என்று

அழைக்கின்றவரின் அறியாமையைக் கண்டு ததும்பும் புன்சிரிப்பு எழவும்,

2. செழித்துள்ள பூமியை ஈன்ற செயலை வெண்மையடைந்து ஒரு பசுமையான உடம்பு காட்டவும், பசுமையான கொடி போன்ற இடை தளரவும் தளர்ந்து நுட்பமான வயிறு சரிந்து ஆடவும்,

3. பொருத்தமான தம் தெய்வத்தை எண்ணின என்னுமாறு ஒலிக்கின்ற மேகலை என்ற அணியுடன் கூடிய சிறிய இடை ஆடவும், இயற்கை மணம் உடைய உதட்டின் வழி ஒழுகும் எச்சிலாகிய தேனுடன்

4. அசைந்து வளைகின்ற பசிய கொடி போல இனிதாய்ச் செங்கீரை ஆடியருளுக. உலகம் தழைய முடியை அணிந்தவளே! செங்கீரை ஆடியருளுக.

**விளக்கம்**

1. தசைந்திடு - தசையுடன் கூடிய. மார்பு ஆட - கொங்கைகள் ஆட. இரண்டு அல என்றது மூன்று என்ற எண் குறிப்புடையது. தாயே வருக என்பவர் பொதுவாக மகள் என்ற பொருளையே கொள்வர். மீனாட்சியை அழைத்தவரும் அங்ஙனமே அழைத்தனர். உலக வழக்குப்படியே அவ்வாறு அழைத்தனர். அதனை அறியாமையுடையது என்றார். ஏனென்றால் தாய் என்பதற்கு உலகை ஈன்ற தாய் என்று பொருள் கொள்வதே பொருந்தும். அவ்வாறு கொள்ளாது மகள் என்றல் அறியாமையுடையது. ததும்பு - வெளிப்படும்; மேல் எழும். பசைந்திடு ஞாலம் - செழிப்புற்ற உலகம். மலர்ந்தமை - ஈன்றமை; வெளிப்பட்டமை. வெளிறியோர் - பச்சுடல் சொல்லவும் வெண்மையுற்று ஒரு பசுமையான உடல் காட்டவும். பைங்கொடி - இடை. பண்டி - வயிறு.

3. தேவை - சிவபெருமானை. இரங்கிடும் - ஒலிக்கும். இடுகிடை - இடுகு + இடை; சிறிய இடை. இதழ்வழி - உதட்டின் வழி. தேறல் - தேன் போன்ற சொள்ளு நீர்.

4. பசுங்கொடி என - பசுமையான கொடி போல. (7)

21. பரிமளம் ஊறிய வுச்சியின் முச்சி
பதிந்தா டச்சுடர்பொன்
பட்டமு டன்சிறு சுட்டியும் வெயிலொடு
பனிவெண் ணிலவாடத்
திருநுதல் மீதெழு குறுவெயர் வாடத்
தெய்வம ணம்கமழும்
திருமே னியின்முழு மரகத வொளியெண்
திக்கும்வி ரிந்தாடக்
கருவிளை நாறு குதம்பை ததும்பிய
காது தழைந்தாடக்
கதிர்வெண் முறுவ லரும்ப மலர்ந்திடு
கமலத் திருமுகநின்
அருள்விழி யொடும்வளர் கருணை பொழிந்திட
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை. (8)

**தெளிவுரை**

1. நல்ல மணம் பெருகிய உச்சிக் கொண்டையின் தலைப் பாகம் அழுந்தி ஆடவும், ஒளிரும் பொன் பட்டத்துடன் சுட்டியும் வெயிலுடன் குளிர்ந்த வெண்மையான நிலவைப் போன்று ஆடவும்,

2. அழகிய நெற்றியின் மீது சிறு வியர்வைத் துளி அசையவும், தெய்வ மணம் கமழும் அழகிய உடம்பின் நிறைந்த மரகதம் போன்ற பச்சை ஒளி எட்டுத் திக்குகளிலும் படர்ந்து வீசவும்,

3. நீலோற்பலம் மணக்கும் குதம்பை என்ற காதணி பொருந்திய செவி தளிர்த்து ஆடவும், ஒளியுடைய வெண்மை யான நகை தோன்ற மலர்கின்ற தாமரை மலர் போன்ற சிறந்த நின் முகம்

4. அருட்பார்வையுடன் வளரும் கருணை மழை பொழியுமாறு செங்கீரையை ஆடுக! உலகம் செழிக்க முடியை அணிந்தவளே! செங்கீரை ஆடியருளுக!

**விளக்கம்**

1. பரிமளம் - நறுமணம். உச்சியின் முச்சி - உச்சிக் கொண்டை. பதிந்து ஆட - அழுந்திஆட. பட்டத்தால் வெயிலும் சுட்டியால் நிலவும் ஆட எனக் கொள்க.

2. நுதல் - நெற்றி. மரகத ஒளி - மரகதமணியின் நிறம் போன்ற பச்சை நிற ஒளி. எண்திக்கும் - எட்டுத் திசையும்.

3. கருவிளை - கருவிளை போன்ற கண்கள். குதம்பை - ஒருவகைக் காதணி. கண்கள் காது வரை சென்றுள்ளமையால் 'கருவிளை நாறு குதம்பை' என்றார். தழைந்து - தாழ்ந்து. கதிர்வெண்முறுவல் - ஒளியுடைய வெண்மையான நகை தோன்ற.

(8)

## சந்த விருத்தம்

22. குருமணி வெயில்விட மரகத நிழல்விரி
குன்றே நின்றூதும்
குழலிசை பழகிய மழைமுகில் எழவெழு
கொம்பே வெம்பாசம்
மருவிய பிணிகெட மலைதரு மருமைம
ருந்தே சந்தானம்
வளர்புவ னமுமுணர் வருமரு மறையின்வ
ரம்பே செம்போதிற்
கருணையின் முழுகிய கயறிரி பசியக
ரும்பே வெண்சோதிக்
கலைமதி மரபிலொ ரிளமதி யெனவளர்
கன்றே யென்றோதும்

திருமகள் கலைமகள் தலைமகண் மலைமகள்
செங்கோ செங்கீரை
தெளிதமிழ் மதுரையில் வளருமொர் இளமயில்
செங்கோ செங்கீரை. (9)

**தெளிவுரை**

1. பலநிறங்களையுடைய மணிகள் ஒளிவீச மரகதத்தின் குளிர்ந்த நிழல் பரவும் மலையே! வேய்குழலின் இசையை ஊதிப் பழகிய கரிய நிறமுடைய திருமால் முதலில் தோன்ற அவன் பின் தோன்றிய பூங்கொம்பைப் போன்றவளே!

2. கொடிய பாசம் பொருந்திய பிறவி நோய் அழியுமாறு மலையில் தோன்றிய மருந்தைப் போன்றவளே! அரிசந்தானம் என்ற மரம் வளரும் பொன் உலகத் தேவரும் உணர்வதற்கு அரிய வேதத்தின் எல்லையே!

3. செம்மையான முகம் என்ற தாமரை மலரில் அருளில் முழுகிய கண்கள் என்ற கயல்மீன்கள் உலவுகின்ற பசுமையான கரும்பைப் போன்றவளே!

4. வெண்மையான ஒளியையுடைய கலைகளையுடைய சந்திர குலத்தில் ஓர் இளமதி என்று கூறும்படி வளர்கின்ற கன்றே! எனத் துதிக்கின்ற இலக்குமிக்கும் கலைமகளுக்கும் தலைவி யானவளே! மலையரசனான இமவான் மகளே! செங்கோ செங்கீரை! தெளிந்த தமிழ் பயிலுகின்ற மதுரை நகரில் வளர்கின்ற ஒப்பில்லாத இளைய மயில் போன்றவளே! செங்கோ, செங்கீரை.

**விளக்கம்**

இறைவியின் மேனியில் அணிந்துள்ள பல அணிகள் வெயில் போல ஒளிர, மேனி மரகதத்தின் ஒளி பரப்ப என்க.

குரு - நிறம். நிழல் - ஒளி. குழலிசை பழகிய மழை முகில் எழ எழும் கொம்பே - குழல் ஊதிப் பழகிய மேகம் போன்ற திருமாலுக்குப் பின் பிறந்தவள். தங்கை என்பது கருத்து. கொம்பு - கொம்பைப் போன்றவள்.

2. மலையின் மகள் ஆதலாலும் பிறவி நோய் கெடும்படி செய்தலாலும் 'மலைதரு மருந்தே' என்றார். சந்தானம் வளர் புவனம் - அரிசந்தானம் என்ற மரம் வளர்கின்ற தேவவுலகம். செம்போது - திருமுகம். கருணையின் முழுகிய கயல்திரி பசிய கரும்பே - அருளில் முழுகிய கண்கள் என்னும் கயல் மீன்கள் உலவும் பசிய கரும்பு போன்றவளே! கயல் - கண்கள். கன்றே - மான் கன்று போன்றவளே.

4. திருமகள் கலைமகள் தலைமகள் - திருமகளுக்கும் கலைமகளுக்கும் தலைமகளே!

செங்கீரை என்பது 'செங்கோ' விகாரப்பட்டது. இதன்பின் ஆடியருள்க என்பது தொக்கி நிற்கின்றது. (9)

## வேறு

23. சங்குகி டந்தத டங்கைநெ டும்புயல்
தங்காய் பங்காயோர்
தமனிய மலைபடர் கொடியென வடிவுத
ழைந்தா யெந்தாயென்று
அங்கணெ டும்புவ னங்கள்தொ ழுந்தொறும்
அஞ்சே லென்றோதும்
அபயமும் வரதமும் உபயமும் உடையவ
ணங்கே வெங்கோபக்
கங்குல்ம தங்கய மங்குல டங்கவி
டுங்கா மன்சேமக்
கயல்குடி புகுமொரு துகிலிகை யெனநின
கண்போ லும்சாயல்
செங்கயல் தங்குபொ லன்கொடி மின்கொடி
செங்கோ செங்கீரை
தெளிதமிழ் மதுரையில் வளருமொர் இளமயில்
செங்கோ செங்கீரை. (10)

**தெளிவுரை**

1. பாஞ்சசன்யம் என்ற சங்கு தாங்கிய பெரிய கையை யுடைய நெடிய மேகம் போன்ற திருமாலின் தங்கையே! சிவ பெருமானின் ஒரு பங்கு உடையவளாய் ஒப்பில்லாத பொன் மலையில் படர்ந்த பசுமையான கொடி போல் வடிவம் உடையவளே! எம் அன்னையே! எனச் சொல்லி

2. அழகிய இடம் அகன்ற பூமியில் உள்ளவர்கள் வணங்கும் பொழுதெல்லாம் அஞ்சாதீர் என இயம்பும் அபயக்கையும் வரதக் கையும் ஆகிய இரண்டு கைகளையும் உடைய தெய்வப் பெண்ணே! கொடிய சினம் உடைய

3. இரவு என்னும் யானையை வானம் முழுவதிலும் செலுத்துகின்ற காமனின் பாதுகாவலான கயல் மீன் குடிபுகும் ஒரு கொடி என, நின்கண்களைப் போலும் சாயலையுடைய

4. செங்கயல் தங்கியிருக்கப் பெற்ற அழகிய கொடியைத் தரித்த மின்கொடி போன்றவளே! செங்கோ செங்கீரை! தெளிந்த தமிழ் வளரும் ஓர் இளமயில் செங்கோ செங்கீரை!

**விளக்கம்**

1. சங்கு - பாஞ்சசன்யம் என்ற சங்கு. புயல் - மேகம் போன்ற திருமால். தங்காய் - தங்கையே. தமனிய மலை - பொன் மலை. வடிவு - வடிவை உடைய. எந்தாய் - எம் அன்னையே!

2. அங்கண் - அழகிய இடத்தையுடைய. அபயமும் வரதமும் உபயமும் - அபயக் கையும் வரதக் கையும் ஆகிய இரண்டும். உபயம் - இரண்டு. அஞ்சேல் - அஞ்சவேண்டா. வெங் கோபம் - கொடிய சினம். மதங்கயம் - மதகயம்; மதத்தையுடைய யானை. 'மதங்கயம்' என்று வந்தது விகாரம். மங்குல் - இருள்; மதகயமான மங்குல். காமனுக்கு இருள் யானை. துகிலிகை - துவசம்; கொடி.

4. பொலன் கொடி - பொற்கொடி. (10)

## 2. தாலப்பருவம்

### ஆசிரிய விருத்தம்

24. தென்னன் தமிழி னுடன்பிறந்த
சிறுகா லரும்பத் தீயரும்பும்
தேமா நிழற்கண் துஞ்சுமிளஞ்
செங்கண் கயவாய்ப் புனிற்றெருமை
இன்னம் பசும்புல் கறிக்கல்லா
இளங்கன் றுள்ளி மடித்தலநின்று
இழிபால் அருவி உவட்டெடறிய
எறியுந் திரைத்தீம் புனற்பொய்கைப்
பொன்னங் கமலப் பசுந்தோட்டுப்
பொன்தா தாடிக் கற்றைநிலாப்
பொழியும் தரங்கம் பொறைஉயிர்த்த
பொன்போல் தொடுதோ லடிப்பொலன்சூட்டு
அன்னம் பொலியும் தமிழ்மதுரைக்கு
அரசே தாலோ தாலேலோ
அருள்சூல் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (1)

**தெளிவுரை**

1. பாண்டிய மன்னனால் வளர்க்கப்பட்ட தமிழ் மொழி தோன்றிய பொதிய மலையில் ஒருசேரத் தோன்றிய தென்றற் காற்று வீசுதலும் நெருப்பைப் போல் சிவந்த தளிர்களைத் தோற்றுவிக்கும் இனிய மாமரங்களின் நிழலில் உறங்குகின்ற இளமையான சிவந்த கண்களையும் பெரிய வாயையும் உடைய கன்று ஈன்ற அணிமையை உடைய எருமை மாடுகள்,

2. இன்னும் இளம்புல்லையும் கடித்துஅறியாத சிறிய கன்றை நினைக்கத் தம் மடியினின்று தானே ஒழுகும் பால் அருவியானது பெருக்கெடுத்து வீச எறிகின்ற அலைகளையுடைய இனியநீர் உள்ள பொய்கையில்,

3. உள்ள அழகிய பொன் போல் சிவந்த தாமரை மலரின் இனிய இதழின் பொன் நிறமான மகரந்தங்களைப் பூசித் தொகுதியாய் நிலவைச் சொரியும் திருப்பாற்கடல் ஈன்ற திருமகளைப் போல் தோலால் இணைக்கப்பட்ட விரல் உள்ளதும் பொன் மயமான உச்சிக் கொண்டை உடையதும் ஆகிய

4. அன்னப் பறவை நிறைந்திருக்கின்ற வளம் வாய்ந்த தமிழ் வளர்த்த மதுரை நகரத்தில் உள்ள அங்கயற்கண் அரசியே! தாலோ தாலேலோ! அருளாகிய கருவைக் கொண்டுள்ள அழகிய கயல் மீன் போல் கண்களையுடைய அமுதம் போன்றவளே! தாலோ தாலேலோ!

**விளக்கம்**

'தாலாட்டுப்பருவம்' என்பது 'தாலப்பருவம்' என வந்தது.

1. தென்னன் - பாண்டிய மன்னன். சிறுகால் - தென்றற் காற்று. தென்றல் வீசும் போது மாமரங்கள் சிவந்த தளிரைத் தளிர்க்கும். ஆதலால் 'சிறுகால் அரும்பத் தீயரும்பும்' தேமா என்றார். தீயரும்பும் தேமா - தீயைப் போல் சிவந்த தளிரைத் தளிர்க்கும் தேமா மரம். கயவாய் - பெரிய வாய்; ஆழமான வாய். புனிற்றுஎருமை - கன்று ஈன்ற எருமை.

2. பசும்புல் கறிக்கல்லா - இளம் பசியபுல்லையும் கடித்துத் தின்ன இயலாத.

எருமை தன் கன்றை எண்ணுகிறது. அதனால் அதன் மடியினின்று பால் சுரந்து நீர் நிலையில் பாய்கிறது. அதனால் பொய்கையில் நீர் பெருகி அலை வீசுகின்றது. உள்ளி - நினைக்க. மடித்தலம் நின்று - மடியினின்று. பால்அருவி - பாலாகிய அருவி. உவட்டெறிய - பெருக்கெடுப்ப. தீம்புனல் - தீம் + புனல்; இனிய பொய்கை.

3. பசுந்தோட்டு பொற்றாது - இளைய இதழில் உள்ள பொன் போன்ற தாது. தரங்கம் பொறை உயிர்த்த பொன் - பாற்கடலால் பெறப்பட்ட திருமகள். பொன் - திருமகள். தொடுதோல்அடி -

தோலால் இணைக்கப்பட்ட அடி. பொலன் சூட்டு - பொன் கொண்டை.

4. அன்னம் பொலியும் - அன்னப்பறவைகள் விளங்கும். 'தாலோ தாலேலோ' என்பது குழந்தையைத் தாலாட்டுபவர் கூறும் தொடர். தாலை (நாவை) ஆட்டி இதைப் பாடியதால் இதற்குத் 'தாலாட்டு' என்ற பெயர் ஏற்பட்டது.

எருமை தன் கன்றை நினைந்ததால் சொரிந்த பாலால் நீர் நிலையானது பாற்கடல் போல் தோன்றுகிறது. அதில் தாமரையில் உள்ள தாதில் ஆடிப் பொன் வண்ணம் பெற்ற அன்னப் பறவை பாற்கடலில் தோன்றிய திருமகளைப் போல் விளங்கியது என்க.

தென்னந்தமிழ் என்று பாடம் கொண்டால், (தென் + அம் + தமிழ்) தெற்குப் பக்கத்தில் உள்ள அழகிய தமிழ் எனப் பொருள் கொள்ள வேண்டும். (1)

25. வீக்குஞ் சிறுபைந் துகிற்றோகை
விரியுங் கலாப மருங்கலைப்ப
விளையாட்டு அயரும் மணல்சிற்றில்
வீட்டுக் குடிபுக் கோட்டியிருள்
சீக்கும் சுடர்தூங் கழன்மணியின்
செந்தீ மடுத்த சூட்டடுப்பிற்
செழுந்தாட் பவளத் துவரடுக்கித்
தெளிக்கு நறுந்தண் தேறலுலை
வாக்குங் 'குடக்கூன் குழிசியிலம்
மதுவார்த் தரித்த நித்திலத்தின்
வல்சி புகட்டி வடித்தெடுத்து
வயன்மா மகளிர் குழாஞ்சிறுசோறு
ஆக்கும் பெருந்தண் பணைமதுரைக்கு
அரசே தாலோ தாலேலோ
அருள்சூல் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (2)

**தெளிவுரை**

1. கட்டப்படுகின்ற சிறிய பசிய ஆடையின் கொய்சகத்தின் மீது விரிந்த 'கலாபம்' என்ற இடை அணி இடையை வருத்த, விளையாட்டுக்காகச் செய்யப்படும் மணலால் ஆன சிறிய வீட்டில் குடிபுகுந்து இருளை ஓட்டி,

2. அழிக்கின்ற ஒளி தங்கப் பெற்ற தீயைப் போன்ற மாணிக்க மணியான நெருப்பை மூட்டிய உச்சியுடைய அடுப்பில், செழுமை யான அடிகளையுடைய பவளக் கொடியான விறகை வைத்து, தெளிக்கப்பட்ட இனிய குளிர்ந்த தேனை உலையாக

3. வார்க்கப்பட்ட குடம் போன்ற நத்தைக் கூடான பானையில் அந்த மதுவை வார்த்து, அரித்து எடுத்த முத்தான அரிசியை அந்தவுலையில் இட்டு வடித்து எடுத்து வயலில் வேலை செய்யும் உழவர் மகளிர் கூட்டம் சிறு சோறு சமைக்கும்.

4. பெரிய குளிர்ந்த பண்ணைகளையுடைய மதுரைநகரின் அரசியே! தாலோ தாலோ! அருள் சூல் கொண்ட அங்கயற்கண் அமுதே தாலோ தாலேலோ!

**விளக்கம்**

வீக்கும் - கட்டும். துகில் தோகை - ஆடையின் தலைப்பு. கலாபம் - மகளிர் இடையில் அணிந்து கொள்ளும் அணி. மருங்கு அலைப்ப - இடையை வருத்த. விளையாட்டு அயரும் - விளை யாடலைச் செய்யும். மணல் சிற்றில் - மணலில் கட்டிய சிறிய வீடு.

2. இருள் சீக்கும் - இருளை ஓட்டும். அழல்மணி - அழலுகின்ற மாணிக்கமாகிய தீயை உண்டாக்கிய. சூட்டு அடுப்பு - ஒருவகை அடுப்பு. பவளமாகிய துவர் என்க. துவர் - விறகு. தேறல் உலை - தேன் ஆன உலைநீர்.

3. குடக் கூன் குழிசி - குடம் போன்று வளைந்த சங்காகிய பானை. கூன் - நத்தைக் கூடு. குழிசி - பானை. வல்சி - அரிசி. வயல்மா மகளிர் - உழவ மகளிர் கூட்டம்; சிறுமியர் கூட்டம்.

அரித்த - அரித்து எடுத்த. நித்திலத்தின் வல்சி - முத்துக்களாகிய அரிசி.

4. ஆக்கும் - சமைக்கும்.

மருத நிலத்துச் சிறுமியர் தாம் கட்டிய சிற்றிலில் மாணிக்கமே தீயாகவும், பவளமே விறகாகவும், தேனே உலை நீராகவும், சங்கே பானையாகவும், முத்துக்கள் அரிசியாகவும் கொண்டு சிறு சோறாக்கி விளையாடினர் என்பதாம். (2)

26. ஓடும் படலை முகிற்படலம்
உவர்நீத் துவரி மேய்ந்துகரு
ஊறுங் கமஞ்சூல் வயிறுடைய
உகைத்துக் கடவுள் கற்பகப்பூங்
காடும் தரங்கக் கங்கைநெடுங்
கழியு நீந்தி அமுதிறைக்கும்
கலைவெண் மதியின் முயல்தடவிக்
கதிர்மீன் கற்றை திரைத்துதறி
மூடும் ககன வெளிக்கூட
முகடு திறந்து புறங்கோத்த
முந்நீ ருழக்கிச் சினவாளை
மூரிச் சுறவி னோடும்விளை
யாடும் பழனத் தமிழ்மதுரைக்கு
அரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (3)

**தெளிவுரை**

1. ஓடும் மாலை போன்ற மேகக் கூட்டம் கடல் நீரைக் குடித்து அந்த நீரில் உள்ள உவர்ப்பைப் போக்கிக் கருவாய் வளரும் நிறைந்த கருப்பம் கொண்ட வயிறு பிளக்குமாறு தாவி, கடவுள் தன்மையுடைய கற்பகப் பூஞ்சோலையையும்

2. அலைகளையுடைய கங்கையாற்றின் நீண்ட கழி முகத்தையும் கடந்து அமுதத்தை இறைக்கும் வெண்மையான கலைகளையுடைய சந்திரனிடத்துள்ள முயலாகிய களங்கத்தைத் தடவி, ஒளியுடைய விண்மீன் கூட்டத்தைச் சிதைத்து எறிந்து,

3. மூடியிருக்கின்ற வானமாகிய வெள்ளிக் கூடத்தின் முகட்டைத் திறந்து பெரும்புறக் கடலின் நீரைக் கலக்கிச் சினம் உடைய வாளை மீன்கள் அங்கே உள்ள வலிமையுடைய சுறா மீன்களுடனும்

4. விளையாடும் வயல்களையுடைய தமிழ் வளர்த்த மதுரைக்கு அரசே! தாலோ தாலேலோ, அருளைக் கருக் கொண்ட அங்கயற்கண் அமுதமே, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

மதுரை நகர வயலில் உள்ள வாளைமீன் தாவி மேக மண்டலத்தைக் கிழித்து மேலே போய்க் கற்பகக் காட்டையும் கங்கையாற்றுக் கரையையும் கடந்து சந்திர மண்டலத்தைத் தாக்கி நட்சத்திரங்களைச் சிதைத்துப் பகிரண்டத்தைப் பிளந்து பெரும் புறக் கடலையும் கலக்கி அங்கே உள்ள சுறாமீனுடன் விளை யாடியது.

1. படலை முகிற்படலம் - தொகுதியான மேகப்பரப்பு. கமஞ்சூல் - நிறைந்த கருப்பம். உவர்நீர்த்துவரி - உப்புத் தன்மை யுடைய கடல். வயிறு உடைய - வயிறு பிளக்கும்படி.

2. தரங்கக் கங்கை - அலைகளையுடைய கங்கையாறு. அமுது இறைக்கும் - அமுதத்தை வெளிப்படுத்தும். முயல் தடவி - முயல் கறையைத் துடைத்து. கதிர்மீன் கற்றைத் திரைத்து உதறி - ஒளியுள்ள விண்மீன் கூட்டத்தைச் சிதைத்து எறிந்து.

3. ககனம் - வானம். புறம் கோத்த முந்நீர் உழக்கி - பெரும்புறக் கடல் நீரைக் கலக்கி. சினவாளை - சினம் கொண்ட வாளைமீன். (3)

27. ஊறுங் கரடக் கடத்துமுகந்
தூற்று மதமா மடவியர்நின்று
உதறும் குழல்பூந் துகளடங்க
ஓட விடுத்த குங்குமச்செஞ்
சேறு வழுக்கி ஒட்டறுக்கும்
திருமா மறுகில் அரசர்பெருந்
திண்டே ரொதுங்கக் கொடுஞ்சிநெடுஞ்
சிறுதேர் உருட்டும் செங்கண்மழ
வேறு பொருவே லிளைஞர்கட
விவுளி கடைவாய் குதட்டவழிந்
திழியும் விலாழி குமிழியெறிந்து
இரைத்துத் திரைத்து நுரைத்தொருபேர்
ஆறு மடுக்கும் தமிழ்மதுரைக்கு
அரசே தாலோ தாலேலோ
அருள்சூல் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (4)

**தெளிவுரை**

1. பெருகும் மதக்குழியாகிய குடத்தால் அள்ளி ஊற்றும் மதம் பொருந்திய யானையின், பெண்கள் கூந்தலினின்றும் இறைக்கின்ற பூந்துகள் அடங்குமாறு ஓடவிட்ட செம்மையான குங்குமச்

2. சேறு வழுக்கி ஒட்டத்தைக் கெடுக்கின்ற அழகு வாய்ந்த பெரிய வீதியில் மன்னர்களின் பெரிய வலிய தேர் ஒதுங்கும்படி கொடுஞ்சியையுடைய நெடிய தேரை உருட்டும் சிவந்த கண்களை உடைய இளைய சிங்கம் போன்ற

3. போர் செய்கின்ற வேற்படையையுடைய இளையர் செலுத்தும் குதிரை கடை வாயினை அசைக்க, வடிந்து ஒழுகும் வாய் நுரை குழிகளை உண்டாக்கி ஒலி செய்து அலை வீசி நுரையுற்று ஒரு பெரிய

ஆறு போலச் செல்கின்ற வளமிக்க தமிழ் மதுரைக்கு அரசே! தாலோ தாலேலோ, அருள் என்னும் கருவைக் கொண்டுள்ள அழகிய கயல் மீன் போன்ற கண்களையுடைய அமுதம் போன்றவளே! தாலோ தாலேலோ!

**விளக்கம்**

1. கரடம் - மதம் பாய்கின்ற சுவடு. கடம் - குடம். மதமா - மதத்தையுடைய யானை. பெண்களின் கூந்தலினின்றும் இறைக் கின்ற பூந்தாதுகள் அடங்குமாறு ஓட.

2. ஓட்டு அறுக்கும் - ஓட்டத்தைக் கெடுக்கும். கொடுஞ்சி - தேரின் உறுப்பு. சிறுதேர் - அளவால் சிறிய தேர்.

3. ஏறு - சிங்கம். இவுளி - குதிரை. கடைவாய் குதட்ட - கடை வாயை அசைக்க. விலாழி குமிழி - வாய்நுரைக் குமிழி. இரைத்து - ஒலித்து. திரைத்து- அலைவீசி.

இளைஞர் செலுத்தும் குதிரைகளின் வாய் நுரைக் குமிழி எறிந்து ஆரவாரித்து அலைவீசி நுரைவீசி ஒரு பெரிய ஆற்றைப் போல் செல்லும். (4)

28. வார்க்குன்று இரண்டு சுமந்தொசியும்
மலர்க்கொம் பனையார் குழல்துஞ்சும்
மழலைச் சுரும்பர் புகுந்துழக்க
மலர்த்தா துகுத்து வானதியைத்
தூர்க்கும் பொதும்பின் முயற்கறைமேல்
துள்ளி உகளும் முசுக்கலையின்
துழனிக் கொதுங்கிக் கழனியினெல்
சூட்டுப் படப்பை மேய்ந்துகதிர்ப்
போர்க்குன் றேறும் கருமுகிலை
வெள்வாய் மள்ளர் பிணையலிடும்
பொருகோட் டெருமைப் போத்தினொடும்
பூட்டி யடிக்க இடிக்குரல்விட்டு

ஆர்க்கும் பழனத் தமிழ்மதுரைக்கு
அரசே தாலோ தாலேலோ
அருள்சூல் கொண்ட வங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ. (5)

**தெளிவுரை**

1. கச்சு அணிந்த இரண்டு கொங்கைகளாகிய மலைகளைத் தாங்கித் துவள்கின்ற மலர்கள் பொருந்திய கொம்பு போன்ற பெண்களின் கூந்தலிலே தங்கியுள்ள மழலை இசையுடன் கூடிய வண்டுகள் நுழைந்து கலக்க மலரில் உள்ள பூந்தாதுப் பொடிகளைச் சிதறி வான் கங்கையைத்

2. தூர்க்கின்ற பூஞ்சோலை. அதில் முயற் கறையுடைய சந்திரன் மேல் துள்ளிக் குதிக்கும் ஆண் குரங்கின் ஆரவாரத்துக்குப் பதுங்கி வயல்களில் உள்ள நெற்குவியலை மேய்ந்து கதிர்களையுடைய

3. போரின் குன்றில் ஏறும் கரிய மேகத்தை வெள்ளை வாயையுடைய உழவர் பிணையில் இடப்பட்டுள்ள போரிடும் கொம்புகளை யுடைய எருமைக் கடாவுடன் சேர்த்துப் பிணைத்து அடிக்க

4. வாய் விட்டு இடியின் ஒலியாகிய முழக்கம் இடும் வயல்களையுடைய தமிழ் பயிலும் மதுரையின் அரசியே! தாலோ தாலேலோ! அருளாகிய கருவைக் கொண்டுள்ள அழகிய கயல் போன்ற கண்களையுடைய அமுதம் போன்றவளே! தாலோ தாலேலோ!

**விளக்கம்**

1. வார்க்குன்று - கச்சு அணிந்த மலை போன்ற கொங்கை. குழல் துஞ்சும் - கூந்தலில் தங்கியுள்ள. சுரும்பர் - வண்டு. உழக்க - கலக்க. வானதி - கங்கை.

2. தூர்க்கும் - தூரச் செய்யும்; கங்கை ஆற்றை மேடாகச் செய்யும். பொதும்பர் - பூஞ்சோலை. முயற்கறை மேல் -

சந்திரனிடம் உள்ள முயற் களங்கத்தின் மீது. முசுக்கலை - ஆண் குரங்கு. துழனி - ஆரவாரம். படப்பை - வைக்கோற்போர். இது தென்பாண்டி நாட்டின் வழக்குச் சொல்.

3. கதிர்ப் போர்க்குன்று - கதிர்களையுடைய போரின் குன்றில். முகிலை - மேகத்தை. மள்ளர் - உழவர். பொருகோட்டு எருமை - போர் செய்யும் கொம்பையுடைய எருமை மாடு. எருமைப் போத்து - ஆண் எருமை.

உழவர் கள்ளையுண்டனர். அதனால் அவர்கள் அறிவு மயங்கி மேகத்தை எருமையுடன் பிணைத்துப் பிணையல் அடித்தனர். (5)

## வேறு

29. காரிற் பொழிமழை நீரிற் சுழியெறி
கழியிற் சிறுகுழியில்
கரையில் கரைபொரு திரையிற் றலைபிரி
கண்டலில் வண்டலினெற்
போரிற் களநிறை சேரிற் குளநிறை
புனலில் பொருகயலில்
பொழிலில் சுருள்புரி குழலில் கணிகையர்
குழையில் பொருகயல்போய்த்
தேரில் குமரர்கள் மார்பில் பொலிதரு
திருவில் பொரு வில்வரிச்
சிலையில் திரள்புய மலையில் புலவி
திருத்திட ஊழ்த்தமுடித்
தாரிற் பொருதிடு மதுரைத் துரைமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ. (6)

### தெளிவுரை

1. மேகத்தினின்று பொழிகின்ற மழை நீரிலும் சுழி எழுகின்ற கழி முகத்திலும், சிறிய பள்ளத்திலும் கரையிலும் கரையை

மோதும் அலையிலும், தலை விரிந்திருக்கின்ற தாழையிலும், மகளிர் விளையாட்டிலும், நெற் போர்களிலும்

2. நெற்களத்தை அடுத்து நிறைந்த மள்ளர் வீட்டில் சேர்ந்துள்ள நெற் கூடுகளிலும் குளம் நிறைந்த நீரிலும் போர் செய்கின்ற மீனைப் போன்று, சோலையைப் போலச் சுருள் புரிந்துள்ள கூந்தலையுடைய பரத்தையர்கள் செவியில் போர் செய்யும் கண்கள் என்ற கயல் மீன்கள் போய்,

4. தேரில் போகும் இளைஞர் நெஞ்சிலும் ஒப்பற்ற கட்டமைந்த வில்லிலும் திரண்ட தோள்களாகிய மலைகளிலும் ஊடலைத் தீர்க்கின்ற முயற்சியிலே

5. உதிர்ந்த மாலையிலும் போய்ப் போர் செய்கின்ற மதுரை அரசியே தாலோ தாலேலோ! தமிழ்ச்சங்கம் வளரும்படி நிலை பெற்ற பொற்கொடியே! தாலோ தாலேலோ!

**விளக்கம்**

நீர்நிலையில் உள்ள கெண்டைமீன் காரிலும், நீரிலும், கழியிலும், குழியிலும், கரையிலும், திரையிலும், கண்டலிலும், வண்டலிலும், நெல் போரிலும், வீட்டுப் போரிலும், நீரிலும் துள்ளி விழுந்து போர் ஆற்றும். அதைப் போன்று பரத்தையர் பெண்டிர் கண்களாகிய கெண்டை மீன்களும் குமரர்கள் மார்பிலும், திருவிலும், சிலையிலும், மலையிலும், தாரிலும், போய்ப் போரைச் செய்யும் என்பது மதுரையின் இயல்பு.

கார் - மேகம். சுழிஎறி - சுழிகள் உண்டாகும். திரை - அலை. கண்டல் - தாழை. வண்டல் - விளையாட்டு. களம் - நெற்களம். புனல் - நீர். பொருகயல் - போரிடும் கயல்மீன். பொழில் - சோலை. புரிகுழல் - சுருண்ட கூந்தல். கணிகையர் - பொருட் பெண்டிர். குழை - காது. பொருகயல் - போர் செய்யும் கண் என்ற கயல் மீன். திருவில் - செல்வத்தில். பொருவில் - ஒப்பில்லாத. வரிச்சிலை - கட்டமைந்த வில். புயமலை - தோளான மலை. ஊழ்த்த முடித்தார் - உதிர்ந்த முடி மாலை. பொருதிடு - போரிடு கின்ற. துரைமகள் - செல்வமகள்; அரசமகள். (6)

30. சேனைத் தலைவர்க டிசையில் தலைவர்கள்
செருவிற் றலைவர்களாய்ச்
சிலையிற் றிடமுடி தேரிற் கொடியொடு
சிந்தச் சீந்திவிடும்
சோனைக் கணைமழை சொரியப் பெருகிய
குருதிக் கடலிடையே
தொந்த மிடும்பல் கவந்த நிவந்தொரு
சுழியில் பவுரிகொள
ஆனைத் திரளொடு குதிரைத் திரளையும்
அப்பெயர் மீனைமுகந்து
அம்மனை யாடு கடற்றிரை போல
அடற்றிரை மோதவெழும்
தானைக் கடலொடு பொலியும் திருமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ. (7)

**தெளிவுரை**

(தடாதகையின் திக்கு விசயத்தில் நிகழ்ந்தவை)

1. மாற்றரசர்களின் படைத்தலைவர்கள் திசைகளில் உள்ள அரசர்கள் தடாதகைப் பெருமாட்டியின் படைவீரர்கள் ஆகிய இவர்களால், விற்களால் முடிகள் தேரில் கட்டப்பட்ட கொடிகள் ஆகியவை சிதறும்படி செய்யும்.

2. வில்லினின்றும் தொடர்ந்து எய்யும் அம்புகளாகிய மழையால் பெருகிய இரத்தக் கடலில் கூத்தாடும் பல தலைகுறை பிணங்கள் மேல் எழுந்து ஒரு சுழியில் சுழல

3. யானைக் கூட்டத்துடன் குதிரைகளின் கூட்டத்தையும் அப்பெயர் கொண்ட யானை மீன் குதிரை மீன்களையும் அள்ளி அம்மானை ஆடும் கடல் அலை போல் வலிமை வாய்ந்த அணிவகுப்பாகிய அலையானது மோத எழுகின்ற

4. படைக் கடலின் நடுவே விளங்கும் சிறந்த பொன் அரசியே! தாலோ தாலேலோ! சங்கம் வளர்ந்திட நின்ற பொன் கொடியே! தாலோ தாலேலோ!

**விளக்கம்**

1. சேனைத்தலைவர்கள் - அம்பிகையின் படைத் தலைவர்கள். இது எழுவாய். திசையில் தலைவர்கள் செருவில் தலைவர்களாகி வந்து தம் சிலை இற்றிடவும் முடி சிந்திடவும். சீந்தியிடும் - கோபிக்கும்.

2. சோனைக் கணைமழை - விடாது எய்யும் அம்புமழை. குருதிக்கடல் - இரத்தக்கடல். தொந்தமிடும் - கூத்தாடும். பவுரி - சுழன்று ஆடுதல்.

(1-2) படைத்தலைவர்கள் பகைப்படையில் தலைவர்களாகி வந்த திசைத்தலைவர்களின் வில் முறியவும் முடி சிதறவும் அம்பு மழையைச் சொரிந்தனர். அதனால் குருதிக் கடல் பெருகியது.

3. அப்பெயர் மீன் - யானைமீன், குதிரைமீன். அம்மனை ஆடும் - அம்மானை ஆட்டம் ஆடுகின்ற.

4. தானைக்கடல் - படைக்கடல். (7)

31. அமரர்க் கதிபதி வெளிறக் களிறெதிர்
பிளிறக் குளிறியிடா
அண்ட மிசைப்பொலி கொண்டல் உகைத்தடும்
அமரில் தமரினொடும்
கமரிற் கவிழ்தரு திசையில் தலைவர்கள்
மலையிற் சிறகரியும்
கடவுட் படையொடு பிறகிட் டுடைவது
கண்டு முகங்குளிராப்
பமரத் தருமலர் மிலையப் படுமுடி
தொலையக் கொடுமுடிதாழ்
பைம்பொன் தடவரை திரியக் கடல்வயிறு
எரியப் படைதிரியாச்

சமரிற் பொருதிரு மகனைத் தருமயில்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ. (8)

## தெளிவுரை

1. தேவர்களின் தலைவன் ஆன இந்திரன் வெண்மையான நிறம் கொண்ட அந்த ஐராவத யானை எதிர்முழக்கம் செய்யும்படி இடிஇடித்து அண்டத்தின் மேல் விளங்கும் மேகத்தை ஊர்ந்து போகும் போரில் உறவினர்களுடன்

2. வெடிப்பில் கவிழும் திக்குத் தலைவர்கள் மலைகளுக்கு இருந்த இறகுகளை வெட்டிய தெய்வப் படையான வச்சிரப் படையுடன் முறிந்து பின்னிடுவதைப் பார்த்து முகமலர்ச்சி கொண்டு,

3. வண்டுகள் மொய்க்கும் கற்பகமலர் மாலை சூடப்படும் முடி கெட, உச்சி தாழ்ந்த பசும் பொன்னால் ஆன பெரிய மலை திரியவும் கடலின் வயிறும் எரிந்து வருந்தும்படி வேலைத் திரித்து

4. போரில் போரிடக் கூடிய அழகிய உக்கிர குமார பாண்டியனைப் பெற்ற மயில் போன்றவளே! தாலோ தாலேலோ! சங்கம் வளர்த்திட விளங்கிய பொலன் கொடியே தாலோ தாலேலோ!

## விளக்கம்

இதில் உக்கிர குமார பாண்டியனின் செயல் கூறப்படுகிறது.

1. அமரர்க்கு அதிபதி - இந்திரன். வெளிறு அக்களிறு - வெண்மை நிறமுடைய அந்த ஐராவத யானை. குளிறியிடா - முழங்கி. பொலி கொண்டல் - விளங்கும் மேகம். உகைத்தடும் - செலுத்தும். தமரினொடும் - உறவினரோடும்.

2. கமர் - நிலப்பிளப்பு. திசையின் தலைவர்கள் - இந்திரன் படைத் தலைவர்களாக வந்தவர்கள். மலையின் சிறகு அரியும் -

மலையின் சிறகுகளை அரிகின்ற; இந்திரன் மலைகளுக்கு இருந்த சிறகுகளை அரிந்தான். கடவுட் படை - தெய்வத்தன்மையுடைய வச்சிரப்படை. பிறகிட்டு உடைவது - தோற்று ஓடுவது. முகம் குளிரா - முகம் மலர்ந்து.

3. பமரம் - வண்டு. மிலைய - சூட. தருமலர் - கற்பக மலர். முடி தொலைய - முடிகெட. படை திரியா - வேற்படையைத் திரித்து.

இந்திரன் முடிமீது வளையையும் மேருமலையின் மீது, செண்டையும் கடலில் வேலையும் விட்டனர். இது திருவிளை யாடலால் விளக்கப் பெறுவது.

4. சமர் - போர். பொருதிருமகனை - போரிடும் உக்கிர குமார பாண்டியனை. தருமயில் - பெற்ற மயில் போன்றவளே! (8)

## சந்த விருத்தம்

32. முதுசொல் புலவர்தெ ளித்தப சுந்தமிழ்
நூல்பாழ் போகாமே
முளரிக் கடவுள்ப டைத்தவ சுந்தரை
கீழ்மே லாகாமே
அதிரப் பொருதுக லிப்பகை ஞன்தமிழ்
நீர்நா டாளாமே
அகிலத் துயிர்கள யர்த்தும றங்கடை
நீணீர் தோயாமே
சிதைவுற் றரசிய னற்றரு மங்குடி
போய்மாய் வாகாமே
செழியர்க் கபயரு மொப்பென நின்றுண
ராதா ரோதாமே
மதுரைப் பதிதழை யத்தழை யுங்கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன்வ ளர்த்த சுங்கிளி
தாலோ தாலேலோ. (9)

**தெளிவுரை**

1. பழமையான சொல் அறிந்து புலவர் தெளிவித்த இனிய தமிழ் நூல்கள் பாழாகிவிடாமலும், தாமரைப் பூவில் தங்கி யிருக்கும் பிரமன் படைத்த உலகம் கீழும் மேலுமாக ஆகாமலும்,

2. அதிருமாறு போர் செய்து கலியாகிய பகைவன் தமிழ் வழங்கும் பாண்டிய நாட்டை ஆளாமலும், உயிர்கள் யாவும் மறந்தும் பாவமாகிய கடலில் மூழ்காமலும்

3. அரசு முறை சிதறி நல்ல தருமம் குடி போய் மறைந்து விடாமலும், பாண்டியர்க்குச் சோழரும் நிகராவார் என்று நிலை யான தன்மை அறியாதவர் கூறாமலும்

4. மதுரைப் பதி செழிக்கும்படி செழித்து வளர்ந்துள்ள பசிய கொடியான அங்கயற்கண் அம்மையே, தாலோ தாலேலோ! மலயத்துவசன் வளர்த்த இளங்கிளி போன்றவளே, தாலோ தாலேலோ!

**விளக்கம்**

1. முதுசொல்புலவர் - பழமையான சொல் அறிந்த புலவர்; தமிழ்ச் சங்கப் புலவர்கள். தெளித்த - தெரிவித்த; இயற்றிய. நூல் பாழ் போகாமே - நூல்கள் பாழாகாமலும். வசுந்தரை - பூமி.

2. பொருது - போரிட்டு. தமிழ்நீர்நாடு - பாண்டிய நாடு. அயர்த்தும் - மறந்தும். அறங்கடை - பாவம். நீள்நீர் தோயாமே - கடலில் மூழ்காமல்.

3. சிதைவுற்று - சிதைந்து. குடிபோய் - குடிவிட்டு. மாய்வாகாமே - அழியாமல். செழியர்க்கு - பாண்டியர்க்கு. அபயர் - சோழர். ஓதாமே - சொல்லாமல்.

4. தழைய - செழிக்க. கொடி - கொடி போன்றவள்.

அங்கயற்கண் அம்மை மதுரையில் தோன்றியதால் மதுரையில் பல வளங்களும் நிரம்பிப் பெருகின என்க. (9)

33. தகரக் கரியகு ழல்சிறு பெண்பிளை
நீயோ தூயோன்வாழ்
சயிலத் தெயிலைவ ளைப்பவ ளென்றெதிர்
சீறா வீறோதா
நிகரிட் டமர்செய்க ணத்தவர் நந்திபி
ரானோ டேயோடா
நிலைகெட் டுலையவு டற்றவு டைந்ததொ
ரானே றாகாமே
சிகரப் பொதியமி சைத்தவ ழும்சிறு
தேர்மே லேபோயோர்
சிவனைப் பொருதச மர்த்தனு கந்துள
சேல்போன் மாயாமே
மகரத் துவசமு யர்த்தபொ லன்கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன்வ ளர்த்தப சுங்கிளி
தாலோ தாலேலோ. (10)

**தெளிவுரை**

1. மயிர்ச் சாந்து பூசப் பெற்ற கரிய கூந்தலையுடைய சிறிய பொன் மகளான நீயோ, தூய சிவபெருமான் வாழும் கயிலை மலையின் மதிலை வளைப்பவள் என்று கூறிச் சீறிப் பெருமிதம் பேசி,

2. எதிர்த்து நின்று போர் செய்த சிவகணத்தவர்களும் சிவகணத்தின் தலைவரான நந்திப் பெருமானும் ஓடித் தாங்கும் நிலையானது கெட்டு அழியும்படி தாக்கவும் அதனால் முறிந்து போன ஒருவிடைக் கொடி ஆகாமலும்

3. உச்சி பொருந்திய பொதிய மலையினின்று தவழ்ந்து வரும் தென்றற் காற்றாகிய தேர் மீது ஏறிச் சென்று ஒரு சிவ பெருமானைப் போரிட்ட மன்மதன் மகிழும் மீன்கொடி போல் மாளாமலும்,

4. மகரமீன் கொடியை உயர்த்திய பொன் கொடி போன்றவளே! தாலோ தாலேலோ! மலயத்துவசன் வளர்த்த பசுங்கிளியே தாலோ தாலேலோ!

**விளக்கம்**

அம்பிகையின் மீனக் கொடியின் பெருமை இதில் பேசப் படும். தகரம் - மயிர்ச்சாந்து. பெண்பிளை - பெண் பிள்ளை என்பதன் விகாரம். தூயோன் - சிவபெருமான். சயிலத்து எயிலை - கயிலை மலையின் மதிலை. வளைப்பவள் - முற்றுகையிடுபவள். சீறா - சினந்து. வீறு ஓதா - பெருமையைப் பேசி.

2. நிகரிட்டு - எதிர்த்து. அமர் - போர். கணத்தவர் - பூத கணத்தவர். உடற்ற - போர் செய்ய. உடைந்ததாகிய ஓர் ஆனேறு - தோற்றதாகிய ஒரு காளை; அதாவது சிவபெருமான் கொடியில் உள்ள காளை.

3. சிகரம் - உச்சி. பொதியமிசை - பொதிய மலையின் மீது. சிறு தேர் - தென்றற்காற்று. சிவனைப் பொருத - சிவனுடன் போரிட்ட. சமர்த்தன் - மன்மதன். உகந்துள சேல் - விரும்பிக் கொண்டிருக்கும் மீன். மாயாமே - மடியாமல்.

4. மகரத்துவசம் - மீன் கொடி. பொலன் கொடி - பொற் கொடியே!

நந்தி கணத்தவர் தோற்றதால் அவர்கள் ஏந்திய கொடி பயனில்லாததாயிற்று. தடாதகைப் பெருமாட்டி திக்கு விசயத்தில் அனைவரையும் வென்றமையின் அவள் உயர்த்திய மீன்கொடி பயன் உடையதாயிற்று.

நந்தி கணத்தவர் தோற்று ஓடியதால் சிவபெருமானின் விடைக் கொடி தோற்றது. அவற்றைப் போல் தோற்காமல் நின்றது தடாதகையின் மீன்கொடி என்பதாம். (10)

## 3. சப்பாணிப் பருவம்

### ஆசிரிய விருத்தம்

34. நாளவட் டத்தளிம நளினத் தொடுந்துத்தி
நாகணையும் விட்டொரெட்டு
நாட்டத்த னும்பரம வீட்டத்த னும்துஞ்சு
நள்ளிருளின் நாப்பண்அண்ட
கோளவட் டம்பழைய நேமிவட் டத்தினொடு
குப்புற்று வெற்பெட்டுமேழ்
குட்டத்தி னிற்கவிழ மூதண்ட வேதண்ட
கோதண்ட மோடுசக்ர
வாளவட் டம்சுழல மட்டித்து நட்டமிடு
மதமத்தர் சுத்தநித்த
வட்டத்தி னுக்கிசைய வொத்திக்க னத்ததன
வட்டத்தை யொத்திட்டதோர்
தாளவட் டங்கொட்டு கைப்பாணி ஒப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (1)

**தெளிவுரை**

1. தண்டையுடைய வட்டமான தவிசான தாமரை மலரையும் புள்ளிகளையுடைய பாம்புப் பள்ளியையும் விட்டு நீங்கி எட்டுக் கண்களையுடைய நான்முகனும் பரமபதம் எனப்படும் வைகுந்த நாதனான திருமாலும் தூங்குதற்குரிய நள்ளிரவில்

2. வானவட்டமும் பழைய நிலமண்டலமும் கவிழ்ந்து எட்டு மலைகளும் ஏழு கடல்களில் கவிழ, பழைய உலகுடன் கூடிய வில்லான மேருமலையையும்

3. சக்கரவாள மலையும் சுழல மண்டலித்து நடனம் செய்கின்ற தேனையுடைய ஊமத்தம் மாலையை அணிந்துள்ள

சிவபெருமான் செய்யும் பவுரிக் கூத்துக்கு ஒப்ப, ஒன்று சேர்ந்து பருத்த வட்டக் கொங்கைக்கு

4. ஒப்பான தாளம் அடிக்கின்ற ஒழுங்கான ஒலிக்கு நேராக ஒப்பில்லாத சப்பாணி கொட்டுவாய்! தமிழுடன் தோன்றிப் பழைமையுடைய மதுரையில் வளர்ந்த கொடி போன்றவளே! சப்பாணி கொட்டியருளுக!

**விளக்கம்**

1. நாளம் - தண்டு. தளிமம் - தவிசு; இருக்கை. நளினம் - தாமரை. துத்தி - புள்ளி. எட்டு நாட்டத்தன் - எட்டுக் கண்களை யுடைய பிரமன். பரம வீட்டத்தன் - பரமபதம் என்னும் வைகுந்த நாதனான திருமால். நள்ளிருள் நாப்பண் - மிக்க இருளையுடைய நடுஇரவில்.

2. அண்டகோள வட்டம் - வானவட்டம். பழைய நேமி வட்டம் - பழைய நில மண்டலம். குப்புற்று - கவிழ்ந்து. வெற்பு எட்டும் - எட்டு மலைகளும். ஏழ் குட்டத்தினில் கவிழ - ஏழு கடல்களில் கவிழ. வேதண்டம் - மலை. கோதண்டம் - வில்.

3. சக்ரவாள வட்டம் - வட்டமான சக்கரவாள மலை. மட்டித்து - அவிழ்த்து. மதமத்தர் - ஊமத்த மலரை அணிந்த சிவ பெருமான். சுத்த நித்தம் - ஒருவகை நடனம். இது சாந்திக் கூத்து வகைகளுள் ஒன்று. ஒத்தி - (தாளம்) கொட்டி.

4. தாளவட்டம் கொட்டுகைப்பாணி - பருத்த கொங்கைக்கு ஒப்பான ஒரு வட்டமான தாளம் அடிக்கின்ற ஒலிக்கு ஒப்பாக. கைப்பாணி - கைத்தாளம். சப்பாணி கொட்டல் - இரு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல். ஸ!: பாணி என்பது சப்பாணி என்றாயிற்று என்ப.

முடிபு: நள்ளிருள் நாப்பண் குப்புற்றுக் கவிழ, சுழல மட்டித்து நட்டமிடும் மதமத்தரது நித்த வட்டத்துக்கு இசைய ஒத்திக் கொட்டு கைப்பாணி என இயையும். (1)

35. பொய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடுஞ்சிப்
பொலந்தேரொடு அமரகத்துப்
பொன்மேரு வில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மை
பொம்மன்முலை மூன்றிலொன்று
கைவந்த கொழுநரொடு முள்ளப் புணர்ச்சிக்
கருத்தா னகத்தொடுங்கக்
கவிழ்தலை வணக்கொடு முலைக்கண்வைத் திடுமொரு
கடைக்கணோக் கமுதமூற்ற
மெய்வந்த நாணினொடு நுதல்வந் தெழுங்குறு
வெயர்ப்பினொ டுயிர்ப்புவீங்கும்
விம்மிதமு மாய்நின்ற வுயிரோவ மெனவூன்று
விற்கடை விரற்கடைதழீஇத்
தைவந்த நாணினொடு தவழ்தந்த செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (2)

**தெளிவுரை**

1. இல்லை எனக் கூறுமாறு உள்ள சிறிய இடையானது அசைய உச்சியுடன் கூடிய பொன் தேரில் போர்க்களத்தில் மேரு மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானை நேரில் பார்த்த போது,

2. தாயே, நின் கொங்கைகளுள் ஒன்று ஒழுக்கம் பொருந்திய கணவருடன் உள்ளம் புணர்ந்து உள்ளக் கருத்தினால் நெஞ்சுள் ஒடுங்கி விடக் குனிந்த தலை வணக்கத்துடன் கொங்கை முனையில் வைத்த கண்ணின் கடைப்பார்வை அமுதம் பெருக்க.

3. உண்மையாகத் தோன்றிய நாணத்துடன் நெற்றியில் உண்டான குறு வியர்வையுடனும் பெருமூச்சு விடும் வியப்புடனும் கூடி நின்ற உயிர் ஒவியம் போல் ஊன்றிய வில்லின் இடத்தை விரல்களின் நுனியால் தழுவி,

4. வில் நாணியுடன் தடவித் தவழ்ந்த செங்கையைக் கொண்டு சப்பாணி கொட்டுவாயாக! தமிழுடன் பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடியே! சப்பாணி கொட்டியருளுக!

**விளக்கம்**

1. பொய்வந்த நுண்ணிடை - இல்லை என்று கூறும்படியான சிறிய இடை. நுடங்க - அசைய. கொடுஞ்சி - தேரின் மொட்டு. அமரகத்து - போரில். பொன் மேரு வில்லி - பொன் மயமான மேரு மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான். எதிர்ப்பட்ட ஞான்று - நேரில் வந்த போது. பொம்மல் முலை - பொலிவுடைய கொங்கை; பூரிப்புமாம்.

2. தடாதகைப் பெருமாட்டி சிவபெருமானைக் கண்ட மாத்திரத்தில் அவரது மூன்று கொங்கைகளுள் ஒன்று மறைந்ததற்கு ஒருகாரணம் கற்பித்தார். கை வந்த கொழுநரோடும் - ஒழுக்கம் சான்ற கணவரொடும். உள்ளப் புணர்ச்சிக் கருத்தான் அகத் தொடுங்க - உள்ளம் புணர்ந்துள்ள கருத்தால் நெஞ்சினுள் ஒடுங்கிவிட.

வணக்கொடு - வணக்கத்துடன். முலைக் கண் வைத்திடும் ஒரு கடைக்கண் நோக்கு - கொங்கை நுனியில் வைத்த கடைக்கண் பார்வை. அமுதம் ஊற்ற - அமுதத்தைப் பெருக்க.

3. மெய் வந்த நாணினொடு - உண்மையாகத் தோன்றிய வெட்கத்துடன். உயிர் ஓவம் - உயிர் உள்ள ஓவியம். விற்கடை - வில்லில்; விரற்கடை தழீஇ - வில் நாணியுடன் தடவி. 'தழுவி' என்பது 'தழீஇ' என விகாரப்பட்டு வந்தது. கைவந்த - தடவிய.(2)

36. பூமரு வெடிப்பமுகை விண்டதண் டலைஈன்ற
புனைநறுந் தளிர்கள் கொய்தும்
பொய்தல் பிணாக்களொடு வண்டல் கலம்பெய்து
புழுதிவிளை யாட்டயர்ந்தும்

காமரு மயிற்குஞ்சு மடவனப் பார்ப்பினொடு
புறவுபிற வும்வளர்த்தும்
காந்தள்செங் கமலத்த கழுநீர் மணந்தெனக்
கண்பொத்தி விளையாடியும்
தேமரு பசுங்கிள்ளை வைத்துமுத் தாடியும்
திரள்பொன் கழங்காடியும்
செயற்கையா னன்றியு மியற்கைச் சிவப்பூறு
சேயிதழ் விரிந்த தெய்வத்
தாமரை பழுத்தகைத் தளிரொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (3)

**தெளிவுரை**

1. மலர்கள் மணம் கமழுமாறு அரும்புகள் மலர்ந்த சோலை அளித்த அழகிய நல்ல தளிர்களைப் பறித்தும் விளையாட்டு மங்கையருடன் கூடி விளையாட்டுக்குரிய பாத்திரங்களில் புழுதியை இட்டு மணற் சேறாக்கி விளையாடியும்

2. அழகிய மயிலின் குஞ்சுகளையும் இளைய அன்னப் பறவைக் குஞ்சுகளையும் புறாக் குஞ்சுகளையும் பிற பறவைக் குஞ்சுகளையும் வளர்த்தும், காந்தளின் மலர்கள் செந்தாமரைப் பூவிலே மலர்ந்திருக்கும் செங்கழுநீர்ப் பூக்களைச் சேர்ந்தாற் போல் கண்களைப் பொத்திக் கண்ணாம்பூச்சி விளையாடியும்,

3. தெய்வத்தன்மையுடைய பசிய கிளியைக் கையில் கொண்டு முத்தமிட்டும் திரண்ட அழகிய கழங்கு எடுத்து ஆடியும், மேற்சொன்ன செயல்களால் அல்லாமல் இயற்கையாகவே செந்நிறம் உடைய செம்மையான இதழ்கள் விரிந்த தெய்வத் தன்மை உடைய.

4. தாமரை மலர் போல் முதிர்ந்த கையாகிய தளிர் ஒளி ததும்ப, சப்பாணி கொட்டியருளுவாய்! தமிழுடன் பிறந்து பழைய மதுரையில் வளர்ந்த கொடி போன்றவளே, சப்பாணி கொட்டி யருளுவாய்!

**விளக்கம்**

1. பூ மரு வெடிப்ப - மலரின் மணம் கமழ. விண்ட - விரிந்த. தண்டலை - சோலை. ஈன்ற - தந்த. புனைநறுந்தளிர்கள் - அழகிய நல்ல தளிர்கள். பொய்தல் - விளையாட்டு. பிணாக்களொடு - பெண்களுடன். வண்டல் கலம் பெய்து - புழுதியைப் பாத்திரத்தில் பெய்து. விளையாட்டயர்ந்து - விளையாடி.

2. காமரு - அழகிய; விருப்பத்தைத் தரும் எனவும் உரைக்கலாம். மட அனப் பார்ப்பு - இளைய அன்னப்பறவையின் குஞ்சு. புறவு - புறா. பிறவும் - மற்றப்பறவைகளும். அவை நாகண வாய்ப் பறவை முதலியன. கைக்குக் காந்தளும் முகத்துக்குக் கமலமும் கண்ணுக்குக் கழுநீரும் உவமைகள். கழுநீர் - கருங்குவளை.

3. தேமரு பசுங்கிள்ளை - தெய்வத்தன்மையுடைய பச்சைக் கிளி. முத்தாடியும் - முத்தம் இட்டும். பொற்கழங்கு ஆடியும் - அழகிய கழங்காட்டம் ஆடியும். சேயிதழ் - சிவந்த இதழ். இயற்கையாய்க் கைகள் சிவந்தன. அவை பூப்பறித்தல் முதலியவற்றால் சிவந்தன. அவை பின்னும் சிவக்கும்படி சப்பாணி கொட்டுக என்க.

4. தாமரை பழுத்தகை - தாமரையைப் போன்ற இயல்பு முதிர்ந்த கை. பழுத்த என்பதை உவம உருபாகவும் கொள்ளலாம்.

காந்தள் செங்கமலத்த கழுநீர் மணந்தென - என்பது இல்பொருள் உவமை.

கண்ணாம்பூச்சி விளையாட்டு - ஒரு சிறுமியின் கண்களை மற்றொரு சிறுமி வந்து பொத்தி ‘நான் யார்? சொல்’ என்பது போல் விளையாடும் விளையாட்டு. ஒருத்தி கண்ணை மற்றொருத்தி மூடி வேறு ஒரு பெண்ணை மறைந்து கொள்ளும்படி சொல்லி அவளைக் கண்டு பிடிக்கும் விளையாட்டுமாம். (3)

37. விண்ணளிக் குஞ்சுடர் விமானமும் பரநாத
வெளியில் துவாதசாந்த
வீடும் கடம்புபொதி காடும் தடம்பணை
விரிந்ததமிழ் நாடுநெற்றிக்
கண்ணளிக் குஞ்சுந்த ரக்கடவுள் பொலியுமறு
காற்பீட மும்மெம்பிரான்
காமர்பரி யங்கக் கவான்றங்கு பள்ளியங்
கட்டிலும் தொட்டிலாகப்
பண்ணளிக் குங்குதலை யமுதொழுகு குமுதப்
பசுந்தேற லூறவாடும்
பைங்குழவி பெருவிரல் சுவைத்துநீ பருகிடப்
பைந்தேற லூறுவண்கைத்
தண்ணளிக் கமலஞ் சிவப்பூற வம்மையொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (4)

**தெளிவுரை**

1. வான் உலக மன்னனான இந்திரன் ஆணையால் 'தேவர்கள் கொண்டு வந்து தந்த ஒளியுடைய விமானமும், பரநாத வெளியிடத்தில் அமைந்துள்ள துவாத சாந்த பீடமும், கடப்ப மரங்கள் நிறைந்த காடும் குளிர்ந்த பண்ணை இடங்கள் பரவியுள்ள தமிழ்நாடும்,

2. நெற்றிக் கண்ணுடன் அருள் செய்யும் சோமசுந்தரக் கடவுள் நிறைந்து விளங்கும் அறுகாற்பீடமும் எம் இறைவனது அழகிய படுக்கையிடத்தில் உள்ள அழகிய பள்ளிக்கட்டிலும் தொட்டிலாகக் கொண்டு,

3. இசையுடன் கூடிய மழலை மொழியான அமுதம் ஒழுகும் எச்சில் ஆகிய தேன் பெருக்கில் கிடந்து அசைகின்ற இளங் குழந்தையே! நீ பெருவிரலைச் சுவைப் பார்த்துப் பருகும்படி இனிய தேனானது ஊறப்பெற்ற வளப்பம் மிக்க குளிர்ந்த வண்டுகள் தங்கப் பெற்ற தாமரை மலர் போன்ற கைகள் சிவந்த

நிறம் அடையும்படி தாயே சப்பாணி கொட்டுவாயாக! நீ ஒப்பில்லாத சப்பாணி கொட்டுவாயாக! தமிழொடு பிறந்த பழ மதுரையில் வளர்ந்த கொடியே! சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

1. விமானம் - இந்திரவிமானம். துவாத சாந்தம் - பிரமரந்திரத்துக்கு மேலே பன்னிரண்டு தானங்களுக்கு அப்பால் உள்ளது. கடம்பு பொதி - கடப்ப மரங்கள் மிக்க. தடம்பணை - பெரிய வயல்கள்.

2. நெற்றிக் கண் அளிக்கும் - நெற்றிக் கண்ணையுடைய. சுந்தரக் கடவுள் - சோமசுந்தரக் கடவுள். அறுகாற்பீடம் - இது திருக்கோயிலில் உள்ளது. பரியங்கம் - உறங்கும் இடம். கவான் - துடை. துவாத சாந்தத்தில் உள்ள சதாசிவ மூர்த்தியின் இடத் துடையில் அம்பிகை வீற்றிருப்பதாக நூல்கள் கூறும்.

3. குமுதம் - குமுதமலர் போன்ற வாய். பண் அளிக்கும் - இசையையுடைய. குதலை - திருத்தமற்ற சொல். குமுதம் பசுந்தேறல் - வாய்நீர், சொள்ளு நீர். பைங்குழவி - பசிய குழ்ந்தையான நீ.

4. தண் அளிக்கும் கமலம் - குளிர்ச்சியுடைய தாமரை போன்ற கை. சிவப்பூற - செந்நிறம் மிக.

(முடிபு) விமானமும் வீடும் காடும் நாடும் பீடமும் கட்டிலும் தொட்டிலாக ஆடும் குழவி நீ கொட்டியருளுக! (4)

38. சேலாட்டு வாள்கண் கருங்கடல் கடைமடை
திறந்தமுத மூற்றுகருணைத்
தெண்டிரை கொழித்தெறிய வெண்டிரை நெருப்பூட்டு
தெய்வக் குழந்தையைச்செங்
கோலாட்டு நின்சிறு கணைக்கால் கிடத்திக்
குளிப்பாட்டி உச்சிமுச்சிக்
குஞ்சிக்கு நெய்போற்றி வெண்காப்பு மிட்டுவளர்
கொங்கையில் சங்குவாக்கும்

பாலாட்டி வாயிதழ் நெரித்தூட்டி உடலில்
பசுஞ்சுண்ண முந்திமிர்ந்து
பைம்பொன் குறங்கினில் கண்வளர்த் திச்சிறிய
பருமணித் தொட்டிலேற்றித்
தாலாட்டி யாட்டுகைத் தாமரை முகிழ்த்தம்மை
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே. (5)

**தெளிவுரை**

1. கயல் மீனை வருத்துகின்ற வாள் போன்ற கண்கள் அழகிய கரிய கடல் மடை திறந்து ஊற்றும் அமுதம் போன்ற அருளாகிய தெள்ளிய அலையை மோதி வீச வெண்மையான அலைகளை யுடைய கடலைத் தீயூட்டிய தெய்வக் குழந்தையாகிய முருகப் பெருமானைச்

2. செம்மையான திரண்ட அசையும் நின் சிறிய கணைக் காலில் கிடத்தி நீராட்டி உச்சி மோந்து தலை முடிக்கு எண்ணெய் பூசித் திருவெண்ணீற்றை அணிந்து, வளர்கின்ற கொங்கையில் உள்ள பாலைச் சங்கில்

3. வார்த்து வாய் இதழை நெரித்து உண்ணச் செய்து உடலில் இனிய வாசனைப் பொடியும் பூசி, பசும் பொன் நிறம் கொண்ட துடையில் உறங்க வைத்துப் பின் மாணிக்கங்கள் பதித்த தொட்டிலில் கிடத்தி

4. நாக்கை அசைத்துப் பாடி ஆட்டுகின்ற கைத்தாமரை மலர்களைக் குவித்துச் சப்பாணி கொட்டுவாயாக! தமிழுடன் பிறந்து பழைய மதுரையில் வளர்ந்த கொடியே சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

1. சேல் ஆட்டு - கயல்மீனை வருத்தும். வாள்கண் - வாள் போன்ற கண். வெண்திரை - வெண்மையான அலைகளையுடைய

கடல். நெருப்பு ஊட்டு - தீயை மூட்டிய. தெய்வக் குழந்தை - முருகப்பெருமான்.

2. செங்கோல் ஆட்டு - செம்மையான திரண்டு அசையும். சிறுகணைக் கால் கிடத்தி - சிறிய கணைக்காலில் கிடக்கச் செய்து. உச்சி - உச்சந்தலை. முச்சி - உச்சிக்கொண்டை. குஞ்சி - ஆண் களின் தலைமயிர்.

3. முலையில் பால், சங்கு வார்க்கும் பால். ஆட்டி - அசைத்து. குழந்தைக்குப் பால் ஊட்டுபவர் அதை அசைத்துக் கலக்கி ஊட்டுவர். திமிர்ந்து - பூசி.

4. முகிழ்த்து - குவித்து.

(முடிபு) குழந்தையைக் காலில் கிடத்திக் குளிப்பாட்டிப் போற்றி இட்டு ஆட்டி நெரித்து ஊட்டித் திமிர்ந்து வளர்த்தி ஏற்றித் தாலாட்டி ஆட்டும் கை. கையாகிய தாமரையைக் குவித்துக் கொட்டியருள். (5)

## வேறு

39. வானத் துருமொடு உடுத்திரள் சிந்த
மலைந்த பறந்தலையில்
மண்ணவர் பண்ணவர் வாளின் மறிந்தவர்
மற்றவர் பொற்றொடியார்
பானற் கணையு முலைக்குவ டும்பொரு
படையிற் படவிமையோர்
பைங்குடர் மூளையொ டும்புதி துண்டு
பசுந்தடி சுவைகாணாச்
சேனப் பந்தரின் அலகைத் திரள்பல
குரவை பிணைத்தாடத்
திசையின் தலைவர்கள் பெருநா ணெய்தச்
சிறுநா ணொலிசெய்யாக்
கூனல் சிலையின் நெடுங்கணை தொட்டவள்
கொட்டுக சப்பாணி
குடைநிழ லில்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (6)

**தெளிவுரை**

1. வானில் உள்ள இடியுடன் விண்மீன் கூட்டமும் சிந்துமாறு போரிட்ட போர்க் களத்தில், தேவர்களின் வாளால் இறந்த மண்ணுலக வீரர்கள் சுவர்கத்தை அடைந்தவர். அடைந்து அங்குளள தேவர்களின் பொன் வளையல் அணிந்த தேவ மங்கையரின்

2. நீலோற்பலம் போன்ற கண்களாகிய அம்பினாலும் கொங்கைகளான மலைகளாலும் போர் செய்யும் படைகள் ஆகிய அரம்பையருடன் கூடி இன்பம் துய்ப்பர். தேவர்களின் பெருங் குடலுடன் மூளையையும் புதிதாக உண்டு பசிய தசையின் சுவையைப் பார்த்து,

3. பருந்துப் பந்தலில் பேய்க் கூட்டங்கள் பல குரவைக் கூத்தைச் சேர்ந்து ஆடும். எட்டுத் திக்குகளிலும் இருக்கும் காவல் தலைவர்கள் மிக்க நாணம் அடைவர். அங்ஙனமாகச் சிறிய நாணின் ஒலியைச் செய்து

4. வளைந்த வில்லால் நெடிய அம்பைத் தொடுத்தவளே! நீ சப்பாணி கொட்டியருளுவாய்! வெண் கொற்றக் குடையின் நிழலில் பூமிதேவியை வைத்து வளர்த்தவளே! சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

1. உரும் - இடி. உடுத்திரள் - விண்மீன் கூட்டம். மலைந்த - போரிட்ட. பறந்தலை - போர்க்களம். பண்ணவர் - தேவர். அவர் - தேவர்கள்.

2. பானல்கணை - கருங்குவளை போன்ற கண் அம்பு களாலும். முலைக்குவடு - கொங்கையாகிய மலை. இமையோர் - தேவர். பைங்குடர் - பசுமையான குடல். பசுந்தடி - பசுமையான ஊன். காணா - கண்டு.

3. சேனம் - பருந்து. அலகைத்திரள் - பேய்க் கூட்டம். குரவை பிணைந்தாட - குரவையாட்டத்தை ஆட. பெருநாண் - மிக்க நாணம்.

4. கூனல்சிலை - வளைந்த வில். நெடுங்கணை - பெரிய அம்புகள். தொட்டவள் - தொடுத்தவள். புவிமகள் - நிலமகள். புதிது உண்டல் - முன் நிகழ்ந்த போரில் மண்ணவரின் குடல் முதலியவற்றைப் பெற்றன. இப்போது நிகழ்ந்த போர்க்களத்தில் தேவர்களின் குடல் முதலியனவற்றை உண்டன. (6)

40. சமரிற் பிறகிடும் முதியரும் அபயரும்
எதிரிட் டமராடத்
தண்ட தரன்செல் கரும்பக டிந்திரன்
வெண்பக டோடுடையாத்
திமிரக் கடல்புக வருணன் விடுஞ்சுற
வருணன் விடும்கடவுள்
தேரி னுகண்டெழ வார்வில் வழங்கு
கொடுங்கோல் செங்கோலா
இமயத் தொடும்வளர் குலவெற்பு எட்டையும்
எல்லைக் கல்லினிறீஇ
எண்திசை யும்தனி கொண்டு புரந்து
வடாது கடற்றுறைதென்
குமரித் துறையென வாடு மடப்பிடி
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (7)

**தெளிவுரை**

1. மீனாட்சி அம்மையுடன் போராடிய பொழுது புறங்காட்டி ஓடிய சேரரும் சோழரும் பின்பு அம்மையாருக்குத் துணையாகத் தேவர்களுடன் எதிர் நின்று போராட, இயமன் ஏறி நடத்தும் எருமைக் கடாவுடன் இந்திரனின் வெள்ளை யானையான ஐராவதமும் தோற்று,

2. இருள் கடலில் புகவும் வருண தேவன் ஏறிச் செலுத்திய சுறாமீன் அருணனான கதிரவன் தேரோட்டி செலுத்தும்

கதிரவனின் தேர்மீது குதித்து எழவும், நீண்ட வில்வழிச் செலுத்தப் படும் அம்பானது செங்கோலாய்

3. இமய மலையுடன் வளர்கின்ற எட்டுக்குல மலைகளையும் எல்லைக் கற்களாக நிறுத்தி எட்டுத் திக்குகளையும் தனக்கு உரியனவாக் கொண்டு காத்து, வடக்குத் திக்கில் உள்ள கடல் துறை எல்லாம்.

4. தெற்கில் உள்ள கன்னியாகுமரித் துறையாய்க் கொண்டு ஆடும் இளம் பெண்யானை நடையை உடையவளே! சப்பாணி கொட்டுவாயாக! குடை நிழலில் நிலமகளை வளர்த்தவளே, சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

முன்னம் அம்மையாருக்குத் தோற்ற சேரரும் சோழரும் பின்பு நட்புக் கொண்டு திக்கு விசயத்தில் தேவரை எதிர்த்தனர்.

சமர் - போர். பிறகிடும் - தோற்கும். உதியர் - சேரர். அபயர் - சோழர். தண்டதரன் - இயமன். கரும்பகடு - கரிய எருமைக் கடா. வெண் பகடு - வெள்ளை நிறம் உடைய அயிராவத யானை. உடையா - தோற்று.

2. திமிரக்கடல் புக - இருட்கடலில் புகவும். வருணன் விடும் சுறவு - வருணன் எய்யும் சுறா மீன். அருணன் - கதிரவனின் தேர் ஓட்டி. உகண்டு எழ - குதித்து எழவும். கொடுங்கோல் - அம்பு.

3. குல வெற்ப எட்டு - எட்டுக் குலமலைகள் எல்லைக் கல்லினில் நிறீஇ - எல்லைக் கற்களாய் நிறுத்தி. வடாது கடல் துறை - வடக்குத் திக்கில் உள்ள கடல் துறை.

4. குமரித்துறை என - குமரித்துறையாய்க் கொண்டு. மடப்பிடி - இளம் பெண் யானையே. புவிமகள் - நிலமகள்.

சுறாமீன் வருணனுக்கு ஊர்தி. ஆதலால் வருணன் விட்ட சுறாமீன் என்றார். இச்சுறா மீன் அருணன் செலுத்தும் தேர்மீது ஏறிக் குதித்தது. அம்மையார் திக்கு விசயத்தால் வடக்கில் உள்ள

கடல் துறைகளும் உரிமையாயின. ஆதலால் வடாது கடல் துறைகளும் உரிமையாயின. எனவே 'வடாது கடல்துறை தென்குமரித் துறை என' என்றார். (7)

41. சென்றிடு வாளிகள் கூளிகள் காளிகள்
ஞாளியி லாளியெனச்
செருமலை செம்மலை முதலியர் சிந்தச்
சிந்திட நந்திபிரான்
நின்றிலன் ஓடலு முன்னழ கும்மவன்
பின்னழ குங்காணா
நிலவுவி ரிந்திடு குறுநகை கொண்டு
நெடுங்கயி லைக்கிரியின்
முன்றிலி னாடன் மறந்தம ராடியொர்
மூரிச் சிலைகுனியா
முரிபுரு'வச்சிலை கடைகுனி யச்சில
முளரிக் கணைதொட்டுக்
குன்றவி லாளியை வென்ற தடாதகை
கொட்டுக சப்பாணி
குடைநிழ லில்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி. (8)

**தெளிவுரை**

1. அம்மையாரால் செலுத்தப்பட்ட அம்புகள் பூதகணங்கள் காளிகள் நாய் மேல் ஏறி வந்த சிங்கம் என்று கூறும்படி போர் செய்யும் தலைவன் ஆகிய வயிரவக்கடவுள் முதலியவர்களும் சிதைந்து ஓடும்படி அவர்களின் வலிமையைத் தொலைத்தலால் நந்தி பிரான்

2. நில்லாமல் ஓடினான். அதனால் அவர் போரிட வந்த போது கொண்ட முகமலர்ச்சியும் பின் புறங்காட்டி ஓடும்போது இருந்த உடல் தளர்வும் கண்டு நிலவுபோல விரியும் புன்னகை கொண்டு பெரிய கயிலை மலையின்

3. முற்றத்தில் விளையாடலை மறந்து போரிட்டு ஒரு வலிய வில்லை வளைத்து முரித்த புருவமாகிய வில்லை வளைத்துச் சில தாமரை போன்ற கண்ணான அம்பை எய்து,

4. இமய மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானை முன்னம் வென்ற தடாதகைப் பெருமாட்டியே! சப்பாணி கொட்டுவாயாக! குடை நிழலில் நிலமகளை வளர்த்தவளே! சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

(1-2) கூளிகள் - பூதகணங்கள். வாளிகள் - அம்மையார் எய்த அம்புகள். கூளிகள் காளிகள் வைரவக் கடவுள் ஆகியோர் சிவபெருமானுக்குரிய படைகள். ஞாளி - நாய். இது வைரவரின் ஊர்தி. ஞாளியின் ஆளி எனச் செருமலை செம்மல் - வைரவக் கடவுள். முதலியர் - முதலானவர். சிந்த - சிதற.

2. காணா - கண்டு. முன்அழகு - போரிட வருதற்கு முன்னம் இருந்த முகமலர்ச்சி. பின் அழகு - தோற்று ஓடும் போது உண்டான உடல் தளர்ச்சி. நிலவு விரிந்திடு - நிலவைப் போல் ஒளி வீசும். குறுநகை - புன்னகை.

3. முன்றிலில் - முற்றத்தில். மூரிச்சிலை - வலிய வில். குனியா - வளைத்து. முரிபுருவச்சிலை - வளைந்த புருவம் என்ற வில். சில முளரிக் கணை தொட்டு - கண்ணான தாமரை அம்பை எய்து.

4. குன்ற விலாளி - இமய மலைக்குரிய சிவபெருமான்.

புருவங்களை நெரித்து இருகண்களாலும் காமக் குறிப்புத் தோன்ற நோக்கினர். சிவபெருமான் காதல் கொண்டார் என்பது குறிப்பு.

(முடிபு) வாளிகள் சிந்திட ஓடலும் நாணா நகை கொண்டு சிலை குனியாத் தொட்டு வில்லாளியை வென்ற தடாதகையே சப்பாணி கொட்டு. (8)

## சந்த விருத்தம்

42. ஒழுகிய கருணையு வட்டெழ வைத்தவ ருட்பார்வைக்
குளநெகி ழடியர்ப வக்கடல் வற்றவ லைத்தோடிக்
குழையொடு பொருதுகொ லைக்கணை யைப்பிணை யைச்சீறிக்
குமிழொடு பழகிம தர்த்தக யற்கண்ம டப்பாவாய்
தழைகெழு பொழிலின்மு சுக்கலை மைப்புய லிற்பாயத்
தவழிள மதிகலை நெக்குகு புத்தமு தத்தோடே
மழைபொழி யிமயம யிற்பெடை கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரும டப்பிடி கொட்டுக சப்பாணி. (9)

### தெளிவுரை

1. ஒழுகும் அருள் பெருக்கெடுத்து ஓடும்படி செலுத்திய அருட்பார்வையைக் கண்டு மனம் நெகிழ்ந்த தொண்டர்களின் பிறவிக்கடலானது வற்றும்படி கெடுத்து

2. விரைவாய்க் குழை அணிந்த காதுடன் மோதிக் கொலை செய்கின்ற அம்பையும் பெண் மானையும் கோபித்துக் குமிழ மலரைப் போன்ற நாசியுடன் நெருங்கிப் பழகும் செழித்த கயல் மீன் போன்ற விழிகளையுடைய இளம் பாவையே!

3. தழைகள் பொருந்திய சோலையில் உள்ள ஆண் குரங்குகள் கருமையான மேக மண்டலத்தில் குதிக்க அங்குப் பொருந்தியுள்ள இளம் சந்திரனின் கலைகள் நெகிழ்ந்து சிந்தும் புதிய அமுதத்துடன்

4. மழையைப் பொழிகின்ற இமய மலையில் தோன்றிய பெண்மயிலைப் போன்றவளே! மதுரையில் வளர்ந்துள்ள இளம் பெண் யானை போன்ற நடையை உடையவளே! சப்பாணி கொட்டுவாயாக!

### விளக்கம்

முதல் இரண்டு வரிகள் அம்பிகையின் திருவிழிகளின் பெருமையைக் கூறுகின்றன.

உவட்டுஎழ - பெருக்கெடுத்து ஓட. வைத்த அருட் பார்வை - செலுத்திய அருட்பார்வை. உளம் நெகிழ் அடியர் - அன்பால் மனம் நெகிழ்கின்ற அடியவர். பவக் கடல் - பிறவிக்கடல். வற்ற - வற்றும்படியாக.

2. குழை - காதணி. பிணை - பெண்மான். குமிழ் - மூக்கு. பாவாய் - பாவையே!

ஓடிப் பொழுது சீறிப்பழகி மதர்த்த கண்.

3. பொழில் - சோலை. முசுக்கலை - ஆண்குரங்கு. புத்த முதத்தோடே - புதிய அமுதத்துடன்.

4. முசுக்கலை மேகத்தின் மீது பாய அதனால் அம்மேகத்தின் மேல் தவழ்கின்ற சந்திரன் கிழிய ஒழுகும் அமுதத்துடன் மேகம் நீரைப் பொழியும் இமயம் என்க. மயிற் பெடை - பெண் மயில். மடப்பிடி - இளமையுடைய பெண் யானையைப் போன்றவளே!

(9)

43. செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே
திருவரு ளமுதுகு ழைத்துவி டுத்தமு லைப்பாலால்
கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யிற்சேயைக்
களிறொடும் வளரவ ளர்த்தவ ருட்செவி லித்தாயே
குழலிசை பழகிமு ழுப்பிர சத்திர சத்தோடே
குதிகொளு நறியக னிச்சுவை நெக்கபெ ருக்கேபோல்
மழலையின் அமுதுகு சொற்கிளி கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரும டப்பிடி கொட்டுக சப்பாணி. (10)

## தெளிவுரை

1. செழித்த வேதங்களைத் தெளிவாக உணர வடித்தெடுத்த தமிழ்ப் பதிகங்களுடன் திருவருள் அமுதைக் குழைத்துச் சேர்த்த கொங்கையின் பாலால்

2. சீர்காழித் தலத்தில் பிறந்த திருஞானசம்பந்தரின் வயிற்றை நிரப்பி மயிலை ஊர்தியாகக் கொண்டுள்ள முருகப் பெருமானை

யானை முகப் பெருமானுடன் வளரும்படி வளர்த்த அருள் பொதிந்த வளர்ப்புத் தாயே!

3. குழலின் இசையைப் பழகி முற்றிய தேனின் சுவையுடன் குதித்து வரும் இனிய பழத்தின் சுவை நெகிழ்ந்து வடியும் பெருக்கைப்போல்

4. மழலையான இனியஅமுது வடிகின்ற சொல்லைப் பேசும் கிளி போன்றவளே! சப்பாணி கொட்டுவாயாக!

**விளக்கம்**

1. செழுமறை தெளிய வடித்த தமிழ்ப்பதிகம் - செழித்த வேதங்களை தெளிவாக வடித்து எடுத்த தமிழ்ப்பதிகங்கள். முலைப்பால் - கொங்கைப் பால்.

2. கழுமலம் - சீர்காழி. கழுமல மதலை - சீர்காழிப் பதியில் தோன்றிய திருஞானசம்பந்தர். பாலால் நிரப்பி என இயைக்க. மயில் சேய் - மயிலை ஊர்தியாகக் கொண்ட முருகன். களிறு - விநாயகர். செவிலித்தாயே - செவிலித்தாயான மீனாட்சியே.

3. பிரசத்து இரசம் - தேன் இனிமை. நெக்க - நெகிழ்ந்த. பெருக்கே போல் - வெள்ளம் போல். குழலின் இசையும் தேனின் இனிமையும் கனியின் சுவையும் அமுதும் மழலைக்கு உவமைகள்.

(10)

## 5. முத்தப் பருவம்

### ஆசிரிய விருத்தம்

44. காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடல்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுள் மணியே யுயிரால
வாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தளிபழுத்த
மலர்க்கற் பகமே யெழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே முத்தம் தருகவே
முக்கண் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே. (1)

**தெளிவுரை**

1. காலத்தையும் கற்பனையையும் கடந்து அப்பாற்பட்டு நிற்கும் பொன் பேழையில் பழைய பாடல்களாகிய பலநூற் பொருள்களைச் சேர்த்து வைத்த தெய்வமணியே! உயிர் ஆகிய

2. பாத்தியில் அறிவு என்ற நீரைப் பாய்ச்சி வளர்க்கின்றவர்க்கு ஒளியான அருள் என்ற பழம் பழுக்கின்ற மலர்களையுடைய கற்பகமே! எழுதப்படாத சொல்லான மறையான நிரம்பாத சொல்பெருகிய குதலைச் சொல்

3. பேசும் சோலைக் கிளியே! அனைத்து உயிர்க்கும் துணையாய் இருப்பவரும் எவராலும் காணப் பெறாத தலைவரு மான இறைவனுக்குத் துணையாகித் துரிய நிலைக்கு அப்பாற்பட்ட பரநாத

4. மூலத்தலமான துவாத சாந்தத் தானத்தில் தோன்றிய முழுமுதற் பொருளே! முத்தம் தருகவே, மூன்று கண்களாகிய ஒளிகளுக்கு விருந்து அளித்து உதவும் மூன்று கொங்கைகளை யுடையவளே! முத்தம் தருவாயாக.

**விளக்கம்**

1. கற்பனை - கற்பித்தல். கருவூலம் - பொக்கிஷம். பழம் பாடல் - வேதம். செல்வர் - ஞானச்செல்வத்தை உடையவர். தேடி வைத்து - சேர்த்து வைத்து. கருவூலத்தில் வைத்த மணியே என்க.

2. உயிர் ஆலவாலம் - உயிர் என்ற பாத்தி. உணர்வு நீர் - மெய்ஞ் ஞானம் என்னும் நீர். ஒளிபூத்து - ஒளியாகிய மலரைத் தோற்றுவித்து. அளிபழுத்த - அருள் என்ற பழம் பழுக்கின்ற. தேவியைக் கற்பகம் என்று உருவகம் செய்வதற்கு ஏற்பப் பாத்தியும் நீரைப் பாய்ச்சுதலும் பூத்தலும் பழுத்தலும் கூறப் பட்டன. குதலை - மழலை; எழுத்து உருவம் முற்றுப் பெறாத சொல்.

3. உயிர்த்துணை - உயிர்களுக்குத் துணையாக. தோன்றாத் துணை - இறைவன்.

துவாதசாந்தம் - பிரமரந்திரத்துக்குப் பன்னிரண்டு அங்குல அளவில் உள்ள இடம். துரியம் கடந்த - சுத்தநிலை; யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர்நிலை.

பரநாதமூலத் தலம் - துவாத சாந்தம்.

4. முக்கண் சுடர் - சிவபெருமானின். மூன்று கண்கள்: கதிரவன், சந்திரன், அக்கினி. (1)

45. உருகி யுருகி நெக்குநெக்குள்
உடைந்து கசிந்திட் டசும்பூறும்
உழுவ லன்பில் பழவடியார்
உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப்
பெருகு பரமா னந்தவெள்ளப்
பெருக்கே சிறியேம் பெற்றபெரும்
பேறே யூறு நறைக்கூந்தல்
பிடியே கொடிநுண் ணுசுப்பொசிய
வருகுங் குமக்குன் றிரண்டேந்தும்
மலர்ப்பூங் கொம்பே தீங்குழலின்
மதுரம் கனிந்த பசுங்குதலை
மழலை யரும்பச் சேதாம்பல்
முருகு விரியும் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கண் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தம் தருகவே. (2)

**தெளிவுரை**

1. இளகி இளகி, நெகிழ்ந்து நெகிழ்ந்து, மனம் உடைந்து கசிவடைந்து அக்கசிவு பெருகும் எழுமையும் தொடர்ந்த அன்பை உடைய அடியாரின் மனம் என்ற குளத்தில் மிகுதியாய்ச் சுரந்து

2. பெருகும் பேரின்பப் பெருவெள்ளமே! சிறியேமாகிய நாங்கள் பெற்ற பேறாக இருப்பவளே, கொடி போன்ற நுண்ணிய இடை முறியும்படி

3. தோன்றியுள்ள இரண்டு குங்குமம் அணிந்துள்ள மலைகள் போன்ற கொங்கைகள் சுமந்துள்ள மலர் மலர்ந் திருக்கும் கொம்பைப் போன்றவளே! இனிய குழல் ஓசையை விட மிக்க இனிமையுடைய இளங்குதலையான மழலைச் சொல் தோன்றும் சிவந்த ஆம்பல் மலர்

4. மணம் கமழ்கின்ற செம்மையான கோவைப் பழம் போன்ற வாயின் முத்தத்தை அளிப்பாயாக! முத்தைப் போன்றவளே! மூன்று கண்களை உடைய சிவபெருமானுக்கு விருந்து அளிக்கும் மூன்று கொங்கைகளை உடையவளே! முத்தம் தருவாயாக!

**விளக்கம்**

1. அசும்பு - கசிவு. உழுவல் அன்பு - எழு பிறப்பும் தொடர்ந்து வரும் அன்பு. உள்ளத்தடம் - மனம் என்ற நீர்நிலை. ஊற்றெடுத்து - சுரந்து.

2. ஊறு நறை - ஊறும் தேன். நறை என்பதற்கு நறுமணம் என்றும் பொருள் கொள்ளலாம். பரமானந்தம் - பரம + ஆனந்தம் - பேரின்பம். குங்குமக் குன்று - குங்குமத்தை அணிந்த கொங்கைகள்.

3. தீங்குழல் - இனிய குழல். மதுரம் - இனிமை. கனிந்த - மிக்க. சேதாம்பல் - செம்மை + ஆம்பல்; சிவந்த ஆம்பல் மலர்.

4. முருகு - நறுமணம். செங்கனிவாய் - சிவந்த கொவ்வைக் கனியைப் போன்ற வாய். முக்கண் சுடர்க்கு விருந்திடும்

முலையாய் - மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கு விருந்தாக விளங்கும் கொங்கையையுடையவளே! (2)

46. கொழுதி மதர்வண்டு உழக்குகுழல்
கோதைக் குடைந்த கொண்டலுநின்
குதலைக் கிளிமென் மொழிக்குடைந்த
குறுங்கண் கரும்பும் கூன்பிறைக்கோடு
உழுத பொலன்சீ றடிக்குடைந்த
செந்தா மரையும் பசுங்கழுத்துக்கு
உடைந்த கமஞ்சூல் சங்குமொழுகு
ஒளிய கமுகு மழகுதொய்யில்
எழுது தடந்தோட் குடைந்ததடம்
பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமா மருப்பும் தருமுத்துன்
திருமுத் தொவ்வா விகபரங்கள்
முழுதும் தருவாய் நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கண் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே. (3)

## தெளிவுரை

1. கிண்டிக் கலக்கும் மலர் மாலையணிந்த கூந்தலுக்குத் தோற்ற மேகமும் கிளியின் மழலைச் சொல்லுக்குத் தோற்ற சிறிய கணுக்களை யுடைய கரும்பும் வளைவான பிறைச்சந்திரனின் நுனியால்

2. உழப்பட்ட பொன் போன்ற சிறிய அடிக்குத் தோற்ற செந்தாமரை மலரும், பசிய கழுத்துக்கு நிகராகாது தோற்ற கருக் கொண்ட சங்கும் ஒளியுடைய கமுகும், அழகு பெறத் தொய்யில்

3. எழுதப்பட்ட பெரிய தோள்களுக்குத் தோற்ற பெரிய மூங்கிலும், பருத்த மென்மையான கொங்கைகளுக்கு உடைந்த இரண்டு யானைத் தந்தங்களும் தருகின்ற முத்துக்கள் எல்லாம் நின்

முத்தத்துக்கு ஒப்பாகமாட்டா. இம்மை இன்பமும் மறுமை இன்பமும்

4. ஆகியவற்றை முழுதும் தருவாய். நின் கொவ்வைக் கனி போன்ற வாய் முத்தத்தைத் தருவாய்! முத்தைப் போன்றவளே! மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கு விருந்தாக உள்ள கொங்கையை உடையவளே! முத்தம் தருவாய்!

**விளக்கம்**

கொழுதி - கிண்டி; கோதி. உழக்கும் - கலக்கும். குழல் கோதைக்கு உடைந்த - கோதைக் குழலுக்கு உடைந்த; மாலையை அணிந்த கூந்தலுக்கு. கொண்டலும் - மேகமும். அடைந்த - தோற்ற. குறுங்கண் - குறுகிய கண்கள். கூன்பிறைக் கோடு - வளைவான பிறைச்சந்திரனின் நுனி. பிறைக்கோடு உழுத பொலன் சீறடி என்றது சிவபெருமான் அம்மையின் ஊடலைத் தீர்க்க வணங்கியதை உட் கொண்டு உரைத்தது. பொன் சீறடி - பொன் போன்ற சிறிய அடி. கமஞ்சூல் சங்கு - நிறைந்த கருப்பம் உடைய சங்கு. ஒழுகு ஒளி கமுகு - மிக்க ஒளியுடைய பாக்கு மரம். சங்கும் பாக்கு மரமும் கழுத்துக்குத் தோற்றன. தொய்யில் - மகளிர் மார்பிலும் தோளிலும் செடி கொடிகளும் போல் வடிவம் தீட்டுதல்.

3. தடந்தோள் - பெரிய தோள். பணை - மூங்கில். இணை மா மருப்பு - இரண்டு பெரிய யானைக் கொம்புகள்.

மேகம் கரும்பு தாமரை சங்கு கமுகு மூங்கில் யானைக் கொம்பு என்பனவற்றிலிருந்து முத்துப் பிறக்கும் என்பர். அங்ஙனம் பிறக்கும் முத்துக்கள் அம்மையின் முத்தத்துக்கு ஒவ்வா என்றார். இகபரம் - இம்மை இன்பம்; மறுமை இன்பம்.

4. கனிவாய் - கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாய். (3)

47. மத்த மதமாக் கவுட்டொருநால்
மருப்புப் பொருப்பு மிசைப்பொலிந்த
வானத் தரசு கோயில்வளர்
சிந்தா மணியும் வடபுலத்தார்

நத்தம் வளர அளகையர்கோன்
நகரில் வளரும் வான்மணியும்
நளினப் பொகுட்டில் வீற்றிருக்கும்
நங்கை மனைக்கோர் விளக்கமெனப்
பைத்த சுடிகைப் படப்பாயல்
பதும நாபன் மார்பில்வளர்
பருதி மணியும் எமக்கம்மை
பணியல் வாழி வேயீன்ற
முத்தம் முகந்த நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கண் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தம் தருகவே. (4)

**தெளிவுரை**

1. மதத்தை யுடைய கன்னம் பொருந்திய ஒரு நான்கு கொம்புகளை யுடைய மலை போன்ற ஐராவத யானை மீது விளங்கிய தேவர்கட்கு மன்னனான இந்திரன் அரண்மனையில் இருக்கின்ற சிந்தாமணியும், வடதிசையில்

2. இயக்கர் நகரில் வளரும் வண்ணம் அளகாபுரியின் மன்னனான குபேரன் நகரில் தங்கியிருக்கும் பெருமையுடைய சங்க நிதி பதுமநிதி என்பவையும், தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் வீட்டுக்கு ஒப்பற்ற விளக்கு எனக் கூறும்படி,

3. பையையுடைய உச்சி பொருந்திய பாம்பின் படப் பள்ளியில் உறங்குகின்ற பதுமநாபனான திருமாலின் மார்பில் அணிந்துள்ள ஒளியுடைய கௌத்துவ மணியும், தாயே எமக்குத் தருதல் வேண்டா! மூங்கிலில் முளைத்த

4. முத்தரான சிவபெருமான் விரும்பிய நின் கொவ்வைக் கனி போன்ற வாய் முத்தத்தை அளித்தருளுவாய்! மூன்று கண்களை யுடைய சிவபெருமானின் கண்களுக்கும் விருந்தாக அமையும் கொங்கைகளையுடையவளே! முத்தம் தருவாயாக!

**விளக்கம்**

மத்தம் - களிப்பு. மதமா- மதத்தையுடைய யானை. கவுள் - கன்னம். ஒரு நால் மருப்பு - ஒரு நான்கு கொம்புகள். இந்திரனின் அயிராவத யானை நான்கு கொம்புகளை உடையது. வானத்தரசு கோயில் - இந்திரனின் அரண்மனையில். வடபுலத்தார் - இயக்கர். புலம் - இடம்.

2. அளகையர் கோன் - அளகாபுரி என்ற நகரின் மன்னனான குபேரன். வான்மணி - சங்கநிதி, பதுமநிதி முதலியவை. நளினம் - தாமரை. நங்கை - இலக்குமி. மனை - வீடு.

3. பைத்த - பையை உடைய. சுடிகை - உச்சி. படப்பாயல் - படமாகிய படுக்கை. பதுமநாபன் - தாமரையைக் கொப்பூழில் உடைய திருமால். பதுமம் - தாமரை. நாபன் - கொப்பூழை உடையவன். பருதி மணி - கதிரவன் போன்ற ஒளியுடைய கௌத்துவ மணி. பணியல் - அளித்தருள வேண்டா. வேய் - மூங்கில்.

4. வேயீன்ற முத்தம் - மூங்கிலில் தோன்றிய சிவபெருமான். வேணுவனம் என்ற திருநெல்வேலியில் மூங்கிலில் சிவபெருமான் பிறந்தார் என்பது புராணம். (4)

48. கோடுங் குவடும் பொருதரங்கக்
குமரித் துறையில் படுமுத்தும்
கொற்கைத் துறையில் துறைவாணர்
குளிக்கும் சலாபக் குவான்முத்தும்
ஆடும் பெருந்தண் டுறைப்பொருநை
ஆற்றிற் படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியும் குளிர்முத்தும்
வாடும் கொடிநுண் நுகப்பொசிய
மடவ மகளி ருடனாடும்
வண்டல் துறைக்கு வைத்துநெய்த்து
மணம்தாழ் நறுமென் புகைப்படலம்

மூடும் குழலாய் நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கண் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே. (5)

**தெளிவுரை**

1. இருபக்கத்துக் கரைகளையும் மரக் கொம்புகளையும் மேலும் அலைகளை யுமுடைய குமரித்துறையில் விளையும் முத்துக் களும் கொற்கைத் துறைமுகத்தில் முத்துக் குளிக்கும் வாழ்வினர் எடுக்கும் சிப்பி முத்துக்களும்,

2. நீராடும் பெரிய குளிர்ந்த துறைகளை யுடைய பொருநை என்ற தாமிரபரணி ஆற்றில் நிலவைச் சொரியும் முத்துக்களும் அழகிய குளிர்ந்த பொதிய மலைச் சாரலில் அருவி சொரிகின்ற குளிர்ந்த முத்துக்களும்

3. வாடும் கொடியைப் போன்ற சிறிய இடையானது ஒடியுமாறு இளம் பெண்களுடன் விளையாடும் மணல் விளையாட்டுக்கு வைத்து நெய் பூசி மணம் பொருந்திய இனிய மென்மையான அகிற்புகையின் கூட்டம்

4. மூடப்பெற்ற கூந்தலை யுடையவளே! நின் கொவ்வைக் கனி போன்ற வாய் முத்தத்தைத் தந்தருள்வாய்! மூன்று கண்களை யுடைய சிவபெருமானுக்கு விருந்தாய் விளங்கும் கொங்கைகளை யுடையவளே! முத்தம் தருவாயாக!

**விளக்கம்**

1. கோடு - கரை. குவடு - மலை. கொற்கை - பாண்டிய நாட்டின் துறைமுகப்பட்டினம். துறைவாணர் - நெய்தல் நிலத்தவர். சலாபம் - முத்துக்குளித்தல். குவால் - குவியல்.

2. தண்துறைப் பொருநை - குளிர்ந்த துறையையுடைய தாமிர பன்னிநதி. தெண்ணிலா முத்து - தெளிவான நிலவு ஒளி வீசும் முத்து. தடஞ்சாரல் - பெரிய மலைச்சாரல்.

3. வாடும் - வருந்தும். நுண்நுசுப்பு - நுண்ணிய இடுப்பு. மடவமகளிர் - இளமையுடைய மங்கையர். வண்டல் துறை - விளையாட்டிடங்கள். வண்டல் - விளையாட்டு. நெய்த்து - நெய் பூசப் பெற்று. மணம் - நறுமணம். நறுமென் புகைப்படலம் - நறுமணம் உடைய மென்மையான அகிற்புகை முதலியவற்றின் தொகுதி.

4. மூடும் - மூடப்படுகின்ற. (5)

## வேறு

49. பைவைத்த துத்திப் பரூஉச்சுடிகை முன்றில்
பசுங்கொடி யுடுக்கைகிழியப்
பாயிருள் படலம் கிழித்தெழு சுடர்ப்பருதி
பருதிக் கொடுஞ்சி மான்தேர்
மொய்வைத்த கொய்யுளை வயப்புரவி வாய்ச்செல்ல
முட்கோல் பிடித்துநெடுவான்
முற்றத்தை யிருள்பட விழுங்கும் துகிற்கொடி
முனைக்கணை வடிம்புநக்கா
மைவைத்த செஞ்சிலையு மம்புலியு மோடநெடு
வான்மீன் மணந்துகந்த
வடவரை முகந்தநின் வயக்கொடி யெனப்பொலியும்
மஞ்சிவர் வளாகநொச்சித்
தெய்வத் தமிழ்க்கடல் தழையத் தழைத்தவள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த ஒண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (6)

### தெளிவுரை

1. படம் பொருந்திய பொறிகளையுடைய பருத்த உச்சியான முற்றத்தில் உள்ள பசிய கொடியான பூமி தேவியின் ஆடையான கடல் கிழியும் வண்ணம்,

பரந்த இருள் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு எழும் ஒளியையுடைய கதிரவனின் வட்டமான மொட்டையுடைய குதிரை பூட்டிய தேர்,

2. வன்மை அமைந்த கத்தரிக்கும் பிடரிமயிரை உடைய வெற்றிக் குதிரையிடம் செல்லும்படி தாற்றுக் கோல் பிடித்ததைப் போல் பெரிய வான் முற்றத்தை இருள் நீங்கச் செய்யும் வெள்ளைச் சேலைக் கொடிகள் ஆனவை நுனியுடைய அம்புகளின் வடுப் படாத மேகத்தில் அமைந்த

3.மேகத்தில் பொருந்திய செம்மையான வானவில்லும் சந்திரனும் ஓடுமாறு நெடிய விண்மீன்களைப் பொருந்தி நின்று, நீ விரும்பிய மேருமலை மேல் விளங்கும் மேகம் தங்கிய வளைந்த இடங்களை யுடைய மதில் சூழ்ந்த

4. தெய்வத் தன்மையுடைய தமிழ்க்கடல் செழிக்கத் தழைத்தவளே!

அழகிய பவளம் போன்ற வாயின் முத்தம் அளித் தருளுவாய்! சேல்மீன் எழுதிய கொடியை வெற்றிக் கொடியாக உயர்த்தியருளிய பொன் கொடியே! அழகிய பவளம் போன்ற வாய் முத்தம் தந்தருளுவாய்.

**விளக்கம்**

1. பை - படம். துத்தி - படப்பொறி. சுடிகை முன்றில் - உச்சிப் பரப்பு. அதில் இருப்பவள் கொடி போன்ற நிலமகள். அவளது ஆடை கடல். சுடர்ப்பருதி - கதிரவனது. கிழிய எழுபகுதி என்க. பருதியையும் கொடிஞ்சியையும் உடைய தேர். பருதி - தேர்ச் சக்கரம். மான்தேர் - தேர்.

2. மொய் - வன்மை. கொய்உளை - கத்தரிக்கும் பிடரி மயிர். வயப்புரவி - வெற்றியுடைய குதிரை. முட்கோல் - குதிரையை ஓட்டுவதற்கான குத்துக்கோல். இங்கு அது கொடியின் உச்சியில் உள்ள கூரிய உறுப்பைக் குறித்தது. துகிற்கொடி இங்கு எழுவாய்.

(2-3) துகிற்கொடிக்கும் அம்மையின் மீன்கொடிக்கும் சிலேடை.

முனைக்கணை - முனையையுடைய அம்பினது. வடிம்பு - விளிம்பு. நக்காச்சிலை - பொருந்தாத சிலை. பொருள் வெளிப் படை.

3. சிலை - இந்திரவில். அம்புலி - சந்திரன்; சோழர்க்குரிய அழகிய புலிக்கொடி; அம் + புலி. மீன் - மீனராசி; கொடியிடத் துள்ள மீன். உகந்த வடவரை - உயர்ந்த மலை. நொச்சியாவது மதில். வளாகம் - பரப்பு. (6)

50. பின்னல் திரைக்கடல் மதுக்குட மறத்தேக்கு
பெய்முகில் காருடலவெண்
பிறைமதிக் கூன்குயக் கைக்கடைஞ ரொடுபுடை
பெயர்ந்திடை நுடங்கவொல்கும்
மின்னல் தடித்துக் கரும்பொன் தொடிக்கடைசி
மெல்லியர் வெரீஇப்பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்
விண்புலம் விளைபுலமெனக்
கன்னன் பெருங்காடு கற்பகக் காட்டுவளர்
கடவுள்மா கவளம்கொளக்
காமதே னுவுநின்று கடைவாய் குதட்டக்
கதிர்க்குலை முதிர்ந்துவிளையும்
செந்நெற் படப்பைமது ரைப்பதி புரப்பவள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (7)

## தெளிவுரை

1. பின்னுதலைப் போன்ற அலைகளையுடைய கடல் என்ற கள் குடம் முழுவதும் வெறுமையாகும்படி குடித்து வயிறு நிறையப் பெற்ற மழை பெய்கின்ற மேகம் போன்ற கரிய உடம்பையும் வெண்மையான மதியைப் போன்ற வளைந்த அரிவாளையும்

கையில் கொண்ட உழவருடன் இடம் விட்டுப் பெயர்ந்து இமை அசையத் தளரும்.

2. ஒளியுடைய மின்னல் போன்ற கரிய பொன் வளை சூடிய உழவப் பெண்கள் அஞ்சி விலகும்படியும், விண்மீன் கூட்டம் குதிக்கின்ற வானிடத்தை விளைநிலம் என கூறும்படி

3. கரும்புப் பெரிய காட்டில் கற்பகச் சோலையில் வளர்கின்ற தெய்வ யானையான அயிராவதம் உணவாக உண்ணும்படியும், காமதேனு என்ற பசுவும் நெற் பயிரை மேய்ந்து தனது கடை வாயை அசைக்கவும், நெற்கதிர்கள் முற்றி விளையப்பெற்ற

4. செந்நெல் வயல்களையுடைய மதுரை என்ற நகரத்தைக் காக்கும் அரசியே! அழகான பவளம் போன்ற வாய் முத்தம் தந்தருளுக. மீன் பொருந்திய ஒளியுடைய கொடியை வலம் வைத்த பெண்கொடியே, அழகிய பவளவாய் முத்தத்தை அளித் தருவாய்!

**விளக்கம்**

மதுரையில் உள்ள வயலில் நெல்லும் கரும்பும் வான் அளாவ உயர்ந்து வளர்ந்துள்ளன. அவற்றை வானில் உள்ள காமதேனு, அயிராவதம் என்னும் இரண்டும் விண்ணே நமக்கு உணவு விளை நிலம் என்று எண்ணி உண்கின்றன எனக் கூறப்படுகின்றது.

1. பின்னல் திரை- பின்னுதல் போல் வரும் அலை. கடல் மதுக்குடம் - கடல் என்னும் கள் குடம். அற - முற்றிலும். தேக்கு பெய் முகில் - குடித்த மழை பெய்யும் மேகம். கார் உடல் - கரிய உடல். கடலாகிய கள் குடத்தை மேகம் என்ற உழவன் குடித்ததாகக் கற்பனை. கூன்குயம் - வளைந்த அரிவாள். அது வளைந்த பிறைமதி போன்றது.

கடைஞர் - உழவர். பெயர்ந்து - இடம்பெயர்ந்து.

2. கரும்பொன் தொடி - கரிய பொன்னாலான இரும்பு வளையல். இதனை அணிந்த கடைசி மெல்லியல் - உழத்தியர்.

பெயர - அஞ்சி நீங்க. மின்னல் தடித்து - மின்னுதலையுடைய மின்னல். வான்மீன் கணம் - வானில் உள்ள நட்சத்திரம். வெடிவரால் - துள்ளும் வரால் மீன். இவ்வரால் மீன் துள்ளுவதால் உழவரும் உழத்தியரும் அஞ்சி நீங்குவர் என்க. அதனால் விண்மீன்களும் அஞ்சும்.

3. கன்னல் - கரும்பு. கடவுள் மா - அயிராவத யானை. கவளம் கொள்ள - உணவாக உண்ண. கடைவாய் குதட்டுதல் - கடை வாயில் இட்டு அசைத்தல்.

நிலத்தில் உள்ள வயலில் விளைந்த கரும்பையும் நெல்லையும் விண்ணுலகத்து அயிராவத யானையும் காம தேனுவும் உண்ணும் என்பது கற்பனை. (7)

51. சங்கோ லிடுங்கடல் தானைக்கு வெந்நிடு
தராபதிகண் முன்றில் தூர்த்த
தமனியக் குப்பையும் திசைமுதல்வர் தடமுடித்
தாமமும் தலைமயங்கக்
கொங்கோ லிடுங்கைக் கொடுங்கோ லொடும்திரி
குறும்பன் கொடிச்சுறவுநின்
கொற்றப் பதாகைக் குழாத்தினொடும் இரசதக்
குன்றினும் சென்றுலாவப்
பொங்கோல வேலைப் புறத்தினொ டகத்தின்நிமிர்
போராழி பருதியிரதப்
பொங்காழி மற்றப் பொருப்பாழி யிற்றிரி
புலம்பைப் புலம்புசெய்யச்
செங்கோல் திருத்திய முடிச்செழியர் கோமகள்
திருப்பவள முத்தமருளே
சேல்வைத்த வொண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்தமருளே. (8)

## தெளிவுரை

தடாதகைப் பெருமாட்டியின் செங்கோன்மை:

1. சங்குகள் ஒலிக்கின்ற கடல் போன்ற படைகளைக் கண்டு முதுகு காட்டித் தோற்று ஓடிய மண்ணுலக மன்னர்கள் கப்பப் பொருளாகக் கொண்டு வந்து குவித்துள்ள நிரம்பிய பொற் குவியலும், திசைக் காவலர்களின் முடியில் அணிந்த மாலைகளும் ஒன்றாகக் கலந்து (கிடக்கும்) கிடக்க.

2. மணம் கமழும் கொடிய மலர் அம்புகளுடன் கூடிய வாயையுடைய சிறிய மன்னன் ஆன மன்மதன் உயர்த்திய கொடியில் உள்ள சுறாமீனும் நின் வெற்றிக் கொடியாகிய கூட்டத்தில் உள்ள மீனும் வெள்ளிமலையிலும் - கயிலை மலையிலும் - போய் உலவ,

3. மிக்க இரைச்சலையுடைய கடல் பக்கத்திலும் உட் பகுதியிலும் நிமிர்ந்து செல்லும் ஆணையாகிய சக்கரமும் கதிரவன் தேரில் உள்ள உயர்ந்த சக்கரங்கள் அந்தச் சக்கரவாள மலையில் திரிகின்ற தனிமையை வருத்தி நெருக்கி இடம் பெறுமாறு

4. செங்கோல் செலுத்திய முடியணிந்த பாண்டிய மன்னரின் சிறந்த மகளே! அழகிய பவளம் போன்ற திருவாய் முத்தத்தைத் தந்தருளுக. மீன் சின்னம் உடைய ஒண் கொடியை வலம் வைத்த பெண் கொடியே! அழகிய பவளம் போன்ற வாய் முத்தத்தைத் தந்தருளுக!

**விளக்கம்**

1. கடல் தானை - கடலைப் போன்ற பெரிய படை. ஒலிடும் - சத்தம் இடும். வெந்நிடு - தோற்கும்; முதுகு காட்டும். தராபதிகள் - மன்னர்கள். முன்றில் தூர்த்த - அரண்மனை முன்பக்கத்தில் குவித்த தமனியக் குப்பை - பொற்குவியல். திசைமுதல்வர் - திக்குக் காவலர்கள். தடமுடித்தாமம் - பெரிய முடிமாலையும். தலை மயங்க - ஒன்றாகக் கலந்து கிடக்க.

2. கொங்கு ஒலிடும் - மணம் கமழும். கொடுங்கோல் - மன்மதனின் அம்புகளான அரும்புகள். குறும்பன் - மன்மதன். கொடிச் சுறவும் - கொடியில் உள்ள மீனும். கொற்றப்பதாகை -

வெற்றிக்கொடி. இரசதக் குன்று - வெள்ளிமலை; கயிலாய மலை. இரசதம் - வெள்ளி.

அம்மையார் சென்றதால் சிவபெருமான் திருவுள்ளத்தில் விருப்பம் ஏற்படுத்தக் காரணமாதலாலும் அம்பிகையின் கொடிக்கும் தன் கொடிக்கும் வேறுபாடு இல்லாமையாலும் முன்பு தோற்ற காமன் அம்மையின் கொடியைத் துணையாகக் கொண்டு தன் கொடியுடன் கயிலை மலைக்குச் சென்றான் என்க. இதனைக் 'கொங்கோலிடும்.....உலாவ' என்ற அடி விளக்குகிறது.

3. கதிரவனின் தேர் உலவும் எல்லையாகிய சக்கரவாள மலை அளவும் பெருமாட்டியின் ஆணை சென்றது என்பது கருத்து.

பேராழி - ஆணைச்சக்கரம். ஆழி - சக்கரம். பொருப்பாழியில் - சக்கரவாள மலையில். புலம்பை - தனிமைத் தன்மையை. புலம்பு செய்ய - வருத்த.

அம்மையாரின் ஆட்சிக்கு முன்பு கதிரவன் தேரின் ஒற்றையாழி தனியே சக்கரவாள மலையில் சென்றது எனவும், அம்மையாரின் ஆட்சியில் கதிரவன் சக்கரத்துடன் அப் பெரு மாட்டியின் ஆணைச் சக்கரமும் உடன் செல்லும் எனவும் உரைத்தார். கதிரவனின் சக்கரமும் அம்மையின் ஆணையும் உலகம் முழுவதும் நடந்தன என்பது கருத்து.

4. செழியர் - பாண்டியர். செங்கோல்திருத்திய - நெறி முறையில் அரசு திருந்த. கோமகள் - அரசி. சிறந்த மகள். (8)

### சந்த விருத்தம்

52. பருவரை முதுபல வடியினி னெடுநிலம்
நெக்ககு டக்கனியில்
படுநறை படுநிறை கடமுடை படுவக
டுப்பவு வட்டெழவும்

விரிதலை முதலொடு விளைபுலம் உலையவு
ழக்கிய முள்சுறவின்
விசையினின் வழிநறை மிடறொடி கமுகின்வி
ழுக்குலை நெக்குகவும்
கரைநெறி புணரியின் இருமடி பெருகுத
டத்தும டுத்தகடக்
களிறொடு பிளிறிட இகலிய முகிலினி
ரட்டியி ரட்டியமும்
முரசதிர் கடிநகர் மதுரையில் வளர்கிளி
முத்தம் அளித்தருளே
முழுதுல குடையவொர் கவுரியர் குலமணி
முத்தம் அளித்தருளே. (9)

**தெளிவுரை**

1. பருமையான அடியையுடைய முதிய பலாமரத்தின் வேரில் பழுத்த நெடிய தரையைப் பிளக்கும்படி செய்யும் குடத்தைப் போன்ற பழத்தின் உண்டாகிய தேன், கள் நிறைந்த குடம் உடைந்தது போல் பெருக்கு எடுத்து ஓடவும்,

2. விரிந்த தலையுடன் உள்ள நெற்பயிர் அடியுடைய நன்செய் கெடும்படி கலக்கிய முள்ளையுடைய சுறாமீன் வேகத்தால் வழிந்த தேன் பாக்கு மரத்தின் கழுத்து ஒடியச் சிறந்த குலை நெகிழ்ந்து விழவும்,

3. கரையினை மோதும் கடலின் இருமடங்கு பெருகும் நீர் நிலையில் நீரைக் குடித்த மத யானையுடன் மாறுபட ஒலித்த மேகத்தின் ஒலியின் இருமடங்கு மிகுதியாக.

4. மூவகையான முரசுகளும் ஒலிக்கும் கவலையுடைய மதுரையம்பதியில் வளர்கின்ற கிளியே! முத்தம் தருவாயாக! உலகம் முழுவதையும் தம்முடையதாகக் கொண்ட பாண்டியர் குலத்தின் மணி போன்றவளே! முத்தம் தந்தருளுவாய்!

**விளக்கம்**

1. பருவரை முதுபலவு - பருத்த அடிப்பகுதியை உடைய முதிய பலாமரம். நெடுநிலம் - பெரிய நிலம். நெக்க - பிளக்க. குடக்கனி - குடம் போன்ற பழம். நறை - தேன். படு நிறை கடம் - கள் நிறைந்த குடம். கருப்ப - ஒப்ப. உவட்டெழ - பெருக்கெடுக்க.

2. விரிதலைமுதல் - நெல் கரும்பு ஆகிய பயிர்கள். முள் சுறவு - முள்ளையுடைய சுறா மீன். நறை நெக்கு உகவும். நறை நெக்கு உகவும். மிடறு - கழுத்து. கமுகு - பாக்குமரம். விழுக்குலை - சிறந்த குலை.

3. புணரி - கடல். இருமடி - இரண்டுமடங்கு. கடக்களிறு - மதயானை. பிளிறிட - ஒலிக்க; முழங்க. முகிலின் - மேகம் போன்று. இரட்டி இரட்டிய - இருமடங்கு ஒலித்த.

4. மும்முரசு - வீரமுரசு, தியாக முரசு, மணமுரசு ஆகிய மூன்று முரசு.

(முடிபு) நறை உவட்டெழவும், உழிநறை உகவும், இருமடி பெருகு தடத்தில் மடுத்த களிறொடு பிளிறிட இகலிய முகிலின் இரட்டி இரட்டிய மும்முரசு அதிர் மதுரை என இயைக்க. (9)

53. புதையிருள் கிழிதர வெழுதரு பருதிவ
ளைத்தக டல்புவியில்
பொதுவற வடிமைசெய் திடுவழி யடியர்பொ
ருட்டலர் வட்டணையில்
ததைமலர் பொதுளிய களியளி குமிறுகு
ழல்திரு வைத்தவளச்
சததள முளரியின் வனிதையை உதவுக
டைக்கண்ம டப்பிடியே
பதுமமொ டொழுகொளி வளையுநி னளினமு
கத்துமி டற்றுமுறப்
பனிமதி யொடுசுவை அமுதம் நுதலொடு
சொற்குத லைக்கணிநீஇ

முதுதமிழ் உததியில் வருமொரு திருமகள்
முத்தம் அளித்தருளே
முழுதுல குடையவொர் கவுரியர் குலமணி
முத்தம் அளித்தருளே. (10)

**தெளிவுரை**

மூடியிருக்கும் இருளைக் கிழிக்கும்படி உதயமான கதிரவன் ஒளியானது பரந்து சூழ்ந்த இப் பூமண்டலத்தில் பொதுத் தன்மை இல்லாதபடி அடிமை செய்கின்ற வழி வழியாய் வரும் அடியவர் பொருட்டாக,

2. செந்தாமரை மலர் ஆகிய இருக்கையில் வீற்றிருக்கும் மலர்கள் நிரம்பிய களிப்புடைய வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலை யுடைய திருமகளையும், வெண்மையான நூற்றிதழ்த் தாமரையில் உள்ள நாமகளாகிய பெண்ணையும் உதவியருளிய கடைக் கண்ணை யுடைய பெண் யானை போன்றவளே!

3. பதுமநிதியுடன் ஒழுகும் ஒளியுடைய சங்கநிதியும் நின் தாமரை போன்ற முகத்திலும் கழுத்திலும் பொருந்த குளிர்ந்த சந்திரனுடன் சுவையுடைய அமிர்தமும் நெற்றியிலும் குதலை மொழியிலும் நிறுத்திப்

4. பழந்தமிழ்க் கடலில் தோன்றிய ஒப்பற்ற திருமகளே! முத்தம் தருவாயாக! உலகம் முழுவதையும் உடைய பாண்டியர் குலத்தில் உதித்த மணியே! முத்தம் தந்தருளுவாய்!

**விளக்கம்**

1. புதை இருள் - மிக்க இருள். பருதி வளைத்த - கதிரவனால் சூழப்படும். அடிமை செய்திடு - அம்மையாருக்கே அடிமை பூண்டிடும். அலர் வட்டணை - தாமரை மலரான வட்டஅணை. பொதுவற - பொதுத்தன்மை நீங்க.

2. சததளம் - நூறு இதழ். ததைமலர் - நெருங்கிய மலர். பொதுளிய - நெருங்கிய. அளி - வண்டு. களி - களிப்பு. குழல்

திருவை - கூந்தலையுடைய இலக்குமியை. தவளச் சததளம் முளரி - வெண்மையான நூறு இதழ்களையுடைய தாமரை; வெண்டாமரை. வனிதை - இலக்குமி. மடப்பிடி - இளைய பெண் யானை.

அம்மையாரின் வலக்கண்ணில் திருமாலும் இடக்கண்ணில் கலைமகளும் உதித்தனர் என்பர். இதனால் 'திருவை வனிதையை உதவு கடைக்கண் மடப்பிடி' என்றார்.

3,4. மீனாட்சியைத் திருமகளாக உருவகம் செய்துள்ளார்.

(1-2) அடியார் பொருட்டுத் திருவையும் கலைமகளையும் உதவும்படி, அதாவது அவள் தன் அடியார் திருவையும் கல்வியையும் பெறுவர் என்பதாம்.

4. பதுமம் - பதுமநிதி. வளை - சங்கநிதி. இவை முறையே முகத்திலும் கழுத்திலும் பொருந்தின. முகத்துக்குத் தாமரையையும் கழுத்துக்குச் சங்கையும் உவமை கூறும் மரபினால் இங்ஙனம் இயம்பினார்.

இலக்குமி பாற்கடலில் தோன்றியபோது பதுமநிதி, சங்கநிதி, சந்திரன், அமுதம் முதலியனவும் எழுந்தன. ஆதலால் இங்கு அவற்றில் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உறுப்பைக் குறித்தார். தனித்தனியாக எழுந்த அவற்றைத் தன் மேனியின் உறுப்பாகவே கொண்டெழுந்தாள் என்பதாம். (10)

## 6. வருகைப் பருவம்

### ஆசிரிய விருத்தம்

54. அஞ்சிலம் போலிட அரிக்குரல் கிண்கிணி
அரற்றுசெஞ் சீறடிபெயர்த்து
அடியிடுந் தொறுநின் னலத்தகச் சுவடுபட்டு
அம்புவி யரம்பையர்கள்தம்

மஞ்சுதுஞ் சளகத் திளம்பிறையும் எந்தைகுடி
வளரிளம் பிறையும்நாற
மணிநூ புரத்தவிழு மென்குரற் கோவசையும்
மடநடைக் கோதொடர்ந்துன்
செஞ்சிலம் படிபற்று தெய்வக் குழாத்தினொடு
சிறையோதி மம்பின்செலச்
சிற்றிடைக் கொல்கிமணி மேகலை இரங்கத்
திருக்கோயி லெனஎனெஞ்சக்
கஞ்சமும் செஞ்சொல் தமிழ்க்கூட லும்கொண்ட
காமர்பூங் கொடிவருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கணா யகிவருகவே. (1)

**தெளிவுரை**

1. அழகான சிலம்பணி ஒலியைச் சிவந்த மணிகளின் ஒலி அமைத்த கிண்கிணி ஒலிக்கும் சிவந்த சிறிய அடிகளைப் பெயர்த்து வைத்து நீ நடக்கும் போதெல்லாம் நின் செம்பஞ்சுக் குழம்பு தோய்ந்த அடித்தழும்பு பட்டு அழகிய புவியில் வந்துள்ள அரம்பை மங்கையரின்

2. மேகத்தைப் போன்ற கூந்தலில் அணிந்துள்ள இளம் பிறையிலும் எம்பெருமான் சடை முடியில் அணிந்துள்ள இளம் பிறையிலும் அத்தழும்பு தோன்ற, அழகிய சிலம்பினின்று வெளியாகும் மென்மையான குரலை எண்ணியோ அல்லது தளர்கின்ற இளநடையைக் குறித்தோ தொடர்ந்து உன்,

3. சிவந்த சிலம்பு அணிந்த திருவடியைப் பற்றி வரும் தெய்வப் பெண்கள் கூட்டத்துடன் சிறகுகளையுடைய அன்னப் பறவையும் பின் தொடர்ந்து வரும்படி சிறிய இடைக்காக வருத்தம் அடைந்து, மணிமேகலை என்னும் அணி ஒலிக்க, என் மனமாகிய தாமரை மலரையும்

4. அழகிய சொல்லை யுடைய தமிழ்மொழி வழங்கும் கூட்டங்களையும் திருக்கோயில்களாகக் கொண்டிருக்கும் அழகிய

கொம்பு போன்றவளே! வருவாயாக! கற்பகக் காடு போன்ற கடம்ப வனத்தில் விளங்கும் கயல் போன்ற கண் உடைய அம்மையே! வருவாயாக!

**விளக்கம்**

1. அஞ்சிலம்பு - அம் + சிலம்பு; அழகிய சிலம்பு. ஒலிட - சத்தமிட. அரிக்குரல் கிண்கிணி - தவளை போன்ற ஒலியை யுடைய கிண்கிணி என்ற அணி. செஞ்சீறடி - சிவந்த சிறிய அடி. பெயர்த்து - அசைத்து. அடியிடுந்தொறும் - காலை வைக்குந் தோறும். அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பு. சுவடு - அடையாளம். அரம்பையர் - தேவமங்கையர்.

2. மஞ்சு துஞ்சு அளகம் - மேகம் போன்ற கூந்தல். இளம்பிறை - பிறை போன்ற அணி. எந்தை - எம் சிவபெருமான். நாற - தோன்ற. மணி நூபுரம் - மணி பதித்த நூபுரம் என்ற காலணி; சிலம்பு.

அம்மையின் திருவடிகளின் பக்தியினால் வணங்கிய அரம்பையர் தலையணியாலும் ஊடலை நீக்கும் பொருட்டு வணங்கும் சிவபெருமான் திருமுடியுள் உள்ள பிறையாலும் ஏற்பட்ட அடையாளங்கள் பாதச் சுவட்டிலும் தோன்றின.

3. நெஞ்சுக்கஞ்சம் - மனம் என்ற தாமரை. காமர் - அழகு பொருந்திய. விருப்பத்தைத் தரும். சிலம்பொலிக்கு அன்னப் பறவையின் ஒலியை உவமையாகச் சொல்வர். அன்னப்பறவை சிலம்பொலியைத் தம் இனத்தின் ஒலி என எண்ணியும் அம்மையின் நடையைக் கற்பதற்காக நினைத்தும் தொடர்ந்தது.

4. கற்பகாடவியின் - கற்பகச் சோலையில் இருத்தலைப் போன்று, கற்பகம் + அடவி = கற்பகாடவி. கடம்பாடவி - கடம்ப + அடவி; கடம்ப மரங்கள் நிறைந்த காடு; அது மதுரை. கற்பகச் சோலையைப் போல் கடம்பாடவி என்பது கருத்து. (1)

## மீனாட்சியின் திருவடிச் சிறப்பு

55. குண்டுபடு பேரகழி வயிறுளைந் தீன்றபைங்
கோதையும் மதுரமொழுகும்
கொழிதமிழ்ப் பனுவல் துறைப்படியு மடநடைக்
கூந்தலம் பிடியும்அறுகால்
வண்டுபடு முண்டக மனைக்குடி புகச்சிவ
மணம்கமழ விண்டதொண்டர்
மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட
மாணிக்க வல்லிவில்வேள்
துண்டுபடு மதிநுதல் தோகையொடும் அளவில்பல
தொல்லுரு வெடுத்தமர்செயும்
தொடுசிலை யெனக்ககன முகடுமுட் டிப்பூந்
துணர்த்தலை வணங்கிநிற்கும்
கண்டுபடு கன்னல்பைங் காடுபடு கூடல்
கலாபமா மயில்வருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கணா யகிவருகவே. (2)

### தெளிவுரை

1. ஆழமான பெரிய திருப்பாற்கடலில் வயிறு வருந்திப் பெற்ற கருமையான கூந்தலையுடைய திருமகளும் இனிமை மிகும் தமிழ் மொழிக் கடலின் நூலான துறையில் முழுகும் மென்மையான நடையுடைய கூந்தலையுடைய திருமகளும்,

2.ஆறு கால்களையுடைய வண்டுகள் மொய்க்கும் தாமரை மலராகிய வீட்டில் புகுந்து கொள்ளச் சிவமணம் கமழும்படி விரிந்த தொண்டர்களின் மனம் என்ற அகன்ற மதியான மலர் மலர்ந்துள்ள நீர்நிலை என்னும் அழகிய கோயிலில் குடி புகுந்துள்ள மாணிக்கவல்லியே! வில்லைப் பிடித்த காமன்,

3. துண்டான பிறையைப் போன்ற நெற்றியையுடைய தன் மனைவியான இரதியுடன் பல வகையான பழைய வடிவங்களைத்

தாங்கிப் போர் செய்வதற்கு எழுந்துள்ள பல விற்களைப் போல வான உச்சியை எட்டிப் பூங்கொத்துடன் தலையை வணங்கி நிற்கும்,

4. சர்க்கரைக் கட்டி உண்டாகும் கரும்பாகிய இனிய காடுகளையுடைய மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற தோகையையுடைய மயில் போன்றவளே, வருவாயாக! கற்பகச் சோலை போன்று விளங்கும் மதுரையில் விளங்கும் கயல் போன்ற கண்களை யுடையவளே! வருவாயாக!

**விளக்கம்**

1. குண்டு - பள்ளம். பேரகழி - பெரிய அகழி; அதாவது பாற்கடல். பைங்கோதை - திருமகள். தமிழ்ப்பனுவல் துறைபடியும் பிடி - கலைமகள்.

2. முண்டக மனை - செந்தாமரையும் வெண்தாமரையும் ஆகிய இல்லங்கள். முண்டகம் - தாமரை. விண்ட - மலர்ந்த. மானகத் தடமலர்ப் பொற் கோயில் - மனம் என்ற பெரிய தாமரை என்ற அழகிய கோயிலில். மாணிக்க வல்லி - விளி. வில்வேள் - கரும்பு வில்லையுடைய மன்மதன்.

3. துண்டுபடு - துண்டாக வெட்டப்பட்ட. மதி நுதல் - பிறை போன்ற நெற்றி. தோகை - தோகையையுடைய மயில். அளவுஇல் பல தொல்உரு எடுத்து - அளவு இல்லாத பல பழைய வடிவங்களை எடுத்து. அமர் செயும் - போரைச் செய்யும். தொடு சிலை - அம்பு தொடுக்கப்படும் வில். ககன முகடு - வானத்தின் உச்சி. பூந்துணர் - பூங்கொத்து.

4. கண்டுபடு - சர்க்கரை உண்டாகின்ற. கன்னல் - கரும்பு. பைங்காடுபடு - பசுமையான காடுகளையுடைய. கலாப மாமயில் - தோகையையுடைய சிறந்த மயில் போன்றவளே!

(1-2) திருமகளும் கலைமகளும் வெற்றுத் தாமரையில் குடிபுக, நீ சிவமணம் கமழும் அடியார் இதயம் என்ற தாமரையில் புகுவாய் என்றார்.

(3-4) மதுரையில் உள்ள கருப்பங்காடு மன்மதன் பல்வேறு உருவம் எடுத்து இரதியுடன் கூடிப் போர் தொடுத்தற்கு உதவும் விற்களைப் போல் வளர்வது என்றார். (2)

56. முயல்பாய் மதிக்குழவி தவழ்சூல் அடிப்பலவின்
முள்பொதி குடக்கனியொடு
முடவுத் தடந்தாழை முப்புடைக் கனிசிந்த
மோதிநீர் உண்டிருண்ட
புயல்பாய் படப்பைத் தடம்பொழில்கள் அன்றியேழ்
பொழிலையு மொருங்கலைத்துப்
புறமூடும் அண்டச் சுவர்த்தலம் இடித்தப்
புறக்கடன் மடுத்துழக்கிச்
செயல்பாய் கடல்தானை செங்களங் கொளவம்மை
திக்குவிச யம்கொண்டநாள்
தெய்வக் கயற்கொடிகள் திசைதிசை யெடுத்தெனத்
திக்கெட்டு முட்டவெடிபோய்க்
கயல்பாய் குரம்பணை பெரும்பணைத் தமிழ்மதுரை
காவலன் மகள்வருகவே.
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கணா யகிவருகவே. (3)

## தெளிவுரை

கயல்மீனின் செயல்:

1. முயல் களங்கம் பரவிய பிறைச்சந்திரன் தவழும் பலாமரத்தின் முட்கள் பொருந்திய குடம் போன்ற பழத்துடன் வளைவான தென்னையின் மூன்று பக்கம் புடைத்திருக்கின்ற தேங்காயானது சிந்தும்படி தாக்கி நீரைப்பருகி இருள் அடைந்துள்ள

2. மேகம் பரவி நிற்கும் மருத நிலத்தின் பெரிய சோலைகளே அல்லாமல் மேல் ஏழு உலகங்களையும் ஒருசேர வருத்தி வெளியில் மூடியுள்ள அண்டத்தின் சுவரையும் தகர்த்து வெளியில் உள்ள பெரும்புறக் கடல் நீரையும் உட்கொண்டு கலக்கி,

3. செயலில் பரந்த கடல் போன்ற படைகள் போர்க்களத்தை இடமாகக் கொள்ளும்படி அம்மையாகிய நீ திசைஎங்கும் வெற்றி அடைந்து வந்த நாளில், கடவுள் தன்மையுடைய கயல் மீன் கொடிகள் திக்கு எங்கும் எடுத்தாற் போல் எட்டுத் திக்கும் முட்டும்படி குதித்துக்

4. கயல்மீன்கள் பாயும். இத்தகைய இயல்புடைய வரப்புகள் நெருங்கிய பெரிய வயல் இடங்களை யுடைய தமிழ் வளர்த்த மதுரையின் காவலனான பாண்டியனின் மகளே! வருவாயாக! கற்பகச் சோலை போன்ற கடம்பக் காடுடைய மதுரையில் விளங்கும் கயற்கண்ணை உடைய தலைவியே, வருவாயாக!

**விளக்கம்**

1. முயல்பாய் மதிக்குழவி - முயல் களங்கத்தை உடைய பிறைச்சந்திரன். சூல் அடிப்பலவு - கருப்பம் உடைய அடியை யுடைய பலாமரம். முட்பொதி - முள்ளையுடைய. குடக்கனி - குடம் போன்ற பலாக்கனி. தாழை - தென்னை. முப்புடைக்கனி - மூன்று பக்கமும் புடைத்துள்ள தேங்காய். சிந்த - சிந்துமாறு; விழும்படி

2. புயல் - மேகம். படப்பை - தோட்டம். பாய் - பரவிய. ஏழ் பொழிலையும் - மேல் உள்ள ஏழு உலகங்களையும். அலைத்து - வருத்தி. அப்புறக்கடல் - பெரும்புறக்கடல். உழக்கி - கலக்கி.

3. கடல் தானை - கடல் போன்ற படை. செங்களம் கொள - போர்க்களத்தை இடமாகக் கொள்ள. தெய்வக்கயல் கொடிகள் - தெய்வத்தன்மை யுடைய மீன் கொடிகள். வெடி போய் - பாய்கின்ற.

4. குரம்பு - வரம்பு. பணை - வயல்.

முடிபு: குடக்கனியோடு முப்புடைக்கனி சிந்த மோதி அலைத்து, இடித்து, மடுத்து, உழக்கித், திசை கயற் கொடிகள் எடுத்தென முட்ட, வெடி போய், கயல் மீன்கள் பாய்கின்ற பெரும் பணையையுடைய மதுரை என இயைக்க. (3)

57. வடம்பட்ட நின்றுணைக் கொங்கைக் குடங்கொட்டு
மதுரவமு துண்டுகடைவாய்
வழியும்வெள் ளருவியென நிலவுபொழி கிம்புரி
மருப்பில் பொருப்பிடித்துத்
தடம்பட்ட பொன்தாது சிந்துரங் கும்பத்
தலத்தணிவ தொப்பவப்பிச்
சலராசி யேழுந் தடக்கையின் முகந்துபின்
தானநீ ரால்நிரப்பி
முடம்பட்ட மதியங் குசப்படை எனக்ககன
முகடுகை தடவியுடுமீன்
முத்தம் பதித்திட்ட முகபடா மெனவெழு
முகிற்படா நெற்றிசுற்றும்
கடம்பட்ட சிறுகண் பெருங்கொலைய மழவிளங்
களிறீன்ற பிடிவருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கண்நா யகிவருகவே. (4)

## தெளிவுரை

விநாயகரின் விளையாடல்:

1. மணிமாலைகள் அணியப்பெற்ற நின் இரு கொங்கைகளாகிய குடங்கள் சொரிகின்ற இனிய அமுதைப் பருகி, வாயின் கடையில் ஒழுகும் வெள்ளை அருவி என்னுமாறு நிலவொளியைப் பரப்பும் கிம்புரிப் பூண் அணிந்த கொம்புகளால்,

2. மலையை இடித்துப் பெருத்த பொன் ஆன துகளை மத்தகத்தில் அணிந்து கொள்வது போல் பூசி, ஏழுகடல்களையும் பெரிய கையால் மொண்டு குறைத்துப் பின் மதநீரால் நிறைத்து,

3. வளைவான சந்திரனை அங்குசம் என்று கூற எண்ணி வான் உச்சியைத் துதிக்கையால் தடவி, விண்மீன்கள் ஆகிய முத்துக்களைப் பதித்த முகபடாம் என்று கூறுமாறு வானில் எழுகின்ற மேகமாகிய ஆடையை நெற்றியில் சுற்றும்

4. மதம் பொருந்திய சிறு கண்களையும் பெருங் கொலைத் தொழிலையும் உடைய மிக இளைய யானையை - பிள்ளையாரைப் பெற்ற பெண் யானையே! வருவாயாக! கற்பகச் சோலை போன்ற கடம்ப வனத்தில் விளங்கும் கயல் போன்ற கண்களை யுடைய தலைவியே! வருக!

**விளக்கம்**

1. வடம் - முத்துமாலை. மதுரஅமுது - இனிய பால். தந்தத்தின் நிறத்துக்குப் பால் உவமை. கிம்புரி - தந்தத்தில் கட்டப்படும் பூண்.

2. பொன் தாது - பொன் நிறம் உடைய மகரந்தம். சிந்துரம் - சிவந்துள்ள. கும்பம் - குடம் போன்ற மத்தகம். சலராசி ஏழு - ஏழு கடல்களையும். தடங்கை - பெரியகை. தான நீரால் - மத நீரினால்.

3. முடம்பட்ட - வளைந்த. மதி - பிறைச்சந்திரனை. அங்குசம்என - அங்குசப் படையாகும் என்று. ககனம் - வானம். முகடு - உச்சி. கைதடவி - கையால் தடவி. உடுமீன் - விண் மீன்கள். முகபடாம் - முகத்தில் அணியும் ஆடை. முகில்படாம் - முகிலாகிய ஆடை.

4. கடம் - மதம். மத இளங்களிறு - மிக இளையயானையான விநாயகர். (4)

58. தேனொழுகு கஞ்சப் பொலன்சீ றடிக்கூட்டு
செம்பஞ்சி யின்குழம்பால்
தெள்ளமுது இறைக்கும் பசுங்குழவி வெண்திங்கள்
செக்கர்மதி யாக்கரை பொரும்
வானொழுகு துங்கத் தரங்கப் பெருங்கங்கை
வாணிநதி யாச்சிவபிரான்
மகுடகோ டீரத் தடிச்சுவ டழுத்தியிடு
மரகதக் கொம்பு கதிர்கால்
மீனொழுகு மாயிரு விசும்பில் செலும்கடவுள்
வேழத்தின் மத்தகத்து

வீற்றிருக் கும்சே யிழைக்கும் பசுங்கமுகு
வெண்கவரி வீசும்வாசக்
கானொழுகு தடமலர்க் கடிபொழில் கூடல்வளர்
கவுரியன் மகள்வருகவே
கற்பகா டவியிற் கடம்பா டவிப்பொலி
கயற்கண்நா யகிவருகவே. (5)

**தெளிவுரை**

1. தேன் வழியும் தாமரை மலர் போன்ற பொன் மயமான சிறிய அடிகளுக்குப் பூசப்படும் செம்பஞ்சுக் குழம்பினால், தெளிந்த அமுதைப் பொழியும் மிக இளைய சந்திரன் சிவந்த நிறம் மிகுதிப்பட, கரையை மோதும்

2. வானத்தில் ஒழுகும் உயர்ந்த அலைகளையுடைய பெரிய கங்கையாறு சோணை நதியாகச் சிவபெருமானின் முடியான சடையில் பாதத்தின் சுவடுபட அழுத்தும் பசிய நிறம் உடைய பூங்கொம்பே! ஒளியை வீசும்

3. விண்மீன்கள் நடக்கும் பெரிய வானத்தில் செல்லுகின்ற தெய்வத்தன்மை வாய்ந்த ஐராவதம் என்ற யானையின் மீது வீற்றிருக்கின்ற இந்திராணிக்குப் பச்சை நிறமான பாக்கு மரம் வெண் கவரி வீசுவது போல் உயர்ந்திருக்கும் நறுமணக்

4. காற்று வீசுகின்ற அகன்ற மலர்களை யுடைய சிறந்த சோலைகளும் சூழ்ந்த மதுரையில் வளர்கின்ற பாண்டியனின் மகளே! வருவாயாக! கற்பகச் சோலை போன்ற கடம்பவனம் பொருந்தியுள்ள மதுரையின் தலைவியே, வருவாயாக!

**விளக்கம்**

(1-2) அம்மையின் ஊடலைப் போக்குதற்காகச், சிவபெருமான் வணங்க, அப்போது அவள் திருவடியில் உள்ள செம்பஞ்சுக் குழம்பு பட்டு இறைவன் திருமுடியில் உள்ள பிறைச்சந்திரனும் கங்கையாறும் செந்நிறம் அடைகின்றன.

செக்கர்மதி - சிவந்த நிறம் வாய்ந்த சந்திரன். வாணி நதி - செந்நிறம் கொண்டது. மகுட கோடீரம் - முடியாகிய சடை. மரகதக் கொம்பு - விளி. கரை பொரும் - கரையை மோதும். வான் ஒழுகும் - வானத்தில் ஒழுகும்.

2. வாணி - சோணை நதி. கதிர்கால் - ஒளிவீசும்.

3. மீன் - விண்மீன்கள். மாயிரும் விசும்பு - பெரிய கரிய வானம். மத்தகம் - முதுகு. சேயிழை - இந்திராணி, பாக்குமரம் தன் பாளையால் இந்திராணிக்குக் கவரி வீசியது.

4. கவுரியன் - பாண்டியன். கான் - நறுமணம். தடமலர் - பெரிய மலர். கூடல் - மதுரை. கடிபொழில் - மணமுடைய சோலை; காவல் பொருந்திய சோலையுமாம். (5)

## வேறு

59. வடக்குங் குமக்குன்று இரண்டேந்தும்
வண்டல் மகளிர் சிறுமுற்றில்
வாரிக் குவித்த மணிக்குப்பை
வானா றடைப்ப வழிபிழைத்து
நடக்கும் கதிர்பொன் பரிசிலா
நகுவெண் பிறைகைத் தோணியா
நாண்மீன் பரப்புச் சிறுமிதப்பா
நாப்பண் மிதப்ப நாற்கோட்டுக்
கடக்குஞ் சரத்தின் மதநதியும்
கங்கா நதியு மெதிர்கொள்ளக்
ககன வெளியும் கற்பகப்பூங்
காடும் கடந்து கடல்சுருங்க
மடுக்கும் திரைத்தண் துறைவைகை
வளநாட் டரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (6)

## தெளிவுரை

வையை நீர் வரும் நிலை:

1. மாலையும் குங்குமமும் அணிந்த கொங்கையாகிய மலைகள் இரண்டைச் சுமந்துள்ள சிறிய வீடு கட்டி விளையாடும் பெண்கள், சிறிய முறத்தால் அள்ளிக் குவித்த மணிக்குவியல் வான் வழியை அடைக்கும். ஆதலால் கதிரவன் வழி தப்பிச் செல்வான்.

2. அக்கதிரவன் தோணியாகவும் விளங்கும் வெண்மையான பிறைச் சந்திரன் சிறு தோணியாகவும், விண்மீன்களின் பரப்பானது சிறிய மிதவைகளாகவும் நடுவில் மிதக்கும்படி நான்கு கொம்பு களையும்

3. மத்தகத்தையும் உடைய ஐராவத யானையின் மதப் பெருக்கும், வான் கங்கையின் வெள்ளமும் எதிர் கொள்ளும். எதிர் கொள்ள வான வெளியையும் பூஞ்சோலையையும் கடந்து கடலும் குறையும்படி

4. பெருகும் அலைகளையுடைய குளிர்ந்த துறைகளை யுடைய வையை ஆற்றின் வளத்தைக் கொண்ட பாண்டிய நாட்டின் அரசியே! வருவாயாக! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வாய் இருப்பவளே, வருவாயாக.

## விளக்கம்

1. வடம் - முத்து மாலை. குங்குமக்குன்று - குங்குமம் பூசப்பெற்ற கொங்கைகள். முற்றில் - சுளகால்; முறத்தால். வான் ஆறு அடைப்ப - வானத்து வழியை அடைப்பதனால். வழி பிழைத்து - செல்லும் வழி தவறி.

2. கதிர் - கதிரவன். பொற்பரிசிலா - பொன்னால் ஆன பரிசிலாக. பிறை கைத்தோணியா - பிறைச்சந்திரன் சிறிய தோணியாகவும். மிதப்ப - மிதவை; ஒருமரத் தோணி.

3. கடக்குஞ்சரம் - மதத்தையுடைய யானை. மதநதி - மதநீரால் ஆன ஆறு. ககன வெளி - வான வெளி. கடல் சுருங்க - கடல் வற்றிக் குறைய.

4. மலயத்துவசன் - அங்கயற்கண்ணியைப் பெற்ற தந்தை.

(முடிபு) மணிக்குப்பை அடைப்பப் பிழைத்து நடக்கும் கதிர்; பரிசிலாகவும் பிறை தோணியாகவும் மீன் பரப்பு மிதவையாகவும் மிதப்ப, மதநதியும் கங்கை நதியும் எதிர் கொள்ள நடந்து கடல் சுருங்க மடுக்கும் வைகை என இயைகின்றது. (6)

60. சுண்ணம் திமிர்ந்து தேனருவி
துளைந்தாடு அறுகால் தும்பிபசுந்
தோட்டுக் கதவந் திறப்பமலர்த்
தோகை குடிபுக் கோகைசெயும்
தண்ணங் கமலக் கோயில்பல
சமைத்த மருதத் தச்சன்முழுத்
தாற்றுக் கமுகு நாற்றியிடும்
தடங்கா மணப்பந் தரில்வீக்கும்
விண்ணம் பொதிந்த மேகபடாம்
மிசைத்தூக் கியபன் மணிக்கொத்து
விரிந்தா லெனக்கால் நிமிர்ந்துதலை
விரியும் குலைநெல் கற்றைபல
வண்ணம் பொலியும் பண்ணைவயல்
மதுரைக் கரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (7)

## தெளிவுரை

மருதநில வளம்

1. பூந்தாதில் அளைந்து தேன் ஆற்றின் வெள்ளத்தில் முழுகி விளையாடும் ஆறு கால்களையுடைய வண்டுகள். அவை பசுமை யான இதழ்கள் என்னும் கதவைத் திறக்க மலர் மகளாகிய திருமகள் குடிபுகுந்து வீற்றிருப்பாள். இத்தகைய விருப்பத்தை உண்டாக்கும்

2. குளிர்ந்த தாமரை மலராகிய கோயில் பலவற்றை அடைந்து மருதநிலம் என்ற தச்சன் பெரிய பந்தரில் தொங்கும் வண்ணம் கட்டிய

3. நிறை மேகமாகிய துகில் மேல் தொங்கவிடப்பட்ட மணிகளின் கொத்துக்கள் பரந்திருந்தது போல் தாள் உயர்ந்து விரியப்பட்ட குலைகளையுடைய நெல்லின் தொகுதிகள் விளங்கும்.

4. இங்ஙனம் பல வண்ணத்துடன் விளங்கும் மருத நிலமாகிய வயல்கள் பொருந்திய மதுரையின் அரசியே வருவாயாக! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே வருவாயாக!

**விளக்கம்**

1. சுண்ணம் - பூந்தாது; மகரந்தம். திமிர்ந்து - பூசி. தேன் அருவி துளைந்து ஆடி - தேன் அருவியில் வண்டுகள் முழுகி ஆடி. அறுகால் தும்பி - ஆறு கால்களையுடைய தும்பி. தோட்டுக் கதவம் - பூவின் இதழான கதவு. மலர்த் தோகை - இலக்குமி.

2. தண்ணங்கமலக் கோயில் பல சமைத்த மருதத்தச்சன் - குளிர்ந்த பல தாமரைக் கோயில்களை அமைத்த மருதநிலமான தச்சன். முழுத்தாற்றுக் கமுகு - நன்கு முதிர்ந்த காய்க்குலைகளை யுடைய பாக்கு மரம். நாற்றி - தொங்கவிட்டு. பந்தல் காலில் பாக்கு மரத்தைக் குலையுடன் கட்டுவது வழக்கம். எனவே 'முழுத்தாற்றுக் கமுகு நாற்றியிடும்' என்றார்.

தடங்காமணப்பந்தரில் - பெரிய சோலையான பந்தலில். வீக்கும் - கட்டும்.

3. மேகபடாம் - மேகம் என்ற மேற்கட்டி. பந்தலுக்குக் கூரைக்குக் கீழ் கட்டுவது மேற்கட்டி. தூக்கிய - தொங்கும்படி கட்டிய: கால் நிமிர்ந்து - தாள் உயர்ந்து. நெற்கற்றை - நென்மணிக் கொத்து.

மருதநிலம் என்ற தச்சன், தாமரை மலர்க்கோயில் சமைத்துக் கமுக மரம் நாட்டிச் சோலை என்ற பந்தலை இட்டு, அதில் மேகம்

ஆன துணியை விரித்துக் கட்டி அதில் பலவகை நிறம் உள்ள மணிகளைத் தூக்கியது போல் தோன்றும் மருத நிலங்கள். (7)

61. தகரக் குழலின் நறையுநறை
தருதீம் புகையும் திசைக்களிற்றின்
தடக்கை நாசிப் புழைமடுப்பத்
தளரும் சிறுநுண் மருங்குல்பெருஞ்
சிகரக் களபப் பொம்மல்முலைத்
தெய்வ மகளிர் புடையிரட்டும்
செங்கைக் கவரி முகந்தெறியும்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க
முகரக் களிவண் டடைகிடக்கும்
முளரிக் கொடிக்கும் கலைக்கொடிக்கும்
முருந்து முறுவல் விருந்திடுபுன்
மூர னெடுவெண் ணிலவெறிப்ப
மகரக் கருங்கண் செங்கனிவாய்
மடமான் கன்று வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (8)

**தெளிவுரை**

1. மயிர்ச்சாந்து அணிந்த கூந்தலின் இயற்கை மணமும், மணம் உண்டாவதற்காக ஊட்டும் இனிய புகையும் திக்கு யானைகளின் துதிக்கைத் துளைகளில் செல்லவும். தளர்ச்சியுற்ற நின் சிறிய நுட்பமான இடை

2. பெரிய மலை போன்ற களபம் அணிந்த பருமையான கொங்கைகளையுடைய தெய்வப் பெண்களின் பக்கத்தில் சிவந்த கையில் உள்ள கவரி வீசும் சிறுகாற்றுக்கும் தளர்ந்து தள்ளாட

3. ஒலிக்கும் வண்டுகள் அடை கிடக்கின்ற தாமரையில் வாழும் கொடி போன்ற திருமகளுக்கும் கலையை ஆய்ந்த வாணிக்கும் மயில் இறகின் அடியைப் போன்ற பற்கள் விருந்து செய்தலான சிறுநகையான பெருகிய வெண்மையான ஒலியை வீச

4. மகர மீன் போன்ற விழிகளையும் சிவந்த கொவ்வைப் பழம் போன்ற வாயையும் உடைய இளமான் கன்றே! வருவாயாக! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே வருவாயாக!

**விளக்கம்**

மடமான் கன்றே! பெருவாழ்வே! நின் தகரக் கூந்தலின் இயற்கை மணமும் நறுமணப் புகையும் துதிக்கைத் துளையில் நுழையவும், நின் மருங்குல், கவரியின் சிறு காற்றுக்கும் தாளாமல் தளரவும், சிறுநகை ஒளி வீசவும் வருவாயாக என இயைக்க.

1. தகரக்குழல் - மயிர்ச்சாந்து பூசப்பட்ட கூந்தல். நறை - இயற்கை மணம். நறைதரு தீம்புகை - மணம் உண்டாவதற்காக எழுப்பப்படும் இனிய புகை. தடக்கை நாசிப்புழை - பெரிய துதிக்கைத் துளை. மடுப்ப - நுழைய.

2. சிகரம் - மலை. களபம் - நறுமணச்சாந்து. பொம்மல் முலை - பருத்த கொங்கைகள். புடை இரட்டும் - பக்கத்தில் நின்று வீசும். முகந்து எறியும் - மொண்டு வீசும். குடிவாங்க - வேற்றிடத்தைப் பார்க்க; அதாவது தளர. ஓசிந்து - தளர்ந்து.

3. முகரம் - ஒலி. முளரிக் கொடி - திருமகள். கலைக்கொடி - கலைகளின் இறையான கலைமகள். முருந்து - மயில் இறகின் அடி. முறுவல் - புன்னகை. மூரல் - பற்கள். வெண்ணிலவு - வெண்மை யான ஒளி. எறிப்ப - வீச.

4. மகரக் கருங்கண் - மீன் போன்ற கண்கள். மடமான் கன்று - இளமை பொருந்திய மானின் கன்றே! (8)

62. தொடுக்கும் கடவுள் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்து
எடுக்கும் தொழும்ப ருளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே வளர்சிமய

இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் றிருவுள் ளத்தில்அழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்கும் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (9)

**தெளிவுரை**

1. தொடுக்கப்படும் கடவுள் தன்மையுடைய பழைய பாடலாகிய மாலையின் பொருளாக விளங்குபவளே! நறுமணம் மிக்க துறைகள் பல அமைந்த இனிய தமிழின் ஒழுகுகின்ற இனிய சுவை போன்றவளே! ஆணவம் என்ற கிழங்கைத் தோண்டி

2. எடுக்கும் அடியவரின் மனம் என்ற கோயிலில் ஏற்றப் படுகின்ற விளக்கே! வளரும் உச்சியை யுடைய இமய மலையில் விளையாடுகின்ற இளமையான மென்மையுடைய பெண்யானை போன்றவளே! வீசும் அலைகளையுடைய

3. கடலை ஆடையாக உடுத்த நிலவுக்கு அப்பாற்பட்ட ஒப்பற்ற பரமசிவன் தன் சிறந்த மனத்தில் அழகு மிகும்படி வரைந்து பார்த்திருக்கின்ற உயிருடன் கூடிய ஓவியமே! வண்டுகள் வாய்

4. வைத்துத் தேனை உண்ணும் கூந்தல் என்ற காட்டை யுடைய இளைய வஞ்சிக் கொடி போன்றவளே! வருவாயாக! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே, வருவாயாக!

**விளக்கம்**

1. தொடை - தொடுக்கப்படுவது. கடவுள்பழம்பாடல் - வேதம்; தெய்வத் தன்மையுடைய பழைமையான பாடல். நறை -

தேன். பழுத்த - முதிர்ந்த; மிக்க. துறைத் தீந்தமிழ் - அகமும் புறமும் ஆகிய பல துறைகளையுடைய இனிய தமிழ். அகந்தை - ஆணவம்; ஆணவம் கிழங்காக உருவகம் செய்யப்பட்டுள்ளது.

2. தொழும்பர் - அடியார்; தொண்டர். உளக்கோயில் - மனம் என்ற கோயில். சிமயம் - சிகரம்; உச்சி. பொருப்பு என்பதற்கு ஏற்பப் பிடி என்றார். எறிதரங்கம் - வீசும் அலைகள்.

3. உடுக்கும் - சூழ்ந்துள்ள. புவனம் - உலகம். கடந்து நின்ற - அப்பாற்பட்டு விளங்கும். ஒருவன் - ஒப்பற்றவன்; சிவ பெருமான். அழகு ஒழுக - அழகு மிக. மதுகரம் - வண்டு. வாய் மடுக்கும் - குடிக்கும்.

4. குழற்காடு - கூந்தல் ஆகிய காடு. (9)

63. பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தல்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கண் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைந்த பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக அருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (10)

## தெளிவுரை

1. மிக்க தேனைச் சிந்தும் நறுமணம் பொருந்திய கூந்தலைத் தாங்கிய பெண் யானையே, வருவாயாக! நிறைவான ஞான

வெள்ளமே, வருவாயாக! பிறைச்சந்திரனைச் சூடியுள்ள சடை முடியையுடைய சிவபெருமான் மூன்று சுடர்களான கண்களுக்கு அளிக்கும்

2. விருந்தாய் இருப்பவளே வருவாயாக! அயன் அரி அரன் என்ற மூவர்க்கும் மூலமானவளே, வருவாயாக! விதை இல்லாமலேயே விளைவைச் செய்கின்ற மேலான இன்பத்தின் விளைவே வருவாயாக! பழைய மறையின்

3. இளந்தளிரே வருவாயாக! அருள் பழுத்த கொம்பே, வருவாயாக! அழகிய கடைக் கண்ணின் கடை பெருக்கிய அருள் பெரு வெள்ளத்துள் மூழ்கும் அடியாரின் பிறவி நோய்க்கு

4. மருந்தாய் விளங்குபவளே! வருவாயாக! இளமையான மழலைச் சொல் பேசுகின்ற கிளியே வருவாயாக! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே வருவாயாக!

**விளக்கம்**

ஞானப்பெருக்கு - அறிவின் மிகுதி. பெருந்தேன் - மிகுந்த தேன். இறைக்கும் - சொரியும். நறைக் கூந்தல் - நறுமணம் உடைய கூந்தல். பிடியே - பெண்யானை போன்றவளே! பிறை மெளலி - பிறைச்சந்திரனை அணிந்த முடி. பெம்மான் - பெருமான். முக்கண் சுடர் - மூன்று கண்ணாகிய சுடர்; சிவபெருமான். மூன்று கண்கள்: சூரியன், சந்திரன், அக்கினி என்ற மூன்று கண்கள்.

2. மும்முதல் - மூன்று முதல்வர்; அயன்,அரி, அரன் அம் மூவர்க்கும் மூல காரணமாக உள்ளவள் அங்கயற்கண் அம்மை. ஆதலால் 'மும்முதற்கும் வித்தே' என்றார். பரமானந்தம் - பரமம் + ஆனந்தம்; மேலான இன்பம்.

3. பழமறையின் குருந்து - வேதத்தின் கொழுந்து. குடைவார் - மூழ்குவார். அருள் பழுத்த கொம்பே - அருள் என்னும் கனி பழுத்துள்ள கொம்பு போன்றவளே,

4. பிறவிப்பிணி - பிறவியாகிய நோய். (10)

## 7. அம்புலிப் பருவம்

64. கண்டுபடு குதலைப் பசுங்கிளி இவட்கொரு
கலாபேத மென்னநின்னைக்
கலைமறைகண் முறையிடுவ கண்டோ அலாதொண்
கலாநிதி யெனத்தெரிந்தோ
வண்டுபடு தெரியல் திருத்தாதை யார்மரபின்
வழிமுதல் எனக்குறித்தோ
வளர்சடை முடிக்கெந்தை தண்ணறுங் கண்ணியா
வைத்தது கடைப்பிடித்தோ
குண்டுபடு பாற்கடல் வருந்திருச் சேடியொடு
கூடப் பிறந்ததோர்ந்தோ
கோமாட்டி யிவணின்னை வம்மெனக் கொம்மெனக்
கூவிடப் பெற்றாயுனக்கு
அண்டுபடு சீரிதன்று ஆதலா லிவளுடன்
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (1)

**தெளிவுரை**

1. கற்கண்டைப் போல் இனிய மழலை மொழி பேசும் இளங்கிளியாகிய இவளுக்கு ஒரு கலாபேதம் என்று நின்னைக் கலைகளும் மறைகளும் முறையிடுகின்றவற்றை நோக்கியோ, அல்லது கலைச் செல்வம் என்று அறிந்தோ,

2. வண்டுகள் மொய்க்கின்ற மாலையைச் சூடிய அழகிய தந்தையான மலயத்துவச பாண்டியன் பிறந்த குலத்துக்கு முதல்வன் என்பதை எண்ணியோ, வளரும் சடைமுடியில் எம் பெருமான் குளிர்ந்த இனியமாலையாக அணிந்திருப்பதை எண்ணியோ,

3. ஆழத்தையுடைய திருப்பாற்கடலில் தோன்றிய திரு மகளான தோழியுடன் நீ பிறந்திருப்பதை ஆராய்ந்தோ,

தலைவியான இந்த அம்மை நின்னை விரைந்து வருமாறு கூப்பிடப் பெறும் தன்மையை அடையப் பெற்றாய். உனக்கு,

4. பொருந்தக் கூடிய சிறப்பு அன்று; உயர்ந்தது. ஆதலால், சந்திரனே, இவளுடன் ஆடுதற்கு வருவாயாக! உரையாணிப் பொன் மலையாகிய வில்லைக் கொண்ட சிவபெருமானுடன் சேர்ந்த மாணிக்க வல்லியுடன் ஆடுதற்காகச் சந்திரனே, வருவாயாக!

**விளக்கம்**

அம்மையார் சந்திரனிடம் அன்பு பூண்பதற்குரிய காரணங்கள் சொல்லப்படுகின்றன இப்பாடலில்.

கண்டுபடு குதலை - கற்கண்டைப் போன்ற இனிய மழலை மொழி. கலாபேதம் - அம்பிகையும் சிவபெருமானைப் போலவே எட்டு உருவங்களை உடையவள். ஆதலால் அவ்வுருவங்களுள் சந்திரன் ஒருவன் என்பது குறித்து அவனை 'ஒரு கலாபேதம்' என்றார். கலா பேதம் - கலையின் வேறுபாடு; கலையின் பல வேறுபாடுகள். கலாநிதி - கலையான செல்வம். 'மீனாட்சியம்மை கலா பேதமாகவும் கலை நிதியாகவும் வேதங்களால் கூறப்படு கின்றாள். ஆகவே தன்னைப் போன்றவன் சந்திரன் என எண்ணினாள் என்பது கருத்தாகும். கலைமறைகள் - கலைகளும் மறைகளும்.

2. வண்டு படுதெரியல் - வண்டுகள் மொய்க்கும் மாலை. திருத்தாதையார் மரபின் வழிமுதல் - பாண்டிய மன்னர் மதிக்குல மன்னர் ஆதலால் அது வெளிப்பட 'திருத்தந்தையார் மரபின் வழி முதல்' என்றார். கண்ணியா - முடி மாலையாக. எந்தை - சிவ பெருமான். கடைப் பிடித்தோ - எண்ணியோ.

3. குண்டு படு பாற்கடல் - ஆழம் பொருந்திய திருப்பாற் கடல். திருச்சேடி - திருமகள் ஆகிய தோழி. சேடி - தோழி. திருமகளும் பாற்கடலில் தோன்றியவள். கூடப்பிறந்தது - உடன் பிறந்தது. ஓர்ந்தோ - ஆராய்ந்தோ. கோமாட்டி கோமான் என்பதன் பெண்பால். வம்என - வா என்று. கொம்என - விரைவாக. கூவிடப் பெற்றாய் - அழைக்கப் பெற்றாய்.

4. ஆணி - உரையாணி. பொன் வில்லி - மேருமலையை வில்லாக உடையவன்; சிவபெருமான். மாணிக்கவல்லியுடன் - மாணிக்கக் கொடி போன்ற மீனாட்சியம்மையாருடன். அம்புலீ - சந்திரனே; விளி.

அம்புலியை அழைக்கும் உபாயம் நான்கு. அவை: சாமம் பேதம் தானம் தண்டம். இந்நான்கனுள் இங்குச் சொல்லப்படுவது 'சாமம்' என்ற உபாயம் ஆகும். சாமம் - சமாதானம். (1)

65. குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த
கோதென்று மழல்விடம் கொப்புளிக் கின்றவிரு
கோளினுச் சிட்டமென்றும்
கலைத்தோடு மூடிக் களங்கம் பொதிந்திட்ட
கயரோகி யென்றுமொருநாள்
கண்கொண்டு பார்க்கவும் கடவதன்று எனவும்
கடற்புவி யெடுத்திகழவிண்
புலத்தோடு முடுமீன் கணத்தோடு மோடுநின்
போல்வார்க்கு மாபாதகம்
போக்குமித் தலமலது புகலில்லை காண்மிசைப்
பொங்குபுனல் கற்பகக்காடு
அலைத்தோடு வைகைத் துறைப்படி மடப்பிடியோடு
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (2)

### தெளிவுரை

1. தேவர் கூட்டம் இனத்துடன் பிழிந்து வார்த்துப் பருகிச் சுவை பார்த்து உமிழ்ந்த சக்கை நீ எனவும், தீயைப் போன்ற நஞ்சினைக் கக்கும் இராகு என்னும் கரும்பாம்பின் எச்சில் எனவும்,

2. கலையாகிய தோடுகளால் மூடப்பட்ட கறை பொருந்திய கய நோய் உடையவன் எனவும், ஒருநாளில் ஒருவரும் நின்னைக்

கண் எடுத்துப் பார்க்கவும் கூடாது என்று கடலால் சூழப்பட்ட உலகத்தால் இகழவும்

3. வான் வட்டத்தில் ஓடும் விண்மீன்களுடன் ஓடும் உன்னைப் போன்றவருக்குப் பெரிய பாவச் செயலைப் போக்கு வதற்கு இந்தப் பதியே அல்லாது வேறு அடைக்கலம் இல்லை. மேலே பெருகும் வெள்ளம் கற்பகச் சோலையையும்

4. வருத்தி அதற்கு மேலே ஓடுகின்ற வைகை ஆற்றுத் துறையில் நீராடும் இளம் பெண் யானை போன்ற இவளுடன், சந்திரனே ஆடுதற்கு வருவாயாக! உரையாணிப் பொன் மலையான மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெரு மானுடன் சேர்ந்துள்ள மாணிக்கவல்லியுடன் சந்திரனே, ஆட வருவாயாக!

**விளக்கம்**

தெய்வக்குழாம் - தேவர்கூட்டம். தேவர்கள் சந்திரன் ஒளியை உண்பர் என்பது மரபு. ஆதலால் 'தெய்வக்குழாம் பிழிந்து ஊற்றிக் குடித்துச் சுவைத்து உமிழ்ந்த கோது' என்றார். தேவர் கூட்டம் சந்திரன் ஒளியைப் பிழிந்து ஊற்றிக் குடித்துச் சுவைத்து உமிழ்ந்த சக்கை என்பது பொருள். கோது - சக்கை. இருகோள் - இராகு, கேது. உச்சிட்டம் - எச்சில்.

2. கலைத்தோடு - கலைத்தொகுதி; ஆடையின் தொகுதி என்றும் கொள்ளலாம். களங்கம் - சந்திரனிடம் உள்ள கறுப்பு. கயரோகி - சய ரோகத்தை - இருமல் நோயை - உடையவன். சந்திரன் உடல் தேய்வதால் இவ்வாறு கூறப்பட்டது.

ஒருநாள் கண் கொண்டு பார்க்கவும் கடவது அன்று - சந்திரனை விநாயக சதுர்த்தியன்று காணலாகாது என்பர். கடவதன்று - கூடாது. கடற்புவி - கடலால் சூழப்பட்ட உலகம்.

3. விண்புலம் - வானில். உடுமீன் - நட்சத்திரம். மாபாதகம் - பெரும்பாவம். சோமசுந்தரக் கடவுள் ஒருவனது மாபாதகத்தைத் தீர்த்தருளினார். இதனை 'மாபாதகம் தீர்த்த திருவிளையாடலால்'

அறியலாம். எனவே 'மாபாதகம் போக்கும் இத்தலம்' என்றார். இத்தலம் - மதுரை. புகல் - அடைக்கலத்தானம். காண் - அசை நிலை. மிசைப் பொங்கு - மேல் எழும்.

4. அலைத்தோடு - வருத்தி ஓடும். மடப்பிடி - இளமை யுடைய பெண் யானை. வாவே - வருவாயாக.

இதனாலும் சாம உபாயம் கூறப்பட்டது. (2)

66. கீற்றுமதி எனநிலவு தோற்றுபரு வத்திலொளி
கிளர்நுதல் செவ்விவவ்விக்
கெண்டைத் தடங்கணார் எருவிட் டிறைஞ்சக்
கிடந்தது முடைந்தமுதம்விண்டு
ஊற்றுபுது வெண்கலை யுடுத்துமுழு மதியென
உதித்தவமை யத்தும்அம்மை
ஒண்முகத் தொழுகுதிரு வழகைக் கவர்ந்துகொண்டு
ஓடினது நிற்கமற்றை
மாற்றவ ளொடும்கேள்வர் மௌலியில் உறைந்ததும்
மறந்துனை யழைத்தபொழுதே
மற்றிவள் பெருங்கருணை சொற்றிடக் கடவதோ
மண்முழுதும் விம்முபுயம்வைத்து
ஆற்றுமுடி அரசுதவும் அரசிளங் குமரியுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (3)

**தெளிவுரை**

1. கீற்றைப் போன்ற சந்திரனான நிலவு தோன்றும் காலத்தில் ஒளி விளங்கும் நெற்றி அழகைக் கவர்ந்து கெண்டை மீன் போன்ற விழிகளையுடைய மடந்தையர் தங்கட்கு விரைந்து திருமணம் நிறைவேற வேண்டி எருவைப்பிட்டு இட்டு வழிபடும்படியாக இருந்ததும்

2. அமுதம் உடைந்து விரிந்து ஊற்றுவதால் புதிய வெள்ளைக் கலையை உடுத்து நிறைந்த நிலவு என்று கூறுமாறு தோன்றிய காலத்திலும் மீனாட்சி அம்மையாரின் ஒளியுடைய முகத்தில் ஒழுகும் அழகைக் கைப்பற்றிக் கொண்டு ஓடியதும் ஆகிய குற்றங்கள் நின்னிடம் உள்ளன. இருந்தும்

3. மேலும் சகக்களத்தியான கங்கை தம் கணவரான சிவபெருமான் சடைமுடியில் தங்கியிருப்பதையும் மறந்து விட்டு அழைத்தாள் என்றால் எம் அம்மை இவளின் அருள் திறத்தை எடுத்துக் கூற இயலுமோ! பூ மண்டலம் முழுவதையும் தம் விம்மும் தோளில் வைத்துத் தாங்கிய

4. முடியரசன் ஆன மலையத்துவசன் பாண்டியன் பெற்ற இளவரசியாகிய கன்னியுடன் சந்திரனே, விளையாடுதற்கு வருவாய்! சிறந்த பொன் மலையை வில்லாய்க் கொண்ட சிவபெரு மானுடன் சேர்ந்துள்ள மாணிக்கவல்லியுடன் ஆட வருவாயாக!

**விளக்கம்**

இதனாலும் சாமஉபாயம் கூறப்படுகின்றது. கீற்றுமதி- இளம்பிறை. ஒளிகிளர் நுதல் செவ்வி - ஒளி விளங்கும் நெற்றி அழகை. வவ்வி - கவர்ந்து. கெண்டைத் தடங்கணார் - கெண்டை மீன் போன்ற பெரிய கண்ணையுடைய பெண்டிர். எருஇட்டு இறைஞ்சும் - தாம் விரைவில் மணம் பெற வேண்டும் என்று எருவை இட்டு வணங்கும். இளம் பெண்கள் விரைவில் திருமணம் தங்களுக்குக் கூட வேண்டும் என எண்ணி நிலாச் சோறு சமைத்துப் படைப்பர். அப்போது எருவைப்பிட்டுச் சந்திரனை வணங்குவது வழக்கம்.

3. உடைந்து அமுதம் விண்டு ஊற்றுப்புது வெண்கலை உடுத்து முழுமதி என உதித்த அமையத்தும் - அமுதம் உடைந்து விரிந்து ஊற்றுவதால் புதிய வெள்ளைக் கலையை உடுத்து முழுமதி எனத் தோன்றிய போதும். ஒண்முகத்து ஒழுகு திருவழகைக் கவர்ந்து கொண்டு ஓடினதும் - இவ்வம்மையாரின் முகஅழகைக் கவர்ந்து ஓடினதும். அம்மையின் முகஅழகே நிறைமதி என்பது கருத்து.

3. மாற்றவள் - சகக் களத்தியான கங்கை. கேள்வர் - கணவரான சிவபெருமான். மௌலி - முடிச்சடையில்.

சந்திரன் முதலில் அம்மையின் நெற்றி அழகைக் கவர்ந்தான். இரண்டாவதாக முக அழகைக் கவர்ந்தான். அவையே அல்லாது அம்மையின் சகக்களத்தியான கங்கையுடன் சிவபெருமான் முடியில் இருக்கின்றான். இக்குற்றங்களைச் சந்திரன் செய்திருந்தும் இவற்றை மறந்து உன்னை அழைத்தாள் என்க.

4. ஆற்று - தாங்குதல். முடியரசு - மலையத்துவசன். (3)

67. விண்டலம் பொலியப் பொலிந்திடுதி யேல்உனது
வெம்பணிப் பகைவிழுங்கி
விக்கிடக் கக்கிடத் தொக்கிடர்ப் படுதிவெயில்
விரியும் சுடர்ப்பருதியின்
மண்டலம் புக்கனை இருத்தியெனி ன்ஒள்ளொளி
மழுங்கிட வழுங்கிடுதிபொன்
வளர்சடைக் காட்டெந்தை வைத்திடப் பெறுதியேல்
மாசுணம் சுற்றவச்சம்
கொண்டுகண் துஞ்சா திருப்பது மருப்பொங்கு
கோதையிவள் சீறடிகள்நின்
குடர்குழம் பிடவே குமைப்பதும் பெறுதியெம்
கோமாட்டி பாலடைந்தால்
அண்டபகி ரண்டமும் அகண்டமும் பெறுதியால்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (4)

**தெளிவுரை**

1. வானத்தில் விளங்குமாறு அங்குத் தங்குவாயானால், நின் கொடிய பகைவனான பாம்பு விழுங்கி விக்கவும் கக்கவுமாய் நீ துன்பப்படுவாய். வெயிலைப் பரப்பும்

2. கதிரவன் மண்டலத்தில் போய் இருப்பாயானால், நின் ஒளிமங்கப் பெற்று வருந்துவாய். பொன்னைப் போன்ற சடைக்

கூட்டத்தில் எம் பெருமானால் வைக்கப் பெறுவாயானால், பாம்பால் சுற்றப்பட்டுப் பயம் கொண்டு

3. தூங்காது இருப்பதும், மணம் உடைய மாலை அணிந்த இவள் சிறிய அடிகள் உன் குடல் கலங்கும்படி மிதிப்பதும் பெறுவாய். ஆனால் எம் பெருமாட்டியிடம் அடைந்தாயானால்,

4. அண்டங்களையும் வெளி அண்டங்களையும் மற்றுமுள்ள எல்லா உலகங்களையும் பெறுவாய். எனவே, சந்திரனே விளை யாட வருவாயாக. சிறந்த பொன் மலையான மேருவை வில்லாகக் கொண்ட சிவபெருமானுடன் சேர்ந்துள்ள மாணிக்க வல்லியுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

1. இதில் தான உபாயம் அமைந்துள்ளது. விண்டலம் - வானம். பொலிந்திடுதியேல் - இருப்பாயானால். வெம்பணிப் பகை - கொடிய பாம்பாகிய பகை. பணி - பணமுடையது; பணம் - படம். கக்குதல் - வாந்தி செய்தல். இடர்ப்படுதி - துன்பப் படுவாய். தொக்கு - சேர்ந்து.

2. சுடர்ப்பருதியின் மண்டலம் - கதிரவன் மண்டலம். சூரிய மண்டலம் புகுந்தால் சந்திரன் ஒளிகுன்றிக் காணப்படுவான் என்க. எந்தை - சிவபெருமான். வைத்திடப் பெறுதியேல் - வைக்கப் பெற்றாய் என்றால். மாசுணம் - பாம்பு.

3. மருப்பொங்கு - நறுமணம் மிகும். கோதை - மாலை; இங்கு மாலையை அணிந்தவளைக் குறித்தது. சீறடிகள் - சிறிய அடிகள். குடர் குழம்பிட - வயிறு கலங்க. குமைப்பதும் - மிதிக்கப் பெறுவதும். பெறுதி - அடைவாய். எம் கோமாட்டி பால் - எம் அரசியிடம். அண்டம் - நிலவுலகம். பகிரண்டம் - வெளியுலகம். அகண்டம் - பிறவுலகங்கள். பெறுதியால் - அடைவாய்; ஆல் - அசை.

மேற்கூறப்பட்ட துன்பங்களை அடையாமல் எம் அம்மை யிடம் சேர்ந்தால் உலகம் முழுதும் பெற்று இன்பம் அடைவாய் எனத் தானம் கூறப்பட்டது. (4)

68. எண்ணில்பல புவனப் பெருந்தட்டை ஊடுருவி
இவள்பெரும் புகழ்நெடுநிலா
எங்கணும் நிறைந்திடுவ தங்கதனின் மெள்ளநீ
எள்ளளவு மொண்டுகொண்டு
வெண்ணிலவு பொழிவது கிடைத்தனை மடுத்திவள்
விழிக்கடை கொழித்தகருணை
வெள்ளந் திளைத்தாடு பெற்றியால் தண்ணளி
விளைப்பதும் பெற்றனைகொலாம்
மண்ணிலொண் பைங்கூழ் வளர்ப்பதுன் இடத்தம்மை
வைத்திடும் சக்தியேகாண்
மற்றொரு சுதந்தரம் நினக்கென இலைக்கலை
மதிக்கடவுள் நீயும்உணர்வாய்
அண்ணலங் களியானை யரசர்கோ மகளுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. (5)

**தெளிவுரை**

1. கணக்கில்லாத பல உலகங்களாகிய பெருந்தட்டுக்களை ஊடுருவிப் போய் இவளது பெரிய புகழாகிய நெடிய ஒளி எவ்விடத்தும் நிறைந்திருப்பது, அவ்வொளியில் நீ மெதுவாகச் சிறிதளவு அள்ளிக் கொண்டு

2. வெண்மையான நிலவைச் சொரியும் தன்மையை அடைந்தாய். இவளது விழிக்கடையின் பார்வை பெற்றுக் கொழிக்கப் பெறும் அருள் வெள்ளத்தில் முழுகி ஆடும் தன்மை உடையை ஆனால் குளிர்ந்த ஒளியைப் பொழிதலும் பெற்றனை;

3. பூமியில் ஒள்ளிய பயிரை நீ வளர்க்கின்ற தன்மையும் அம்மையானவள் நின்னிடம் வைத்திருக்கின்ற அருளாலே தான்! இதுவன்றி நினக்கெனத் தனி ஆற்றல் இல்லை, இதனைக் கலைபதிக் கடவுளே நீயும் அறிந்து கொள்வாயாக. ஆதலால்

4. பெரிய அழகிய களிப்பையுடைய யானைப்படையை யுடைய மன்னர் தலைவனான பாண்டியனின் மகளுடன், சந்திரனே, விளையாடுதற்கு வருவாயாக! சிறந்த பொன் மலையான மேருவை வில்லாகக் கொண்ட சிவபெருமானுடன் சேர்ந்துள்ள இம் மாணிக்க வல்லியுடன் விளையாட வருவாயாக.

**விளக்கம்**

இதிலும் தான உபாயம் அமைந்துள்ளது.

1. எண்இல் - கணக்கில்லாத. புவனம் - உலகம். தட்டு - அடுக்கு.

2. கிடைத்தனை - பெற்றனை. கொல் ஆம் - அசைகள். பெற்றியதால் - தன்மையால்.

3. பைங்கூழ் - பசிய பயிர். சத்தி - அருள். காண் - அசை. சுதந்தரம் - உரிமை. மீனாட்சியம்மையின் அருள் பெறாது போனால் உனக்கென ஒன்றும் இல்லை. ஆதலால் அப்பெரு மாட்டியின் கருணையைப் பெற்று வாழ்க! என்று இப்பாடலில் தானம் பேசப்படுகின்றது. (5)

69. முன்புஉம்பர் அரசுசெய் பெரும்பாவ மும்கோவ
மூரிமாத் தொடர்சாவமும்
மும்மைத் தமிழ்ச்செழியன் வெப்பொடு கொடுங்கூனும்
மோசித்த இத்தலத்தின்
தன்பெருந் தன்மையை உணர்ந்திலைகொல் சிவராச
தானியாய்ச் சீவன்முத்தித்
தலமுமாய்த் துவாதசாந் தத்தலமும் ஆனதுஇத்
தலம்இத் தலத்தடைதியேல்
மன்பெருங் குரவற் பிழைத்தபா வமும்மற்றை
மாமடிக ளிடுசாவமும்
வளரிளம் பருவத்து நரைதிரையும் முதிர்கூனும்
மாற்றிடப் பெறுதிகண்டாய்

அன்பரென் புருகக் கசிந்திடு பசுந்தேனோடு
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (6)

**தெளிவுரை**

1. முன்காலத்தில் தேவரின் மன்னனான இந்திரன் செய்த பெரிய பாவமும், சினமும், வலிமையும் உடைய ஐராவத யானையைத் தொடர்ந்துள்ள சாபமும் முத்தமிழை வளர்த்த பாண்டியனின் வெப்பு நோயுடன் முதுகின் வளைவையும் போக்கிய இந்தப் பதியின்

2. பெருமையை நீ அறியாயோ! சிவன் ஆட்சி செய்யும் தலைநகரமாகவும் உயிர்கள் எல்லாம் முத்தி அடையும் பதியாகவும் துரியாதீதப் பதியாகவும் இப்பதி விளங்குகிறது. இத்தகைய தலத்தை நீ அடைவாயானால்

3. பெருமையுடைய வியாழ குருவுக்கு நீ செய்த பெருங்குற்றமும் பின்னும் மாமனாரான தக்கன் இட்ட சாபச் சொல்லும் வளர்கின்ற இளம் பருவத்தில் ஏற்பட்ட நரையும் திரையும் முதிர்ந்து வளையும் தன்மையும் நீங்கப் பெறுவாய்.

4. அடியார்கள் எலும்பு உருக ஒழுகும் இனிய தேன் போன்றவளுடன் சந்திரனே, ஆடவருவாயாக! சிறந்த பொன் மலையான மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெரு மானுடன் சேர்ந்துள்ள மாணிக்க வல்லியுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

1. உம்பர் அரசு - தேவரின் மன்னனான இந்திரன். கோவ மூரிமா - சினமும் வன்மையும் உடைய யானையான ஐராவதம். மும்மைத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்ற மூன்று வகைப்பட்ட தமிழ். செழியன் - கூன்பாண்டியன்; நின்ற சீர் நெடுமாறன். வெப்பு - சுரம். கூன் - முதுகு வளைவு. மோசித்த - நீக்கிய.

2. சிவராச தானி - தலைநகர். சீவன் முத்தித் தலம் - துவாத சாந்தத் தலம். அடைதியேல் - அடைவாயானால்.

3. குரவன் பிழைத்த - வியாழன் பிருகற்பதிக்குச் செய்த பாவம். மாமடிகள் - மாமனார். தக்கன் இட்ட சாபம். சந்திரன் உரோகிணியிடத்து மிக்க விருப்பம் உடையவனாய் விளங்கி மற்ற மனைவியரைப் புறக்கணித்தான். அதனால் சினம் கொண்ட தக்கன் இட்ட சாபம். அது சந்திரனின் கலைகள் குறையுமாறு இட்டதாகும்.

4. அன்பர் - அடியார். பசுந்தேனோடு - இனிய தேன் போன்ற மீனாட்சி அம்மையார். என்பு - எலும்பு.

இத்தலம் பாவம், சாபம், வெப்பு, கூன் ஆகியவற்றை நீக்கிய தலம். ஆதலால் நீயும் இங்குவரின் உன் சாபம், பாவம், நரை, திரை, கூன்கள் நீங்கப் பெறுவாய். என்பதாம்.

இப்பாடலும் தான உபாயத்தில் அமைந்துள்ளது.

70. கும்பஞ் சுமந்தமத வெள்ளநீர் கொட்டும்
கொடுங்களி றிடும்போர்வையான்
குடிலகோ டீரத் திருந்துகொண்டு அந்நலார்
கொய்தளிர்க் கைவருடவும்
செம்பஞ்சு உறுத்தவும் பதைபதைத்து ஆரழல்
சிகையெனக் கொப்புளிக்கும்
சீறடிகள் கன்றிச் சிவந்திடச் செய்வதும்
திருவுளத் தடையாதுபொன்
தம்பஞ் சுமந்தீன்ற மானிட விலங்கின்
தனிப்புதல்வ னுக்குவட்டத்
தண்குடை நிழற்றுநினை வம்மென வழைத்தனள்
தழைத்திடு கழைக்கரும்பொன்
தம்பஞ் சுடன்கொண்ட மகரக் கொடிக்கொடியொடு
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (7)

**தெளிவுரை**

1. மத்தகம் பொருந்திய மதநீரின் வெள்ளத்தைச் சொரியும் கொடிய யானையினது தோலை உரித்துப் போர்த்துக் கொண்ட சிவபெருமானின் வளைவான சடைமுடியுள் நீ தங்கியிருந்து அழகிற் சிறந்த மடந்தையர் கொய்யப்படும் தளிர் போன்ற தம் கையினால் தடவவும்,

2. செம்பஞ்சு அழுத்தவும் பதைபதைத்து நிறைந்த நெருப்பின் கொழுந்து என்னும்படி கொப்புளம் ஏற்படும் தன்மை யுடைய் சிறிய அடிகள் கன்றிச் சிவப்படையுமாறு செய்வதும் உன் உள்ளத்தில் கொள்ளாமல்,

3. பொன் தூண் சுமந்து பெற்ற நரசிம்மமான திருமாலின் மகனான காமனுக்கு வட்டமான குளிர்ந்த குடையாய் நிழல் தருகின்ற உன்னை வருவாயாக என அழைத்தாள். தழைத்த கழையாகிய கரும்பு வில்லும்

4. ஐந்து அம்புகளும் கொண்ட மகரக் கொடியையுடைய பூங்கொடி போன்ற மீனாட்சி அம்மையுடன் விளையாட வருவாயாக! சிறந்த பொன் மலையான மேருவை வில்லாக உடைய சிவபெருமானுடன் கூடியுள்ள அம்மையுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

இதில் பேத உபாயம் கையாளப்பட்டுள்ளது.

1. கும்பம் - மத்தகம். கொட்டும் - சொரியும். போர்வை யான் - போர்வையை உடைய சிவபெருமான். குடில கோடீரம் - வளைந்த சடை. அந்நலார் - அம் + ந(ல்)லார்; அழகிய மங்கையர். கொய் தளிர்க்கை - கொய்யப்படும் தளிரைப் போன்ற கை. வருடவும் - தடவவும்.

2. உறங்கவும் - அழுந்தவும். பதைபதைத்து - துடிதுடித்து. ஆர் அழல் - அரிய நெருப்பு. சிகை - கொழுந்து. கொப்பளிக்கும் - கொப்பளம் தோன்றும். சீறடிகள் - சிறிய அடிகள்.

3. பொன் தம்பம் - பொன் தூண். சுமந்து ஈன்ற - சுமந்து பெற்ற. மானிடவிலங்கு - நரசிம்மம்; திருமால். புதல்வன் - மகனான மன்மதன். வட்டத்தண்குடை - வட்டமான குளிர்ந்த குடை. நிழற்றும் - நிழல் செய்யும். வம்மென - வருவாயாக என. கழைக்கரும்பு - கழையான கரும்பு.

4. அம்பு அஞ்சு - ஐந்து மலர் அம்புகள்; மகரக் கொடிக் கொடியொடு - மீன் கொடியுடைய கொடி போன்ற மீனாட்சி யம்மை. இப்பெருமாட்டிக்கும் கரும்புவில்லும் ஐந்து அம்புகளும் உரியன. (7)

71. துளிதூங்கு தெள்ளமுத வெள்ளருவி பொழியும்நின்
தொன்மரபு தழையவந்து
தோன்றிடும்கௌரியர் குலக்கொழுந் தைக்கண்டு
துணைவிழியும் மனமுநின்று
களிதூங்க அளவளாய் வாழாமல் உண்ணமுது
கலையொடும் இழந்துவெறுமட்
கலத்திடு புதுக்கூழி னுக்கிரவு பூண்டொரு
களங்கம்வைத் தாயிதுவலால்
ஒளிதூங்கு தெளிவிசும் பினினின்னோ டொத்தவன்
ஒருத்தன் கரத்தின்வாரி
உண்டொதுக் கியமிச்சில் நள்ளிருளில் அள்ளியுண்டு
ஓடுகின் றாயென்செய்தாய்
அளிதூங்கு ஞிமிறெழுந் தார்க்கும் குழல்திருவொடு
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (8)

## தெளிவுரை

1. துளிகளாகப் பொழியும் தெளிந்த அமுதமான வெண்ணிற அருவி பொழியும் நின் பழைமையான குலம் தழைக்கும்படி வந்து தோன்றிய பாண்டிய குலக் கொழுந்தான மீனாட்சியைக் கண்டு இரு கண்களும் மனமும் பொருந்தி

2. மகிழ்ச்சி தங்கக் கலந்து வாழாமல் உண்ணப்படும் அமுது கலையுடன் இழந்து சிறுமியுடன் வறிய மண்பாத்திரத்தில் படைக்கும் புதிய சோற்றுக்கு இரந்து ஒப்பில்லாத களங்கத்தை ஏற்படுத்தினாய். இதுவன்றி

3. ஒளி பொருந்திய தெளிந்த வானத்தில் நின்னுடன் ஒப்பவனான ஒருவன் கையில் எடுத்து உண்ட மிச்சத்தை நள்ளிரவில் வாரி உண்டு பின் ஓடுகின்றாய்! என்ன இழிவான செயல்களை எல்லாம் நீ செய்கின்றாய்.

4. அருள் உடைய வண்டுகள் எழுந்து ஒலிக்கும் கூந்தலை யுடைய செல்வியுடன் சந்திரனே, விளையாட வருவாயாக! சிறந்த பொன் மலையான மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெரு மானுடன் சேர்ந்துள்ள மாணிக்க வல்லியுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

1. இதுவும் பேத உபாயம் கொண்டு விளங்குகிறது. துளி - துளித்தல். தொல்மரபு - பழைய குலம். கௌரியர் - பாண்டியர். கொழுந்து - அம்பிகை. துணைவிழி - இருகண்கள்.

2. களிதூங்க - மகிழ்ச்சி மிக. அளவளாய் - கலந்து. அமுது கலையொடும் இழந்து - அமிர்தத்தைக் கிரணங்களுடன் இழந்து; உணவையும் உடையையும் இழந்து என்பது வேறு ஒரு பொருள்.

மட்கலத்தில் புதுக்கூழினுக்கு இரவு பூண்டு - பூமியில் உண்டாகின்ற புதிய பயிர்களின் பொருட்டு இரவுக் காலத்தின் தலைமையைப் பூண்டு; மண் பாத்திரத்தில் இடும் புதிய கூழ் உணவின் பொருட்டு இரத்தலை மேற்கொண்டு எனவும் பொருள் கொள்ளலாம்.

3. ஒருத்தன் - கதிரவன். கரம் - கிரணம்; கை. நள்ளிருள் - இரவு. கதிரவனிடத்திலிருந்து பெற்றுச் சந்திரன் ஒளியை வீசுகின்றான். ஆதலால் இவ்வாறு உரைத்தார்.

4. அளி தூங்கு ஞிமிறொடு - அருள் தங்கிய வண்டு; அல்லது வண்டும் ஞிமிறும். ஆர்க்கும் - ஒலிக்கும். குழல் - கூந்தல். திரு - அம்பிகை. (8)

72. மழைக்கொந் தளக்கோதை வம்மென்ற வளவில்நீ
வந்திலை யெனக்கடுகலும்
வாள்முகச் செவ்விக் குடைந்தொதுங் கினவன்எதிர்
வரவொல்கி யோபணிகள்கோள்
இழைக்குங்கொல் பின்றொடர்ந் தெனவஞ்சி யோதாழ்த்
திருந்தனன் போலுமெனயாம்
இத்துணையும் ஒருவாறு தப்புவித் தேம்வெகுளில்
இனியொரு பிழைப்பில்லைகாண்
தழைக்கும் துகில்கொடி முகில்கொடி திரைத்துமேல்
தலம்வளர் நகில்கொடிகளைத்
தாழ்குழலும் நீவிநுதல் வெயர்வும் துடைத்தம்மை
சமயமிது வென்அலுவல் இட்டு
அழைக்கும் தடம்புரிசை மதுரைத் துரைப்பெணுடன்
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (9)

**தெளிவுரை**

1. மேகத்தைப் போன்ற கூந்தலையுடைய அம்பிகை யானவள் நின்னை வருக என்று அழைத்தாள். அவ்வளவில் நீ வாராமலிருந்ததால் சினம் கொள்ளுவதும் ஒளி பொருந்திய முகத்தின் அழகுக்குத் தோற்றுப்பின் வாங்கியவன் உன் முன் வருவதற்குத் தளர்ச்சி அடைந்தோ, அல்லது பாம்புகள் பின் தொடர்ந்து வந்து கேடு

2. தரும் என்று எண்ணி அஞ்சியோ, தாமதனாய் இருந்தான் போலும் என்று யாம் கூறி ஒருவிதமாக உன்னை அவள் சினத்துக்கு ஆளாகாமல் த்டுத்துக் காத்திருக்கின்றோம். அவள்

சினம் கொண்டால் ஒருவழியாலும் பிழைப்பதற்கு இடம் இல்லை. அறிந்து கொள்வாய்!

3. மிகுதியாய் மாடங்களில் கட்டப்பட்ட கொடியாடைகள் மேக மண்டலங்களைத் திரையச் செய்து, மேல் வானத்தில் வளர்கின்ற கொங்கைகளையுடைய பூங்கொம்பு போன்ற மடந்தையரின் கூந்தலையும் தடவி நெற்றி வியர்வையையும் துடைத்து அம்மையைக் காண்பதற்கு இது நல்ல சமயம் என்று உரக்கக் கூவுதல் செய்து அழைக்கும்

4. பெருமதில்கள் பொருந்தியுள்ள மதுரைப் பதிக்கு இறைவியான மீனாட்சியம்மையுடன் விளையாட வருவாயாக! சிறந்த பொன் மலையான மேரு மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானுடன் கூடியிருக்கும் மீனாட்சிம்மையுடன் விளை யாட வருவாயாக!

**விளக்கம்**

இதில் தண்ட உபாயம் பொருந்தியுள்ளது.

1. மழை - மேகம். கொந்தளக் கோதை - குழன்ற கூந்தலை யுடைய அம்பிகை. கோதை - மாலை போன்றவள்; ஆகுபெயர். கடுகல் - சினம் கொள்ளல். ஒல்கியோ - தளர்ந்தோ. பணிகள் - பாம்புகளான இராகு கேதுக்கள்.

2. இழைக்கும் கொல் - செய்யுமோ. தாழ்த்திருந்தனன் - காலம் தாழ்த்தியிருந்தான். தப்புவித்தோம் - நீ உய்ந்திருக்கும்படி செய்தோம். வெகுளின் - அவள் சினந்தால். பிழைப்பு இல்லை - தப்புதல் இல்லை; பிழைக்க முடியாது.

3. தழைக்கும் துகிற்கொடி - மிக்க கொடிகள். முகிற்கொடி திரைத்து - மேகங்களின் ஒழுங்கைச் சுருட்டி; திரைத்து - சுருட்டி. மேற்றலம் - விண் உலகம். நகிற் கொடிகள் - கொங்கைகளை யுடைய தெய்வ மங்கையர். அம்மை சமயம் - அம்பிகை தரிசனம் அளித்தற்குரிய செவ்வி. அலுவல் இட்டு - வேலையில் ஏவி.

4. தடம்புரிசை - பெரிய மதில்களை உடைய. (9)

73. ஏடகத் தெழுதாத வேதச் சிரத்தர
சிருக்குமிவள் சீறடிகள்நின்
இதயத் தடத்தும் பொலிந்தவா திருவுளத்
தெண்ணியன் றேகபடமா
நாடகத் தைந்தொழி ல்நடிக்கும் பிரான்றெய்வ
நதியொடு முடித்தல்பெற்றாய்
நங்கையிவள் திருவுள மகிழ்ச்சிபெறில் இதுபோலொர்
நற்றவப் பேறில்லைகாண்
மாடகக் கடைதிரித் தின்னரம் பார்த்துகிர்
வடிம்புதை வருமந்நலார்
மகரயாழ் மழலைக்கு மரவங்கள் நுண்துகில்
வழங்கக் கொழுங்கோங்குதூங்கு
ஆடகப் பொற்கிழி யவிழ்க்குமது ரைத்திருவொடு
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. (10)

**தெளிவுரை**

1. ஏட்டில் எழுதப்படாத வேதத்தின் உச்சியில் ஆட்சி செய்யும் இவளுடைய சிறிய அடிகள் நின் இதயபீடத்தும் நிறையும் தன்மையை நினைத்தன்றோ! வஞ்சமாக

2. நாடக வழியில் ஐந்தொழிலும் நிகழ்கின்றபடி நடனமாடும் பெருமான் தெய்வ நதியான கங்கையுடன் முடியில் வைக்கப் பெற்றாய். நம் பெருமாட்டியின் மனமகிழ்ச்சியைப் பெறுவா யானால் இதனைப் போல் அடையக் கூடிய பேறு வேறு இல்லை.

3. முறுக்காணியை அசைத்து முடுக்கி இனிய நரம்பின் ஓசையை முழக்கி நகத்தின் விளிம்பால் தடவும் அழகுள்ள பெண்கள் வாசிக்கும் மகர வடிவான வீணையின் இசைக்குக் குங்கும மரங்கள் நுண்மையான துகில் போன்ற மலர்களை வழங்கக் கொழுங்கோங்கு

3. பொன்கிழி அவிழ்க்கும் இயல்புடைய மதுரைத் திருமகளுடன் ஆடவா! சிறந்த பொன்மலையான மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானும் சேர்ந்துள்ள மாணிக்க வல்லியுடன் விளையாட வருவாயாக!

**விளக்கம்**

1. ஏடகத்து - ஏட்டில். வேதச்சிரம் - வேதத்தின் உச்சி; உபநிடதம். இதயத்தடாகம் - உள்ளம் என்ற நீர்நிலை. பொலிந்தவா - பொலிந்த விதத்தை.

2. ஐந்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்று ஐந்து தொழில். தெய்வ நதி - கங்கையாறு. நாடகம் - கூத்து.

3. மாடகம் - யாழின் உறுப்பு; முறுக்காணி. திரித்து - முறுக்கி. உகிர் - நகம். யாழ் மழலைக்கு - யாழ்ப் பாட்டாகிய மழலைக்கு. மரவம் - வெண்கடம்பு. அதன் மலர் துகில் போல் விளங்குவது.

கோங்கின் மலருக்குப் பொன் உவமை. ஆடகப் பொற்கிழி - பொன் முடிப்பு. அவிழ்க்கும் - தருகின்ற. இப்பாடலும் தண்ட உபாயத்தில் அமைந்தது. (10)

## 8. அம்மானைப் பருவம்

74. கரைக்குங் கடாமிரு கவுள்குட முடைந்தூற்று
களிறுபெரு வயிறுதூர்ப்பக்
கவளம் திரட்டிக் கொடுப்பதென வும்சூழ்ந்தொர்
கலைமதிக் கலசஅமுதுக்கு
இரைக்கும் பெருந்தேவர் புன்கண் துடைத்திட
எடுத்தமுத கலசம்வெவ்வேறு
ஈந்திடுவ தெனவுமுழு முத்திட்டு இழைத்திட்ட
எறிபந்தின் நிரையென்னவும்

விரைக்கும் தளிர்க்கைக் கொழுந்தா மரைத்துஞ்சி
மீதெழுந்து ஆர்த்தபிள்ளை
வெள்ளோ திமத்திரளி தெனவும் கரும்பாறை
மீமிசைச் செஞ்சாந்துவைத்து
அரைக்கும் திரைக்கைவெள் ளருவிவை கைத்துறைவி
அம்மானை ஆடியருளே
ஆகம் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை ஆடியருளே. (1)

**தெளிவுரை**

1. ஓடும் மதநீரை இரண்டு கன்னங்களாகிய குடங்களைத் திறந்து சொரியும் ஆண் யானையின் பெரிய வயிற்றை நிரப்பும்படி உணவு உருண்டையைத் திரட்டிக் கொடுத்தது போலவும், சூழ்ந்து ஒரு கலை மதியின் கலச அமுதுக்காக

2. இரைச்சல் இடும் பெரிய தேவர்களின் துன்பத்தை நீக்கும் பொருட்டு அமுத கலசங்களை வேறு வேறாக எடுத்து மேல் எறிவதைப் போலவும்

முழுமையான முத்தால் அமைத்துச் செய்யப்பட்ட எறியப் படும் பந்துக்களின் வரிசை போலவும்,

3. நறுமணம் கமழும் தளிர் போன்ற கையாகிய தாமரைப் பூவில் தூங்கி மேலே எழுந்து ஆரவாரம் எழுப்பிய இள அன்னக் கூட்டம் இவை எனவும் கரிய பாறை மீது செந்நிறமான பூம் பராகங்களை வைத்து

4. அரைக்கின்ற அலைகளாகிய கைகளை யுடைய அருவி பாயும் வைகைத் துறைகளையுடைய தலைவியே! அம்மானை ஆடுவாயாக! ஒப்பில்லாத சிவபெருமானின் உடலில் ஒன்றாகக் கலந்து இடப்பாகத்தைத் தனக்கெனப் பிரித்துக் கொண்ட பெண்ணே, அம்மானை ஆடியருளுக.

**விளக்கம்**

ஆண்யானைக்கு இடும் உணவு உருண்டையைப் போலவும், தேவர்களின் துன்பத்தைப் போக்குதற்காக அமுதக்கலசங்களை எறிவதைப் போலவும், முத்தால் ஆன பந்துகளை மேலே எறிவதைப் போலவும், கையினின்று எழுந்து பறக்கின்ற அன்னக் குழாம் போலவும், அம்மானைக் காய்களை எறிந்து விளையாடு மாறு இதில் சொல்லப்பட்டுள்ளது.

1. கரைக்கும் - ஒழுகவிடும். கடாம் - மதநீர். கவுள் - கன்னம். கன்னமான குடம் உடைந்து ஊற்றும் எனக் கூட்டுக. களிறு - ஆண்யானை. தூர்ப்ப - நிறைக்க. கவளம் திரட்டி - கவளம் - ஒருவாய் உணவு. திரட்டி - உருண்டையாகத் திரட்டி. கலைமதிக்கலச அமுது - கலைகளையுடைய சந்திரனிடத்துள்ள கலச அமுது.

2. இரைக்கும் - விரும்பும்; விரும்பிக் கூச்சல் இடும். புன்கண் - துன்பம். சந்திரனின் அமுதக்கலசத்தை விரும்பித் தேவர் அது கிடைக்கப் பெறாது துன்பம் அடைகின்றனர். அவர்க்கு எடுக்கப் பட்ட கலசம் போல் என இயையும். ஒருகலசத்தை விரும்பு பவர்க்கு வேறு வேறு கலசம் ஈந்திடுவது போல என்ற நயம் இங்குப் பெறுகின்றது. நிரை - வரிசை.

3. விரைக்கும் தளிர் - மணம் வீசும் தளிர். இது கைக்கு உவமை. கையாகிய கொழுந்தாமரை என்க. கையாகிய தாமரை மலர்; உருவகம். பிள்ளை வெள் ஓதிமத்திரள் - வெண்மையான அன்னத்தின் கூட்டம். அம்பிகை அன்னத்தை வளர்த்தல் இங்குக் குறிப்பிடத் தக்கது. பிள்ளை - இளமையுடைய அன்னம். மீமிசை - மேல். செஞ்சாந்து - சிவந்த சாந்து.

4. திரைக்கை - அலையாகிய கை. அருவி - நீரோட்டம்.

அம்மானைக்குச் சோற்று உருண்டையும் அமுதக் கலசமும் முத்துப் பந்தும் அன்னமும் உவமைகள்.

ஆகம் - உடல். கலந்து - ஒன்றாய்ச் சேர்த்து. பாகம் பகுந்த - இடப்பாகத்தைப் பிரித்துக் கொண்ட. பெண் - விளி; பெண்ணே!

(1)

75. திங்கள் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
செருகுதிரு மணவாளன்மேல்
செழுமணப் பந்தரி லெடுத்தெறியும் அமுதவெண்
திரளையில் புரளும்அறுகால்
பைங்கண் சுரும்பென விசும்பில் படர்ந்தெழும்
பனிமதி மிசைத்தாவிடும்
பருவமட மானெனவென் அம்மனைநின் அம்மனைப்
படைவிழிக் கயல்பாய்ந்தெழ
வெங்கட் கடுங்கொலைய வேழக்கு ழாமிதென
மேகக் குழாத்தைமுட்டி
விளையாடு மழகளிறு கடைவாய் குதட்டமுகை
விண்டஅம் பைந்துகோத்த
அங்கட் கரும்பேந்தும் அபிடேக வல்லிதிரு
அம்மானை ஆடியருளே
ஆகம் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை ஆடியருளே. (2)

**தெளிவுரை**

1. பிறைத்திங்களை நீண்ட சடைமுடிமீது செருகிய சிறந்த மணவாளன் மீது திருமணப் பந்தலில் எடுத்து வீசப்படும் அமுதமாகிய வெள்ளை உருண்டையில் புரள்கின்ற ஆறுகால்களையும் பசுமையான கண்களையும் உடைய வண்டுகள் என விளங்கும் படியும்

2. வானில் எழுகின்ற குளிர்ந்த சந்திரன் மீது குதிக்கும் இளம்பருவம் உள்ள மான் எனக் கூறும்படியும், தாயே, நின் வெள்ளிய அம்மானையில் நின் ஆயுதம் போன்ற கண்கள் என்னும் கயல்மீன்கள் பாய்ந்து எழும்படி

3. கொடிய கண்களையும் கடுமையான கொலைத் தொழிலையும் உடைய யானைக்கூட்டம் இது என்று மேகக் கூட்டத்தை முட்டித் தாக்கி விளையாடும் இளங்களிறு கடை வாயைக் குதட்டி நிற்க. மொட்டு மலர்ந்த அரும்புகள் ஐந்தும் கோக்கப்படும்

4. அழகிய கணுக்களையுடைய கரும்பு வில்லைத் தாங்கி யுள்ள அபிடேகவல்லியே! ஒப்பற்ற சிவபெருமானின் உடம்பில் ஒன்றாகக் கலந்து இடப்பாகத்தைத் தனக்கெனப் பிரித்துக் கொண்ட அம்மையே, அம்மானை ஆடுவாயாக!

**விளக்கம்**

திங்கள் கொழுந்து - பிறைச்சந்திரன். கொழுந்து. படர் சடை - கொழுந்துவிட்டு வளரும் சடை. செருகு - செருகிய. அமுத வெண்திரள் - சோற்று உருண்டை.

2. அறுகால் பைங்கண் சுரும்பு - ஆறு கால்களையுடைய பசிய கண்ணையுடைய வண்டு. பனிமதிமிசை - குளிர்ந்த சந்திரன் மீது. பருவமடமான் - இளம் பருவம் உடைய மான். அம்மனை - தாயே; விளி. படைவிழிக்கயல் - ஆயுதம் போன்ற கண் ஆன கயல்மீன்.

3. வேழக்குழாம் - யானைக்கூட்டம். மேகக் குழாம் -மேகக் கூட்டம். முட்டி - மோதி. அம்மனைக்காய்க்குச் சோற்று உருண்டையும், மதியும், அதில் பாயும் அம்பிகையின் திருவிழிக்கு வண்டும் மானும் உவமைகள். மழகளிறு - இளமையுடைய ஆண் யானை, விநாயகர் என்றும் கொள்ளலாம். அம்பு ஐந்தும் கரும்பு வில்லும் அம்பிகைக்கும் உரியவை. (2)

76. கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியும்
கருணைப் பெருக்கூற வமுதூறு பார்வைக்
கடைக்கண் கறுப்பூறியும்
நள்ளூறு மறுவூ றகற்றுமுக மதியில்வெண்
ணகையூறு நிலவூறியும்
நற்றரள வம்மனையொர் சிற்குணத் தினைமூன்று
நற்குணம் கதுவல்காட்ட
உள்ளூறு களிதுளும் பக்குரவ ரிருவீரும்
உற்றிடு துவாதசாந்தத்து
ஒருபெரு வெளிக்கே விழித்துறங் கும்தொண்டர்
உழுவலன் பென்புருகநெக்கு

அள்ளூற உள்ளே கசிந்தூறு பைந்தேறல்
அம்மானை ஆடியருளே
ஆகம் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை ஆடியருளே. (3)

**தெளிவுரை**

1. தேன் பொருந்திய தாமரை மலர் போன்ற கையிலமைந்த சிவப்பான ஒளி கலத்தலால் சிவந்த நிறம் பெறப்பெற்றும், கருணை வெள்ளம் பெருக அமுதம் சுரக்கும் பார்வையால் கடைக் கண்ணில் அமைந்த கறுப்பு நிறம் பொருந்தப் பெற்றும்,

2. நடுவில் உள்ள களங்கமான குறையைப் போக்கிய முகம் என்னும் மதியில் தோன்றும் வெண்மையான நகையினால் தோன்றிய நிலவு போன்ற வெண்மையான நிறம் பெற்றும், நல்ல முத்து அம்மானை ஒப்பில்லாத அறிவுக் குணத்தை மூன்று வகையுள்ள சாத்துவிகம், இராசதம், தாமசம் ஆகியவற்றைப் பற்றுவதைக்காட்ட

3. மனத்தில் ஊறுகின்ற மகிழ்ச்சி பெருக அம்மையப்பர் ஆகிய நீவிர் இருவரும் பொருந்தியிருக்கும் உச்சிமேல் பன்னி ரண்டு அங்குலம் உள்ள இடத்திற்கு அப்பாற்பட்ட வெளியில் உறங்காமல் உறங்கும் அடியார்கள் சிறந்த அன்பர்கள் எலும்பும் இளக நெகிழ்ந்து

4. வாய் ஊறும்படி உள்ளத்தில் கசிந்து ஊறும் இனிய தேன் போன்றவளே! ஒப்பில்லாத சிவபெருமானுடைய உடலில் ஒன்றாகக் கலந்து இடப்பாகத்தைத் தனக்கெனப் பகுத்துக் கொண்ட பெண்ணே, அம்மானை ஆடியருளுவாயாக!

**விளக்கம்**

1. கள் ஊறு - தேன் பொருந்திய. கஞ்சக்கரம் - தாமரை போன்ற கை. சேயொளி - செம்மை + ஒளி; சிவந்த ஒளி. கருணைப் பெருக்கு - அருள் வெள்ளம். அமுது ஊறு - அமுதம் சுரக்கும். கறுப்பு ஊறியும் - கறுப்பு நிறம் பொருந்தப் பெறும்.

2. நள் ஊறு - நடுவில் அமைந்த. மறு - களங்கம். முகமதி - முகம் என்ற சந்திரன். நகை - சிரிப்பு; பல். நிலவு ஊறியும் - நிலவு போன்ற வெண்மையான ஒளி பொருந்தப் பெற்றும். சிற்குணம் - அறிவுக்குணம், சித்துவினது குணம். சித்து - ஆன்மா. மூன்று நற்குணம் - சாத்துவிகம், இராசதம், தாமதம் என்ற மூன்று நல்ல குணங்கள். கதுவல் - பற்றுதல்.

3. உள் ஊறு - மனத்தில் பொருந்தும். களி - மகிழ்ச்சி ததும்ப. குரவர் இருவீரும் - அம்மையப்பராகிய நீங்கள் இருவரும். துவாதசாந்தத் தொருபெருவெளி - உச்சிக்கு மேல் பன்னிரண்டு அங்குலம் உள்ள இடத்திற்கு அப்பாற்பட்ட வெளி. விழித்து உறங்கும் - உறங்காமல் உறங்குகின்ற. உழுவல் அன்பு - சிறந்த அன்பு. எழுபிறப்பும் தொடர்ந்து வரும் அன்பு. என்பு - எலும்பு.

4. அள் ஊற - வாய் ஊற. பைந்தேறல் - பசிய தேனைப் போன்றவளே!

அம்மானை ஆடும் அம்மையார் கொண்டது முத்தால் ஆன காய். அது சிவந்த கையில் பொருந்தும் போது சிவந்த நிறத்தைப் பெறுகின்றது. கடைக்கண் பார்வையால் கறுப்பு நிறம் அடை கின்றது. பற்களின் வெண்மையான ஒளியால் வெண்ணிறத்தை அடைகின்றது. இப்படி ஒரு பொருளில் பல நிறங்கள் அடைதல் ஓர் உயிரின் அறிவில் இராசதம், சத்துவம், தாமதம் என்னும் மூன்று குணம் பொருந்துதலை உணர்த்துகின்றது. இராசத குணத்தின் நிறம் சிவப்பு. தாமத குணத்தின் நிறம் கறுப்பு. சத்துவ குணத்தின் நிறம் வெண்மை என்பர்.

துவாத சாந்தம் - பிரமரந்திரத்துக்குப் பன்னிரண்டு அங்குலத் துக்கு மேற்பட்ட இடம். விழித்து உறங்குதல் - சாக்கிரத்தில் அதீதத்தைச் செய்தல். (3)

77. குலைபட்ட காந்தள் தளிர்க்கையில் செம்மணி
குயின்றவம் மனைநித்திலம்
கோத்தவம் மனைமுன் செலப்பின் செலும்தன்மை
கோகனக மனையாட்டிபால்
கலைபட்ட வெண்சுடர்க் கடவுள்தோய்ந் தேகவது
கண்டுகொண் டேபுழுங்கும்
காய்கதிர்க் கடவுளும் பின்றொடர்வது ஏய்ப்பக்
கறங்கருவி தூங்கஓலங்கும்
மலைபட்ட வாரமும் வயிரமும் பிறவுமா
மாமணித் திரளைவாரி
மறிதிரைக் கையா லெடுத்தெறிய நாற்கோட்டு
மதகளிறு பிளிறியோடும்
அலைபட்ட வைகைத் துறைச்சிறை யனப்பேடை
அம்மானை யாடியருளே
ஆகம் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை யாடியருளே. (4)

**தெளிவுரை**

(அம்மை மாணிக்க அம்மானையும் முத்துடைய அம்மானையும் ஆடுதல்)

குலையில் உள்ள செங்காந்தள் மலர் போன்ற தளிர் போன்ற கைகள் செந்நிறமான மாணிக்க மணியால் ஆன அம்மானைக் காயானது, முத்தால் செய்யப்பட்ட அம்மானைக்காய் முன் செல்லவும் அதன்பின் செல்லும் தன்மை, தாமரை மனையான தன் மனைவியிடத்தில்

2. பதினாறு கலைகளையுடைய வெள்ளிய கதிர்களை யுடைய சந்திரன் சேர்ந்து செல்ல, அதைப் பார்த்துப் புழுக்கம் கொண்டு வெதும்பும் கதிர்களை உடைய கதிரவனும் பின் தொடர்ந்து போவது போன்று ஒலிக்கின்ற அருவியானது பெருகி,

3. உயர்ந்துள்ள மலையில் முத்தும் வயிரமும் மற்றும் உள்ள சிறந்த மணிக்குவியலையும் அள்ளி, மடங்கி வரும் அலைகள்

என்ற கைகளால் எடுத்து வீச, நான்கு கொம்புகளை உடைய மத யானையான அயிராவதம் இரைந்து ஓடுதற்கு இடமான,

4. அலைகள் பொருந்திய வைகைத் துறைகளையுடைய சிறகுகள் அமைந்த பெண் அன்னமே! ஒப்பில்லாத சிவபெருமானின் உடலில் ஒன்றாகக் கலந்து இடப்பாகத்தைத் தனக்கு எனப் பிரித்துக் கொண்ட பெண்ணே! அம்மானை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. குலைப்பட்ட காந்தள் - குலையாய் உள்ள காந்தள் மலர். காந்தள் போன்ற கை, தளிர்க்கை என இயைக்க. செம்மணி குயின்ற அம்மனை - மாணிக்க மணியால் ஆன அம்மனைக் காய்.

செம்மணிக் காய்க்குப் பின் முத்து அம்மனைக் காய் சென்றது. கோகனக மனையாட்டி - தாமரை மலர் என்ற மனைவி.

2. கலைப்பட்ட - பதினாறு கலைகளையுடைய. வெண் சுடர்க்கடவுள் - வெண்மையான ஒளியையுடைய சந்திரன். புழுங்கும் - புழுக்கம் அடைந்த. ஏய்ப்ப - போல. இறங்கு அருவி - ஒலிக்கும் அருவி. தூங்க - பெருக.

3. மலைப்பட்ட - மலையில் விளைந்த. ஆரம் - முத்து. மறிதிரைக் கையால் - மடிந்து விழும் கையால். நாற்கோட்டு மதகளிறு - நான்கு கொம்புகளை யுடைய அயிராவதம் என்ற யானை. பிளிறி ஓடும் - அஞ்சிக் கூச்சலிட்டு ஓடும்.

4. அலைபட்ட - அலைகள் பொருந்திய. அனப்பேடை - பெண் அன்னப்பறவை. 'அன்னம்' என்பது 'அனம்' எனக் குறுகியது.

கைத்தாமரையிலிருந்து முத்து அம்மனை முன்னும் செம் மணிகள் இயன்ற அம்மனை பின்னும் செல்வது, தன் மனைவியான தாமரையைச் சந்திரன் தோய்ந்து செல்வதைக் கதிரவன் கண்டு புழுங்கிப் பின்செல்வது போல் விளங்கியது.

காந்தள் மலர் வடிவிற்கும் தளிர் மென்மைக்கும் உவமை. (4)

78. தமரான நின்துணைச் சேடியரில் ஒருசிலர்
தடக்கையி னெடுத்தாடுநின்
தரளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரிதிரியா
நிமிராமு னம்மனையொ ராயிர மெடுத்தெறிய
நிரைநிரைய வாய்க்ககனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெற்றவகி லாண்டமும்
நிரைத்துவைத் ததுகடுப்ப
இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழிலூடு
எழுந்தபைந் தாதுலகெலாம்
இருள்செயச் செய்துநின் சேனா பராகமெனும்
ஏக்கமள காபுரிக்கும்
அமரா பதிக்கும்செய் மதுரா புரித்தலைவி
அம்மானை ஆடியருளே
ஆகம் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை ஆடியருளே. (5)

**தெளிவுரை**

(அம்மை தோழியருடன் அம்மானை ஆடுதல்)

1. தம்மவரான நின் தோழியருள் சிலர் பெரிய கையில் எடுத்து ஆடும், நின் முத்தம் மனையைப் பற்றி எதிராக வீசி இடப் பக்கம் வலப்பக்கமாகத் திரிந்து நிமிர்வதற்கு முன்

2. ஓர் ஆயிரம் அம்மனையை எடுத்து வீச, அவை வரிசை வரிசையாக வானத்தில் செல்வது அம்மை, நீ பெற்ற அகிலாண்டமும் வரிசை வரிசையாக நிறுத்தியது போல் இருக்கும்படி

3. வரிகளையுடைய வண்டுகள் மொய்த்து முழக்கி எழுவதால் சோலையில் எழுந்த பசிய மகரந்தப் பொடிகள் உலக முழுமையையும் இருளும்படி செய்து நின் படை போருக்கு எழுந்ததால் உண்டான தூசிப்படை என்றும் எண்ணி அளகா புரியும்

4. அமராபதியும் ஏக்கம் அடையுமாறு செய்யும் வளம் பொருந்திய மதுரைப்பதியின் தலைவியே! அம்மானை ஆடி யருளுக! சிவபெருமானின் உடலில் கலந்து ஒரு பாகத்தைத் தனது பாகமாகப் பிரித்துக் கொண்ட பெண்ணே, அம்மானை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. தமரான - தம்முடையவரான. சேடியர் - தோழியர். தரள அம்மானை - முத்துக்களால் ஆன அம்மனைக் காய்.

சிலர் பிடித்து வீசி வீசித்திரியா. திரியா - திரிந்து.

நின் அம்மனை பிடித்து எதிர் வீசி வீசி இடசாரி வலசாரி திரியா நிமிரா முன் - நின் முத்து அம்மனையை எதிராக வீசிவீசி இடப்பக்கம் வலப்பக்கமாகத் திரிந்து நிமிர்வதற்கு முன்பு.

2. நிரை - வரிசை. நிற்கின்றது - நிற்கும் காட்சி. நிரைத்து வைத்தது - வரிசைப்படுத்தி வைத்த செயலை.

3. இமிரா - ஒலி. வரிச்சுரும்பு - வரிகளை உடைய வண்டுகள். பொழில் - சோலை. பைந்தாது - பசுமையான மகரந்தப்பொடி. அம்மை பல காய்களை வீசி ஆடியதால் வண்டுகள் அஞ்சி ஒலித்து எழுந்தன. அவை எழுந்ததால் அவற்றின் மேல் இருந்த பூந்தாது எங்கும் பரந்தது. சேனா பராகம் - சேனையால் எழுந்த தூசி.

(3-4) மகரந்தப் பொடியின் செறிவை அம்மை திக்கு விசயம் செய்த காலத்தில் அவள் சேனைக்கு முன் எழுந்த தூசிப்படலம் போன்றது என எண்ணி அளகாபுரியினரும் அமராவதியினரும் அச்சம் கொண்டனர். (5)

79. உயிரா யிருக்கின்ற சேடியரின் மலர்மீது
உதித்தவ ளெதிர்த்துநின்னோடு
ஒட்டியெட் டிப்பிடித் திட்டவம் மனைதேடி
ஓடியா டித்திரியநீ

பெயரா திருந்துவிளை யாடுவது கண்டெந்தை
பிறைமுடி துளக்கமுடிமேல்
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையப்
பெண்கொடியுல் ஆடல்மான
வெயரா மனம்புழுங் கிடும்அமரர் தச்சனும்
வியப்பச் செய்யும்தவளமா
மேடையும் தண்டரள மாடமும் தெண்ணிலா
வீசத் திசைக்களிறெலாம்
அயிரா பதத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
அம்மானை ஆடியருளே
ஆகம் கலந்தொருவர் பாகம் பகுந்தபெண்
அம்மானை ஆடியருளே. (6)

**தெளிவுரை**

(அம்பிகை விளையாடலைக் கண்டு இறைவர் மகிழ்தல்.)

1. நின் உயிரைப் போல் இருக்கும் தோழியர்களில் தாமரை மலரில் தோன்றிய திருமகள் நின்னுடன் எதிர்த்து நின்று சபதம் செய்து நீ எட்டிப் பிடித்த அம்மனையைக் காணாமல் தேடி ஓடித் திரியவும்,

2. நீ இடம் விட்டுப் பெயராமல் இருந்து விளையாடுவதைப் பார்த்து எம் பெருமான் தன் தலையில் அணிந்த சடையை அசைத்தார். அசைக்க அச்சடையில் தங்கியுள்ள கங்கையின் நுரை மேல் எழுந்தது. அது அம்மங்கையும் அம்மனை ஆடுவதை ஒத்திருக்க.

3. வியர்த்து மனப்புழுக்கம் அடைந்த தேவதச்சனும் ஆச்சரியப்படும்படி செய்யும் வெண்மை நிறம் உடைய பெரிய மேடைகளும் முத்தால் ஆன மாடங்களும் தெளிவான நிலவு ஒளி (வீசியது) வீசத் திக்குகள் எல்லாம்

4. வெண்நிறம் பொருந்திய ஐராவத யானையை ஒத்திருக்கும்படியான மதுரைத் தலைவியே! அம்மானை

ஆடுவாயாக! சிவபெருமானின் உடலில் கலந்து தனக்கு என ஒரு பகுதியைப் பிரித்துக் கொண்ட பெண்ணே, அம்மானை ஆடுக.

**விளக்கம்**

1. மலர்மீது உதித்தவள் - திருமகள். சேடியர் - தோழியர். ஒட்டி - சபதம் செய்து. 'உதித்தவள் திரிய' என்க.

2. எந்தை - சிவபெருமான். பிறைமுடி - பிறைச்சந்திரனை அணிந்த முடி. துளக்க - அசைக்க. சிவபெருமான் முடி அசைந்ததால் அவரது தலையில் உள்ள கங்கையில் நுரை பொங்கியது. அந்த நுரையானது அம்மானைக் காயைப் போல் தோன்றுகிறது. ஆதலால் கங்கையும் அம்மனை ஆடுவது போல் விளங்கியது.

சுர கங்கை - தேவ உலகத்துக் கங்கை; வான் கங்கை. பெண் கொடியும் - கங்கையாகிய பெண்ணும். ஆடல் மான - ஆடுவதை ஒத்து.

3. வெயரா - வெயர்த்து. அமரர் தச்சன் - தேவ தச்சன். வியப்பச் செயும் - ஆச்சரியப்படச்செய்யும். தவளம் - வெண்மை நிறம். தண்தரள மாடம். குளிர்ந்த முத்து மாளிகை. திசைக்களிறு - எட்டுத் திக்குகளில் உள்ள யானைகள். அவை அயிராவதம் தவிர மற்றப் புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சர்வபூதமம், சுப்பிரதீபம்.

4. அயிராவதம் - இந்திரனின் யானை; அது வெண்மையான நிறம் உடையது. (6)

### வேறு

80. முத்தம முத்திய அம்மனை கைம்மலர்
முளரிம ணங்கமழ
மொய்குழல் வண்டுநின் மைவிழி வண்டின்
முயங்கி மயங்கியிடக்

கொத்து மணித்திர ளில்செயும் அம்மனை
குயிலின்மி ழற்றியநின்
குழலினி சைக்குரு கிப்பனி தூங்கு
குறுந்துளி சிந்தியிட
வித்துரு மத்திலி ழைத்தவும் நின்கை
விரற்பவ ளத்தளிரின்
விளைதரு மொள்ளொளி திருடப் போவது
மீள்வது மாய்த்திரிய
அத்தன் மனத்தெழு தியஉயி ரோவியம்
ஆடுக அம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே. (7)

**தெளிவுரை**

(முத்து, மாணிக்கம், பவளம் என்பனவற்றால் ஆன காய்களை அம்மை ஆடுதல்)

முத்துக்கள் பதிக்கப்பட்ட அம்மையின் கையாகிய தாமரை மலரின் மணத்தை வீச, அதனால் செறிந்த கூந்தலில் உள்ள வண்டு நின் மை பூசப் பெற்ற கண்கள் என்ற வண்டுடன் கூடி மயங்கவும்,

2. கொத்தான மாணிக்கக் கூட்டத்தால் இயன்ற அம்மானை குயில் போன்று பேசும் நின் குழல் இசைக்கு இளகிக் குளிர்ந்து சிறிய துளிகளை வீசவும்,

3. பவளத்தால் ஆன அம்மனைகளும் நின் கை விரல்களாகிய பவளத் தளிரில் ஏற்படும் ஒளியைக் கவர்ந்து வரப் போவதும் வருவதுமாக அலையவும்,

4. எம் தலைவனான சிவபெருமானின் மனத்தில் எழுதப் பட்டுள்ள உயிர் உள்ள ஓவியமே! அம்மானை ஆடுவாயாக! அழகு பொருந்திய கல்யாண சுந்தரியே, அம்மானை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. முத்தம் - முத்து. கைம்மலர் முளரி - கையான தாமரை மலர். மொய்குழல் - செறிந்த கூந்தல். மைவிழி - மை பூசப்பெற்ற கண். முயங்கி - சேர்ந்து.

முத்தால் ஆன அம்மனைக் காய் பின்னாக கூந்தலில் உள்ள வண்டுகள் மேல் எழுந்து செல்லும் போது உடன் செல்லும் விழியான வண்டுகளும் உடன் போய் மயங்கும் என்பதாம். கொத்து மணித்திரள் - கொத்தான மாணிக்கத் தொகுதி. செயும் - செய்யப்பட்ட. குயிலின் மிழற்றிய - குயில் போல் பாடிய. குழலின் - குழல் போன்ற இசையால். பனி தூங்கு - குளிர்ச்சியுடைய.

மாணிக்கங்களால் ஆன அம்மனை நின் குழல் இசைக்கு உருகித் துளிசிந்தவும், பவளத்தால் ஆன அம்மனை நின் விரல் செந்நிறத்தைக் கொள்வதற்காகப் போவதும் வருவதுமாய்த் திரியும் அம்மானை ஆடு

3. வித்துருமம் - பவழம். திருடப் போவது - கவரப் போவது.

4. அத்தன் - சிவபெருமான். அழகு தழைய - அழகு மிகுந்துள்ள. உயிர் ஓவியம் - உயிர் உள்ள ஓவியம் போன்றவளே! ஆகுபெயர். (7)

81. விளரிமி ழற்றளி குமுறுகு ழற்கொடி
வீசிய வம்மனைபோய்
விண்ணி னிரைத்தெழு வதுகக னந்திரு
மேனிய தானவருக்
கிளநில வுமிழ்பரு முத்தின் கோவை
யெடுத்தவர் திருமார்புக்
கிடுவ கடுப்பவு மப்பரி சேபல
மணியி னியற்றியிடும்

வளரொளி விம்மிய வம்மனை செல்வது
வானவிலொத் திடவும்
மனனெக் குருகப் பரமா னந்த
மடுத்த திருத்தொண்டர்க்
களிகனி யத்திரு வருள்கனி யுங்கனி
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே. (8)

**தெளிவுரை**

(அம்மை முத்தாலும் பலநிற மணிகளாலும் செய்த அம் மனைகளை ஆடுதல்)

1. விளரி என்னும் பண்ணைப் பாடும் வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையுடைய கொடி போன்றவளே! வீசிய அம்மனை போய் வானில் வரிசையாய் அமைந்து எழுதல் வானைத் திருமேனியாய் உடைய இறைவர்க்கு

2. இளநிலவு ஒளியைச் செய்யும் முத்துக் கோவையை எடுத்து அவர் அழகு மார்புக்கு அணிவதைப் போலவும், அங்ஙனமே பலநிறம்

3. உள்ள மணிகளால் ஆன ஒளி பெருகிய அம்மனை மேல் எழுவது வான வில் போல விளங்கவும், மனம் நெகிழ்ந்து உருகும் படி பேரின்பத்தைப் பருகிய சிறந்த அடியார்கட்கு

4. அன்பானது முதிரத் திருவருள் செய்யும் கனி போன்றவளே! அம்மானை ஆடுவாயாக! அழகு பெருகிய கலியாண சுந்தரி, அம்மானை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. விளரி - விளரி என்ற பண். அதனைப் பாடும் வண்டு. அளி - வண்டு. மிழற்றும் - பாடும். கொடியாகிய நீ வீசிய அம்மனை என்றது முத்தால் ஆன பந்து. நிரைத்து எழுவது - வரிசையாய் எழுவது.

முத்துக்களால் ஆன அம்மனை தொடர்ந்து மேலே செல்வது அம்மை இறைவர்க்கு முத்து மாலை சாத்தக் கொண்ட முத்துவடம் போல் இருந்தது.

2. வளர் ஒளி - மேலும் மேலும் வளரும் ஒளி. விம்மிய - பெருகிய. மனனெக்குருகு - மனம் + நெக்கு + உருக; மனம் நெகிழ்ந்து உருக. பரமானந்தம் - மேலான இன்பம்; முத்தியின்பம்.

3. அளி - அன்பு. கனிய - மிக.

பலநிற மணிகளால் ஆன அம்மானை மேல் செல்வது வானவில் போன்று விளங்கியது. (8)

82. கைம்மல ரிற்பொலி கதிர்முத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்
கண்டவர் நிற்கப் பிறர்சில செங்கைக்
கமலச் சுடர்கதுவச்
செம்மணி யிற்செய் திழைத்தன எனவும்
சிற்சிலர் கண்கடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
செய்தென கொல்லெனவும்
தம்மன மொப்ப வுரைப்பன மற்றைச்
சமயத் தமைவுபெறார்
தத்தமி னின்று பிதற்றுவ பொருவத்
தனிமுதல் யாமென்பார்க்கு
அம்மனை யாயவர் தம்மனை யானவள்
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே. (9)

## தெளிவுரை

(அம்மை முத்தால் ஆன அம்மனை ஆடும் போது அவள் நகை, கை, கண் ஆகியவற்றின் ஒளி தோய்கையில் அது நிறம் மாறிக் காட்டுதலால் பிறர்க்கு உண்டாகும் மயக்கம்.)

1. நின் கையான மலரில் விளங்கும் ஒளி பொருந்திய முத்தால் ஆன அம்மனை பல்லாகிய முத்தின் ஒளியால் படியக் கண்டவர் பலர் ஒன்றும் பேசாமல் நின்றனர். நிற்க. அவருள் சிலர் செம்மையான கையான தாமரையின் ஒளியைக் கைக் கொள்வதால்.

2. செந்நிற மாணிக்கத்தால் செய்யப்பட்டது என்பர். சிற்சிலர் கண்ணின் கடைச் செவ்வியைக் கவர்ந்த பின்பு பார்த்தவர் கருமணியில் செய்யப்பட்டன என்பர்.

3. இங்ஙனம் தம்தம் உள்ளத்துக்கு ஏற்பப் பேசினர். அவை பிற சமயத்தில் நின்று மனஅமைதி அடையாதவர் தத்தம் வழியில் மயங்கிப் பேசும் சொற்கள் போல் விளங்கின. தாங்களே முதற் பொருள் என்று சொல்கின்ற தேவர்க்கு எல்லாம்

4. தாயான சொக்கநாதர்க்கு மனைவி ஆனவளே! அம்மானை ஆடுவாயாக! அழகு பெருகிய கல்யாண சவுந்தரி, அம்மானை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. கைம்மலர் - கையான மலர். கதிர் முத்து - ஒளியுடைய முத்து. நகைமுத்து - பல். கதுவ - பற்ற.

2. செம்மணி - மாணிக்கமணி. இழைத்தன - செய்யப் பட்டன. செவ்வி - அழகு. வவ்வியபின் - கவர்ந்த பின்பு. நிற்க - ஒன்றும் கூறாமல் நிற்க.

(1-3) கையின் சிவந்த நிறம் பாய்ந்து சிவப்பாகத் தோன்றக் கண்டவர் அம்மனைகள் மாணிக்கத்தால் செய்யப்பட்டன என்றனர். கண்ணின் கருநிறம் பாய்ந்து கரியனவாய் விளங்கக் கண்டவர் அம்மனைக்காய்கள் நீலமணியால் ஆனவை என்றனர். அவ்வாறு உரைப்பார் உரைப்பன புறச் சமயத்துள் உள்ளார் தத்தம் சமயக் கொள்கைகளே சிறந்தன என்று உரைப்பதை ஒத்தன.

3. தத்தமின் நின்று - தம்தம் கொள்கைகளில் நின்று. பொருவ - ஒப்ப.

(9)

83. ஒள்ளொளி மரகத மும்முழு நீலமும்
ஒண்டர ளத்திரளும்
ஒழுகொளி பொங்க விழைத்திடும் அம்மனை
ஒருமூன் றடைவிலெடாக்
கள்ளவிழ் கோதை விசும்புற வீசுவ
கண்ணுதல் பால்செல நின்
கையில் வளர்த்த பசுங்கிளி யும்வளர்
காமர் கருங்குயிலும்
பிள்ளைவெ ளோதிம மும்முறை முறையால்
பெருகிய காதலைமேல்
பேச விடுப்ப கடுப்ப அணைத்தொரு
பெடையோடு அரசஅனம்
அள்ளல் வயற்றுயின் மதுரைத் துரைமகள்
ஆடுக அம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே. (10)

## தெளிவுரை

(மரகதம் நீலம் முத்து ஆகியவற்றால் ஆன அம்மனைகளை அம்மை வானில் வீசி ஆடுதல் சிவபெருமானிடத்துக் கிளியையும் குயிலையும் அன்னத்தையும் தூது விடுப்பதைப் போல் உள்ளது என்பது இப்பாட்டு.)

1. சிறந்த ஒளியுடைய மரகத மணியாலும், முழுநீல மணியாலும் ஒளியுடைய முத்துக்களாலும் ஒளி பெருகச் செய்யப் பட்ட அம்மனை மூன்றும் முறையே எடுத்து

2. தேன் சிந்தும் கூந்தலை யுடைய அம்மை வானில் பொருந்தும்படி வீசுபவை, நெற்றிக் கண்ணையுடைய சிவபெரு மானிடத்துத் தூது போய் உன் கையில் வைத்து வளர்க்கும் பச்சைக்கிளியையும், உன்னிடம் வளர்ந்த அழகிய குயிலையும்,

3. இளமையான அன்னப்பறவையையும், முறைப்படி மிகுந்துள்ள ஆசையை மேலே போய்ப் பேசி வருவதற்காக

விடப்பட்டிருப்பதைப் போல் தோன்றும். அரச அன்னப் பறவை தன் பெண் அன்னப் பறவையை அணைத்துக்கொண்டு

4. சேற்று வயலில் உறங்குவதற்கு இடமான மதுரையில் எழுந்தருளியுள்ள மதுரைத் துரைப்பெண்ணே! அழகு பெருகி யுள்ள கல்யாண சவுந்தரியே, அம்மானை ஆடியருளுவாயாக!

**விளக்கம்**

1. ஒள்ஒளி - மிக்க ஒளி. ஒண்தரளத்திரள் - ஒளியுடைய முத்துத் தொகுதி. இழைத்திடும் - செய்யப்பட்ட அம்மனை. அடைவில் - வரிசைப்பட. எடா - எடுத்து.

2. கள் அவிழ் கோதை - தேன் சிந்தும் மலரைச் சூடிய அம்மை. கண்நுதல் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான். வீசுவ - எறிவன. பசுங்கிளி - பச்சைக்கிளி. காமர் - விருப்பத்தைத் தரும்.

3. வெளோதிமம் - வெள் + ஓதிமம்; வெண்ணிறமான அன்னப்பறவை. காதலை - தம் ஆசையை. கடுப்ப - ஒத்திருக்க. அரசஅனம் - அரச அன்னப்பறவை. அன்னம் என்பது ‘அனம்’ எனத் தொக்கு வந்தது.

4. அள்ளல் - சேறு. ஆண் அன்னம் பெண் அன்னத்தை அணைத்துக் கொண்டு சேற்று வயலில் உறங்கும் இயல்புடைய மதுரை.

மரகத மணியால் ஆன அம்மனை, நீலமணியால் ஆன அம்மனை, முத்தால் ஆன அம்மனை என்னும் மூன்றையும் ஒன்றன்பின் ஒன்றாகச் செல்லவிடுதல், அம்மை தான் வளர்த்த கிளியையும் குயிலையும் அன்னத்தையும் தூது விடுவது போல் விளங்கியது என்க.

(முடிபு) பேச விடுப்ப கடுப்ப ஆடியருளுக. (10)

## 9. நீராடற் பருவம்

### ஆசிரிய விருத்தம்

84. வளையாடு வண்கைப் பொலன்சங் கொடும்பொங்கு
மறிதிரைச் சங்கோலிட
மதரரிக் கண்கயல் வரிக்கய லொடும்புரள
மகரந்த முண்டுவண்டின்
கிளையாடு நின்றிருக் கேசபா ரத்தினொடு
கிளர்சைவ லக்கொத்தெழக்
கிடையாத புதுவிருந் தெதிர்கொண்டு தத்தமில்
கேளிர்க ள்தழீஇக்கொண்டெனத்
தளையாடு கறையடிச் சிறுகண் பெருங்கைத்
தடங்களி றெடுத்துமத்தத்
தவளக் களிற்றினொடு முட்டவிட் டெட்டுமத
தந்தியும் பந்தடித்து
விளையாடு வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (2)

**தெளிவுரை**

1. வளைவு கொண்ட வண்மையான கையில் அணிந்துள்ள சங்கு வளையலுடன் அலை கடலில் உள்ள சங்குகள் முழக்கம் செய்யவும் மதர்த்த வரிகளையுடைய கண் என்ற கயல்மீன் கீற்றுகளையுடைய கயல்மீனுடன் புரளவும்,

2. மகரந்தத்தை உண்டு வண்டுக் கூட்டம் நின் கூந்தல் பாரத்தினுடன் விளங்குதலையுடைய பாசிக்கூட்டம் எழவும், கிட்டப் பெறாத புதிய விருந்தை எதிர் கொண்டு அழைத்துத் தங்கள் தங்கள் வீட்டின் உறவினர்கள் தழுவிக் கொண்டாற் போல்

3. விலங்கு பொருந்திய உரல் போன்ற கால்களையும் சிறிய கண்களையும் பெரிய கைகளையும் உடைய பெரிய யானைகளை

வேறான வெள்ளை யானையுடன் முட்டும்படி செய்து, எட்டுத் திக்குகளில் உள்ள யானைகளையும் பந்தைப் போல் வீசி எறிந்து,

4. விளையாடும் வைகையான பெரிய நீர்த்துறையில் திளைத்துப் புதிய வெள்ள நீரில் முழுகி அருள்வாயாக! காளையைக் கொடியில் அமைத்திருக்கின்ற சிவபெருமானுக்கு ஒப்பில்லாத மீன் கொடியை உயர்த்துமாறு உதவிய கொடி போன்றவளே! வெள்ளநீரில் ஆடுவாயாக!

**விளக்கம்**

1. வளையாடு - வளையுடைய. பொலன்சங்கு - அழகுடைய சங்கு. சங்கு ஒலிட - சங்குகள் ஒலிக்க. மதர் அரிக்கண்கயல் - மதர்த்த வரிகளை யுடைய கண் ஆன கயல்மீன். மகரந்தம் - மகரந்தத்தூள்.

2. வண்டின் கிளை - வண்டின் இனம். கேசபாரம் - கூந்தல் பாரம். சைவலம் - பாசி. புது விருந்து - புதிய விருந்தினர். தத்தமில் - தம் தம்மில்; தங்கள் தங்கள் வீட்டில். கேளிர்கள் - உறவினர். தழீஇக் கொண்டென - தழுவிக் கொண்டாற் போன்று.

3. தளை ஆடு - விலங்கு பொருந்திய. கறை அடி - உரல் போன்ற அடி. தடங்களிறு - பெரிய ஆண் யானை. தவளக்களிறு - அயிராவதம். வைகைநீர் பெருகி மேல் உயர்ந்து யானைகளை ஈர்த்து வானத்தில் உள்ள அயிராவதத்தை முட்டும்படி செய்தது என்ற இது வானத்திற்கு மேல் உயர்ந்து வெள்ளம் வந்தது என்பது கருத்து.

விடைக்கொடியவர்க்கு ஒரு கயற்கொடி கொடுத்த கொடி - விடைக் கொடியவர் - சிவபெருமான். ஒரு கயற்கொடி கொடுத்த கொடி - ஒரு மீன் கொடியைத் தந்த மீனாட்சி அம்மையார். சிவபெருமான் மீனாட்சியம்மையை மணந்த பின்பு பாண்டிய நாட்டை அரசு செய்யும் காலத்து அந்த அரசுக்குரிய மீன் கொடி உடையவராயினர். ஆதலால் மீனாட்சி சிவபெருமானுக்குக் கயற்கொடியைக் கொடுத்ததாகக் கூறினார்.

சங்கு வளையலுடன் சங்கும், கண்கயலுடன் கயலும், கேச பாரத்துடன் சைவலக் கொத்தும் இனமாகத் தழுவினது புது விருந்து எதிர் கொண்டது போல் இருந்தது என்பது கருத்து. (1)

85. நிரைபொங் கிடும்செங்கை வெள்வளை கலிப்பநகை
நிலவுவிரி பவளம்வெளிற
நீலக் கருங்குவளை செங்குவளை பூப்பவறல்
நெறிகுழல் கற்றைசரியத்
திரைபொங்கு தண்ணந் துறைக்குடைந் தாடுவ
செழுந்தரங் கக்கங்கைநுண்
சிறுதிவலை யாப்பொங்கும் ஆனந்த மாக்கடல்
திளைத்தாடு கின்றதுஏய்ப்பக்
கரைபொங்கு மறிதிரைக் கையால் தடம்பணைக்
கழனியிற் கன்னியர்முலைக்
களபக் குழம்பைக் கரைத்துவிட்டு அள்ளற்
கருஞ்சேறு செஞ்சேறதாய்
விரைபொங் கிடத்துங்க வேகவதி பொங்குபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (2)

## தெளிவுரை

1. வரிசையாக மிகுந்துள்ள சிவந்த கையில் அணிந்துள்ள வெண்மையான வளையல்கள் ஒலிக்கவும், பல ஒளியைப் பரப்பும் பவளம் போன்ற உதடு வெளுக்கவும், நீல நிறம் வாய்ந்த கரிய குவளை மலர் போன்ற விழிகள் செந்நிறக் குவளை மலர் போல் விளங்கவும், கரிய மணல் போன்ற கூந்தல் சரிந்து விழவும்,

2. அலை பெருகி வரும் குளிர்ந்த நீர்த்துறையில் முழுகி நீராடும் காட்சியானது, பெருகும் கங்கையானது சிறிய துளியாகத் தங்கியிருக்கும் ஆனந்தப் பெருங்கடலான சிவபெருமானுடன் கலந்து விளையாடுவதைப் போன்று

3. கரையில் பெருகி மடங்கி வரும் அலையாகிய கையால் பெரிய மருத நிலமாகிய வயலில் செயலாற்றும் இளம் பெண்களின் கொங்கையில் பூசியுள்ள சந்தனக் குழம்பைக் கரைத்து, குழைந்த கரிய சேறு சிவந்த சேறாகும் வண்ணம் செய்து

4. மணம் மிகும்படி செய்ய உயர்ந்த வையை ஆற்றில் பெருகி வரும் புதிய வெள்ளநீரில் ஆடியருளுவாயாக! காளைக் கொடியை உடைய சிவபெருமானுக்கு ஒரு கயற்கொடியைத் தந்த கொடி போன்றவளே! வெள்ள நீரில் ஆடியருளுவாய்.

**விளக்கம்**

1. நிரை - வரிசை. பொங்கிடும் - மிகுந்துள்ள. வெள்வளை - வெண்மையான சங்கு வளைகள். பவளம் - பவளம் போன்ற உதடுகள். வெளிற - வெளுக்க. நீலக்கருங் குவளை செங்குவளை பூப்ப - கரிய கண்கள் செந்நிறம் அடைய. அறல் நெறி குழல் - கரிய மணலைப் போன்ற கூந்தல். சரிய - குலைய.

2. ஆடுவ - ஆடுவது. செழுந்தரங்கக் கங்கை - செழுமை யான அலையை யுடைய கங்கை. ஆனந்த மாக்கடல் - சிவ பெருமான். சிவபெருமானது அளவை நோக்கும் போது கங்கை சிறு திவலை எனக் கொள்க. அப்பெருமானின் சடையில் கங்கை ஒரு திவலை போல் அடங்கியிருத்தலால் ‘சிறுதிவலையோ’ என்றார். ஏய்ப்ப - போல.

3. பணைக்கழனி - பணையாகிய கழனி. களபம் - கலவைச் சாந்து. அள்ளல் கருஞ்சேறு - குழைந்த கரிய சேறு. மறிதிரை - மடிந்து விழும் அலை.

4. விரை - நறுமணம். வேகவதி - வையையாறு. அங்கயற் கண் அம்மை வையைத்துறையில் நீராடுதலால் உண்டான வேறுபாடுகள், சிவபெருமானுடன் கலத்தலால் உண்டாகும் வேறுபாட்டைப் போல் விளங்கின என்பது குறிப்பால் பெறப்படும் பொருள். (2)

86. பண்ணாறு கிளிமொழிப் பாவைநின் றிருமேனி
பாசொளி விரிப்பஅந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரகதமதாய்த்
தண்ணாறு மல்லல் துறைச்சிறை அனங்களி
தழைக்கும் கலாமஞ்ஞையாய்ச்
சகலமு நின்திருச் சொருபமென்று ஓலிடும்
சதுர்மறைப் பொருள்வெளியிடக்
கண்ணாறு குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமும் கத்தூரியும்
கப்புரமு மொக்கக் கரைத்தோடி வாணியும்
காளிந்தி யும்கங்கையாம்
விண்ணாறு மளவலாய் விளையாடு புதுவைகை
வெள்ளநீர் ஆடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (3)

## தெளிவுரை

1. பண் தோன்றும் கிளிமொழி போன்ற சொல்லையுடைய பாவையை ஒத்தவளே! நின் திருமேனி, பச்சை நிறத்தைப் பரப்புதலால், அழகிய குளிர்ந்த பவளக் கொடியின் அழகு பச்சை இளங்கொடியின் தோற்றமாக மாறவும், பருத்த முத்துக்கள் மரகத மணியாக விளங்கவும்,

2. குளிர்ச்சி வாய்ந்த வளமையுடைய துறைகளில் தங்கும் சிறகுகளையுடைய அன்னப்பறவைகள் களிப்பு மிக்க தோகையை யுடைய மயில்களாக மாறவும், எல்லாப் பொருள்களும் நின் அழகிய வடிவங்கள் என்று கூறுகின்ற நான்மறைப் பொருளை உண்மை என்று வெளிப்படுத்தும்படி

3. தேன் மணக்கும் கூந்தலையுடைய மடந்தையரின் கொங்கைகளில் பெருகி ஓடும் செந்நிறச் சாந்தும் கருமையான கத்தூரிக் குழம்பும் வெள்ளைக் கற்பூரமும் ஒருசேரக் கரைத்து

எடுத்து ஓடி, சரசுவதி ஆறும் யமுனை ஆறும் கங்கையான வான் ஆறும் கலந்து

4. விளையாடலைப் போல் தோன்றும் வைகையாற்றுப் புதிய வெள்ளத்தில் நீராடியருளுக! காளைக் கொடியையுடைய சிவபெருமானுக்கு மீனக் கொடியை அளித்தவளே, நீராடியருளுக!

**விளக்கம்**

1. பண்நாறு கிளிமொழி - பண் தோன்றும் கிளிமொழி. நாறுதல் - தோன்றுதல். பாசொளி - பச்சை நிற ஒளி. பவளக் கொடி சிவந்த நிறம் கொண்டது. அது அம்மையின் மேனி பச்சை நிறத்தால் பச்சைக் கொடியாய் ஆகின்றதாம். அம்மேனி நிறத்தால் வெண்மை நிறம் உடைய முத்துக்கள் பச்சை நிறம் உடைய மரகத மணிகளாய் மாறின.

2. மல்லல் - வளமை. களி - களிப்பு. மஞ்ஞை - மயில். சதுர் மறைப் பொருள் - நான்கு வேதங்களின் பொருள். அம்மையின் திருமேனி பச்சை நிறத்தால் பவளக் கொடி மரகதமணிக் கொடி யாகவும் வெண்முத்து பச்சை மரகத மணியாகவும் அன்னப்பறவை மயிலாகவும் தோன்றி எல்லாம் அம்மையின் வடிவமே என்று வேதம் கூறும் பொருளை மெய்ப்பித்தன.

3. கண்ணாறு - கள் + நாறு; தேன் உள்ள. குடக் கொங்கை - குடம் போன்ற கொங்கை. செங்களபம் - செஞ்சந்தனம். கத்தூரி - கரிய நிறம் கொண்டது. கப்புரம் - பச்சைக் கருப்பூரம். இது வெண்மை நிறம் உடையது. வாணி - சரசுவதி ஆறு; இது செந்நிறம் உடையது. காளிந்தி - யமுனை; இது கரிய நிறம் கொண்டது. கங்கை வெண்ணிறம் வாய்ந்தது.

இம் மூன்றும் மங்கையர் கொங்கையிலிருந்து கரைக்கப்பட்டு ஒடுதலால், வைகையாறு, வாணி நதி, யமுனை நதி, கங்கை நதி ஆகியவை கலந்து ஒடுவது போல் விளங்குகிறது என்பது கவியின் கருத்து.

4. அளவளாய் - கலந்து. (3)

87. தூங்குசிறை யறுகால் உறங்குகுழல் நின்றுணைத்
தோழியர்கண் மேற்குங்குமம்
தோயும் பனித்துறைச் சிவிறிவீ சக்குறுந்
துளியெம் மருங்குமோடி
வாங்குமலை வில்லியார் விண்ணுரு நனைத்தவர்
வனைந்திடு திகம்பரஞ்செவ்
வண்ணமாச் செய்வதச் செவ்வான வண்ணரொடு
மஞ்சள்விளை யாடலேய்ப்பத்
தேங்குமலை யருவிநெடு நீத்தத்து மாசுணத்
திரள்புறம் சுற்றியீர்ப்பச்
சினவேழம்ஒன்றொரு சுழிச்சுழல்வ மந்தரம்
திரைகடல் மதித்தல்மானும்
வீங்குபுனல் வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (4)

**தெளிவுரை**

1. அசையும் இறகுகளை யுடைய வண்டுகள் உறங்குதற்கு இடமான கூந்தலையுடையவளே! நின் துணைவரான தோழியர் மீது குங்குமத்துடன் கலந்த குளிர்நீரைச் சிவிறியினால் வீசுதலால் சிறு துளி எங்கும் பரந்தோடுகின்றது.

2. அதனால் வளைத்த பொன் மலையுடைய சிவ பெருமானின் வான வடிவை நினைந்து அவர் உடுத்திருக்கும் திக்குகளாகிய உடைகளை நனைத்து அவ்வுடைகளைச் செந் நிறமாகச் செய்கின்றது. அவ்வாறு செய்வது, செவ்வான மேனியுடைய சிவபெருமானுடன் மஞ்சள் விளையாட்டு விளையாடுதலைப் போல் விளங்கும்.

3. தேங்கி நிற்கும் மலையில் உள்ள அருவியின் நீண்ட வெள்ளத்தில் மலைப் பாம்புகள் ஒரு பக்கத்தில் பற்றி இழுக்கவும், சினம் கொண்ட யானை ஒன்று ஒரு சுழியின் சுழற்சியில் அகப்

பட்டிருப்பது திருப்பாற்கடலை மந்தர மலையில் கயிறாகக் கொண்டு கடைவதை ஒப்பத் தோன்றும்.

4. மிக்க நீரையுடைய வைகையாற்றின் பெரிய துறையில் குளித்துப் புதிய நீரில் ஆடியருளுக! காளைக் கொடியை உடையவர்க்கு ஒரு கயற்கொடியைத் தந்தருளிய கொடி போன்றவளே! நீராடியருளுக.

**விளக்கம்**

தூங்கு சிறை அறுகால் - அசையும் இறகுகளை உடைய வண்டு. குங்குமம் தோயும் பனித்த உறை - குங்குமத்துடன் கூடிய குளிர்ந்த திவலை. சிவிறி - நீரைப் பாய்ச்சும் கருவி; துருத்தி என்பர். குறுந்துளி - சிறிய திவலை.

2. வாங்குமலை வில்லியார் - வளைக்கும் மலை வில்லை யுடைய சிவபெருமான். விண்ணுரு - வானமாகிய வடிவம். வளைந்திடு - உடுத்துள்ள. திகம்பரம் - திக்குகளாகிய ஆடை. திக்கு + அம்பரம். வண்ணமா - வண்ணமாக என்பதன் தொகுத்தல் விகாரம். மஞ்சள் விளையாடல் - திருமணக்காலத்தில் ஒருவர் மேல் ஒருவர் மஞ்சள் நீரை வீசி விளையாடுதல்.

3. மாசுணம் - பெரிய பாம்பு. ஈர்ப்ப - இழுக்க. சினவேழம் - சினம் உடைய யானை. மந்தரம் - மந்தர மலை. மதித்தல் - கடைதல். ஒரு நீர்ச் சுழியில் யானை ஒன்று அகப்பட்டுச் சுழல அதன் வெளியே பாம்புத் தொகுதி ஈர்க்கின்றது என்க. அத் தோற்றம் மந்தர மலையைப் பாம்பால் பிணைத்துப் பாற்கடலில் இட்டுக் கடைவதைப் போல் விளங்கியது.

4. வீங்குபுனல் - மிக்க நீர். (4)

88. துளிக்கும் பனித்திவலை சிதறக் குடைந்தாடு
துறையில் துறைத்தமிழொடும்
தொன்மறை தெளிக்கும் கலைக்கொடி யெனும்துணைத்
தோழிமுழ் கிப்புனன்மடுத்து

ஒளிக்கும் பதத்துமற் றவளென அனப்பெடையை
ஓடிப் பிடிப்பதம்மை
ஒண்பரி புரத்தொனியு மடநடையும் வௌவினது
உணர்ந்துபின் தொடர்வதேய்ப்ப
நெளிக்குந் தரங்கப் பெருங்கங்கை யுடனொட்டி
நித்திலப் பந்தாடவும்
நிரைமணித் திரளின் கழங்காட வும்தன்
நெடுந்திரைக் கையெடுத்து
விளிக்கும் பெருந்தண் துறைக்கடவுள் வைகைநெடு
வெள்ளநீர் ஆடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே. (5)

### தெளிவுரை

1. குளிர்ந்த திவலைகள் சிதற நீராடும் குளிர்ந்த துறையில் பல துறைகளையுடைய தமிழுடன் பழமையான வேதங்களையும் தெளிவுறுத்தும் கலைமகள் என்னும் துணைவியான தோழி குளித்து நீருள் பாய்ந்து

2. மறையும் காலத்தில் அக்கலைமகள் என்று எண்ணி நீ பெண் அன்னத்தைப் பிடிப்பது தாயே, நின் ஒளியுடைய சிலம்பின் ஒலியும் மடநடையும் கவர்ந்து கொண்டது என்று எண்ணி அதனைப் பிடிப்பதைப் போல் தோன்ற,

3. வளைந்து வரும் பெரிய அலைகளை உடைய கங்கை யுடன் பந்தயம் கூறி முத்துப் பந்தாடவும், வரிசையான மணிக் கூட்டத்தால் அமைந்த கழற்சிக் காய் ஆடவும் தன் நெடிய அலையாகிய கையை உயர்த்தி அழைக்கின்ற

4. பெரிய குளிர்ந்த துறைகளையுடைய கடவுள் தன்மை பொருந்திய வைகையாற்றின் வெள்ளத்தில் நீராடியருளுக. காளைக் கொடியையுடைய சிவபெருமானுக்கு மீன்கொடியைத் தந்தவளே, நீராடியருளுக!

**விளக்கம்**

1. பனித்திவலை - குளிர்ந்த நீர்த்துளி. குடைந்து ஆடுதல் - முழுகியாடுகின்ற. பதத்து - வேளையில். கலைமகள் நீருள் முழுகி ஒளிகின்ற போது, அம்மையார் பெண் அன்னப் பறவையைத் தன் தோழி என எண்ணிப் பிடித்தாள். அது தன் சிலம்பின் ஒலியையும் மடநடையையும் கவர்ந்து கொண்டது என்பதால் அதைப் பிடிக்க ஓடுவது போல் விளங்கியது என்க. தொன்மறை - பழமையான வேதம். துறைத்தமிழ் - அகம், புறம் ஆகிய துறைகளையுடைய தமிழ். கலைக்கொடி - கலைமகள்.

2. ஒளிக்கும் பதத்து - ஒளிந்து கொண்ட போது. அவள் என - அந்தக் கலைமகள் என்று. அனப்பெடை - பெண் அன்னப் பறவை. ஒண்பரிபுரம் - ஒளியுடைய சிலம்பு. தொனி - ஒலி. வெளவினது - கவர்ந்து கொண்டது. ஏய்ப்ப - ஒப்ப.

3. நெளிக்கும் - வளைக்கும். தரங்கம் - அலை. நித்திலப் பந்து - முத்தினால் ஆன பந்து. கழங்கு - ஒருவகையாடல். கழற்சிக்காய் கொண்டு ஆடும் ஆட்டம். வைகையாறு தன்அலைகளாகிய கைகளால் முத்துக்களையும் மணிகளையும் வீசுவது, பந்தும் கழங்கும் விளையாட வா என்று கங்கையை அழைப்பது போல் விளங்கியது.

4. விளிக்கும் - அழைக்கும். கடவுள் வைகை - தெய்வத் தன்மை கொண்ட வைகையாறு. (5)

### வேறு

89. துங்க முலைப்பொற் குடம்கொண்டு
தூநீர் நீந்தி விளையாடும்
துணைச்சே டியர்கள் மேற்பசும்பொன்
சுண்ணம் எறிய அறச்சேந்த
அங்கண் விசும்பி னின்குழற்காட்டு
அறுகால் சுரும்ப ரெழுந்தார்ப்ப

தையன் திருமே னியிலம்மை
அருட்கண் சுரும்பார்த் தெழன்மானச்
செங்க ணிளைஞர் களிக்காமத்
தீமூண் டிடக்கண்டு இளமகளிர்
செழுமென் குழற்கூட் டகில்புகையால்
திரள்காய்க் கதலி பழுத்துநறை
பொங்கு மதுரைப் பெருமாட்டி
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (6)

## தெளிவுரை

1. உயர்ந்த கொங்கைகளான தங்கக் குடம் கொண்டு தூய்மை நீரில் நீந்தி விளையாடும் நின் துணையான தோழியர் மீது பசிய பொன் பொடியைத் தூவ அதனால் முழுவதும் சிவந்த

2. அழகிய இடம் உடைய வானத்தில் நின் கூந்தலில் மொய்க்கும் வண்டுகள் எழுந்து ஒலிக்கும். அவ்வாறு ஒலிப்பது சிவபெருமானது அழகிய உடம்பில் அம்மையே நின் அருளை யுடைய கண்ணாகிய வண்டு முழுகி எழுதலைப் போல் விளங்கும். விளங்க

3. சிவந்த கண்களையுடைய இளைஞர்க்குக் களிப்பைத் தரும் காமத்தீ மூளக் கண்டு இளம் பெண்கள் தம் செழித்த மெல்லிய கூந்தல் உலர்வதற்காகக் காட்டும் அகில் கட்டைப் புகையால் திரண்ட வாழைக்காய்கள் முதிர்ந்து தேன் பெருகு வதற்கு இடமான

4. மதுரைக்குப் பெருமாட்டியே! புதிய நீர் வெள்ளத்தில் ஆடியருளுக! தாம்பிர பன்னி ஆற்றுத் தலைவனான பாண்டியனின் மகளான பொற்பாவை போன்றவளே, புதிய நீரில் ஆடியருளுக!

**விளக்கம்**

1. துங்கம் - உயர்வு. தூநீர் - தூய்மையான நீர். துணைச் சேடியர் - துணைவியரான தோழியர். அறச் சேந்த - மிகவும் சிவந்த.

இளமங்கையர் குடத்தைக் கொண்டு விளையாடும் வழக்கம் உண்டு என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

2. அம்கண் விசும்பில் - அழகிய இடத்தையுடைய வானில். குழல்காடு - கூந்தல் என்ற காடு. அறுகால் சுரும்பர் - ஆறு கால்களையுடைய வண்டு. ஆர்ப்ப - ஒலிக்க. ஐயன் - சிவ பெருமான். ஐயன் திருமேனியில் அம்மை அருட்கண் சுரும்பு ஆர்த்து எழல்மான - சிவபெருமான் மேனியில் அம்மையின் கண் என்ற வண்டு ஒலித்து எழுவது போல, வானத்தில் வண்டு எழுவது விளங்கியது. ஐயன் திருமேனி ஆகாயம் என்பது இங்குக் குறிக்கத்தக்கது. மான - போல.

3. களிக்காமத்தீ - களிப்பைத் தரும் காமம் என்ற தீ. இளைஞர்க்குக் காமத்தீ மூட்டுதற்குக் குழற்பாகு அகில் புகை ஊட்டும் மகளிர் என்பது கருத்து. வாழைக் காய்க்குப் புகையூட்டிப் பழுக்க வைத்தல் வழக்கம் ஆதலால் 'அகிற்புகையால் திரள் காய்க்கதலி பழுத்து' என்றார். நறை - மணம். பொருநை - தாம்பிரபரணி. இது பாண்டி நாட்டில் ஓடுவது. ஆதலால் பாண்டியனைப் 'பொருநைத்துறைவன்' என்றார். (6)

90. இழியும் புனற்றண் துறைமுன்றில்
இதுவெம் பெருமான் மண்சுமந்த
இடமென் றலர்வெண் கமலப்பெண்
இசைப்பக் கசிந்துள் உருகியிரு
விழியும் சிவப்ப வானந்த
வெள்ளம் பொழிந்து நின்றனையால்
மீண்டும் பெருக விடுத்தவற்கோர்
வேலை யிடுதல் மிகையன்றே

பிழியு நறைக்கற் பகமலர்ந்த
பிரச மலர்ப்பூந் துகள்மூழ்கும்
பிறைக்கோட் டயிரா பதம்கூந்தல்
பிடியோ டாடத் தேனருவி
பொழியும் பொழிற்கூ டலில்பொலிவாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (7)

**தெளிவுரை**

1. ஒழுகும் நீரையுடைய குளிர்ந்த துறை முற்றமான இவ்விடம் எம் பெருமான் பிட்டுக்கு மண் சுமந்த இடம் என்பதாக வெண்தாமரையில் வீற்றிருக்கும் கலைமகள் உரைத்தாள். உரைக்க, அதைக் கேட்டுக் கரைந்து உருகி

2. இரண்டு கண்களும் சிவப்படைய நீ இன்ப வெள்ளநீரைப் பெருக்கி நின்றனை! மீண்டும் வெள்ளத்தைப் பெருகும்படி செய்து அப்பெருமானுக்கு வேலை இடுவது குற்றம் அன்றோ.

3. வெளிப்படும் மணத்தை யுடைய கற்பக மரத்தின் மலர்ந்த தேனையுடைய பூவில் உள்ள மென்மையான மரத்தில் மலர்ந்த தேனையுடைய மலரில் உள்ள மெல்லிய மகரந்தத்தில் முழுகுகின்ற அயிராவத யானையின் கூந்தலையுடைய பெண் யானையுடன் நீராடும்படி தேன் அருவியைச்

3. சொரிகின்ற சோலைகளையுடைய நான் மாடக் கூடல் நகரில் சிறந்து விளங்குபவளே! புது நீரில் ஆடியருளுக! பொருநை யாற்றினை உடைய பாண்டியனின் மகளே புதியநீரில் ஆடுவாயாக!

**விளக்கம்**

'வைகையாற்றின் கரையில் இது எம் பெருமான் மண் சுமந்த இடம்' என்று கலைமகள் உரைத்தாள். அவ்வளவில் உமை யானவள் கண்ணீர் விட்டாள். அவளைப் பார்த்துக் கலைமகள் நீ

கண்ணீரைப் பெருக்கி மீண்டும் எம்பெருமான் மண் சுமக்கும்படி செய்வது மிகை அன்றோ என்று சொன்னாள்

இழியும் - ஓடும்; ஒழுகும். வெண் கமலப் பெண் - வெண்மையான தாமரையில் வீற்றிருக்கும் பெண்.

2. நின்றனையால்- நின்றனை + ஆல்; நின்றாய். அவற்கு - அச் சிவபெருமானுக்கு. மிகையன்றே - குற்றம் அன்றோ! ஆனந்த வெள்ளம் - உவகைக் கண்ணீர்ப் பெருக்கு.

3. பிழியும் - வெளிப்படும். நறை - நறுமணம். பிரசம் - தேன். பூந்துகள் - மகரந்தம். பிறைக்கோடு - வளைந்த சந்திரன் போன்ற கொம்பு. அயிராவதம் - அயிராவத யானை.

4. பொழில் - சோலை. கூடல் - மதுரை. பொலிவாய் - விளங்குவாய். (7)

91. மறிக்கும் திரைத்தண் புனல்வைகை
வண்ட லிடுமண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோ ரம்மைதுணை
மணிப்பொன் குடத்தில் கரைத்தூற்றும்
வெறிக்குங் குமச்சே றெக்கரிடும்
விரைப்பூந் துறைமண் பெறினொருத்தி
வெண்பிட் டிடவு மடித்தொருவன்
வேலை கொளவும் வேண்டுமெனக்
குறிக்கு மிடத்தில் தடந்தூநீர்
குடையப் பெறினக் கங்கைதிருக்
கோடீ ரத்துக் குடியிருப்பும்
கூடா போலும் பொலன்குவட்டுப்
பொறிக்குஞ் சுறவக் கொடியுயர்த்தாய்
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே. (8)

**தெளிவுரை**

1. மடிந்து விழும் அலைகளையுடைய குளிர்ந்த நீரையுடைய வைகை ஆற்றில் மேடாக இடப்பட்டிருந்த மண்ணைக் கூடையில் வைத்து முன் மண் சுமந்தவர் சிவபெருமான். தாயே, அவர் நின் இரண்டு அழகிய பொற்குடம் போன்ற கொங்கைகளிலிருந்து கரைந்து வடியும்

2. நறுமணம் பொருந்திய குங்குமச் சேறு வண்டலாகச் சேர்ந்த மணம் உள்ள அழகிய நீர்த்துறையில் மண்ணைக் காணப் பெற்றதால், முன்பு நிகழ்ந்தது போல் 'வந்தி' என்னும் ஒரு கிழவி வெண்மையான பிட்டை அள்ளித் தரவும் பாண்டியன் வேலை வாங்கவும் வேண்டும் எனக் கூறுமாறு

3. நாங்கள் குறித்த இடத்தில் நீராடப் பெற்றால், அந்தக் கங்கை, சிறந்த சிவபெருமான் சடையில் குடியிருக்கின்றதும் நீங்கி விடும் போலும்! இமயமலையில்,

4. எழுதிய மீனக் கொடியை உயர்த்திய பெண் அரசியே! புதுநீரில் ஆடியருளுக! தாம்பிர பரணியாற்றை உடைய பாண்டியனின் மகளே, புதிய நீரில் ஆடியருளுவாய்!

**விளக்கம்**

1. மறிக்கும் - மடங்கும். வண்டல் இடும் மண் - மேடாகக் கொண்டு வந்து போட்ட மண். சுமந்தோர் - சோமசுந்தரக் கடவுள். குடம் - கொங்கை.

2. வெறி - நறுமணம். எக்கர் - மேடு. விரை - நறுமணம். மண் பெறின் - மண்ணைக் காணப் பெற்றால். வெண் பிட்டு இடவும் - வெண்மையான பிட்டைத் தரவும். ஒருவன் - அரி மர்த்தன பாண்டியன்.

3. எனக் குறிக்கும் இடத்தில் - என்று சிவபெருமான் கருதும் இடத்தில். கோடீரம் - சடை. பொலன் குவடு - பொன்மலை.

4. பொறிக்கும் - எழுதிய. சுறவக் கொடி - மீன் கொடி.

நாங்கள் குறித்த இடத்தில் நீ நீராடினால் நின் கொங்கைக் குங்குமச் சேற்றுடன் கூடிய மேட்டு மண்ணைச் சுமப்பதற்குச் சிவ பெருமான் விரும்பி வைகையைப் பெருக்கி மீண்டும் வருவார். அவ்வாறு அடுத்தடுத்து நிகழ்ந்தால் உன் மாற்றாளான கங்கைக்கும் அவர் சடையிலே குடியிருப்பது போய்விடும். எனவே உன்னிடத்து அப்பெருமான் வருவதற்கு நல்ல சூழ்ச்சி என்று ஊக்கம் ஊட்டினர்.

(8)

## வேறு

92. சொற்கொடி யோடு மலர்க்கொடி கொய்து
தொடுத்த விரைத்தொடையும்
சுந்தரி தீட்டிய சிந்துர மும்மிகு
துங்கக் கொங்கைளின்
விற்கொடி கோட்டிய குங்கும முங்குடை
வெள்ளம் கொள்ளைகொள
வெளியே கண்டுநின் வடிவழ கையன்
விழிக்கு விருந்துசெய
இற்கொடி யோடு கயற்கொடி வீரன்
எடுத்த கருப்புவிலும்
இந்திர தனுவும் வணங்க வணங்கும்
இணைப்புரு வக்கொடிசேர்
பொற்கொடி இமய மடக்கொடி வைகைப்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே. (9)

### தெளிவுரை

1. சொல்லின் செல்வியான கலைமகளும், தாமரை மலர் மகளான திருமகளும் பறித்துத் தொடுத்த மணமாலையும், இந்திராணி தீட்டிய திலகமும், இரண்டு உயர்ந்த கொங்கைகளில்

2. எழுதப்பட்ட வில்லின் வளைவுள்ள கொடிகளை எழுதிய குங்குமக் கோலமும் நீ மூழ்குகின்ற வெள்ளமானது கொள்ளை கொண்டு போக, நின் வடிவழகை வெளியாகப் பார்த்தலால் அவ்வழகு எம்பெருமானுக்கு விருந்தாக அமைவதால்,

3. மனைவியான இரதியுடன் மீன் கொடி வீரனான காமன் கையில் எடுத்த கரும்பு வில்லும் இந்திர வில்லும் தோற்று வணங்கும்படி வளைந்துள்ள புருவங்களின் ஒழுங்கையுடைய

4. இயமமலை மன்னன் புதல்வியாகிய இளைய பூங் கொடியே! வைகை ஆற்றின் புது நீரில் ஆடுவாயாக! தாம்பிர பரணி ஆற்றின் துறையுடனே குமரித்துறையை யுடையவளே, புதிய நீரில் ஆடுவாயாக!

**விளக்கம்**

1. சொற்கொடி - கலைமகள். மலர்க்கொடி - திருமகள். தொடுத்த - கட்டிய. விரைத்தொடை - நறுமணம் கொண்ட மாலை. சுந்தரி - இந்திராணி.

2. விற்கொடி - வில் வடிவமாய் மார்பில் எழுதப்பட்ட குங்குமம். ஐயன் - சிவபெருமான்.

3. இற்கொடி - இல்லாளான இரதி. கயற்கொடி வீரன் - மீன்கொடியையுடைய காமன். கருப்புவிலும் - கரும்புவில்லும். 'விலும்' - 'வில்லும்' என்பதன் விகாரம். இந்திரதனு - வானவில். அம்மையின் புருவத்தைக் கண்டு இரதியின் வில்லுடன் மன்மதனது கரும்பு வில்லும் வான வில்லும் நாணி வணங்கும் என்பது கருத்து. கொடி - ஆகு பெயர்; மாதரையுணர்த்தியது.

மாலையும் திலகமும் குங்குமக் கோலமும் வடிவழகை மறைத்துள்ளன என்பதும் நீரில் முழுகி எழுந்தவுடன் இயற்கை யான அழகு வெளிப்பட்டுத் தோன்றும் என்பதும், அதுதான் இறைவர்க்கு விருந்தாகும் என்பதும் இங்குக் கொள்ளத் தக்கன.

(9)

93. கொள்ளைவெள் அருவி படிந்திடும் இமயக்
கூந்தல் மடப்பிடிபோல்
கொற்கைத் துறையில் சிறைவிரி யப்புனல்
குடையு மனப்பெடைபோல்
தெள்ளமு தக்கடல் நடுவில் தோன்று
செழுங்கம லக்குயில்போல்
தெய்வக் கங்கைத் திரையூ டெழுமொரு
செம்பவ ளக்கொடிபோல்
கள்ளவிழ் கோதையர் குழலில் குழலிசை
கற்றுப் பொற்றருவில்
களிநற வுண்ட மடப்பெடை யோடு
கலந்து முயங்கிவரிப்
புள்ளுறை பூம்பொழில் மதுரைத் துரைமகள்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே. (10)

## தெளிவுரை

1. கூட்டமான வெண்மையான அருவியில் இமய மலையில் உள்ள கூந்தலையுடைய இளம் பெண் யானை போலவும், கொற்கையம் துறையில் சிறகுகள் விரிய நீராடுகின்ற பெண் அன்னம் போலவும்,

2. தெளிந்த அமுதத்தை உதவிய திருப்பாற்கடல் நடுவில் தோன்றும் செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைப் போலவும் தெய்வத் தன்மையுடைய கங்கை அலையில் எழும் ஒரு செம் பவளக் கொடியைப் போலவும்

3. தேன் சிந்தும் மாலையணிந்த பெண்களின் கூந்தலில் தங்கிக், குழல் இசையைக் கற்றுப் பின்பு பொன் உலகில் உள்ள கற்பக மரத்தில் களிப்பைக் கொடுக்கும் தேனை உண்ட இளம் பெண் வண்டுடன் கலந்து புணர்ந்து

4. கீற்றுக்களையுடைய வண்டுகள் தங்கியுள்ள பூஞ்சோலை யுடைய மதுரைப் பெருமாட்டியே! புதிய நீரில் ஆடுவாயாக! தாம்பிர பரணி துறையுடன் குமரித் துறையவள் புதிய நீரில் ஆடுக.

**விளக்கம்**

1. கொள்ளை - மிகுதி. படிந்திடும் - நீராடும். இமயக் கூந்தல் மடப்பிடிபோல் - இமய மலையில் உள்ள கூந்தலையுடைய இளைய பெண்யானை போல். சிறை - இறகு. குடையும் - நீராடும். அனப்பெடை போல் - பெண் அன்னத்தைப் போல்.

2. செழுங்கமலக்குயில் - செழுமையான தாமரை மலரில் உள்ள திருமகள். குயில் - குயில் போன்றவள்; ஆகுபெயர்.

3. கள் அவிழ் - தேன் சொரியும். கோதையர் - மங்கையர். குழலில் - கூந்தலில். குழலிசை கற்று - குழல் இசையைக் கற்று. பொன் தரு - பொன் உலகத்தில் உள்ள கற்பக மரம். களிநறவு - களிப்பைத் தரும் மது. மடப்பெடை - இளமையுடைய பெண் அன்னம்.

4. வரிப்புள் - கீற்றுக்களை யுடைய வண்டு.

பிடியைப் போன்றும் பெண் அன்னப் பறவை போன்றும் குயில் போன்றும் பவளக்கொடி போன்றும் நீர் ஆடுக என்று இயைகிறது.

மதுரையில் உள்ள வண்டுகள் மடந்தையர் கூந்தலில் தங்கி அவர் கற்கும் குழல் இசையைத் தானும் கற்றுப்பாடும். சோலை உயர்ந்துள்ளதால் கற்பகமரத்துத் தேனைக் குடித்து மகிழும். அங்குள்ள பெண் வண்டுகளுடன் கூடி முயங்கும். இங்ஙனம் மதுரையின் சிறப்பை விளக்கியுள்ளார் கவிஞர். (10)

## 10. ஊசற்பருவம்

(அம்மை ஊசலில் ஆடுதல் கூறப்படும்.)

94. ஒள்ளொளிய பவளக் கொழுங்கால் மிசைப்பொங்கும்
ஒழுகொளிய வயிரவிட்டத்
தூற்றும் செழுந்தண் நிலாக்கால் விழுந்தனைய
ஒண்டரள வடம்வீக்கியே
அள்ளிட வழிந்துசே யொளிதுளும் பும்கிரண
அருணரத் நப்பலகைபுக்
காடுநின் றோற்றமப் பருதிமண் டலம்வளர்
அரும்பெருஞ் சுடரைஏய்ப்பத்
தெள்ளுசுவை யமுதம் கனிந்தவா னந்தத்
திரைக்கடல் மடித்துழக்கும்
செல்வச் செருக்கர்கண் மனக்கமல நெக்கபூஞ்
சேக்கையில் பழையபாடல்
புள்ளொலி யெழக்குடி புகுந்தசுந் தரவல்லி
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே. (1)

### தெளிவுரை

1. சிறந்த ஒளி பொருந்திய பவழத்தால் செய்த செழுமை யான காலின் மேல், பொங்கும் ஒளியுடைய வயிர விட்டம். அதில் பெருகும் செழித்த குளிர்ந்த நிலவொளி விழுந்ததைப் போல் முத்து வடம் கட்டி,

2. அள்ளிக் கொள்ளுவது போல் மிக நிறைந்து ஒளி ததும்பும் நிலவை யுடைய சிவந்த மாணிக்க மணிப் பலகையில் புகுந்து ஆடுகிறாய். இந்த நின் தோற்றம், அந்தக் கதிரவ மண்டலத்தில் வளர்கின்ற அரிய பெரிய ஒளியை ஒப்ப

3. தெள்ளி எடுத்த சுவையை யுடைய அமுதம் பழுத்த ஆனந்தமான அலையையுடைய கடலைப் பருகிக் கலக்கும்.

செல்வத்தால் சிறந்தவர்கள் உள்ளத் தாமரை மலர்ந்த பூம் பள்ளியில் பழமையான

4. பாடலான வேதப்பறவை ஒலிக்க, குடியாய்ப் புகுந்து வாழ்கின்ற கொடியே! பொன்னால் ஆன ஊஞ்சலில் ஆடியருளுக! புழுகு நெய் பூசிய சொக்கலிங்கப் பெருமானின் சிறந்த அழகுக் கேற்பப் பொன் கொடி போன்றவளே! பொன்னால் ஆன ஊஞ்சலில் ஆடுவாயாக!

**விளக்கம்**

1. ஒள் ஒளிய - மிக்க ஒளியுடைய. பவளக் கொழுங்கால் - பவளத்தால் ஆன தூண். வயிர விட்டம் - வயிரத்தால் ஆன விட்டம். நிலாக்கால் விழுந்தனைய - நிலவு ஒளி விழுந்ததைப் போல். தண்தரள வடம் - குளிர்ந்த முத்து வடம். வீக்கி - கட்டி.

2. அள்ளிட - அள்ளி எடுத்துக் கொள்ளும்படி. அருணரத்ன பலகை - மாணிக்கப்பலகை. புக்கு - அமர்ந்து.

3. தெள்ளுசுவை - தெள்ளி எடுத்த சுவை. ஆனந்தத் திரைக் கடல் - ஆனந்தமாகிய அலையை யுடைய கடல். உழக்கும் - கலக்கும். செல்வச் செருக்கர்கள் - திருவருள் செல்வத்தை உடைமையால் செருக்குக் கொண்டவர்கள். மனக்கமலம் நெக்கபூஞ் சேக்கை - மனத் தாமரை நெகிழ்ந்த பூம் பள்ளியில். பழைய பாடற்புள் - வேதப்பறவை.

4. புழுகுநெய் சொக்கர் - புழுகு நெய் பூசப்பட்ட சொக்க லிங்கப் பெருமான். பொன் ஊசல் - பொன்னால் ஆன ஊஞ்சல்.

பவளத் தூண் நிறுத்தி மேலிட்ட வயிர விட்டத்தில் தொங்க விடப்பட்ட முத்து வடத்தில் பூட்டிய மாணிக்கப்பலகையில் அமர்ந்து அம்மை ஆடினாள் என்க. (1)

95. விற்பொலிய நிலவுபொழி வெண்ணித் திலம்பூண்டு
விழுதுபட மழகதிர்விடும்
வெண்டரள ஊசலின் மிசைப்பொலிவ புண்டரிக
வீட்டில் பொலிந்துமதுரச்
சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின் றவளும்நின்
சொருபமென் பதுமி ளநிலாத்
தோற்றுமதி மண்டலத் தமுதமய மாயம்மை
தோன்றுகின் றதும்விரிப்ப
எற்பொலிய ஒழுகுமுழு மாணிக்க மணிமுகப்ப
ஏறிமழை முகில்தவழ்வதவ்
வெறிசுடர்க் கடவுள்திரு மடியிலவன் மடமகள்
இருந்துவிளை யாடலேய்க்கும்
பொற்புரிசை மதுரா புரிப்பொலி திருப்பாவை
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே. (2)

**தெளிவுரை**

1. ஒளி நிறையப் பெற்று நிலவைச் சொரியும் வெண்ணிற முத்துக்களை அணிந்து விழுதுபடும்படி இளைய கதிர் வீசும் வெண்மை நிற முத்தால் ஆன ஊஞ்சலின் மேல் நீ விளங்குவது, தாமரை மலராகிய வீட்டில் நிறைந்து

2. இனிய சொற்கள் நிரம்பிய வேதத்தைச் சொல்பவளும் நின் வடிவம் என்று சொல்வதும் இளநிலவை வீசுகின்ற சந்திர மண்டலத்தின் அமுதமயமாய், அம்மையே, நீ விளங்கு கின்றதையும் விரித்துக் கூற,

3. ஒளி விளங்க ஒழுகும் முழு மாணிக்க மணியால் ஆன முகப்பில் ஏறி மழையைப் பொழியும் முகில், தவழ்ந்து போவது வீசுகின்ற சுடரையுடைய கதிரவன் திருமடியில் அவனுடைய இளமகள் பொருந்தி விளையாடுவது போல் இருக்கும்.

4. பொன்னால் ஆன மதில்களை யுடைய மதுரை நகரில் நிறைந்து விளங்கும் அழகான பாவையே! பொன்னால் ஆன ஊஞ்சலில் ஆடுவாயாக! புழுகு நெய் அணிந்த சொக்கரின் அழகுக்கு ஏற்ற கொடி போன்றவளே! பொன்னால் ஆன ஊசலில் ஆடுவாயாக!

**விளக்கம்**

(அம்பிகை முத்தால் ஆன ஊஞ்சலில் ஆடுதல் இங்குக் கூறப்பட்டுள்ளது)

வில் - ஒளி. பொலிவ - விளங்குதல். புண்டரிகம் - வெண்டாமரை.

அம்மையார் முத்து மாலை அணிந்து முத்து ஊஞ்சலில் அமர்ந்திருத்தல் நாமகள் சொரூபம் என்பதையும், சந்திர மண்டலத்து அமுதமயமாய் இருந்து தோன்றுகின்றாள் என்பதையும் குறிக்கின்றது.

2. சொற்பொலி பழம்பாடல் - சொல் விளங்கும் பழைய நூலான வேதம். சொல்லுகின்றவள் - கலைமகள்.

3. எல் - ஒளி. மாணிக்கமணி முகப்பு ஏறி - மாணிக்கம் பதித்த அழகிய வாயில் மாடம். சுடர்க்கடவுள் - கதிரவன். மட மகள் - யமுனை நதி. மாணிக்க மாடத்துக்குச் சூரியனும் அதில் தவழும் மேகத்துக்கு யமுனையும் உவமைகள். (2)

96. உருகிய பசும்பொன் அசும்பவெயில் வீசுபொன்
ஊசலை உதைந்தாடலும்
ஓண்டளி ரடிச்சுவ டுறப்பெறு மசோகுநறவு
ஒழுகுமலர் பூத்துதிர்வதுன்
திருமு னுருவங்கரந் தெந்தையார் நிற்பது
தெரிந்திட நமக்கிதுவெனாச்
செஞ்சிலைக் கள்வனொரு வன்றொடை மடக்காது
தெரிகணைகள் சொரிவதேய்ப்ப

எரிமணி குயின்றபொற் செய்குன்று மழகதிர்
எறிப்பவெழு செஞ்சோதியூடு
இளமதி இமைப்பதுன் றிருமுகச் செவ்விவேட்டு
எழுநாத் தலைத்தவமவன்
புரிவது கடுக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே (3)

**தெளிவுரை**

1. உருகிய பசும்பொன் ஒழுகுவது போல் ஒளியை வீசும் பொன் ஊசலை உதைத்து ஆடலும் ஒள்ளிய தளிர் போன்ற அடிகளின் தழும்பு பொருந்தப் பெற்ற அசோகமரம் தேன் சிந்தும் மலர்களைப் பூத்துச் சிந்துகின்றது. அது நின்

2. சந்நிதியில் தம் வடிவத்தை மறைத்து எம் தந்தையான சிவபெருமான் நிற்கின்றது தெரிந்து, இது நமக்கு நல்ல சமயம் எனச் செம்மையான கரும்பு வில்லையுடைய திருடன் காமன் அம்பு எய்வதை நிறுத்தாமல் ஆய்ந்து எடுத்த அம்புகளைச் சொரிவதைப் போல்

3. ஒளிரும் மாணிக்க மணி அழுத்திச் செய்த அழகிய குன்று இளநிலவை வீச எழும் சிவந்த ஒளியூடு இளம்பிறை விளங்குவது, நின் அழகிய முத்தின் தன்மையை விரும்பி ஏழு நாக்குகளை யுடைய தீயினிடையே நின்று

4. அந்தச் சந்திரன் தவம் செய்வதைப் போல் விளங்கும். இவ்வியல்புடைய மதுரைப் பதியில் உள்ள இளங்கிளியே! பொன் ஊசல் ஆடியருளுக. புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமான் அழகுக்கு ஏற்ற கொடியே. பொன்னால் ஆன ஊசலை ஆடியருளுக.

**விளக்கம்**

அசும்ப - துளிக்க. அம்மை அசோக மரத்தில் கட்டிய ஊசலில் அமர்ந்து ஆடினாள். அப்போது அவள் அசோக மரத்தை

உதைக்கிறாள். அது மலர்களைச் சொரிகின்றது. மகளிர் உதைத்தால் அசோக மரம் மலர் உதிக்கும் என்பது வழக்கு. அங்ஙனம் மலர்கள் உதிர்தல், சிவபெருமான் மறைவாக நின்று உமாதேவியின் முன் நிற்பதை உணர்ந்து மன்மதன் மலர் அம்பைத் தொடுத்தலைப் போல் விளங்கும். அசோக மலர் மன்மதனுக்குரிய பாணங்களுள் ஒன்று. ஆதலால் மேற்கண்ட வண்ணம் உரைத்தார்.

3. எரி மணி - நெருப்பைப் போல் ஒளி வீசும் மாணிக்கம். குயின்ற - பதிக்கப்பட்ட. இமைப்பது - விளங்குவது. எழு நாத்தலை - தீயில். அவன் - சந்திரன். மாணிக்கமணி மாலையால் செய்குன்றின் ஒளியூடு இளஞ்சந்திரன் துளி விழுவது தவம் செய்வது போல் விளங்கியது.

4. கடுக்கும் - ஒக்கும். மடக்கிள்ளை - இளங்கிளியே. (3)

97. கங்கைமுடி மகிழ்நர்திரு வுளமசைந் தாடக்
கலந்தாடு பொன்னூசல்அக்
கடவுள்திரு நோக்கத்து நெக்குருகி யிடநின்
கடைக்கணோக் கத்துமற்றச்
செங்கண் விடை யவர்மனமும் ஒக்கக் கரைந்துருகு
செய்கையவர் சித்தமேபொன்
திருவூச லாவிருந் தாடுகின் றாய்எனும்
செய்தியை யெடுத்துரைப்ப
அங்கணெடு நிலம்விடர் படக்கிழித் தோடுவேர்
அடியிற் பழுத்தபலவின்
அளிபொற் சுளைக்குடக் கனியுடைந் தூற்றுதேன்
அருவிபில மேழுமுட்டிப்
பொங்கிவரு பொழின்மதுர மதுரைநா யகிதிருப்
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (4)

**தெளிவுரை**

1. கங்கையைத் தலையில் அணிந்த கணவர் திருவுள்ளம் அசைந்து ஆடும்படி கலந்து நீ ஆடும் பொன் ஊசல், அந்தக் கடவுளின் அழகிய பார்வையால் நெகிழ்ந்து இளகும்படி நின் கடைக்கண் பார்வையால்

2. அந்தச் சிவந்த கண்களையுடைய காளை ஊர்தியினரான சிவபெருமானின் மனமும் ஒன்று கூடிக் கரைந்து உருகும். அச் செயல், அவரது மனமே நின் பொன்னூசலாக அமர்ந்து நீ ஆடுகின்றனை என்ற செய்தியை எடுத்துக் (கூறும்) கூற,

3. அழகிய இடம் அகன்ற தரையில் பிளவு ஏற்படக் கிழித்து ஓடும் வேரின் அடிப்பக்கம் பருத்திருக்கும் பலவில், நன்கு கனிந்த பொன் போன்ற சுளைகளையுடைய பெருகும் ஆறு ஆன அருவி ஏழு கீழ் உலகங்களையும் நிரப்பி

4. பொங்கி வரும் சோலைகளையுடைய இனிய மதுரைத் தலைவியே! பொன்னூசல் ஆடியருளுக! புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமானுக்கு ஏற்ற கொடி போன்றவளே! பொன் ஊசலை ஆடுவாயாக!

**விளக்கம்**

1. மகிழ்நர் - மகிழ்பவரான கணவர்; சிவபெருமான். நோக்கத்து - பார்வையால். அப்பெருமானின் கண்களுள் ஒன்று அக்கினி. ஆதலால் 'பொன்னூசல் உருகி' என்றார். நெக்கு உருகி - நெகிழ்ந்து உருகி. செங்கண் விடையவர் - சிவந்த கண்ணை யுடைய காளை ஊர்தியை உடைய சிவபெருமான். சித்தம் - உள்ளம்.

3. அம்கண் நெடு நிலம் - அழகிய இடம் உடைய பெரிய நிலம். விடர்பட - பிளவு ஏற்பட. வேர் அடியில் பழுத்த பலா. அளி பொன் சுளை - பழுத்த பொன் போன்ற சுளை. குடக்கனி - குடம் போன்ற பலாக்கனி. பிலம் ஏழு - பாதல ஏழு உலகங்கள். முட்டி - மோதி.

4. பொழில் - சோலை. (4)

98. சேர்க்குஞ் சுவைப்பாடல் அமுதொழுக வொழுகுபொன்
திருவூசல் பாடியாடச்
சிவபிரான் திருமுடி யசைப்பமுடி மேல்பொங்கு
செங்கணர வரசகிலம்வைத்து
ஆர்க்கும் பணாடவி அசைப்பச் சராசரமும்
அசைகின்ற தம்மனையசைந்து
ஆடலால் அண்டமு மகண்டபகி ரண்டமும்
அசைந்தாடு கின்றதேய்ப்பக்
கார்க்கொந் தளக்கோதை மடவியர் குழற்கூட்டு
கமழ்நறும் புகைவிண்மிசைக்
கைபரந் தெழுவதுரு மாறிரவி மண்டலம்
கைக்கொள விருட்படலம்வான்
போர்க்கின்ற தொக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூச லாடியருளே
புழுகநெய்ச் சொக்கர்திரு வழகினுக் குஒத்தகொடி
பொன்னூச லாடியருளே. (5)

## தெளிவுரை

1. செய்யப்படும் சுவையுடைய பாடலின் அமுதம் ஒழுகப் பொன்னின் ஒளி ஒழுகும் சிறந்த ஊசலில் பாட்டுப் பாடி ஆட அதனைக் கேட்ட சிவபெருமான் மகிழ்ச்சி கொண்டு திருமுடி அசைப்ப, முடியில் பொங்கும் இயல்புடைய சிவந்த கண்களை யுடைய பாம்புக்கரசனான ஆதிசேடன்

2. பூமியைத் தாங்கும் தலையை அசைக்க, அதனால் உயிர்ப் பொருள்களும் உயிர் அற்ற பொருள்களும் அசையும். அத் தோற்றமானது தாயே நீ அசைந்தாடுவதால் வானமும் பிளவுபட்ட பல அண்டங்களும் ஆடுவதைப் போன்று தோன்றும்.

3. மேகம் போன்ற கூந்தலை யுடைய மாலை சூடிய பெண்கள் தம் கூந்தல் உலருமாறு ஊட்டும் மிக்க மணம் பொருந்திய இனிய அகிற்புகை வான் பரப்பில் எங்கும் விரிந்து எழுந்து செல்லும். அங்ஙனம் செல்வது வடிவம் மாறிக் கதிரவன் மண்டலத்தைக் கைக் கொள்ள இருட்கூட்டம் விண்ணை

4. மறைக்கின்றதாக விளங்கும். இவ்வியல்புடைய மதுரை நகரில் உள்ள இளங்கிளியே! புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமானின் அழகுக்கு ஏற்ற கொடி போன்றவளே! பொன்னால் ஆன ஊசலை ஆடியருளுக.

**விளக்கம்**

1. சேர்க்கும் - இயற்றப்படும். படலம் - கூட்டம். செங்கண் அரவரசு - சிவந்த கண்ணையுடைய பாம்பரசனான ஆதிசேடன். அகிலம் வைத்து - பூமியைத் தாங்கி.

2. ஆர்க்கும் - பிணிக்கும். பணாடவி - படத்தொகுதி; பணம் + அடவி. பணம் - படம். அடவி - தொகுதி. சராசரம் - சரம் + அசரம்; உயிர்ப் பொருளும் உயிர் அற்ற பொருள்களும். அம்மனை - தாயே. அகண்ட பகிர் அண்டம் - வானமும் பிளவுடைய பல அண்டங்கள்.

3. கார் - கரிய மேகம். கொந்தளம் - கூந்தல். மடவியர் - இளமையுடைய பெண்கள். கமழ் நறும் புகை - மணம் வீசும் நறுமணப் புகை. ரவி மண்டலம் - கதிரவனின் மண்டலம். படலம் - இருளின் படலம். புகைக்கு இருட்படலம் உவமை.

4. போர்க்கின்றது - மூடுகின்றது. மடக்கிள்ளை - இளைய கிளியே! (5)

99. தேர்க்கோல மொடுநின் திருக்கோல மும்கண்டு
சிந்தனை புழுங்குகோபத்
தீயவிய மூண்டெழும் காமா னலங்கனல்
சிகையென வெழுந்துபொங்கத்
தார்க்கோல வேணியர்தம் உள்ளமென வேபொன்
தடஞ்சிலையு முருகியோடத்
தண்மதி முடித்ததும் வெள்விடைக் கொண்மணி
தரித்ததும் விருத்தமாகக்
கார்க்கோல நீலக் கருங்களத் தோடொருவர்
செங்களத் தேற்றலுமலர்க்

கட்கணை துரக்கும் கரும்புருவ வில்லொடொரு
கைவில் குனித்துநின்ற
போர்க்கோல மேதிரு மணக்கோல மானபெண்
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (6)

**தெளிவுரை**

1. நீ ஏறிய தேரழகுடன் நின் திருவுள்ளத்தின் அழகையும் கண்டு மனத்தில் கொதித்து எழுந்த சினத்தீயானது தணியவும், உள்ளத்தில் பற்றி எரிகின்ற காம நெருப்பு உமிழ்ந்த கொழுந்து எனக் கூறுமாறு வளர்ந்து பொங்கும்

2. மாலை சூடிய சிவந்த சடையை யுடையவர் ஆன சிவபெருமான் தன் மனத்தைப் போன்றே பெரிய பொன் மலையும் உருகி ஓடக் குளிர்ந்த மதியை முடியில் அணிந்ததும் வெண்மை யான காளைக்கு ஒளியுடைய மணியைக் கட்டியதும் மாறுபாடாகத் தோன்ற,

3. மேகத்தின் அழகு போன்ற நீலமும் கருமையும் பொருந்திய கழுத்தையுடைய சிவபெருமான் போரில் எதிர்த்து வருந்தக் கண்களாகிய அம்புகளைச் செலுத்தும் கரிய புருவங் களாகிய வில்லுடன் ஒரு கையில் வில்லையும் வளைத்தபடி நின்ற

4. போர்க் கோலத்தை திருமணக் கோலமாகக் கொண்டு மணம் செய்து கொண்ட பெண்ணே! பொன்னால் ஆன ஊசலை ஆடியருளுக! புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமானின் அழகுக்கு ஏற்ற கொடி போன்றவளே! பொன்னால் ஆன ஊசல் ஆடியருளுக.

**விளக்கம்**

அம்மையார் திக்கு விசயத்தின் போது கயிலை மலையை அணுகினார். அவரது தேர்க்கோலம் கண்ட சிவபெருமானுக்குச் சினம் மூண்டது. பின்னர் அந்தக் கோலம் நீங்கி ஒழியக் காமம்

எழுந்தது. அந்தக் கனலின் கொழுந்து போன்றது சிவந்த சடை. அம்மையிடம் உண்டான காதலால் உள்ளம் உருகியது. அது போன்றே வில்லும் உருகி நீங்கியது.

காமானலம் - காமம் + அனலம்; காமத்தீ. கனல் சிகை - தீயின் கொழுந்து.

கோபம் கயிலை மீது படையெடுத்து வந்ததால்.

2. தார்க்கோல வேணி - தாரை அணிந்த கோலம் உடைய சடை. காமாக்கினியால் சிவபெருமானின் உள்ளமும் வில்லான மேரு மலையும் ஒருங்கே உருகின. விருத்தம் - பொருந்தாதவை; பகை என்றபடி.

3. நீலக்கருங்களம் - கருங்குவளை போன்ற கரிய கழுத்து.

4. ஒருவர் - சிவபெருமான். ஏற்றலும் - எதிர்த்தவுடன். மலர்க்கண் கணை துரக்கும் - மலர் போன்ற கண்ணான அம்பை எய்யும் கரிய புருவம் என்ற வில். புருவ வில்லையும் கை வில்லையும் வளைத்து என்க. (6)

100. குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇச்சிறு
குறும்பலவின் நெடியபாரக்
கொம்பொடி படத்தூங்கு முள்புறக் கனியின்
குடங்கொண்டு நீந்தமடைவாய்
வழியும் கொழுந்தேன் உவட்டெழு தடங்காவின்
வள்ளுகிர்க் கருவிரற்கூன்
மந்திக ளிரிந்தேகும் விசையினில் விசைத்தெழு
மரக்கோடு பாயவயிறு
கிழியுங் கலைத்திங்க ளமுதருவி தூங்குவ
கிளைத்தவண்டு உழுபைந்துழாய்க்
கேசவன் கால்வீச வண்டகோ ளகைமுகடு
கீண்டுவெள் ளருவிபொங்கிப்
பொழியும் திறத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (7)

## தெளிவுரை

1. சூழ்ந்திருக்கும் கண்களையுடைய ஆண்குரங்குகள் அஞ்சிச் சிறிய குறும்பலாமரத்தின் நீண்ட பாரத்தையுடைய கொம்பு ஒடியும்படி தொங்கும் பலாப்பழம் என்ற குடத்தைக் கொண்டு நீந்துதலைச் செய்ய

2. மடையில் ஒழுகுவதைப் போல் செழித்த தேன் பெருக்கெடுத்து ஓடும் பெரிய சோலை. அதில் கூர்மையான நகங்களையும் கரிய விரல்களையும் வளைந்த முதுகையும் உடைய குரங்குகள் அஞ்சி ஓடும் வேகத்தால் விசையும் எழும் மரக்கிளை பாயும். பாய்தலால்

3. வயிறு கிழிக்கப்பட்டுக் கலைகளையுடைய சந்திரனின் அமுத அருவி ஒழுகும். அத்தோற்றம் வண்டு கிளறும் பசுந்துளப மாலையை அணிந்த திருமால் தன் காலை மேலே உயர்த்தி நீட்டிய போது வான வட்டத்தின் உச்சி கிழிந்து கங்கை அருவியானது பெருகிப்

4. பொழியும் தன்மையை ஒக்கும் வளம் பொருந்திய மதுரை நாயகியே! பொன்னால் ஆன ஊசல் ஆடியருளுக! புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமான் அழகுக்கு ஒத்த கொடி போன்றவளே! பொன் ஊசல் ஆடியருளுக.

## விளக்கம்

1. குழியும் - குழிந்திருக்கும். முசுக்கலை - ஆண்குரங்குகள். வெரீஇ - அஞ்சி. நெடியபாரம் - நீண்ட பாரத்தையுடைய. தூங்கு - தொங்கும். முட்புறக்கனி - முள்ளை வெளியில் உடைய பலாப்பழம். கனியின் குடம் கொண்டு - கனியாகக் குடத்தைக் கொண்டு. குடம் கொண்டு நீந்துதல் வழக்கம்.

2. உவட்டுஎழு - பெருக்கெடுத்து எழும். வள்உகிர் - கூரிய நகம். கருவிரல் - கரிய விரல். கூன் - முதுகு வளைவு. மரக்கோடு - மரத்தின் கொம்பு.

3. வயிறு கிழியும் கலைத்திங்கள் - நடுவிடம் கிழியப்பெறும் சந்திரன். அமுதஅருவி - சந்திரனின் அமுத அருவி. அது கிழிக்கப் பட்டதால் அதனிடம் உள்ள அமுதம் வெளிப்பட்டுப் பாய்கின்றது. வயிறு கிழிந்து அமுதம் அருவியாக ஒழுகுதல், திருமால் திருவிக்கிரம அவதாரம் கொண்ட போது அவரது கால் பாய அண்ட கோளகை பிளந்து கங்கை வழிந்தது போல் விளங்கியது.

முகடு - உச்சி. கீண்டு - பிளந்து. வெள்ளருவி - வெண்மையான அருவி.

4. திறம் - இயல்பு. (7)

101. ஒல்குங் கொடிச்சிறு மருங்கிற்கு இரங்கிமெல்
லோதிவண் டார்த்தெழப்பொன்
ஊசலை யுதைந்தாடும் அளவின்மலர் மகளம்மை
உள்ளடிக் கூன்பிறைதழீஇ
மல்கும் சுவட்டினை வலம்புரிக் கீற்றிதுகொல்
வாணியென்று அசதியாடி
மணிமுறுவல் கோட்டநின் வணங்கா முடிக்கொரு
வணக்கநெடு நாண்வழங்கப்
பில்குங் குறும்பனிக் கூதிர்க் குடைந்தெனப்
பிரசநா றைம்பாற்கிளம்
பேதையர்க ளூட்டும் கொழும்புகை மடுத்துமென்
பெடையொடு வரிச்சுரும்பர்
புல்குந் தடம்பணை யுடுத்தமது ரைத்தலைவி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (8)

## தெளிவுரை

1. அசையும் கொடி போன்ற சிறிய இடையின் மென்மையைக் கண்டு வருந்தி மென்மையான கூந்தலில் உள்ள வண்டுகள் ஒலித்து ஏழும். எழ, பொன்னால் ஆன ஊசலைக் காலால் உதைத்து ஆடும்போது, திருமகள் மீனாட்சியம்மையின் வளைந்த பிறையைத் தழுவி நிறைந்துள்ள தழும்பைப் பார்த்து

2. மலைமகளே! இது வலம்புரிச் சங்கு ரேகையோ என்று எள்ளி முத்துப் போன்ற பல் தோன்றச் சிரித்தாள். அப்போது நின் வளையாத முடிக்கு ஒரு வணக்கத்தை நீண்ட நாணமானது தந்தது. தர,

3. துளிக்கின்ற பனியுடன் கூடிய கூதிர்க்கு ஆற்றாமல் உள்ளது என்று தேன் ஊறும் கூந்தலுக்கு இளம் சிறுமிகள் ஊட்டும் செழித்த புகையை மேற்கொண்டு மென்மையான பெண் வண்டுடன் ஆண் வண்டுகள்

4. தழுவும் பெரிய வயலிடங்களைப் பொருந்தியுள்ள மதுரை நாயகியே! பொன்னால் ஆன ஊசலை ஆடியருளுக! புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமானின் அழகுக்கு ஏற்ற கொடி போன்றவளே! பொன் ஊஞ்சல் ஆடியருளுக.

**விளக்கம்**

1. ஒல்கும் - அசையும்; துவளும். மருங்குல் - இடை இடையின் பாரம் தாங்காது என்று எண்ணி வண்டுகள் ஒலித்து எழுந்தனவாம். ஓதி வண்டு - கூந்தலில் இருந்த வண்டு. மலர்மகள் - திருமகள். உள்அடி - அடியின் உள்ளே உள்ள. கூன்பிறை - வளைந்த பிறையடையாளம். இது சிவபெருமான் அம்மையை வணங்கிய போது பொருந்திய அவரது தலை முடியின் தழும்பு.

2. சுவடு - அடையாளம்; தழும்பு. வலம்புரிக் கீற்று - வலம்புரிச்சங்கின் அடையாளம்; சங்கரேகை. அசதியாடி - எள்ளி; பரிகாசம் செய்து. திருமகள் அசதியாடியதால் மீனாட்சியம்மை நாணம் கொண்டு தலை வணங்கினாள். மணிமுறுவல் - அழகிய பற்கள்.

3. பில்கும் - துளிக்கும். கூதிர்க்கு உடைந்தென - கூதிர் காலத்துக்கு ஆற்றாமல் இருக்கின்றது என. பிரசம் நாறு - தேன் தோன்றும். ஐம்பால் - ஐந்து வகையாய்ப் பின்னி முழக்கப்படும் கூந்தல். இளம் பேதையர் - சிறுமியர். வரிச்சுரும்பர் - வரிகளை யுடைய வண்டுகள்.

4. புல்கும் - தழுவும். தடம்பணை - பெரிய வயல். (8)

102. கொன்செய்த செழுமணித் திருவூசல் அரமகளிர்
கொண்டாட ஆடுந் தொறும்
குறுமுறுவல் நெடுநில வருத்தும் சகோரமாய்க்
கூந்தலங் கற்றைசுற்றும்
தென்செய்த மழலைச் சுரும்பராய் மங்கைநின்
செங்கைப் பசுங்கிள்ளையாய்த்
தேவதே வன்பொலிவ தெவ்வுருவு மாமவன்
திருவுருவின் முறைதெரிப்ப
மின்செய்த சாயலவர் மேல்தலத் தாடிய
விரைப்புனலின் அருவிகுடையும்
வெள்ளானை குங்குமச் செஞ்சேறு நாறமட
மென்பிடியை அஞ்சிநிற்கும்
பொன்செய்த மாடமலி கூடல் பெருஞ்செல்வி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (9)

**தெளிவுரை**

1. பெருமை கொண்ட செழித்த மாணிக்க மணிகளைப் பதித்த ஊசலைத் தேவமங்கையர் பாராட்டும்படி ஆடும் போதெல்லாம், குறுஞ்சிரிப்பு ஆன நிலவொளியைப் பருகும் சகோரப் பறவையாய், இருந்து நுகர்ந்தும்.

2. அழகிய கூந்தல் காட்டைச் சுற்றி வரும் அழகமைந்த மழலை இசையுடைய வண்டாகவும் விளங்கி, மாதே, நின் செம்மையான கையில் வளரும் பச்சைக் கிளியாயும் இருந்து, மகாதேவன் விளங்குவது அவன் அழகிய வடிவின் இயல்பு எந்த வடிவுமாம் என்பதை விளக்கும்.

3. மின் போன்ற சாயலை யுடைய மகளிர் மேன்மாடத்தில் நீராடிய மணம் உள்ள நீர் அருவியில் முழுகிய வெள்ளை யானை, தன் உடலில் குங்குமக் குழம்பின் மணம் தோன்ற அதைக் கண்டு அறியாமை யுடைய மென்மையான பெண் யானைக்கு அஞ்சி வெளியே நிற்கும்.

4. இவ்வியல்புடைய பொன்னால் ஆன மாடங்கள் மலிந்த கூடல் என்ற மதுரை நகர்ப் பெருஞ்செல்வியே! பொன்னால் ஆன ஊசல் ஆடியருளுக. புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெருமானுக்கு ஏற்ற பொற்கொடியே, பொன் ஊசல் ஆடியருளுக.

**விளக்கம்**

1. கொன் - பெருமை

அங்கயற்கண்ணம்மை ஊசல் ஆடும் போது சிவபெருமான் முறுவல் என்னும் நிலவை உண்ணும் சகோரப் பறவையாகவும், கூந்தலில் மொய்க்கும் வண்டாகவும், கையில் வீற்றிருக்கும் கிளியாகவும் அமர்ந்திருப்பது எவ்வடிவுமாகின்ற அப்பெரு மானின் இயல்பைப் புலப்படுத்துவது.

அரமகளிர் - தேவமங்கையர். சகோரம் என்ற பறவை நிலவொளியை உண்ணும் இயல்புடையது.

2. தென் - அழகு. சுரும்பர் - வண்டு. தேவதேவன் - மகாதேவன்; சிவபெருமான்.

3. புனலின் அருவி - புனலான அருவி. குடையும் - நீராடும். குங்குமச் செஞ்சேறு நாற - குங்குமச் சாந்து உடலில் படிந்து மணம் கமழ. மென்பிடியை - மென்மையான பெண் யானைக்கு.

4. மாடமலி கூடல் - மாளிகைகள் மிக்க மதுரைப்பதி. (9)

103. இருபதமு மென்குரல் கிண்கிணியு முறையிட்டு
இரைத்திடு மரிச்சிலம்பும்
இறுமிறு மருங்கென் றிரங்குமே கலையும்பொன்
எழுதுசெம் பட்டுவீக்கும்
திருவிடையு முடைதார மும்ஒட் டியாணமும்
செங்கைப் பசுங்கிள்ளையும்
திருமுலைத் தரளஉத் தரியமும் மங்கலத்
திருநாணு மழகொழுகநின்று

அருள்பொழியு மதிமுகமு முகமதியி னெடுநில
வரும்புகுறு நகையுஞான
ஆனந்த மாக்கடல் குடைந்துகுழை மகரத்தொடு
அமராடு ம்ஓடரிக்கண்
பொருகயலும் வடிவழகு பூத்தசுந் தரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே. (10)

### தெளிவுரை

1. இரண்டு திருவடிகளிலும் அணிந்துள்ள கிண்கிணியாகிய சதங்கையும், முறையீடு செய்வது போல் ஒலிக்கும் பரல்களை யுடைய சிலம்பும், இடை ஒடிந்து விடும் ஒடிந்து விடும் என்று புலம்பும் மேகலை யணியும், பொன் சரிகையால் சித்தரிக்கப்பட்ட பட்டாடை அணிந்த

2. இடையும் மேலாடையும் ஒட்டியாணம் என்ற இடுப் பணியும், சிவந்த கையில் வளர்கின்ற பச்சைக் கிளியும் அழகிய முலை மீது அணியப்பட்ட முத்துப்பதித்த மேலாடையும் மங்கலமான திருநாண் அணியும் அழகு வழியும்படி பொருந்தி,

3. அருளைச் சொரியும் மதி போன்ற முகமும், முகம் என்ற சந்திரனின் நீண்ட நிலவு துளிக்கின்ற சிறு நகையும், அறிவு இன்பம் என்ற கடலில் முழுகி, மகரக் குழையணிந்த காதுடன்

4. போர் செய்யும் கயல்மீன்களாகிய கண்களும் வடிவுடைய அழகும் மலர்ந்திருக்கப் பெற்ற சுந்தரவல்லியே, பொன்னால் ஆன ஊசல் ஆடியருளுக! புழுகு நெய் அணிந்த சொக்கலிங்கப் பெரு மானின் அழகுக்கு ஏற்ற கொடி போன்றவளே! பொன்னால் ஆன ஊசல் ஆடியருளுக!

### விளக்கம்

1. இருபதம் - இரண்டு திருவடிகள். கிண்கிணி - காலணி வகை. அரிச்சிலம்பு - பரற்கற்களையுடைய சிலம்பு அணி. இறும்

இறும் - ஒடியும் ஒடியும். மருங்கு - இடை. இரங்கும் - புலம்பும். பொன் எழுது செம்பட்டு - பொற் சரிகையால் சித்திரிக்கப்பட்ட பட்டாடை. வீக்கும் - கட்டும்.

2. இடை - இடுப்பு. உடைதாரம் - மேல் ஆடை. ஒட்டி யாணம் - மங்கையர் இடையில் அணியும் ஓர் அணி. தரள உத்தரியம் - முத்துப் பதிக்கப்பட்ட மேலாடை. மங்கலத் திரு நாணும் - மாங்கலியமும்.

3. ஞான ஆனந்தமாக்கடல் என்றது சிவபெருமானை. குழைமகரம் - மகரக்குழை.

4. பொருகயல் - மோதும் கயல் மீன் போன்ற கண்கள். வடிவு அழகு பூத்த - வடிவத்தில் அழகாக மலர்ந்த.

இதில் அங்கயற்கண்ணம்மையின் அடி முதல் முடி வரையுள்ள புனைவு அமைந்துள்ளது.

(குறிப்பு: இந்நூல் முழுவதிலும் மீனாட்சியம்மை என்ற சொல் வரவில்லை.) (10)

*மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் தெளிவுரை முற்றுப் பெற்றது*

# 3. மதுரைக் கலம்பகம்

மதுரைக் கலம்பகம் என்பது மதுரையைப் பற்றிய கலம்பகம் என இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. மதுரை என்பது அந்நகரில் கோயில் கொண்ட சொக்க நாதர் மீது இக்கலம்பகம் பாடப்பட்டது.

கலம்பகம் என்பது சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. கலம்பு + அகம் = கலம்பகம் என்றாயிற்று என்பர் ஒரு சாரார். பாவும் பாவினங்களும் பலவகைப்பட்ட அகப் பொருள் புறப் பொருள் களும் கலந்து வரப்பாடப் படுவதால் இப்பெயர் அமைந்தது எனவும் கொள்ளலாம் கலம் + பகம். கலம் - பன்னிரண்டு, பகம் அதில் பாதி, அதாவது ஆறு. இரண்டும் கூட்டப் பதினெட்டு உறுப்பு. எனவே, இந்நூல் பதினெட்டு வகையுறுப்புகளைக் கொண்டது என்பர்.

இதன் உறுப்புக்கள்: ஒரு போகு வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் முதற்கவி உறுப்பாக முதலில் கூறி, புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் ஆகிய இப்பதினெட்டு உறுப்புகளும் பொருந்தும்படி மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, கலிநிலைத் துறை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, ஆசிரியத்துறை, வெண்டுறை முதலியவற்றால், இடையிடையே வெண்பா கலித்துறையும் கலந்து வர, மடக்குடைச் செய்யுளும் வண்ணம் சந்தம் முதலியனவும் பொருந்த, அந்தாதித் தொடையால் முற்றுப் பெற, இறுதியும் முதலும் மண்டலித்துப் பாட வேண்டும். தேவர்க்கு நூறும், அந்தணர்க்குத் தொண்ணூற் றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சர்க்கு எழுபதும், வணிகர்க்கு ஐம்பதும், வேளாளர்க்கு முப்பதுமாகப் பாடல் வேண்டும் என்பர்.

வச்சணந்தி மாலை, இலக்கண விளக்கப் பாட்டியல், பன்னிரு பாட்டியல் ஆகியவற்றில் இதன் இலக்கணம் விளக்கப் பட்டுள்ளது.

பிற்காலத்தில் மடல், கொற்றியார், பிச்சியார், வலைச்சியார், இடைச்சியார் என்ற பொருள்களையும் அமைத்துப் பாடினர்.

‘ஒருபோகு வெண்பாக் கலித்துறை உறமுன்
வருடிய மதங்கம் மானை காலம்
சம்பிர தம்கார் தவம்குறம் மறம் பாண்
களிசித் திரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேற் கொண்டெழும் ஊசல்
மடக்கு மருட்பா வஞ்சி விருத்தம்
அகவல் கலியினம் அகவல் விருத்தம்
வஞ்சி வஞ்சித்துறை வெண்டுறை மருவி
இடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்று
அந்தாதி மண்டலித்த தாங்கலம் பகமே.

*(இலக்கண விளக்கப்பாட்டியல் - 53)*

அதுவே,

இமையவர்க்கு ஒருநூறு இழிபுஐந்து ஐயர்க்கு
அமைதரும் அரசர்க்காகும் தொண்ணூறு
அமைச்சருக்கு எழுபான் வணிகருக்கு ஐம்பான்
அமைத்தனர் பின்னவர் தமக்காறு ஐந்தே.

*(இலக்கண விளக்கப்பாட்டியல் 53)*

## காப்பு

### கட்டளைக் கலித்துறை

104. புந்தித் தடத்துப் புலக்களி றோடப் புளிறுதொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத வென்பதென் தண்மலர் தூய்
வந்திப் பதுந்தனி வாழ்த்துவ தும்முடி தாழ்த்துநின்று
சிந்திப் பதுமன்றிச் சித்தி விநாயகன் சேவடியே. (1)

சித்தி விநாயகப்பெருமானின் திருவடிகளைக் குளிர்ந்த மலர்களைத் தூவித் தலைகுனிந்து சிறப்பாக வாழ்த்துதலும் இன்றி மனமாகிய தடத்தில் உள்ள ஐந்து புலன்களாகிய ஆண் யானைகள் அந்த விடம் விட்டு ஓடுமாறு முழங்கும் பெரிய வயிற்றையுடைய யானைமுகப் பெருமானிடத்தில், நின் தந்தையான சிவபெருமான் மீது நான் பாடும் கலம்பக நூலுக்கு வேண்டிய உதவியைச் செய்தருளுக என வேண்டுவது என்ன பயனைத் தரும்? அது சிறந்ததாகாது.

**விளக்கம்**

புந்தித்தடம் - உள்ளமாகிய இடம். புலக்களிறு - ஐம் புலன்கள் என்ற யானைகள். ஓட - அகன்று போக. புளிறு - பிளிறு; முழங்கும். 'பிளிறு' என்பது 'புளிறு' என்று எதுகைக்காகத் திரிந்தது. தொந்தி - பெருவயிறு. தந்தி - விநாயகர். உதவு என்பது என் - உதவுவாய் என வேண்டுவது ஏன்? வந்திப்பது - வணங்குவது. தனி வாழ்த்துவது - சிறப்பாக வாழ்த்துவது. முடி தாழ்த்துவது - தலை குனிவது. சித்தி விநாயகர் - மதுரைத் தலத்தில் உள்ள விநாயகப் பெருமான்.

## நூல்

### மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா

*-தரவு-*

105. மணிகொண்ட திரையாழி சுரிநிமிர மருங்கசைஇப்
பணிகொண்ட முடிச்சென்னி அரங்காடும் பைந்தொடியும்
பூந்தொத்துக் கொத்தவிழ்ந்த புனத்துழாய் நீழல்வளர்
தேந்தத்து நறைக்கஞ்சத் தஞ்சாயல் திருந்திழையும்
மனைக்கிழவன் திருமார்பு மணிக்குறங்கும் வறிதெய்தத்
தனக்குரிமைப் பணிபூண்டு முதற்கற்பின் தலைநிற்ப
அம்பொன்முடி முடிசூடும் அபிடேக வல்லியொடும்
செம்பொன்மதில் தமிழ்க்கூடல் திருநகரம் பொலிந்தோய்கேள்.

**தெளிவுரை**

பலவகைப்பட்ட மணிகளை உள்ளே கொண்டுள்ள அலைகளையுடைய கடலான ஆடையை மடிப்பு உலையும்படி இடுப்பைச் சுற்றி உடுத்து, ஆதிசேடனான பாம்பின் தலை யுச்சியான அரங்கில் ஆடும் பெண்ணான பூதேவியும் அழகிய பூங்கொத்துக்கள் கட்டு அவிழப் பெற்ற கொல்லையில் வளர்ந்த துளசி மாலையில் நிழலில் தங்கியிருக்கும் தேன் துளிக்கின்ற தாமரை மலரில் வாழும் அழகையும் மென்மையும் உடைய திருமகளும், தம் கணவனான திருமாலின் அழகிய மார்பும் அழகிய தொடையும் வறுமை அடையுமாறு, அவ்விடங்களை விட்டு வந்து தமக்குரிய அடிமைத் தொழிலை மேற்கொண்டு முதன்மையாகிய கற்பொழுக்கத்தில் நிற்கும்படி அழகிய பொன் முடியைத் தலையில் சூடிய அபிடேக வல்லி என்ற திருப்பெயர் பெற்ற அங்கயற்கண் அம்மையுடன் சிவந்த பொன் மயமான மதில் சூழ்ந்த செந்தமிழ் வழங்கும் மதுரை என்ற அழகிய நகரத்தில் விளக்கமாக வீற்றிருப்பவனே! அடியவனின் வேண்டு கோளைக் கேட்டருளுக.

**விளக்கம்**

மணி - பலவகையான மணிகள். மருங்கு - இடை. அசைஇ - உடுத்து. பணி கொண்ட முடிச் சென்னி அரங்கு - ஆதிசேடனாகிய பாம்பு கொண்ட முடியையுடைய தலையாகிய இடத்தில். பைந்தொடி - பசிய வளையலை அணிந்த பூதேவி. பூந்தொத்து - பூங்கொத்து. கொத்து அவிழ்ந்த - கட்டவிழ்ந்த. புனத்துழாய் - முல்லையில் விளங்கும் இயல்புடைய துளசி. தேம் தத்தும் - தேன் சொரியும். நறை - நறுமணம். கஞ்சத்து - தாமரையில் வீற்றிருக்கும். அம் சாயல் - அழகிய சாயல். திருந்திழை - திருமகள்.

மனைக்கிழவன் - கணவன்; திருமால். மணிக்குறங்கு - அழகிய தொடை. வறிது எய்த - வறுமை அடைய. முதற்கற்பு - தலைமையான கற்பு. அபிடேக வல்லி - அங்கயற்கண் அம்மை.

மீனாட்சியம்மை பாண்டியனுக்கு மகளாகத் தோன்றி அரசியாய்ப் பட்டம் சூட்டப்பட்டவள். ஆதலால் அபிடேக வல்லி எனப்படுவாள். அபிடேகம் - கிரீடம்; முடி.

தமிழ்க்கடல் - பாண்டியர்களாலும் சங்கப்புலவராலும் வளர்க்கப் பெற்ற தமிழ் வழங்கும் இடமாதலால் தமிழ்க் கூடல் எனப் பெறுகிறது. கூடல் - சோமசுந்தரக் கடவுளின் ஆற்றலை மதிக்காமல் வருணன் ஏழு மேகங்களையும் ஏவினான்; மழை பொழியச் செய்தான். இதனைத் தடுக்க விரும்பிய இறைவர் தம் சடையில் உள்ள நான்கு மேகங்களையும் ஏவிட, அவை மேல் உயர்ந்து நான்கு மாடங்களாய்க் கூடி மழையைத் தடுத்தன. ஆதலால் நான்மாடக் கூடல் எனப் பெயர் பெற்றது. நான்மாடக் கூடல் என்பது 'கூடல்' என வந்தது.

*-தாழிசை-*

1. விண்ணரசும் பிறவரசும் சிலரெய்த விடுத்தொருநீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே.

2. தேம்பழுத்த கற்பகத்தின்நறுந்தெரியல் சிலர்க்கமைத்து
வேம்பழுத்து நறைக்கண்ணி முடிச்சென்னி மிலைச்சினையே.

3. வானேறுஞ் சிலபுள்ளும் பலரங்கு வலனுயர்த்த
மீனேறோ வானேறும் விடுத்தடிக ளெடுப்பதே.

4. மனவட்ட மிடுஞ்சுருதி வயப்பரிக்கு மாறன்றே
கனவட்டந் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே.

5. விண்ணாறு தலைமடுப்ப நனையாநீ விரைப்பொருநைத்
தண்ணாறு குடைந்துவையைத் தண்டுறையும் படிந்தனையே.

6. பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகும் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே.

**தெளிவுரை**

1. பொன் உலக ஆட்சியையும் மற்ற ஆட்சியையும் இந்திரன் முதலிய சிலர் அடையுமாறு ஆணை தந்து பெண்களுள் சிறந்த தடாதகையால் தடைப்பட்ட பெரிய அரசாட்சியை நடத்தினாய். இது உன் பெருமைக்குத் தகுமோ!

2. தேன் மிக்க கற்பக மரத்தின் இனிய மாலையைச் சில தேவர் சூடுமாறு அளித்து, வேப்ப மலர்களால் ஆன மணமுடைய மாலையை முடியுடைய தலையில் சூடிக் கொண்டாய். இது நினக்குத் தகுமா?

3. வானத்தில் பறக்கும்படியான கருடன் அன்னம் முதலிய சில பறவைகளைத் திருமால் நான்முகன் முதலிய பலபேர் அவ்வவ்விடங்களில் வெற்றிக் கொடியில் உயர்த்தி எடுக்க, தெய்வமான நீ காளைக் கொடியையும் விட்டு அந்தப் பறவைகளுக்கு அஞ்சும் மீனையோ கொடியாய் உயர்த்துவது? இது தக்கதுதானா?

4. அறிஞர் மனத்தில் சுற்றும் வேதமாகிய சிறப்புடைய குதிரைக்கு ஒப்பாகாது 'கனவட்டம்' என்ற குதிரை. நாள்தோறும் வலசாரியும் இடசாரியும் ஆக மண்டல கதியைப் பயில அதைப் பார்த்து மகிழ்வது என்ன காரணத்தினால்?

5. வான் கங்கை நின் தலையில் நிறைந்திருப்ப அதனால் சிறிதும் நனையாத நீ விரைந்து வருதலையுடைய வையை ஆற்றின் குளிர்ந்த நீர்த்துறையிலும் நீராடினாய்! இது வியப்பே அன்றோ!

6. பழைய வேதங்களினின்று ஒழுகி ஓடும் மிக்க இன்பத்தை நுகர்ந்து பார்த்திருந்தும் அதைவிட்டுப் புதிய அமிழ்தத்தின் இனிமை பெருகுகின்ற இனிப்பான தமிழ்மொழியின் இளஞ் சொல்லைத் திருச்செவி கேட்டனை! இது வியப்பன்றோ!

**விளக்கம்**

1. விண்ணரசு - வானை ஆளும் அரசு. பெண்ணரசு - பெண்ணரசியான மீனாட்சியம்மை. செலுத்தினை - ஆண்டாய்.

2. தேம்பழுத்த - தேன்மிக்க. நறுந்தெரியல் - நறுமணம் கொண்ட மாலை. சிலர்க்கு - சில தேவர்க்கு. வேம்பு அழுத்தும் நறைக்கண்ணி - வேப்பம் பூவால் ஆன நறுமணம் உடைய மாலை. மிலைச்சினையே - சூடிக் கொண்டாயே.

3. வான் ஏறும் சில புள்ளும் - வானில் பறக்கும் சில பறவைகளும், அவை அன்னம், கருடன் முதலியன. வலன் உயர்த்த - வெற்றிக் கொடியாய் உயர்த்த. மீன் ஏறோ எடுப்பது - மீனையோ கொடியாய் உயர்த்துவது?

4. மனவட்டம் இடும் சுருதி - மனத்தில் சுற்றும் வேதம். வயப்பரிக்கு - வல்லமையுடைய குதிரைக்கு. மாறு அன்றே - ஒப்பாகாதே. கனவட்டம் - பாண்டிய மன்னரின் குதிரையின் பெயர். களிப்பதே - மகிழ்ச்சி அடைவதோ?

5. விண்ணாறு - வான கங்கை. நனையா - நனையாத. விரைப்பொருநை - மணம் உடைய தாமிரபன்னியாறு. படிந்தனையே - நீராடினாயே! கங்கையானது தலையில் இருப்ப அதனால் நனையாத நீ வையையாற்றில் நீராடியது வியக்கத் தக்கது.

6. தமிழின் மழலை - தமிழாகிய மழலைச் சொல்லை.

*-அராகம்-*

1. அவனவ ளதுவெனு மவைகளில் ஒருபொருள்
இவனென வுணர்வுகொடு எழுதரு முருவினை.

2. இலதென உளதென இலதுள தெனும்அவை
அலதென வளவிட வரியதொர் அளவினை.

3. குறியில னலதொரு குணமில னெனநினை
அறிபவ ரறிவினு மறிவரு நெறியினை.

4. இருமையு முதவுவ னெவனவ னெனநினது
அருமையை யுணர்வுறின் அமிழ்தினும் இனிமையை.

**தெளிவுரை**

1. ஆண், பெண், புல், மரம் முதலிய அஃறிணைப் பொருள்கள் எனப்படும் அவற்றில் இவன் ஒரு பொருள் என்று அறிவைக் கொண்டு எழுதுதற்கு அரிய வடிவத்தை உடையவனாய் உள்ளாய்.

2. இல்லாத பொருள் என்றும் உள்ள பொருள் என்றும் இல்லாததும் உள்ளதும் என்று கூறப்படும் பொருள் அன்று என்றும் ஆகமம் முதலிய நூல்களைக் கொண்டு அளவிடற்கு அரிய ஒப்பற்ற தன்மை உடையவனாய் உள்ளாய்.

3. உருவில்லாதவன் ஒரு குணமும் இல்லாதவன் என்று நின்னை அறிபவரின் அறிவாலும் அறிவதற்கு அரிய தன்மையை உடையவனாய் உள்ளனை.

4. இம்மையும் மறுமையும் என்னும் இரண்டு பயன்களையும் உயிர்களுக்கு அருளுபவன் எவனோ அவனே இறைவன் என்று நின் அரிய தன்மையை ஆராய்ந்து அறியுமிடத்து அமுதத்தை விட இனியவனாய் இருக்கின்றாய்.

**விளக்கம்**

1. எழுதரு உருவினை - எழுதுவதற்கு இயலாத வடிவை உடையாய்.

2. அளவினை - அளவு உடையை.

3. குறிஇலன் - உரு இல்லாதவன். அறிவரு நெறியினை - அறிவதற்கு அரிய தன்மை யுடையாய்.

*-தாழிசை-*

1. வைகைக்கோ புனல்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென்று அறியேமால் திருமுடிமண் சுமந்ததே.

2. அரும்பிட்டுப் பச்சிலையிட்டு ஆட்செய்யும் அன்னையவள்
தரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பில் கட்டுண்டே

3. முலைகொண்டு குழைத்திட்ட மொய்வளைகை வளையன்றே
மலைகொண்ட புயத்தென்னீ வளைகொண்டு சுமந்ததே.

4. ஊன்வலையில் அகப்பட்டார்க்கு உட்படாய் நின்புயத்தோர்
மீன்வலைகொண் டதுமொருத்தி விழிவலையில் பட்டன்றே.

**தெளிவுரை**

1. நின் திருவடியில் மண்ணைச் சுமந்தது வையை ஆற்றுக்கோ, நீர் மயமான ஆகாய கங்கையாற்றுக்கோ கொட்டிக் கரையுடைப்பை அடைக்கத்தான் என்று அறியாமல் மயங்கு கின்றோம்.

2. கொன்றைப்பூ முதலிய அரும்புகளைக் கொண்டு அருச் சித்தும் வில்வ இலை முதலிய இலைகளை இட்டு அருச்சித்தும் அடிமைத் தொழில் செய்த தாய் போன்ற அன்புடைய வந்தி என்ற கிழவியின் சிறந்த அன்பில் கட்டுப்பட்டு அவள் அளித்த பிட்டை உதிர்த்து உண்டாய்.

3. தன் கொங்கைகளால் நின் திருமேனி இளகும்படி செய்த உமையம்மையின் கைகளில் அணிந்துள்ள வளையல்கள் அல்லவே! அங்ஙனமாக நீ மலையை உவமையாகக் கொண்ட தோளில் வேறு வளையல்களை எடுத்துச் சுமந்தது ஏன்?

4. உடம்பு என்ற வலையிலே அகப்பட்டு வருந்தும் உயிர்களால் அறியப்படாதவனே! ஒரு மீன் பிடிக்கும் வலையை உன் தோளில் ஏற்றுக் கொண்டதும் உமை என்ற ஒருத்தியின் கண்கள் என்ற வலையில் அகப்பட்டவன்றோ!

**விளக்கம்**

1. அன்னை - பிட்டு வாணிச்சியான வந்தி.

2. பிட்டுப் பிட்டு உண்டாய் - பிட்டு என்ற உணவை விண்டு உண்டாய். தலையன்பு - மேலான அன்பு.

3. குழைத்திட்ட - குழையுமாறு செய்த; அடையாளம் ஏற்படச் செய்த. மொய் வளை - உமையம்மையது. அன்றே -

அல்லவே. அங்ஙனம் இருக்கவும் நீ வளையைச் சுமந்தது ஏன்? இது மதுரையில் சோமசுந்தரர் வளையல் விற்றதைக் குறித்தபடி.

4. ஊன் வலை - உடம்பு என்ற வலை; பிறவியாகிய வலை எனவும் கொள்ளலாம். ஒருத்தி - உமையாள். அம்பிகை ஒரு வலைஞன் மகளாய் வளர்ந்ததால் அவளை மணம் செய்து கொள்ள இறைவர் வலைஞரானார்.

-அம்போதரங்கம்-

போகமாய் விளைந்தோய்நீ, புவனமாய்ப் பொலிந்தோய்நீ,
ஏகமா யிருந்தோய் நீ, எண்ணிறந்து நின்றோய் நீ.
வானு நீ, நிலனு நீ, மதியு நீ, கதிரு நீ,
ஊனு நீ, உயிரு நீ, உளது நீ, இலது நீ,

### தெளிவுரை

உயிர்கள் எல்லாம் அனுபவிக்கும் எல்லா அனுபவங்களின் வடிவமாய்ப் பெருகி விளங்குபவன் நீயே! எல்லா உலகங்களின் வடிவமாய் விளங்குபவன் நீயே!

ஒப்பில்லாத ஒரு பொருளாய் விளங்குபவன் நீயே! அளவில்லாத பல பொருள்களாய் விளங்குபவன் நீயே!

வானமும் நீயே சந்திரனும் நீயே!
கதிரவனும் நீயே!
உடம்பும் நீயே!
அவ்வுடம்புள் உள்ள உயிரும் நீயே!
உள்ள பொருளும் நீயே!
இல்லாத பொருளும் நீயே!

### விளக்கம்

போகமாய் - இன்பமாய்.

என வாங்கு.

என்று. (ஆங்கு - அசைநிலை)

-சுரிதகம்-

பொன்பூத்து அலர்ந்த கொன்றைபீர் பூப்பக்
கருஞ்சினை வேம்பு திருமுடிச் சூடி
அண்ணலா னேறு மண்ணுண்டு கிடப்பக்
கண்போல் பிறழும் கெண்டைவலன் உயர்த்து

5. வரியுடல் கட்செவி பெருமூச் செறியப்
பொன்புனைந் தியன்ற பைம்பூண் தாங்கி
முடங்குளைக் குடுமி மடங்கலந் தவிசில்
பசும்பொனசும் பிருந்த பைம்பொன்முடி கவித்தாங்கு
இருநிலங் குளிர்தூங் கொருகுடை நிழல்கீழ்

10. அரசுவீற் றிருந்த வாதியங் கடவுள்நின்
பொன்மலர் பொதுளிய சின்மலர் பழிச்சுதும்
ஐம்புல வழக்கின் அருஞ்சுவை அறியாச்
செம்பொருள் செல்வநின் சீரடித் தொழும்புக்கு
ஒண்பொருள் கிடையாது ஒழியினு மொழிக

15. பிறிதொரு கடவுட்குப் பெரும்பயன் தரூஉம்
இறைமையுண் டாயினும் ஆக குறுகிநின்
சிற்றடி யர்க்கே குற்றேவல் தலைக்கொண்டு
அம்மா கிடைத்தவாவென்று
செம்மாப் புறூஉந் திறம்பெறற் பொருட்டே. (2)

## தெளிவுரை

பொன் போன்று மலர்ந்த மலர் பசலை நிறத்தை அடையுமாறு கருமையான கிளைகளையுடைய வேப்பமரத்தின் மலர்களை, (சோமசுந்தர பாண்டியனான பொழுது) அழகிய திருமுடியின் மேல் சூடிக் கொண்டு, பெருந்தன்மையை உடைய காளை, மண்ணை உண்டு கிடக்கும்படி, மகளிர் கண்போல் பிறழுகின்ற மீனை வெற்றிக் கொடியில் உயர்த்திக் காட்டி, கோடுகளையுடைய உடலையுடைய பாம்பு பெருமூச்சு விடும்படி

பொன்னால் அமைந்த பசிய நகைகளை அணிந்து மடங்கும் பிடரி மயிரையும் தலைமயிரையும் உடைய சிங்கத்தின் வடிவமாகச் செய்யப்பட்ட அழகிய இருக்கையில், பசுமையான பொன் நெகிழ்ந்திருக்கப் பெற்ற பசும் பொன் மயமான கிரீடத்தைப் பூண்டு, அம்மதுரையில் இப்பெரிய நிலவுலகம் முழுவதும் குளிர்ச்சி அடைவதற்குக் காரணமான வெண்கொற்றக் கொடையின் நிழலில் அரசனாகி வீற்றிருந்த முதன்மையான கடவுளே!

ஐம்புலன்களின் இயக்கத்தின் அருமையாகிய சுவையை அறியாத செம்மையான பரம்பொருள் ஆகிய எல்லாச் செல்வமும் உடையவனே!

நின் சிறந்த திருவடிகளுக்குச் செய்கின்ற அடிமைத் தொழிலுக்கு ஏற்ற சிறந்த செல்வம் கிடைக்காமல் ஒழிந்தாலும் ஒழியட்டும். வேறொரு தெய்வத்துக்குப் பெரும் பயனைக் கொடுக்கத் தலைமை உண்டானாலும் உண்டாகட்டும். நின் சிறிய அடிமைத் தொழில் புரியும் தொண்டர்கள் உள்ள இடத்தே போய் நெருங்கி, அன்னார்க்கு அடிமைத் தொண்டு செய்யும் அடிமைத் தொண்டுகளை மேற் கொண்டு இப்பேறு கிடைத்தது வியப்புக்கு இடமானது என்று எண்ணி இறுமாப்பு அடையும் தன்மையை அடையும் பொருட்டு, நின் பொன்மயமான மலர்கள் நிரம்பிய குளிர்ந்த தாமரை மலர்கள் போன்ற திருவடிகளைத் துதிப்போம்.

**விளக்கம்**

பீர் பூப்ப - பிரிவால் நிற வேறுபாடு அடைய. பீர் - பசலை. இயல்பாய் நிகழ்வதைச் சிவபெருமான் அணியாததால் உண்டானதாகக் கூறினார்.

கருஞ்சினை வேம்பு - கரிய கிளைகளையுடைய வேப்பமரத்தின் பூ.

ஆனேறு திருமால். ஆதலால் 'மண் உண்டு கிடப்ப' என்றார். தன்னால் எப்பயனும் இல்லாததால் வீழ்ந்து கிடக்க என்பது வேறு

பொருள். கண் போல் - மகளிர் கண் போல். கெண்டை - மீன். கட்செவி - முன்னம் அணியாக அணிந்த பாம்பு.

பூண் தாங்கி - அணியை அணிந்து.

முடங்குஉளை - மடங்கு பிடரி மயிர். மடங்கலந்தவிசில் - சிங்காதனத்தில்.

பைம்பொன்முடி - பசும் பொன்னால் ஆன கிரீடம். ஆதியங் கடவுள் - சிவபெருமான்.

பொதுளிய - நெருங்கிய. பழிச்சுதும் - வணங்குதும்; புகழ்வோம்.

தொழும்பு - அடிமை. ஒண்பொருள் - சிறந்த செல்வம்.

சின்மலர் - இரண்டு மலர் போன்ற திருவடிகள். செம்மாப்பு - இறுமாப்பு; பெருமிதம். (2)

## சிவபெருமானின் திருவடிகள்!

### நேரிசை வெண்பா

106. பொருள்நான் கொருங்கீன்ற பொன்மாடக் கூடல்
இருள்நான்று இருண்டகண்டத் தெம்மான்-சரணன்றே
மண்துழா யுண்டாற்குக் கண்மலரோடு ஒண்மவுலித்
தண்துழாய் பூத்த தடம். (3)

### தெளிவுரை

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பேறுகளையும், ஒரு சேர மெய்யடியார்க்குத் தந்தருளுகின்ற, அழகுடைய நான் மாடக்கூடல் என்ற பெயர் உடைய மதுரையில் வீற்றிருக்கின்ற இருள் போல் கரிய நஞ்சு பொருந்தியதனால் கறுத்த கழுத்தை யுடைய எம் பெருமானின் திருவடிகள், மண் உலகங்களைத் துழாவி உணவாய் உண்ட திருமாலுக்குக் கண்ணாகிய செந்

தாமரை மலரும், விளங்கும் முடியில் அணிந்த குளிர்ச்சியான திருத்துழாயும் வளர்வதற்கான இடம் ஆகும்.

**விளக்கம்**

பொருள் நான்கு - அறம் பொருள் இன்பம் வீடு. இருள் நான்று இருண்ட - இருள் போல் இருண்ட. நான்று - தங்கி.

மண் துழாய் உண்டான் - மண்ணைத் துழாவி உண்டவன். துழாய் - துழாவி என்பதன் விகாரம். தண்துழாய் - குளிர்ந்த துளசி. சரண் - திருவடிகள். திருமால் மண் துழாய் உண்டது பிரளய காலத்தில். ஒண்மவுலி - ஒளியுடைய முடி. தடம் - பொய்கை. (3)

### கட்டளைக் கலித்துறை

107. தடமுண் டகங்கண் டகத்தாள தென்றுநின் தண்மலர்த்தாள்
நடமுண் டகமகங் கொண்டுய்ந்த வாவினி நங்களுக்கோர்
திடமுண் டகந்தைக் கிடமுண் டிலையெனத் தேறவிண்ணோர்
விடமுண்ட கந்தரச் சுந்தர சுந்தர மீனவனே. (4)

**தெளிவுரை**

· தேவர்கள் எல்லாம் ‘இனிமேல் தங்களுக்கு ஓர் உறுதியுண்டு, அகங்காரத்துக்கு இடம் இல்லை’ என எண்ணி, அச்சம் தீர்ந்து தெளியுமாறு ‘நஞ்சையுண்ட திருக்கழுத்தையுடையவனே! சோம சுந்தரக் கடவுளே! சுந்தர பாண்டியனாக வந்தவனே! என் மனம் என்ற குளத்தில் தோன்றும் தாமரை மலர் முட்களுடன் கூடிய தாளை உடையது என்று எண்ணி, அதை விடுத்து, நின் கூத்தாடும் திருவடியான குளிர்ந்த, தாமரை மலரை உட்கொண்டு நற்கதி பெற்றது வியக்கத் தக்கது.

**விளக்கம்**

தடமுண்டகம் - பொய்கையில் உள்ள தாமரை மலர். கண்டகத் தாளது - முள்ளையுடைய தண்டை உடையது. என்று -

என வெறுத்து. தாளான நடம் செய்யும் முண்டகத்தை என இயைகிறது. அகம் - உள்ளம். உய்ந்தவர் - உய்ந்தது என்ன வியப்பு! முண்டகம் - தாமரை. திடம் உண்டு - உறுதி உண்டாயிற்று. கொண்டு - கருதி. அகந்தை - செருக்கு. தேற - தெளிய. கந்தரம் - எழுத்து. சுந்தர - சோமசுந்தரக் கடவுளே. சுந்தர மீனவனே - சுந்தர பாண்டியனே. (4)

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

108. மீனேறும் கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை
வெள்ளைப் பள்ளை
ஆனேறும் வலனுயர்த்த வழகியசொக் கர்க்கிதுவும்
அழகி தேயோ
கானேறும் குழல்சரியக் கர்ப்பூர வல்லிதலை
கவிழ்ந்து நிற்ப
ஊனேறு முடைத்தலையில் கடைப்பலிகொண் டூரூர்புக்கு
உழலு மாறே. (5)

### தெளிவுரை

ஆண்மீனையும் (மீன்கொடியையும்) முல்லைக் கொடிகள் வளர்கின்ற கொல்லைப் புறங்களையுடைய புதிய முல்லை நிலத்துக்குரிய தெய்வமான திருமாலான பருத்த காளையையும், வெற்றிக் கொடியாக மேம்படுத்திய அழகிய சோமசுந்தரக் கடவுளுக்குக் கர்ப்பூர வல்லி என்ற பெயர் கொண்ட உமாதேவி மணம் மிகுந்த கூந்தல் தாழும்படி (தன் கணவன் பிச்சை எடுக்கப் புறப்பட்ட மானக் கேட்டால்) தலை குனிந்து நிற்குமாறு தசை பொருந்திய முடை நாற்றம் கொண்ட பிரமன் மண்டையோட்டில் இழிவாகிய பிச்சையை ஏற்றுப் பல ஊர்கள் தோறும் போய்த் திரிந்து அலைவதான இத்தொழிலும் அழகுடையது தானா?

### விளக்கம்

கொடிமுல்லை விடு - முல்லைக் கொடியை வளர விடுகின்ற. கொல்லைக் கடி முல்லை - புனங்களை உடைய காவல் பெற்ற

முல்லை நிலத்துக்கு உரிய. வெள்ளைப்பள்ளை ஆனேறும் - வெண்மையான நிறத்தையும் பருத்த வயிற்றையும் உடைய திருமால் என்ற காளையையும். திருமால் முல்லைத் திணைக்குரிய தெய்வம். இது - பலியேற்றுத் திரிவது. கான் ஏறும் - நறுமணத்தை யுடைய. கர்ப்பூர வல்லி - மீனாட்சி. அவள் தான் அறஞ் செய்யத் தன் கணவர் யாசித்து உண்கிறார் என்பதனாலும், தான் கற்பூர வல்லியாய் இருக்க இறைவன் புலால் நாறும் தலையிலே பிச்சையேற்றதனாலும் தலை குனிந்தனள். ஊன் ஏறு முடைத்தலை - பிரமனின் மண்டை ஓடு. கடைப்பலி - வாயில் தோறும் வாங்கும் பிச்சை.

சொக்கு - பேரழகு. (5)

### கட்டளைக் கலித்துறை

109. மாற்றொன்று இலையென் மருந்துக்கந்
 தோசொக்கர் மாலைகொடார்
 கூற்றொன் றலவொரு கோடிகெட்
 டேன்கொழுந் தொன்றுதென்றற்
 காற்றொன் றிளம்பிறைக் கீற்றொன்று
 கார்க்கட லொன்றுகண்ணீ
 ஊற்றொன்று இவளுக்கு உயிரொன்று
 இலையுண் டுடம்பொன்றுமே. (6)

**தெளிவுரை**

### இரங்கல்

என் அமிழ்தம் போன்ற மகளுக்குப் பரிகாரம் ஒன்றும் இல்லை. ஐயோ, சொக்கநாதர் தாம் சூடும் மாலையைத் தர வில்லை. இவளுக்கு இயமனோ ஒன்று அன்று; ஒருகோடி உள்ளன. நான் கெட்டேன்! இளமை பொருந்திய தென்றற் காற்று ஒன்றும் இளமையான கோட்டு வடிவமான சந்திரன் ஒன்றும் ஆகும்! இடைவிடாது ஒலிடும் கடல் ஒன்று கண்ணீர் சிந்தும் என் மகளுக்கு உயிர் இல்லை; உடம்பு மட்டுமே.

**விளக்கம்**

இது சோம சுந்தரக் கடவுளைக் கண்டு காமுற்ற தலைவியின் வருத்தம் கண்டு செவிலி இரங்கிக் கூறியது.

மாற்று - பரிகாரம். மருந்து - அமுதம் போன்ற மகள். மாலை கொடார் - சிவன் கொன்றை மாலையைத் தரமாட்டார். கார்க்கடல் - கருமையான கடல். (6)

## விருத்தக் கலித்துறை

110. ஒன்றே உடம்பங்கு இரண்டே யிடும்பங்கு
 உடம்பொன்றிலார்
என்றே யறிந்தும்பி னின்றே யிரங்கென்
 றிரக்கின்றவா
குன்றே இரண்டன்றி வெண்பொன் பசும்பொன்
 குயின்றேசெயும்
மன்றே யிருக்கப் புறங்காடு அரங்காட
 வல்லாரையே. (7)

**தெளிவுரை**

சிவபெருமானுக்கு உள்ளது ஓர் உடம்பே; அந்த ஓர் உடம்பிலும் இடும் பங்கோ இரண்டாகும். தமக்கு என்று சொந்தமாக ஓர் உடம்பு இல்லாதவர் அவர் என்று உறுதியாகத் தெரிந்திருந்தும் வெள்ளிமலை பொன்மலை என்னும் இரண்டு மலைகள் மாத்திரமே அல்லாமல் வெள்ளியினாலும் பொன்னாலும் அமைத்துச் செய்யப்பட்ட வெள்ளியம்பலம், பொன்னம்பலம் என்னும் இரண்டு அவைகளும் இருக்க, அவற்றைவிட்டு ஊர்க்குப் புறத்தில் உள்ள சுடுகாடான அரங்கில் கூத்தாட வல்ல அச்சிவபெருமானை, பின்னே போய் நின்று கொண்டே என்மீது இரங்கிக் கூடுவாயாக என்று இரந்து நிற்கும் நிலை என்ன?

**விளக்கம்**

இது தலைமகனைக் கண்டு அளவிறந்த காதல் கொண்ட தலைமகளுக்குத் தோழி கூறியது.

உடம்பு ஒன்றே. அதில் ஒருபங்கு தமக்கும் ஒரு பங்கு உமா தேவிக்கும் உரியன. ஆதலால் 'இடும் பங்கு இரண்டு' என்றார். தமக்கு என்று ஓர் முழு உடம்பு ஒன்று இலர். ஒரு பங்கு உமையம்மைக்கும் ஒரு பங்கு திருமாலுக்கும் உரியன. ஆதலால் தமக்கு என ஓர் உடம்பு இல்லாதவர் என்பது கருத்து.

இரக்கின்றவா - இரத்தல் என்ன பேதைமை! குன்றே இரண்டு என்றது வெள்ளி மலை, பொன்மலை. வெண்பொன் குயின்ற மன்று - மதுரையில் உள்ள வெள்ளியால் ஆன அம்பலம். பொன் மன்று - தில்லையில் உள்ள பொன்னம்பலம். புறங்காடு என்றார் மயானத்தை. 'வல்லாரை இரக்கின்றவாறு என்னே?' என்க. 'வல்லார்' என்றது இகழ்ச்சிக்குறிப்பு.

தமக்கு என உடம்பு இல்லாதவரும் பொன்னும் வெள்ளியும் செறிந்த இடங்கள் இருப்பவும் அவற்றை நீத்துப் புறங்காட்டில் ஆடுபவருமான ஒருவரை இரப்பதனால் உண்டாகும் பயன் யாது? (7)

## சொக்கர் வளையல் செட்டியானார்!

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

111. வலம்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு
விற்பீர்போல் மதுரை மூதூர்க்
குலம்கொண்ட பெய்வளையார் கைவளையெல்
லாங்கொள்ளை கொள்கின் றீரால்
பலங்கொண்ட செட்டுமக்குப் பலித்ததுநன்
றானீஇப் பாவை மார்க்குப்
பொலம்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ
கொள்வதற்கோ புறப்பட் டீரே. (8)

**தெளிவுரை**

வலக்கையில் கொண்டுள்ள மழு என்னும் படையினை உடையவரே! வளையல்களை விற்பவரைப் போல் புறப்பட்டுத் தெருவில் வந்து மதுரை என்ற பழமையாகிய ஊரில் உள்ள உயர் குலத்தில் உள்ள மகளிரின் கையில் உள்ள வளையல்களை யெல்லாம் மிகுதியாகக் கொள்கின்றீரே! ஆகலான், பயனைக் கொண்ட வாணிகம் உமக்கு நன்றாகப் பயனைத் தருவதாயிற்று. நீவிர் இந்த மகளிர்க்கு அழகுடைய கோடுகளையுடைய வளையல் களை விற்பதற்காகவோ புறப்பட்டீர்? கூறுவீராக!

**விளக்கம்**

இது கண்டோர் கூற்று.

இது சோமசுந்தரக் கடவுள் வளையல் விற்ற திருவிளை யாடலை நினைத்துக் கூறியது.

செட்டு - வாணிகம். செட்டு பலித்தலாவது - அதிக லாபம் உண்டாதல். நன்று - அழகிது.

வலம் கொண்ட - வெற்றியுடைய. பொலம் கொண்ட - அழகுடைய. (8)

## திருவடியின் செயல்

### நேரிசை வெண்பா

112. பட்டிருக்கத் தோலசைஇப் பாண்டரங்கக் கூத்தாடும்
மட்டிருக்கு நீப வனத்தானே - கட்ட
விரும்பரவத் தானேநின் மென்மலர்த்தாள் அன்றே
தரும்பரவத் தானே தனை. (9)

**தெளிவுரை**

உயர்வுடைய பட்டாடைகள் பல இருக்க, அவற்றை விட்டு யானைத் தோல் புலித்தோல் ஆகியவற்றை அணிந்து கொண்டு

பாண்டரங்கக் கூத்தாடும் நறுமணம் வாய்ந்த கடம்பவனத்தில் எழுந்தருளியிருப்பவனே! அணிகளாய் அணிய விரும்பும் பாம்பு களை உடையவனே! நின் மென்மையான தாமரை மலர் போலும் திருவடியை அடியவர் வணங்கித் துதிக்க அவர்களுக்குத் தானே தன்னைத் தந்தருளும்!

**விளக்கம்**

பட்டிருக்க - பட்டாடை இருக்க; இறந்து கிடக்க எனவும் கொள்ளலாம். தோல் அசைஇ - யானைத் தோல், புலித் தோல் ஆகியவற்றை உடுத்து; அசைஇ - உடுத்து. மட்டு - தேன். நீப வனத்தானே - கடம்பவனத்தில் இருப்பவனே. கட்ட - அணிந்து கொள்ள. தானே தனை - தானே தன்னை. தரும் - அளித்தருளும்.

சிவபெருமான் ஒருகால் தம்மை மதியாத தாருகாவன முனிவர் மன நிலையைச் சோதிக்க நினைத்தார். விடனுருவம் கொண்டு அவர்கள் வீடுதோறும் போய்ப் பிச்சை ஏற்றார். தம்மை நோக்கிக் காதல் கொண்ட அவர்களின் மனைவியரின் கற்பு நிலையைக் கெடுத்தார். அதைக் கண்டு பொறுக்காத முனிவர் 'அபிசார யாகத்தை'ச் செய்தனர். அந்த யாகத்தினின்று வெளிப்பட்ட பாம்புகள் பூதங்கள் மான் புலி யானை முயலகன் வெண்டலை முதலியவற்றைச் சிவனைக் கொல்லுமாறு விடுத்தனர். சிவபெருமான் சீறிவந்த பாம்புகளை அணியாக அணிந்து கொண்டார். பூதங்களைத் தம் கணங்களாகக் கொண்டார். மானைக் கையில் கொண்டார். புலியைக் கொன்று அதன் தோலை உடுத்திக் கொண்டார். யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்திக் கொண்டார். முயலகனை முதுகில் காலால் ஊன்றி மிதித்து, வெண்டலையைக் கையில் பற்றி சடையில் அணிந்து கொண்டார். இப்படித் தம்மை நோக்கி வந்தவற்றைப் பயனற்றனவாய்ச் செய்தார். பாண்டரங்கம் ஒரு வகைக் கூத்து. அது பதினோர் ஆடல்களுள் ஒன்று. (9)

## இம்மதுரையில் இனி இருக்கத் தகாது

### கட்டளைக் கலிப்பா

113. தனியி ருப்பவர் என்படு வார்கெட்டேன்
சற்று நீதியொன்று அற்றஇவ் வூரில்யாம்
இனியி ருப்பதொண் ணாதும டந்தைமீர்
இடம ருங்கும் சடைமருங் கும்மிரு
கனியி ருக்கும் கடம்பவ னேசனார்
கண்பு குந்தென் கருத்துள் இருக்கவும்
பனியி ருக்கும் பிறைக்கூற்ற முற்றியென்
பாவி யாவியை வாய்மடுத் துண்பதே. (10)

*(காமம் மிக்க கழிபடர் கிளவி - இரங்கல்: தலைவி கூற்று)*

**தெளிவுரை**

தோழியரே! தம் இடப்பக்கத்திலும் சடையிலும் மீனாட்சியும் கங்கையும் இருக்கப் பெற்ற கடம்ப வனத்துக்குத் தலைவனான சிவபெருமான் கண் வழியாய் என் மனத்துள் புகுந்து நீங்காமல் இருக்கின்றார், இருக்கவும், குளிர்மை வாய்ந்த இளம்பிறைச் சந்திரனான இயமன் வளைந்து என் தீவினையையுடைய உயிரையும் வாய்க்குள் கொண்டு உண்கின்றதே! கணவரைப் பிரிந்து தனியாய் இருக்கும் மகளிர் மிக்க துன்பத்தை அடைவார். எனவே, சற்றும் நீதி ஒன்றும் இல்லாத இந்த மதுரையில் நாம் இனிமேல் இருக்கத் தேவையில்லை!

**விளக்கம்**

சிவபெருமான் தன் மனத்தகத்தே இருப்பதால் தலைவருடன் கூடி இருப்பவர்களுள் ஒருத்தியாய் எண்ணுவதற்கு உரிய தன்னைத் தனித்திருப்பவரைப் போன்று பிறைத் திங்கள் துன்புறுத்துகின்றது என்றாள் தலைவி ஒருத்தி. இங்ஙனம் தலைவனுடன் சேர்ந்திருக்கும் தன்னையே இப்படித் துன்புறுத்தி னால் தலைவரைப் பிரிந்திருக்கும் மடவார் எத்தகைய துன்பத்தை

அடைவர்? எனவே இத்தகைய மதுரையில் இருத்தல் தகாது என்று அவள் உரைத்தாள்.

தனியிருப்பவர் - தலைவரைப் பிரிந்து தனித்திருப்பவர். சிவன் தன் நெஞ்சில் இருக்கவும் பிறைத்திங்கள் தன்னை வருத்துவது அநீதி என்றாள். சந்திரனது செயலை மதுரை ஊரின் மீது ஏற்றியுரைத்தார். கனி - கன்னியர்; உமையம்மையார். கங்கை ஆகிய இருவர். கடம்பவனம் - மதுரை. பனி - குளிர்ச்சி. முற்றி - சூழ்ந்து. உண்பது - உண்கின்றது.

இது தோழியரை நோக்கித் தலைவி கூறியது. இடமருங்கும் - இடப்பக்கத்தும். சடைமருங்கும் - சடையிலும். (10)

## மாருதம் வரின் என் செய்வாள்?

## இரங்கல்

### நேரிசை வெண்பா

*செவிலி கூற்று*

114. உண்ணமுதம் நஞ்சாகில் ஒண்மதுரைச் சொக்கருக்கென்
பெண்ணமுத நஞ்சேயோ பேதைமீர்-தண்ணிதழி
இந்தா நிலமே வெனச்சொலா ர்என்செய்வாள்
மந்தா நிலமே வரின். (11)

**தெளிவுரை**

அறியாமையுடைய பெண்ணே! புகழையுடைய மதுரையில் வீற்றிருக்கின்ற சொக்கலிங்கப் பெருமானுக்கு உண்ணும் அமுதம் முன் நஞ்சாக ஆயிற்று. அப்படியானால் இப்போது என் பெண்ணான அமுதமும் நஞ்சுதானோ! 'குளிர்ச்சியுடைய கொன்றை மாலையைத் தரப் பெற்றுக் கொள்வாய்! நிலவில் இன்பம் அடைந்திடு' எனக் கூறியருளினார். இனித் தென்றல் வந்தால் இவள் என்ன செய்வாள்?

**விளக்கம்**

உன் அமுதம் நஞ்சானது என்றது திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சைத் திருவமுது செய்ததைக் குறிப்பிட்டது. அமுது செய்தல் - உண்ணுதல்.

முதல் இரண்டடியில் குறிப்பிட்டுள்ளது: சிவனுக்கு நஞ்சானது உண்ணும் அமுதமானால் என் பெண்ணான அமுதம் நஞ்சாயிற்றோ எனவும் பொருள் கொள்ளலாம். பேதைமை - அறிந்தும் அறியாமை. இந்தா - மரூஉ; இதோ பெற்றுக்கொள். தண் இதழி - குளிர்ந்த கொன்றை மாலை. அதனைத் தருவது அவள் அன்பை ஏற்றுக் கொள்வதாகும். நிலமேவு - நிலவில் இன்பம் அடைந்து இருப்பாயாக! தரையில் இரு எனவும் பொருள் கொள்ள இடம் உண்டு.

'என் பெண் அமுது நஞ்சோ என்றது என் பெண் வெறுக்கத் தக்கவளோ' என்பதாம்.

மந்தாநிலம் - தென்றற் காற்று; மந்த மாருதம். (11)

## புயங்களின் இயல்பு

*சந்தம்*

115. வரியளி பொதுளிய விதழியொடு அமரர்
மடந்தையர் நீல வனம்புக் கிருந்தன
மதியக டுடைபட நெடுமுகடு அடைய
நிமிர்ந்தபொன் மேரு வணங்கப் பொலிந்தன
மழகதிர் வெயில்விட வொளிவிடு சுடர்வ
லயங்கொடு லோக மடங்கச் சுமந்தன
மதுகையொடு அடுதிறன் முறைமுறை துதிசெய்து
அணங்கவ ராடு துணங்கைக் கிணங்கின

பொருசம ரிடையெதிர் பிளிறுமொர் களிறு
பிளந்தொரு போர்வை புறம்சுற் றிநின்றன
புகையெழ வழலுமிழ் சுழல்விழி யுழுவை
வழங்குமொ ராடை மருங்குற் கணிந்தன
புலவெயி றயிறரு குருதியொ டுலவு
மடங்கலின் வீர மொடுங்கத் துரந்தன
புகலியர் குரிசில்ப ணொடுதமி ழருமை
அறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன

உருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாணன் ஒதுங்கத் திரிந்தன
உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துணி மேலி டுவெண்பிட்டு உகந்தன
உறுதியொடு அவள்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடை மணுந்திச் சொரிந்தன
உருவிய சுரிகையொடு எதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன

தருசுவை அமுதெழ மதுரமது ஒழுகு
பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன
தளிரியல் மலைமகள் வரிவளை முழுகு
தழும்பழ காக அழுந்தக் குழைந்தன
தளர்நடை யிடுமிள மதலையின் மழலை
ததும்பிய ஊறல் அசும்பக் கசிந்தன
தமிழ்மது ரையிலொரு குமரியை மருவு
சவுந்தர மாறர் தடம்பொன் புயங்களே. (12)

**தெளிவுரை**

தமிழ் வளரும் மதுரையில் ஒரு கன்னியான தடாதகைப் பெருமாட்டியை மணத்தால் கூடிய சவுந்தர பாண்டியரின் பெரிய அழகிய தோள்கள்

1. வரிகளையுடைய (இசையையுடைய) வண்டுகள் மொய்த்துக் கொன்றைப் பூ மாலையுடன் தெய்வப் பெண்ணின் கண்களான கரு நெய்தல் மலர்க் கூட்டத்தைப் பெற்றிருந்தன. திங்களின் நடுவிடம் உடையும்படி நீண்ட வானின் உச்சியினை அடையுமாறு உயர்ந்த பொன் மயமான இமய மலையானது வில்லாக வளையும்படி விளங்கின. இளமையான கதிரவனின் ஒளியைப் போன்ற ஒளியை வீசும் காந்தியையுடைய தோள் வளைகளை அணிந்து உலகம் முழுதும் தாங்கின. தோள்களின் வலிமையையும் பகைவரைக் கொல்லும் திறமையையும் வரிசை வரிசையாகப் புகழ்ந்து பேய்கள் ஆடுகின்ற துணங்கை என்ற கூத்துக்கு இசைவாய் விளங்கின.

2. போரிடும் களத்தில் முழங்கிக் கொண்டு வந்த ஒரு யானையின் உடலைப் பிளந்து அதன் தோலை உரித்து ஒரு போர்வையாக மேலே போர்த்திக் கொண்டன. புகை உண்டாகும் படி தீப்பொறியை வீசுகின்ற சுழல்கின்ற கண்களையுடைய புலியானது தந்த புலால் நாற்றத்தையுடைய பற்களால் கடித்துப் பருகும் இரத்தத்துடன் உலவும் நரசிம்மத்தின் வலிமை அடங்கும்படிச் செய்தன. சீர்காழி என்ற தலத்தில் உள்ளவர்க்குத் தலைவரான திருஞான சம்பந்தர் பண்ணுடன் இசைத்த தேவாரத் திருப்பதிகத்தின் அருமையை அறிந்து ஒரு பொன் தாளத்தை வழங்கத் தொடங்கின.

3. பேரிடியைப் போன்று ஒலியுண்டாகும்படி எதிரே சீற்றம் கொண்டு சித்தன் ஆன பாணன் ஒருவன் ஒழியும்படி அசைந்து திரிந்தன. வயதான மூதாட்டியான வந்தி என்பவள் அன்புடைய மனத்துடனே அணைத்துக் கரிய ஆடையில் வைத்திருந்த வெண்மையான பிட்டு என்ற உணவை உண்ண விரும்பின. அம்மூதாட்டி நாம் செய்ய வேண்டிய வேலையை இவன் செய்து முடிப்பான் என்று உறுதியுடன் வீட்டிற்குப் போகும்படி விரைவில் ஒரு கூடை மண் சுமந்து எடுத்துக் கொண்டு போய் எழும்பிக் கொட்டின. உறையினின்று உருவி எடுக்கப்பட்ட வாளுடன் எதிரே வரும் அரிமர்த்தன பாண்டியனின் பிரம்பின் அடியைப் பார்த்ததால் மிகவும் நடுங்கி அஞ்சின.

4. அனைவர்க்கும் சுவை மிக தரும் அமிழ்தம் போன்ற இனிமை மிகுந்து ஒழுகப் பெற்ற பசுமையான தமிழ்த் தொடைப் பாமாலையை நிறைய அணிந்தன. தளிர் போன்ற மென்மையான இமயமலை மகளான உமையம்மையின் கோடுகளையுடைய வளைகள் பதிந்ததால் உண்டான தழும்பானது அழகுறப் பொருந்தும்படி நெகிழ்ந்து காட்டின. தளர்ந்த நடையையுடைய இளைய குமரனான முருகப் பெருமானின் குதலைச் சொற்கள் பொருந்திய வாயில் ஊறும் நீர்மேலே துளிக்க அதனால் ஈரமாயின.

**விளக்கம்**

தடாதகை - அங்கயற்கண்ணியம்மை; தடுத்தற்கு அரிய தகைமை உடையவள் என்பது பொருள்.

1. பாட்டுடைத் தலைவனின் தோள்களின் இயல்புகளை இப்பாடல் புலப்படுத்துகின்றது. இங்ஙனம் உரைப்பதே புய வகுப்பு ஆகும்.

வரியளி - வரி + அளி; வரிகளையுடைய வண்டுகள். இசையையுடைய வண்டுகள் எனவும் பொருள் கொள்ளலாம். பொதுளிய - நெருங்கிய. இதழி - கொன்றை. அமரர் மடந்தையர் நீலவனம் புக்கிருந்தன - தெய்வப் பெண்களின் கண்களாகிய கரு நெய்தல் மலர்க் கூட்டத்தை அடைந்தன. மதி அகடு - திங்களின் நடுவிடம். உடைபட - உடையும்படி. நெடுமுகடு - பெரிய உச்சி. மேரு வணங்க - மேருமலை வில்லாக வளையும்படி. மழகதிர் வெயில்விட - இளைய கதிரவன் போன்ற ஒளி வீச. வலயம் - தோள் வளைகள். லோகம் அடங்க - உலகம் முழுவதையும். மதுகை - வன்மை. அணங்கவரோடு - பேய்களுடன். துணங்கை - ஒருவகைக் கூத்து. இங்குப் போர்க்களத்தில் பேய்கள் வெற்றி பெற்ற வீரனை வாழ்த்திப் பாடி ஆடும் கூத்து என்க.

2. பொருசமர் - மோதிடும் போர். பிளிறும் - முழக்கமிடும். களிறு - தாருகாவனத்து முனிவர் வேள்வியினின்று உண்டாக்கி

அனுப்பிய யானை. போர்வை - போர்வையாக. புறம் சுற்றின - உடல் மீது போர்த்திக் கொண்டன. புகை எழ - புகை எழும்படி. அழல் உமிழ் - தீயைக் கக்கும். சுழல்விழி - சுழலும் கண்ணை யுடைய. உழுவை - புலி. மருங்குற்கு - இடைக்கு. அணிந்தன - உடுத்தன. புலவு எயிறு - புலால் நாற்றம் வீசும் பற்கள். குருதி - இரத்தம். மடங்கல் - நரசிம்மம். வீரம் ஒடுங்கத் துரந்தன - நரசிம்மத்தின் வலியைக் கெடுத்தன. புகலியர் குரிசில் - சீர்காழியில் தோன்றிய திருஞான சம்பந்தர். இறைவர் அந் நாயனார்க்குப் பொன் தாளத்தை வழங்கியது 'திருக் கோலக்கா' என்ற பதியில்.

3. உரும்இடி - பேரிடி. வெடி - ஓசை. கறுவி - சினந்த. நடந்த ஒரு பாணன் - நடந்து வந்த பாணன். ஒதுங்க - தோற்று ஓட. பாணன் என்ற பாணபத்திரன் பொருட்டு விறகு சுமந்து சென்று சாதாரி என்ற பண்ணைப் பாடி ஏமநாதன் என்னும் பாணன் ஓடும்படி செய்த சிவபெருமானின் திருவிளையாடலைக் குறித்து நின்றது. மனை - அடைப்பதற்காகக் குறிப்பிடப்பட்ட. வைகைக் கரைப்பகுதி. உந்தி - நுனிக்காலை ஊன்றி நின்று.

4. மதுரம் - இனிமை. பசுந்தமிழ் மாலை - பசுமையான தமிழ்ப்பாவால் ஆன மாலை. தேவாரப்பாக்கள். வரிவளை - கோடுகளை யுடைய வளையல். அது உமையம்மையின் கைவளை. குழைந்தன - நெகிழ்ந்து கொடுத்தன. மதலை - முருகப் பெருமான். அசும்ப - துளிக்க. கசிந்தன - ஈரம் ஆயின. சவுந்தர மாறர் - சவுந்தர பாண்டியன். வளை முதுகு தழும்பு - வளை பொருத்துதலால் ஏற்படும் தழும்பு (அடையாளம்). ஊறல் - வாய்நீர். குமரி - தடாதகைப் பிராட்டியார். (12)

## தலைவியின் இயல் இடம்

### கட்டளைக் கலித்துறை

*தலைவன் கூற்று*

116. புயல்வண்ண மொய்குழல் பொன்வண்ணம்
தன்வண்ணம் போர்த்தடங்கண்
கயல்வண்ண மென்வண்ண மின்வண்ண
மேயிடை கன்னற்செந்நெல்
வயல்வண்ணப் பண்ணை மதுரைப்
பிரான்வெற்பில் வஞ்சியன்னாள்
இயல்வண்ணம் இவ்வண்ண மென்னெஞ்சம்
மற்றுஅவ் விரும்பொழிலே. (13)

**தெளிவுரை**

தலைவியின் அடர்த்தியான கூந்தல் மேகத்தின் நிறமாகும். அவளது மேனியின் நிறமானது பொன்நிறம். போர் செய்தலில் வல்ல பெரிய கண்கள் கயல்மீனின் தன்மையுடையனவாம். இடையானது என் இயல்பையும் மின்னலின் தன்மையையும் போன்றது. அரும்பும் செந்நெல்லும் மருதம் சூழ்ந்த மதுரையில் வீற்றிருக்கின்ற சிவபெருமானின் மலையில் உள்ள வஞ்சிக்கொடி போன்ற அவளது வடிவத்தின் தன்மை இத்தன்மையுடையதாகும். அவள் இருக்கும் சோலை என் மனமாகும்.

**விளக்கம்**

'இச்செய்யுள் இயல் இடம் கூறல்' என்ற துறையில் அமைந்தது. அதாவது தலைவன் ஒருவன் தலைவியைக் கூடிப் பிரிந்த பின் தன் நிலையைத் தோழனுக்குக் கூறுவான். தோழன் தலைவியின் இயல்பையும் உள்ள இடத்தையும் வினவுவான். அப்போது தலைவன் கூறுவது இது.

மொய்குழல் - அடர்ந்த கூந்தல். புயல் வண்ணம் - மேகத்தின் இயல்பு. தன் வண்ணம் - தலைவியின் மேனியின் நிறம். கயல்வண்ணம் - கயல் மீன் இயல்புடையது. மின் வண்ணம் - மின்னலின் இயல்பு கொண்டது. ஏய்தல் - ஒத்தல். தலைவியின் இடை தன்னைப் போன்று மெலிந்திருப்பதாகத் தலைவன் கூறுகிறான் என்பதை 'என் வண்ணம்' என்பதை யுணர்த்துகிறது. வஞ்சியன்னாள் - வஞ்சிக் கொடி போன்றவள். இயல் - இயற்கையழகு. இரும் பொழிலே என் நெஞ்சம். என் தலைவி சோலையில் உள்ளாள் என்பதாம். (13)

## அம்மானை

### கலித்தாழிசை

117. இருவருக்கும் காண்பரிய ஈசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனரே யாமாகில்
அருமையுடம் பொன்றிருகூ றாவதேன் அம்மானை
ஆனாலும் காயமிலை ஐயரவர்க் கம்மானை. (14)

**தெளிவுரை**

பிரமன் திருமால் என்னும் இருவர்க்கும் தன் அடி முடிகள் காண்பதற்கு அருமையான மதுரையின் தலைவரான சிவ பெருமான் தம் வெற்றியைப் புலப்படுத்தும் பேச்சைக் கூறி ஒரு சித்தனின் உடம்பில் உறுப்புகளைத் தனித்தனி துணித்து வென்று விட்டார், அம்மானை என்று ஒருத்தி கூறினாள். அப்போது மற்றவள் வெற்றி மொழி பேசிப் பகைவரின் உடலைத் துணித்து வென்றார் ஆயின் அரிய (அவரது) உடம்பு ஒன்று இரு பகுதியாக ஆவதேன்? என்று வினவினாள். அப்போது மூன்றாமவள், அவர்க்கு உடம்பு இரண்டாக ஆயினும் தழும்பு ஏதும் இல்லை என்று உரைத்தாள்.

**விளக்கம்**

மூன்று மகளிர் அமர்ந்து அம்மானை ஆடுவர், ஒருத்தி தலைவனின் இயல்பை உரைப்பாள். இரண்டாமவள் அதில் ஓர் ஐயத்தை எழுப்புவாள். அப்போது மூன்றாமவள் விடை கூறுவாள். இப்படி அமைவது அம்மானை.

இருவர் - நான்முகன், திருமால். விருதுகட்டி - வெற்றிக் குரிய சின்னங்களை அணிந்து. அங்கம் வெட்டி - சித்தன் என்பவனின் அங்கத்தை வெட்டி.

இருவரும் காண்பரிய ஈசர் வரலாறு: திருமால், நான்முகன் இருவரும் தாம் தாம் கடவுள் என்ற கருத்துக் கொண்டிருந்தனர்; பகை கொண்டனர். அவ்விருவர்க்கும் உள்ள மாறுபாட்டை ஒழிப்பதற்காகச் சிவபெருமான் ஒளிப்பிழம்பாக நின்றார். திருமால் பன்றிவடிவம் கொண்டு நிலத்தில் தோண்டியபடி சென்றார். பிரமன் அன்னப்பறவையின் வடிவம் கொண்டு முடி காணச் சென்றார். கீழே இறைவரின் அடியைக் காணச் சென்ற திருமால் வருந்தித் திரும்ப வந்தார். தன்னால் இறைவனின் அடியைக் காண இயலவில்லை என்று உண்மையை உரைத்தார். நான்முகன் மேலே பறந்து சென்று முடியைக் காண இயலாது போயினும் முடியைக் கண்டதாகக் கூறினான். தன் கூற்றுக்கு இறைவரின் முடியினின்று வந்த தாழம்பூவைச் சாட்சி கூறும்படி சொன்னான். அவன் பொய் கூறியதால் அவனுக்குக் கோயில் இல்லாமல் போகக் கடவது என்று சிவன் சபித்தார். எனவே பிரமனுக்குக் கோயில் இல்லாது போயிற்று.

ஈசனார் விருதுகட்டி அங்கம் வெட்டி வென்ற வரலாறு: சித்தன் என்பவன் தன் ஆயுதக் கலையைக் கற்பித்த ஆசிரியர் பால் பொறாமை கொண்டு தானும் ஒரு கல்விக் கூடம் உண்டாக்கிச் சிலருக்குக் கற்பித்து வந்தான். இதனால் அவனது ஆசிரியரின் வருவாய் குறைந்தது. அதைக் கண்ட சிவபெருமான் சித்தனின் ஆசிரியர் வடிவு கொண்டு சென்று சித்தனைப் போருக்கு அழைத்தார். அவனது அங்கத்தை வெட்டி வென்றார்.

விருதுகட்டி - வெற்றிக்குரிய சின்னங்களை அணிந்து கொண்டு. அங்கம் - உடம்பின் உறுப்பு. சித்தன் என்பவனின் அங்கத்தை இறைவர் வெட்டினார். அங்கம் வெட்டல் என்பது போர்ச் செயல் பற்றிய பரிபாடையுள் ஒன்று. இருகூறு - இரண்டு துண்டு. இறைவன் கூறும், அம்பிகையின் கூறும். இஃது உமை யொரு பாக உருவைக் குறித்தது. காயம் - புண்; உருவத்திரு மேனி. மதுரேசனார் - மதுரை + ஈசனார். (14)

## இவளுக்கு என்ன துன்பம் நேர்ந்தது?

### இரங்கல்

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

118. அம்ம கோவெனும் விழுமழு மெழுந்துநின்று
அருவிநீர் விழிசோர
விம்மு மேங்குமெய் வெயர்த்துவெய் துயிர்க்குமென்
மெல்லியல் இவட்கம்மா
வம்மின் மாதரீர் மதுரையுங் குமரியும்
மணந்தவர் மலர்த்தாமம்
தம்மி னோவெனும் தவப்பயன் பெரிதெனும்
தந்தைதாள் எறிந்தார்க்கே. (15)

**தெளிவுரை**

இவள் ஐயோ என்பாள்; கீழே விழுவாள்; புலம்புவாள்; எழுந்து மலையருவி போல் கண்ணீர் பெருகக் கலங்குவாள்; இரங்குவாள். வியர்த்து வெப்பம் உடையவளாய்ப் பெருமூச்சு விடுவாள். தோழிமார்களை நோக்கி 'மங்கையரே! இங்கு வாருங்கள்' மதுரை நகரத்தையும் கன்னியாகுமரியையும் கூடிய சோமசுந்தரக் கடவுளின் மலர் மாலையைக் கொண்டு வந்து தாருங்கள்' என்று இயம்புவாள். சிவபெருமானின் மாலையைப் பெற்றதால் தந்தையின் காலை வெட்டிய சண்டேசுரருக்குத்

தவத்தின் பயன் பெரிதாம் என்பாள். மென்மை இயல்புடைய இம்மகளுக்கு என்ன இவ்வாறு துன்பம் நேர்ந்தது.

**விளக்கம்**

அம்மகோ - ஐயகோ! என்பது போல் கொள்க. இது ஒருசொல். அம்ம + கோ என இரண்டாகவும் கொள்ளலாம்.

மதுரையும் குமரியும் மணந்தவர் - மதுரை முதல் குமரி வரை ஆண்டவர் என்பது கருத்து. மதுரையை ஆண்ட குமரியான தடாதகைப் பிராட்டியை மணந்தவர் என்பதும் பொருளாகக் கொள்ளலாம். மணந்தவர் - கலந்தவர். தாமம் - கொன்றை மாலை. தந்தை தாள் எறிந்தார் - தந்தையின் காலை வெட்டியவர். அம்மா - அசை. தம்மினோ - தம்மின் + ஓ; தாருங்கள். ஓ எனும் - ஓ என்று அழுவாள். தந்தை தாள் எறிந்தார் - தந்தையின் காலை வெட்டிய சண்டேசுரர். சேய்ஞலூர் என்ற ஊரில் வாழ்ந்த விசாரசருமர் என்பார், தாம் மேய்த்த மாடுகளின் மடியிலிருந்து பெருகி வழிந்து ஒழுகிய பாலைக் குடம் குடமாகச் சேர்த்து, மண்ணியாற்றில் மணலைச் சேர்த்து இலிங்கமாக அமைத்துச் சிவபூசை செய்வதற்காகத் திருமுழுக்காட்டுச் செய்தார். மறைந்திருந்து அதைப் பார்த்தார் அவருடைய தந்தையான எச்ச தச்சன். தன் மகன் செயலைக் கண்ட அவர் சினந்து சிவ லிங்கத்தைக் காலால் எற்றினார். அதனால் சினம் கொண்ட விசார சருமன் தன் தந்தை என்றும் பாராமல் அவரது காலை வெட்டினார். இதுவே இப்பாடலில் 'தந்தை தாள் எறிந்தார்க்குத் தவப்பயன் பெரிது' என்று சுட்டப்பட்டது. இறைவன் அருளால் சண்டேசுரப் பதம் பெற்றார் விசார சருமர். அதாவது இறைவர் எழுந்தருளி, ''நாம் உண்ட பரிகலங்கள், உடுக்கும் உடைகள், சூடும் மாலைகள், அணியும் அணிகள் எல்லாம் உனக்கே உரியனவாகுமாறு சண்டீசன் பதம் தந்தோம்'' என்று கூறித் தம் தலையில் அணிந்திருந்த கொன்றை மாலையை விசாரசருமருக்குத் தந்தார். எனவே 'தவப்பயன் பெரிது' எனப்பட்டது. அதாவது தவப் பயன் உடையார்க்கு அன்றிக் கொன்றை மாலை கிடைக்காது! ஆதலால் இவள் வருந்துகிறாள். இவளது துன்பத்தைப் போக்குவது எப்படி? என உரைத்தாள். (15)

## உம் விரைந்த வேகம் நன்று

## மதங்கியார்

### எழுசீர்ச் சந்த விருத்தம்

119. எறிவேல் இரண்டுமென துயிர்சோ ரவுண்டுஉலவ
இகல்வாள் இரண்டு விசிறா
வெறிசேர் கடம்பவன மதுரே சர்முன்குலவி
விளையா டுமின்கொ டியனீர்
சிறுநூன் மருங்குலிறு மிறுமா கொலென்றுசில
சிலநூ புரம்சொன் முறையீடு
அறியீ ரெனெஞ்சுமல மரவே சுழன்றிடுநும்
அதிவேக நன்ற றவுமே. (16)

**தெளிவுரை**

எறியப்படும் வேலினைப் போன்ற இருகண்களும் என் உயிர் தளர்ச்சி அடைய அதையுண்டு உலாவ வலிமை கொண்ட இரண்டு வாள்களை வீசிக் கொண்டு நறுமணம் உடைய கடம்பவனத்தை யுடைய மதுரைக்குத் தலைவரான சிவபெருமான் முன்னிலையில் தோன்றி விளையாடும் மின்னல் கொடி போன்றவரே! நுண்ணிய நூல் போன்ற இடை கூந்தல், கொங்கை முதலிய பாரத்தினால் தாங்க மாட்டாமல் அடிக்கடி முறிவதைப் போன்று ஒலிக்கும் காற்சிலம்புகள் கூறும் சில சில முறையீடுகளை நீங்கள் அறியாதவராய் உள்ளீர்! உங்கள் இடையுடன் ஒப்ப என் உள்ளமும் கலங்கும்படி சுழலும் உமது விரைவு நன்றாக இருக்கின்றது!

**விளக்கம்**

ஒரு மதங்கச் சாதி மங்கை இருகைகளிலும் வாளை எடுத்துக் கொண்டு சுழன்று ஆடுகிறாள். அவளிடத்துக் காமம் கொண்ட ஒருவன் கூறும் கூற்றாக அமைத்துப் பாடுவது மதங்கியார்

என்பதாகும். மதங்கர் - இசை, கூத்து ஆகியவற்றை மேற் கொண்ட ஒரு சாதியார். மதங்கியார் - மதங்க சாதிப் பெண்டிர். எறிவேல் இரண்டு - இரண்டுகண்கள். அவை எறியப்படும் வேல்களைப் போன்றவை. விசிறா - விசிறி; 'செய்யா' எனும் வாய்பாட்டு வினையெச்சம். உயிர் சோர - உயிர் தளர. மின் கொடியனீர் - மின்னல் கொடியைப் போன்றவரே. வெறி - நறுமணம். நூல் மருங்குல் - நூலைப் போன்ற சிறிய இடை. இறும் இறும் - ஒடிந்து விடும், ஒடிந்து விடும். நூபுரம் - உள்ளே பருக்கைக் கற்களையுடைய சிலம்பு. சொல் முறையீடு - முறை யிட்டுக் கூறும் முறையீடு. அலமர - சுழல.

நும் இரு கண்களும் எம் உயிரைக் கவர நீவிர் இரண்டு வாள்களையும் சுழற்றுவானேன்? மிகை! என்பது கருத்து. (16)

## புறம் தந்தது நன்று!

## (புறங்காட்டல்)

### கட்டளைக் கலித்துறை

120. அறம்தந்த பொன்பொலி கூடல்
பிரான்வெற்பிம் அம்பொற்படாம்
நிறம்தந்த கும்ப மதயா
னையுநெடுந் தேர்ப்பரப்பும்
மறம்தந்த விற்படை வாட்படை
யும்கொண்டு மற்றொருநீ
புறம்தந்த வாவணங் கேநன்று
காமவெம் போரினுக்கே. (7)

**தெளிவுரை**

பெண் தெய்வம் போன்றவளே! அறங்கள் யாவும் பொருந்திய செல்வத்துடன் கூடி விளங்கும் மதுரையில் வீற்றிருக் கின்ற சிவபெருமானின் மலையில், அழகிய பொன்னால்

சித்திரிக்கப்பட்ட ஆடையின் பொலியும் ஒளியுடைய மத்தகமும், மதமும் பொருந்திய யானையையும், பரந்த தேர்த்தட்டையும், வன்மை வாய்ந்த வில்லான படையையும், வாளாகிய படையையும் கைக்கொண்டும் கொடிய காமப் போரில் ஒப்பில்லாத நீ புறம்கொடுத்த விதம் நன்றாக உள்ளது.

**விளக்கம்**

இது 'புறங்காட்டல்' என்ற துறையில் அமைந்துள்ளது. தலைவனுடன் புணர்ந்த தலைவி நாணத்தால் தன் முகத்தை நோக்காமல் திரும்பிய போது தலைவன் கூறுவது. இதன் நேர் பொருள் 'முதுகு காட்டல்' என்பது. அதாவது திரும்பி நிற்றல்.

அறம் தந்த பொன் - அம்பிகை. அவள் முப்பத்திரண்டு அறங்களை வளர்த்தாள். ஆதலால் 'அறம் தந்த பொன்' எனப் பட்டாள். பொன் - பொன் போன்றவள். ஆகு பெயர். கூடல் - மதுரை. வெற்பு - மலை. பொன்படாம் - பொன்னால் அலங்கரிக்கப்பட்ட முகபடாத்தையுடைய. நிறம் தந்த - நன்னிறம் உடைய. கும்ப மத யானை - மத்தகத்தையுடைய யானை; அதாவது கொங்கைகள். மறம் தந்த - வீரம் பொருந்திய. தேர்ப்பரப்பு - தேரினது பரப்பு; அதாவது அல்குல். விற்படை - வில்லாகிய ஆயுதங்கள்; புருவங்கள். வாள் படை - கண்கள். காம வெம்போர் - புணர்ச்சி; விருப்புக்குரிய போர். புறம் தந்தவா - புறம் காட்டியது என்ன வியப்பு! அணங்கே - பொண் தெய்வம் போன்றவளே! - உவமையாகு பெயர். (17)

## ஓர் அம்பைத் தொடுத்து எய்வீர்!

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

121. போரானை முதுகுறைப்பப் பொறையாற்றும்
சினகரத்துப் புழைக்கை நால்வாய்க்
காரானைப் போர்வைதழீஇ வெள்ளானைக்கு
அருள்சுரந்த கடவு ளேயோ

ஓரானை முனைப்போருக் கொருகணைதொட்டு
எய்திடுநீர் ஒருத்தி கொங்கை
ஈரானை முனைப்போர்க்கும் வல்லீரே
லொருகணைதொட் டெய்தி டீரே. (18)

**தெளிவுரை**

போர் ஆற்றவல்ல எட்டு யானைகள் முதுகு வருந்தும்படி தாங்கும் விமானத்திலே துளையையுடைய தும்பிக்கையுடைய தொங்கும் வாயையும் உடைய கரிய யானையினது தோலான போர்வையை போர்த்திக் கொண்டு வெண்மையான நிறம் கொண்ட ஐராவதம் என்ற யானைக்கு அருளிய கடவுளோ! ஓர் யானையின் கொடிய போரை முடிப்பதற்கு ஓர் அம்பைத் தொடுத்து எய்து விட்ட நீர் வலியவர் என்றால் இந்த என் ஒரு மகள் கொங்கைகளான இரண்டு யானைகள் முனைந்து செய்யும் போரை முடித்தற்கும் ஓர் அம்பைத் தொடுத்து எய்துவிடும்!

**விளக்கம்**

இது பாங்கி தலைவனிடம் தலைவியை மணந்து கொள்ளும் படி வற்புறுத்திக் கூறுவதாகும். போர்யானை முதுகுறைப்பப் பொறையாற்றும் சினகரம் - போரிடும் யானைகள் முதுகினால் சுமக்கின்ற விமானம்.

எட்டு யானைகளும் முப்பத்திரண்டு சிங்கங்களும் அறுபத்து நான்கு பூதகணங்களும் சுமக்கும்படி தேவதச்சன் மயனால் அமைக்கப்பட்டு இந்திரனால் கொண்டு வந்து தரப்பட்ட விமானம் இது. இவ்விமானத்தில் சோமசுந்தரக் கடவுள் வீற்றிருக்கின்றார்.

சினகரம் - இது முதலில் சமணக்கோயிலைக் குறித்துப் பின்பு அனைத்துக் கோயில்களுக்கும் பொதுவான சொல் ஆயிற்று.

ஆனைப் போர்வை - யானையின் தோல்; சிவபெருமான் மீது தாருகாவனத்து முனிவர்கள் அனுப்பிய யானையைச் சிவ பெருமான் கொன்று உரித்துத் தோலைப் போர்த்துக் கொண்டார்.

நால்வாய் - தொங்கும் தன்மையுடைய வாய். யானையின் வாய் தொங்கும் தன்மையுடையது.

ஓரானைமுனைப் போருக்கு ஒரு கணை தொட்ட வரலாறு: விக்கிரம பாண்டியனைக் கொல்லச் சமணர் செய்த அபிசார வேள்வியினின்று வெளிப்பட்ட யானையைச் சோழன் ஏவினான். அவ்விக்கிரம பாண்டியனைக் கொல்ல வந்த யானையைச் சிவ பெருமான் ஒரு வீரன் வடிவு கொண்டு போய்க் கொன்றார். இதனை யானை எய்த திருவிளையாடலால் அறியலாம்.

வெள்ளானைக்கு அருள் புரிந்த வரலாறு:- காசியில் துருவாச முனிவர் தவம் செய்தார். அவர்க்குச் சிவ பெருமான் தன் முடிமீது இருந்த தாமரை மலரைக் கொடுத்தார். அவர் தேவ வுலகம் சென்ற போது ஐராவத யானை மீது பவனிவரும் இந்திரனிடம் தர அவன் அதை அலட்சியமாய் வாங்கித் தன் யானையின் தலைமீது வைத்தான். யானை அம்மலரைத் தன் காற்கீழ் இட்டுத் தேய்த்தது. அதனால் சினம் கொண்ட துருவாச முனிவர் அந்த ஐராவத யானையைக் காட்டானை ஆகும்படி சாபம் இட்டார். பின் தேவர் முறையிட்டுக் கொண்டதற்கு ஏற்ப முனிவர் அவ்வானை நூறு ஆண்டு கழிந்த பின்பு பழைய தேவ யானையாகும் என அருள் செய்தார். இவ்வானை நூறாண்டு கழிந்த பின்பு ஒரு நாள் கடம்பவனத்தை அடைந்தது. பொற்றாமரைக் குளத்தில் நீராடி இறைவனை வணங்கியது. சிவனின் அருளால் அது பழைய வடிவை அடைந்தது. ஓரானை முனைப் போர்க்கு - சமணர் விடுத்த யானையின் அச்சத்தைக் கெடுத்தற்கு. ஒரு கணை - ஒரு நரசிங்காத்திரம். எய்திடீர் - அடைவீராக. (18)

## இவள் துன்பத்தைப் போக்குவாய்!

*பாங்கி கூறியது*

122. எய்யாது நின்றொருவன் எய்வதுவு மிளையாள்தன்
இளைப்பும் புந்தி
வையாதார் வைதலுறின் மதியார்தா மதித்திடுதல்
வழக்கே யன்றோ
மெய்யாத மெய்கடிந்து வீடாத வீடெய்தி
வீழார் வீழச்
செய்யாள்செய் சரக்கறையாம் திருவால வாயிலுறை
செல்வ னாரே. (19)

**தெளிவுரை**

பொய்யான உடம்பை விட்டு நிலையான முத்தி உலகத்தை அடைந்து இங்கு வாராத முத்தர்களும் விரும்புமாறு சிவந்த நிறம் உடைய திருமகள் செய்த எல்லாப் பொருளும் நிரம்பியுள்ள ஓர் அறையைப் போன்ற திருஆலவாய் என்ற மதுரையில் வீற்றிருக்கின்ற எல்லாச் செல்வமும் உடைய இறைவரே!

காமனால் அறியப்படாது நின்று அம்பு எய்தலையும் இளைய பருவம் உடையவளான இம்மகளின் வருத்தத்தையும் மனத்தில் கொள்ளாத உறவினர் முதலியவர் பழிக்கத் தொடங்கினால் முற்றறிவை உடையவரான நீவிர் இப்பெண்ணின் துன்பத்தை உணர்ந்து கூடுதல் நீதியே ஆகும் அன்றோ!

**விளக்கம்**

எய்யாது - அறியாதது; அம்பை எய்யாமல். புந்தி வையாதவர் - மனத்தில் கொள்ளாதவர். இளையாள் - இளம் பருவம் உடைய தலைவி. வைதல் உறின் - பழிக்கத் தொடங்கினால். மதியார் - அறிவற்றவர். வழக்கு - வழக்கம். பெய்யாத - நிலைக்காத. மெய் - உடம்பு. வீடாத - அழிவற்ற. வீடு - முத்தி. வீழ - விரும்ப. செய்யார் - சிவந்த நிறம் உடைய

திருமகள். சரக்கறை - பொருள் வைக்கும் அறை. திருவாலவாய் - திரு + ஆலவாய்; வங்கிய சேகர பாண்டியன் என்பவன் மதுரையின் எல்லையைக் காட்டியருள வேண்டும் என்று சிவ பெருமானிடம் வேண்டிக் கொண்டான். அவர் தம் கையில் உள்ள நாகத்தை அனுப்பி மதுரைக்கு எல்லையைப் புலப்படுத்தும்படி ஆணையிட்டார். அப்பாம்பு தன் வாயும் வாலும் பொருந்தும்படி வளைந்து நின்று எல்லையைக் காட்டியது. இக்காரணத்தால் மதுரைக்கு 'ஆலவாய்' எனப் பெயர் ஏற்பட்டது. (19)

## 123. மன்மதன் போர் செய்கின்றான்! முன் வினை விளைந்தது

### எழுசீர்ச் சந்த விருத்தம்

*தலைவி இரங்கிக் கூறல்*

123. ஆறுதலை வைத்தமுடி நீணிலவெ றிப்பவெமை
ஆளுடைய பச்சை மயிலோ
டிறுமுத லற்றமது ராபுரியி லுற்றபர
மேசரொரு சற்று முணரார்
நீறுபடு துட்டமதன் வேறுருவெ டுத்தலரின்
நீள்சிலைகு னித்து வழிதேன்
ஊறுகணை தொட்டுவெளி யேசமர்விளைப்பதுமென்
ஊழ்வினைப லித்த துவுமே. (20)

**தெளிவுரை**

கங்கையாற்றையுடைய சடையில் நீண்ட மதி ஒளியை வீசும் படி எம்மை அடிமையாக உடைய பச்சை நிறம் கொண்ட மயில் போன்ற உமா தேவியுடன் கேடும் தோற்றமும் இல்லாது எப்போதும் அழியாதவரான சோமசுந்தரக் கடவுள் தம் நெற்றி யினால் முன்னம் எரிக்கப்பட்டுச் சாம்பலான கொடிய மன்மதன் உரு எடுத்துக் கொண்டு வந்து பூவான நீண்ட வில்லை வளைத்துப்

பெருகித் தேன் வழியும் மலர்களாகிய அம்புகளைச் செலுத்தி வெளிப்படப் போர் செய்வதையும் என் முன்வினைப்பயன் விளைந்து விட்டதையும் ஒரு சிறிதும் அறியார் போலும்!

**விளக்கம்**

இது தலைவி கூறுவதாகும். தலைவன் என் துன்பம் முதலிய வற்றை அறியார் போலும்! அறிந்திருந்தால் வந்து கூடா திருப்பரோ! என்பது தலைவியின் கருத்து.

ஆறு - கங்கையாறு. நீணிலவு - பிறைக் கோட்டின் வடிவான திங்கள். நீண்ட தொலைவு வரை ஒளி வீசுபவன் என்பதுமாம்.

கங்கையாற்றை அணிந்து குளிர்ந்து இருப்பதாலும் உமை யுடன் இருப்பதாலும் வேறொருத்தியின் துன்பத்தைச் சிவபெரு மான் அறியவில்லை போலும்!

நீறுபட்ட மதன் - சிவபெருமானின் நெற்றிக்கண்ணால் எரிக்கப்பட்டுச் சாம்பலான காமன். முடி - சடைமுடி. பச்சை மயில் - மரகத வல்லியான அங்கயற்கண் அம்மை. ஒருசற்றும் - சிறிதும். அலரின் நீள் சிலை - மலரான் ஆன நீண்ட வில்; இன் - சாரியை. மன்மதனுக்குக் கரும்பே அல்லாது பூவும் வில் என்பர்.

மன்மதன் போர் செய்வதையும் முன்னைய ஊழ்வினை பலித்ததையும் இறைவர் உணரவில்லை என்பதாம். (20)

## தழையை ஏற்றுக் கொள்வாய்!

### தழை

### கட்டளைக் கலித்துறை

124. பல்லார் உயிர்க்குயி ராமது ரேசரப்
பாண்டியன்முன்
கல்லானைக் கிட்டகரும்பன்று காணின்
களபக்கொங்கை

வல்லானைக் கேயிடவாய்த்தது போலுமென்
வாள்கணன்னாய்
வில்லார் புயத்தண்ணல் தண்ணளி யாற்றல்தந்த
மென்தழையே. (21)

பாங்கி தலைவன் தந்த தழையை ஏற்றுக் கொள்ளும்படி தலைவியிடம் கூறுதல்.

## தெளிவுரை

என் வாளைப் போன்ற கண்ணை உடையவளே! வில் பொருந்திய தோளையுடைய பெருந்தன்மையுடைய தலைவன் குளிர்ந்த அருளால் தந்த மென்மையான இத்தழை எல்லா உயிர்களுக்கும் உயிராய் விளங்கும் மதுரைக் கடவுளான சோமசுந்தரப் பெருமான் அந்த அபிடேக பாண்டியனின் முன்னிலையில் கல்லால் ஆன ஆனை உண்ணும்படி அதற்குக் கொடுத்த கருப்பந் தழை போன்றதன்றே! நின் கலவைச் சந்தனம் பூசப்பட்ட கொங்கைகளாகிய வலிய யானைக்கே இடுவதற்கு அமைந்தது போலும்!

## விளக்கம்

தலைவன் தந்த தழையைத் தோழி தலைமகளிடம் அதை ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்துவது. தலைவன் இத்தழையை ஏற்றுக் கொண்டு என் வேண்டுகோளை ஏற்கும்படி கையுறையைத் தந்தனன். அது தழை. தழையாவது நெய்தல் மலர் முதலிய வற்றாலும் இலைகளாலும் கட்டப்படுவது. அதை ஏற்றுக் கொண்ட தோழி தலைமகளிடம் போய் ஏற்கும்படி கூறுகின்றாள்.

பாண்டியன் - அபிடேகப் பாண்டியன். கல்லானைக் கரும்பு அருத்தியது என்ற திருவிளையாடல் கதையை இங்குக் காண்கிறோம். அக்கதை பின்வருமாறு: பாண்டியன் ஆண்டு வந்த காலத்தில் சித்தமூர்த்தி வடிவத்தில் சிவபெருமான் வந்தார். அவர் பல சித்துக்களைச் செய்தபடி இருந்தார். அச்செய்தியை மக்கள் மன்னனுக்கு உரைத்தனர். மன்னன் அங்கு வந்த சித்த மூர்த்தியைப்

பார்த்தான். அப்போது அவன் தந்த கரும்பைக் கல்லானை கடித்துத் தின்றது. (21)

## கூடல் இழைத்தல்

### வஞ்சித்துறை

125. தழைத்திடும் கூடலார்
குழைத்துடன் கூடலார்
பிழைத்திடும் கூடலே
இழைத்திடும் கூடலே. (22)

**தெளிவுரை**

செழிப்புடைய நான் மாடக் கூடல் என்ற மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரர் என்னை மகிழச் செய்து விரைவில் வந்து என்னோடு கூடவில்லை. இழைக்கும் கூடலானது கூடுதல் தவறிவிடும்.

**விளக்கம்**

இது 'கூடல் இழைத்தல்' என்ற துறை. தலைவனைப் பிரிந்து கடற்கரையில் தனியே இரங்குகின்றாள் 'ஒரு தலைமகள்'. என்னைப் பிரிந்த தலைவன் மீண்டும் எப்போது வருவானோ, வருவானோ, எனக் கூடல் சுழி இழைத்துப் பார்த்து வருந்திக் கூறியது.

கூடல் இழைத்தல் என்பது வட்டமாகக் கோட்டைக் கீறி அதனுள் சுழி சுழியாக முற்றும் சுழித்து இரண்டு இரண்டு சுழியாகக் கூட்டிக் கணக்கிட்டு இரட்டைப்பட்டால் கணவர் வந்து கூடுவர் என்றும், ஒற்றையானால் அவர் வந்து கூட மாட்டார் என்றும் கருதிக் குறிபார்ப்பர்.

கூடலார் - கூடல் பதியை யுடையவர். கூடல் - மதுரை. குழைந்து உடன் கூடலார் - மனம் உருகி என்னோடு சேரார்.

இழைத்திடும் கூடல் - மணலில் விரலால் கீறும் கூடற்சுழி. இது எழுவாய். கூடல் பிழைத்திடும் - கூடாமல் போகும்; தவறும். கூடல் - ஒரு தலைப்பு மற்றொரு தலைப்புடன் சேர்தல். கூடல் இழைத்தல் பற்றி டாக்டர் உ.வே.சா. கூறுவது இது: தலைவரைப் பிரிந்த மகளிர் தலைவர் வருகையை எதிர் நோக்கிப் பார்க்கும் நிமித்தங்களுள் கூடற்சுழி ஒன்று. மணலில் சுழியைக் கழித்துப் பார்க்கையில் அது முதலும் முடிவும் கூடுமாயின் தலைவர் வருவார் என்றும் கூடாதாயின் வாரார் என்றும் கொள்ளுதல் மரபு.

இது தலைவி கூற்று. (22)

## ஊடலும் கூடலும் ஒரே உடலில்!

### வஞ்சி விருத்தம்

126. கூட லம்பதி கோயில்கொண்டு
ஆடல் கொண்டவர் ஆடலே
ஊட லும்முடம் பொன்றிலே
கூட லும்மொரு கொம்பரோ. (23)

**தெளிவுரை**

பூங்கொம்பைப் போன்ற ஒருத்தி பிணங்குதலும், அந்தப் பிணக்கு நீங்கப் புணர்தலும், ஓர் உடம்பிலே யாகும். ஆகவே, அழகிய மதுரைப் பதியில் வீற்றிருக்கின்ற திருவிளையாடல்களைச் செய்தருளிய சிவபெருமானின் திருவிளையாடல் என்ன வியப்புடையது!

**விளக்கம்**

ஊடலும் கூடலும் ஓர் உடம்பிலே என்றது உமையாள் ஒரு பாகமும் இறைவர் ஒருபாகமுமாகிய வடிவின் நிலையை எண்ணி. ஊடல் - கலகம்.

ஆடல் கொண்டவர் - ஆளுதலை உடையவர். ஆடலே - அவர் திருவிளையாடல் என்ன வியப்பைத் தருகின்றது? கொம்பு

- கொம்பைப் போன்ற உமையம்மையார். வெவ்வேறான உடம்புகளால் செய்யப்படும் ஊடலும் கூடலும் ஓர் உடம்பிலே நிகழ்கின்றனவே! இஃது என்ன வியப்பு! என்பதாம்.

இதற்கு மற்றொரு பொருள். கூடல் பதியில் கோயில் கொண்டிருக்கும் ஆடல் கொண்டவரின் விளையாட்டுத் தன்மை யாது என்றால் ஒரு கொம்பின் உடலிலே ஊடுதலும் கூடுதலும் ஆம். (23)

## ஆடுக பொன்னூசல்

### ஊசல்

### கலித்தாழிசை

127. கொம்மைக் குவடசையக் கூர்விழிவேல் போராடக்
கம்மக் கலனும் சிலம்பும் கலந்தார்ப்ப
மும்மைத் தமிழ்மதுரை முக்கணப்பன் சீர்பாடி
அம்மென் மருங்கொசிய வாடுகபொன் னூசல்
அழகெறிக்கும் பூண்முலையீர் ஆடுகபொன் னூசல். (2)

**தெளிவுரை**

தனமாகிய மலைகளின் குடுமிகள் அசையவும், கூரிய கண்களாகிய வேல் போர் செய்யவும், அரிய தொழிற்பாடுடைய அணிகளும் சிலம்பும் கூடி முழங்கவும், அழகிய மென்மையான இடை துவளவும், மூவகைத் தமிழும் வழங்கும் மதுரையில் வீற்றிருக்கின்ற மூன்று கண்களையுடைய கடவுளின் புகழைப் பாடிப் பொன்னால் ஆன ஊசல் ஆடுவீராக! அழகிய ஒளி வீசுகின்ற அணிகளை அணிந்த கொங்கைகளை யுடையவரே, பொன் ஊசல் ஆடுவீராக!

**விளக்கம்**

கொம்மைக்குவடு - கொங்கையாகிய மலைகள். கொம்மை - நகில். குவடு - உச்சி. கம்மக்கலன் - கம்மியரின் தொழிற்

சிறப்பையுடைய அணிகள். அம்மென்மருங்கு - அழகிய மென்மையான இடை. கண் போராடல் - கண்கள் பிறழ்தல். மும்மைத் தமிழ் - மூன்று வகையான இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழ். (24)

## கள்குடியரே அறிவோம்

### களி

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

128. அழகுற்றதொர் மதுரேசனை அமரேச னெனக்கொண்
டாடும்களி யானின்றிசை பாடுங்களி யேம்யாம்
பொழுதைக்கிரு கலமூறுபைந் தேறற்பனை யினைநாம்
போற்றிக்குரு மூர்த்திக்கிணை சாற்றத்தகு மப்பா
பழுதற்றதொர் சான்றாண்மை பயின்றார்தின முயன்றால்
பலமுண்டத னலமுண்டவ ரறிவார்பல கலைநூல்
எழுதப்படு மேடுண்டது வீடுந்தர வற்றால்
எழுதாததொர் திருமந்திரம் இளம்பாளையுள் உண்டே. (25)

**தெளிவுரை**

அழகு பொருந்திய மதுரையின் தலைவனான சோமசுந்தரப் பெருமானைத் தேவர்களுக்கெல்லாம் தலைவர் என்று எண்ணிக் கொண்டாடுவதனால் உண்டான களிப்பால் நின்று இனிய பாடல்கள் பாடுகின்ற கள் குடியர் யாங்கள்! அப்பா! வேளைக்கு இரண்டு கலங்கள் நிரம்பும்படி சுரக்கின்ற பசுமையான நறவை யுடைய பனை மரத்தைச் சிறப்பித்துச் சிறந்த ஆசாரிய மூர்த்திக்கு ஒப்பாகக் கூறுவர். அஃது எப்படி என்றால், குற்றம் இல்லாத ஒரு சான்றாண்மைக் குணத்தைக் கடைப்பிடித்தவர்கள் குரு மூர்த்தியிடம் வழிபாடுகளுடன் நாள்தோறும் முயன்றால் தக்க பயன் கிடைப்பதான அப்பயனை அனுபவித்து அறிவார்கள். பலகலை ஞானங்கள் வரையப்பட்ட ஏட்டுச் சுவடி உள்ளதாம்

எழுதப்படாத ஒரு சிறந்த வேத மந்திரம் இளம்பாளைக்குள் அந்த ஆசிரியரிடம் உள்ளது.

**விளக்கம்**

இப்பாடல் கள் குடிப்பவரையும் அஃது உண்டாகும் பனை முதலியவற்றையும் சிறப்பித்துச் சொல்வது.

இப்பாடலில் பின் இரண்டடியில் உள்ள வெளிப்படைப் பொருள் வருமாறு:-

குற்றம் இல்லாத சான்றாண்மை என்ற சாதியின் தன்மையைப் பொருந்திய சான்றோர் (சாணார்) பனை மரத்தில் நாள்தோறும் காலம் தவறாமல் முயற்சி செய்தால் தக்க பயனான மது கிடைக்கும். அதனைக் குடித்தவர்கள் மாத்திரம் அதன் பயனை அறிவார்கள். அன்றியும் அப்பனையில் பல கல்வி நூல்கள் எழுதக் கூடிய ஓலையாகிய ஏடு இருக்கிறது. அது குடிசை அமைக்க உதவும். இன்னும் எழுதாத ஒரு மந்திரம் என்ற கள் இளம் பாளையில் உண்டு.

மதுரேசன் - மதுரை நகரத்துக்குத் தலைவர். மதுரை என்பதற்குக் கள் என்ற பொருளும் உண்டு. அமரேசன் - தேவர்களுக்குத் தலைவன். களியால் - களிப்பினால். இருகலம் - பனை மரத்தில் அறுத்த பாளையில் செருகி வைத்திருக்கும் இரண்டு மண்கலயங்கள். இரண்டு கலம் என்பது மற்றொரு பொருள். தேறல் - கள். களியேம்யாம் - யாங்கள் கள் குடியர் ஆவோம். சாற்றத்தகும் - சாற்ற வேண்டும்; சான்றாண்மை. (சிலேடை) பலம் - பயன்; பழம் நலத்தை உண்டவர் அறிவார். கலைநூல் - கலைகள். ஏடு - பனை ஓலை. குருமூர்த்தி - ஆசாரியர். தினம் முயன்றால் - நாள்தோறும் முயன்றால். எழுதாதோர் திருமந்திரம் - கள்; உபதேசித்தற்கு உரிய வேத மந்திரம். சான்றாண்மை பயிலுதல் - பலம் அளித்தல். கலை முதலிய ஏடுகளைத் தாங்குதல், வீடளித்தல், மந்திரம் ஆகிய இவை ஆசிரியரிடத்தும் உள்ளன. ஆதலால் பனை மரத்தைக் குருவுக்கு ஒப்பாகச் சொன்னார். (25)

## மன்மதன் கணை எண்பது கோடி

### கலி விருத்தம்

129. உண்பது நஞ்சமால் உறக்க மில்லையால்
வண்பதி கூடலே வாய்த்த தென்னுமால்
பெண்பத நின்னதே பெரும வேள்கணை
எண்பது கோடிமேல் எவன்தொ டுப்பதே. (26)

*தோழி கூற்று*

(தலைவியின் வருத்தத்தைத் தோழி தலைவனிடம் கூறுதல்.)

**தெளிவுரை**

பெருமையுடையவனே! இந்தப் பெண்ணுக்கு உண்ணும் உணவு நஞ்சாக விளங்குகிறது. கூடல் என்னும் மதுரையே வாழ்வதற்கான இடமாகப் பொருந்தியது என்பாள். ஆதலால் இப் பெண்ணின் நிலைமை உன் நிலையைப் போன்றதே ஆகும். எனவே, இங்ஙனம் ஆகவும் மன்மதன் சற்றும் அஞ்சாது எண்பது கோடி என்னும் தொகையாய் அம்புகளை இவள் மேல் செலுத்துவது என்ன காரணம்?

**விளக்கம்**

தலைவனைப் பிரிந்துள்ள தலைவியின் வருத்தத்தைத் தோழி தலைவிக்குக் கூறுவது.

இவளது தன்மை மன்மதனை எரித்த உன் நிலையைப் போல் இருக்கிறது. அவ்வாறாகவும் மன்மதன் சற்றும் அஞ்சாது கோடிக் கணக்காய் அம்புகளை எய்கின்றான். இதன் காரணம் என்ன? என்று தோழி வினவுகின்றாள்.

இச்செய்யுளில் முதல் இரண்டடிகள் சிவபெருமானுக்கும் தலைவிக்கும் சிலேடை.

சிவன்மீது செல்லும்போது நஞ்சு உண்பது, உறக்கம் இல்லாமை. மதுரை வீற்றிருக்கும் சிறந்த இடம் என்பது பொருளாகக் கொள்க.

தலைவிமீது செல்லும் போது, உணவை வெறுத்தல், உறக்கம் இல்லாமை, மதுரை வசிக்கத் தக்க சிறந்த இடம் என்பது பொருளாகக் கொள்க.

நஞ்சமாம் - வெறுக்கத் தக்கது. வண்பதி - வளம் வாய்ந்த பதி. கூடல் - மதுரை. பெண் பதம் - பெண்ணின் நிலைமை. வேள் - மன்மதன்; விருப்பத்தை உண்டாக்குபவன் என்றோ, விரும்பத் தக்கவன் என்றோ பொருள் கொள்க. எண்பது கோடி - எண்ணில்லாதவை என்ற பொருளில் கூறப்பட்டது. எவன் - என்ன காரணம்? தொடுப்பது - எய்வது. (26)

## மடக்கு

### கட்டளைக் கலிப்பா

130. தொடுத்த ணிந்தது மம்புத ரங்கமே
சுமந்தி ருந்தது மம்புத ரங்கமே
எடுத்து நின்றது மாயவ ராகமே
எயிறி றுத்தது மாயவ ராகமே
அடுப்ப தந்தணர் பன்னக ராசியே
அணிவ துஞ்சில பன்னக ராசியே
கொடுப்ப தையர் கடம்பவ னத்தையே
கொள்வ தையர் கடம்பவ னத்தையே. (27)

### தெளிவுரை

பரமசிவன் மாலையாய்த் தொடுத்து அணிந்து கொண்டதும், அழகிய தேவர்களின் தலையாகிய அங்கங்களையே! அப் பெருமான் தன் திருமுடி மீது தாங்கியிருப்பதும் அலைகள் பொருந்திய கங்கையாற்று நீரையே ஆகும். பூண்டு நிற்பதும் திருமாலின் உடலையே. ஒழியும்படி கொம்பை முறித்ததும் பன்றியையே ஆகும். பொருந்த வருவது அந்தணர் பல நகரங்களினின்று வரும் வாழ்த்துக்களே. அணியாக அணிவதும் பாம்புக் கூட்டத்தையே! அவர் அடியார்க்குத் தருவது தேவர்களின்

உலகத்தையே! அவர் தம் இருப்பிடமாய்க் கொள்வது மதுரையே ஆகும்.

**விளக்கம்**

1. அம்புதர் அங்கம் - அம் + புதர் + அங்கம்; அழகிய தேவரின் உறுப்புகள்; எலும்புகள். புதர் - தேவர். அம்புதரங்கம் - அம்பு + தரங்கம்; அலைகளையுடைய நீரை. அம்பு - நீர்; கங்கை.

எடுத்து நின்றது மாயவர் ஆகமே - சிவபெருமான் தம் உடலில் தாங்கி நின்றது திருமாலின் உடல். பல திருமால் தோன்றி அழிய அவர்தம் உடலைத் தாங்கியுள்ளார் என்பது கருத்து. இது காயாரோகண மூர்த்தியைக் குறித்தது என்பர். மாயும்படி - பன்றியின் - வராகத்தின் எயிறு ஒடிக்கப்பட்டது. இதனை எயிறு இறுத்தது மாயவர் ஆகமே என்பது உணர்த்துகிறது. இறுத்தது - ஒடித்தது. மாயவர் - திருமால். ஆகம் - உடல்; இங்கு ஆகுபெயராய்க் கொம்பைக் குறித்தது. மாயவர் - திருமால். பன்னகராசி - பாம்பின் கூட்டம். ஐயர் கடம்பவனத்தை - ஐயர்கள் + தம் + பவனத்தை; இறைவர் அடியவர்க்குத் தருவது தேவர்களின் உலகத்தை. ஐயர்கள் - தேவர்கள். பவனம் - உலகம்.

ஐயர் கொள்வது கடம்பவனத்தை - சிவபெருமான் தம் சிறந்த இருப்பிடமாகக் கொள்வது மதுரையை. ஐயர் - சிவ பெருமான். அந்தணர் - முனிவர்; பார்ப்பனர் என்பதுமாம்.

மடக்கு: வந்த தொடரே வந்து பொருள் வேறுபடுவது. (27)

## காமன் அம்பே எனக்குக் கூற்றுவன்!

### நேரிசை வெண்பா

131. கடங்கரைக்கும் வெற்பில் கரைகரைக்கும் வைகைத்
தடங்கரைக்கண் நின்றவர்நீர் தாமோ - நெடுந்தகைநும்
கூட்டம் புயமே கொடாவிடில்வேள் கூன்சிலையில்
நாட்டம் புயமே நமன். (28)

**தெளிவுரை**

மதநீரைப் பெருக்கும் மலை போன்ற யானையின் மீது ஏறிக் கரையை நீர் வெள்ளத்தால் கரையச் செய்யும் வையை ஆற்றின் கரையில் வீற்றிருப்பவர் நீர் தாமோ? பெருமைக் குணத்தை உடையவரே! என்னுடன் கூடுதற்கு அழகிய நின் தோள்களைக் கொடுக்காமல் போனால் காமன் தன் வளைந்த கரும்பு வில்லில் வைத்துத் தொடுக்கும் தாமரை மலரான அம்பே எனக்குக் கூற்றுவன் ஆகும்.

**விளக்கம்**

சோமசுந்தரக் கடவுள் யானைமீது ஏறிப் பவனி வந்தார். அவர் கோலத்தைக் கண்ட ஒருத்தி காதல் கொண்டு கூறுவது இச் செய்யுள்.

கடம் - மதநீர். கரைக்கும் - பெருக்கும். வெற்பு - மலை போன்ற யானை. கரை கரைக்கும் வைகை - கரையைக் கரைக்கின்ற நீரையுடைய வைகையாறு. நெடுந்தகை - பெருமை யுடையவரே. கூட்டம் - கூடுதற்கு. புயமே கொடாவிடில் - தோள்களைத் தாராமற் போனால். வேள் - காமன். கூன்சிலை - வளைந்த வில். நாட்டம் புயமே நமன் - நாட்டு + அம்புயமே + நமன்; செலுத்தும் தாமரை மலராகிய அம்புகளே இயமனாகும். அம்புயம் - நீரில் தோன்றுவதால் இப்பெயர். அம்புசம் - அம்புயம் என்றாகியது. அம்பு - நீர். சம் (ஜம்) - பிறப்பது.

பிட்டுத் திருவிழாக்காலத்துச் சோமசுந்தரப் பெருமான் யானைமேல் எழுந்தருளுதல் வழக்கம் ஆகும்.

இறைவனை முன்னிலைப்படுத்தித் தலைவி கூறியது இது.

(28)

## எம் மகளை வருத்துவதால் அவர்க்கு என்ன பயன்?

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*இது செவிலிக் கூற்று*

132. நம்பா நினக்கோல முறையோ வெனக்கால
நஞ்சுண்டு பித்துண்டு நாந்தேவ ரென்பார்
தம்பாவை யர்க்கன்று காதோலை பாலித்த
தயவாளர் கூடல் தடங்காவில் வண்டீர்
செம்பாதி மெய்யும் கரும்பாதி யாகத்
திருத்தோளு மார்பும் வடுப்பட்ட தும்கண்டு
எம்பாவை யைப்பின்னும் அம்பாவை செய்வார்
எளியாரை நலிகிற்பின் ஏதாம் இவர்க்கே. (29)

**தெளிவுரை**

மயக்கத்தைக் கொண்டு நாமே முதற்கடவுள் எனக் கூறித் திரியும் தேவர்கள் பாற்கடலைக் கடைந்த அந்த நாளில் சிவ பெருமானே உனக்கு அபயம் அளித்துக் காக்கப்படும் பொருள் ஆவோம் நாம் என்று தம் குறையைக் கூறி முறையிட அதற்கு இரங்கி இறக்கச் செய்யும் இயமனைப் போன்ற நஞ்சைப் பருகி அத்தேவர்களின் மனைவியர்க்கு ஓலை என்ற காதணியை வாங்காதபடி மாங்கலியப் பிச்சை கொடுத்த திருவருளையுடைய சிவபெருமானின் மதுரையில் பெரிய சோலைகளில் உள்ள வண்டுகளே! சோமசுந்தரக் கடவுளின் தம் சிவந்த பாதியுடம்பு முழுவதும் கரிய பாகம் ஆக அழகிய தோளும் மார்பும் தழும்பு பட்டதும் கண்ட பின்பும் என் கரிய விழிப்பாவை போன்ற என் அருமையான மகளை அழகிய ஓவியப் பாவை போல் செயலற்றுக் கிடக்கும்படி செய்து விட்டார். எளிய மகளிரை வருந்தும்படி செய்வதால் இவர்க்கு என்ன பயன்?

(வருத்தப்படுத்தாது இருக்குமாறு அவரிடத்தில் போய் வண்டுகளே கூறுங்கள்! என்பது கருத்து.)

**விளக்கம்**

நம்பா - நம்பிக்கைக்கு உரியவனே! ஓலம் - அடைக்கலம். ஓலம், முறையோ என்பன முறையீட்டுச் சொற்கள். நஞ்சு - பாற்கடலில் தோன்றிய விடம். கால நஞ்சு - உயிர்க்கு இறுதியைச் செய்யும் மருந்து. பித்துண்டு - மயக்கம் அடைந்து. பாவையர் - தெய்வ மங்கையர். நாம் தேவர் என்பார் - நாமே கடவுள் எனக் கூறிக் கொண்ட நான்முகன், திருமால். காதோலை பாலித்த தயவாளர் - தாம் பாற்கடல் நஞ்சையுண்டு தேவரின் மனைவி யர்க்கு ஓலை என்ற காதணியை வாங்காதபடி அருளிய சிவ பெருமான். மாங்கலியத்தை வாங்காதபடி எனக் கொள்க. வண்டீர் - வண்டுகளே! செம்பாதி மெய்யும் கரும்பாதியாக - சோமசுந்தரப் பெருமான் தம் சிவந்த பாதியுடம்பு முழுவதும் கருமையடையும்படி. அதாவது ஒருபாதியில் உமையம்மையை வைத்ததைக் குறித்தது. வடுப்படுதல் - உமையம்மையார் தழுவியதால் அந்த அம்மை யாரின் கொங்கையின் வடு இறைவர் மேனியில் உண்டாதல். அம்பாவை - அழகிய பாவை. எம் பாவை - எம் கருவிழி. அம்பாவை செய்வார் - அழகிய ஓவியம் போல் செயல் அற்றிருக்கச் செய்பவர். எளியார் - மகளிர். நலிகிற்பின் - வருந்தும்படி செய்தால். ஏதாம் - என்ன பயன்? (29)

## பழியஞ்சுஞ் சொக்கருக்குப் பாவம்!

## இரங்கல்

### கொச்சகக் கலிப்பா

133. ஆவமே நாணே அடுகணையே யம்மதவேள்
சாவமே தூக்கிற் சமனும் சமனன்றே
ஓவமே அன்னாள் உயிர்விற்றுப் பெண்பழிகொள்
பாவமே பாவம் பழியஞ்சும் சொக்கருக்கே. (30)

**தெளிவுரை**

அந்த மன்மதன் தன் அம்பறாத் தூணியும் வில் நாணியும் கொல்லும் தன்மையுடைய அம்பும் வில்லும் ஆகியவற்றைத் தனித்தனியே ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பழியை அஞ்சும் இயல்புடைய சொக்கநாதர்க்கு, ஓவியத்தைப் போன்ற இம்மகளின் உயிரை விற்றுப் பெண் கொலையாம் பழியைக் கொள்கின்ற தீவினையே கொடிய தீவினை யாகும்.

**விளக்கம்**

இது தோழியின் கூற்று. ஆவம் - அம்பறாத் தூண். நாண் - வில் நாண் (கயிறு). அடுகணை - கொல் அம்பு. அம்மதவேள் - அந்தக் காமன். சாவமே - வில்லே. தூக்கின் - ஆராய்ந்தால். சமனும் அன்றே - இயமனும் நிகராக மாட்டான். ஓவம் - ஓவியம். பழியஞ்சும் சொக்கர் - முன்பு ஒரு பெண் கொலையால் வரும் பழியை அஞ்சும் சொக்கநாதர் என்றது திருவிளையாடல் பழியஞ்சிய படலத்தை உட்கொண்டது. அது பின் வருமாறு: ஓர் அந்தணன் தன் மனைவியை ஓர் மரத்தின் கீழ் இருக்கச் செய்து தண்ணீர் கொணரச் சென்றான். அப்போது அந்த மரத்தில் தொத்திக் கிடந்த அம்பு காற்றால் வீழ்ந்து அவளது உயிரைப் போக்கியது. அப்போது அங்கு ஒரு வேடன் வந்தான். அவனே தன் மனைவியைக் கொன்றான் என்று அந்தணன் எண்ணினான்; பாண்டிய மன்னனிடம் அழைத்துச் சென்றான். அங்கு நிகழ்ந்ததை அறிந்த பாண்டியன் சோமசுந்தரக் கடவுளை வணங்கித் தன் துன்பத்தைப் போக்க வேண்டும் என வேண்டிக் கொண்டான். இறைவன் மதுரை நகரில் நிகழும் ஒரு திருமணத்திற்குப் போனால் உண்மை விளங்கும் என்று திருவாய் மலர்ந்தருளினார். அந்தணர் இறைவன் குறித்த திருமணத்திற்கு போனான். அங்கு வந்திருந்த இயம தூதர் பேசிய பேச்சால் வேடன் தன் மனைவியைக் கொல்ல வில்லை என்பதை உணர்ந்தான். இங்ஙனம் இறைவர் பழிக்கு அஞ்சியவராய் விளங்கினார்.

இப்பாடல் செவிலியின் கூற்று; தோழியின் கூற்றாகவும் கொள்ளலாம். (30)

## இறைவனுக்கு என் துன்பத்தைக் கூறுவீர்!

### பறவைவிடு தூது

#### சந்த விருத்தம்

134. கரைபொருது இரங்கு கழிதொறும் இருந்து
கயல்வர உறங்கு புள்ளீரே
பருவமு மிழந்தென் மகள்துய ருழந்து
படுவிர கமொன்று முள்ளீரே
அருமையொ டுமெங்கள் பெருமையை யறிந்து
அருள்புரி யவிங்கு வல்லீரே
மருவிய கடம்ப வனமது புகுந்தெம்
மதுரைய ரன்முன்பு சொல்லீரே. (31)

**தெளிவுரை**

கரையை மோதி ஒலிக்கும் உப்பங்கழிதோறும் இருந்து நுமக்கு ஏற்ற இரையான கெண்டை மீன் வரும் வரையிலும் உறங்குவது போல் இருக்கின்ற நீர் வாழ்பறவைகளே! நீவிர் என் மகளான இவள் தலைவனுடன் கூடுதற்குத் தக்க இளம் பருவத்தையும் வீணாக இழந்து துன்பம் அனுபவித்துப்படும் காமத் துன்பத்தை ஒரு சிறிதும் எண்ணிப் பாராமல் உள்ளீர். எங்கள் அருமையையும் பெருமையையும் தெரிந்து இப்பொழுது அருள வல்லவர்கள் நீங்களே! சிவபெருமான் மனம் உவந்து எழுந்தருளியிருக்கும் இடமான கடம்ப வனத்தை அடைந்து அங்கு எம் துயரத்தைக் கூறுவீர்.

**விளக்கம்**

கரைபொருது - கரையை மோதி. கழி - உப்பங்கழியான நீர்நிலை. கயல் வர - கெண்டை மீன் வரும் வரை. புள்ளீரே - பறவையாரே. படுவிரகம் - துன்பம் அடையும் காம நோய். கடம்பவனம் - மதுரை. மதுரையரன் - மதுரையில் வீற்றிருக்கும் சிவபெருமான்.

இது தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் வருத்தத்தைப பார்த்துப் பறவைகளை விளித்துத் தூது போய் வரும்படி செவிலித்தாய் கூறியது.

கயல்வர உறங்கு புள்ளீரே:- ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு' என்பதையும்,

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து"

என்பதையும் உட்கொண்டு 'கயல்வர உறங்கு புள்ளீரே' என்றார். கொக்கு சிறிய மீன்கள் ஓடும் போது அவற்றை விடுத்துப் பெருமீன் வரும்போது கொத்திக் கொள்ளும் இயல்பு குறித்து இத்தொடர் அமைந்துள்ளது. (31)

## இத் துன்பத்தை எவரிடம் சொல்வேன்!

### பாங்கி இரங்கல்

### கொச்சகக் கலிப்பா

135. ஈரித்த தென்ற லிளவாடை திங்களென்றோர்
பேரிட்ட மும்மைப் பிணியோ தணியாவால்
பாருக்கு ணீரே பழியஞ்சி யாரெனின்மற்
றாருக் குரைக்கே மடிகே ளடிகேளோ. (32)

**தெளிவுரை**

குளிர்ந்த தென்றற் காற்றும் குளிர்ந்த வாடைக் காற்றும் சந்திரனும் என்று ஒவ்வொரு பெயர் இட்டு அழைக்கப்படுகின்ற மூன்று நோய்கள் குறைவதில்லை. கடவுளே, கடவுளே! நீவிர்தாம் பெண்ணுக்கு உண்டாகும் பழியை அஞ்சுவீர் என்றால் உம்மிடத்தில் சொல்லாமல் இந்தத் துன்பத்தை வேறு எவரிடம் கூறுவோம்?

**விளக்கம்**

ஈரித்த - குளிர்ந்த. இளவாடை - வடக்கிலிருந்து வரும் காற்று. பிணி - துன்பம். பழியஞ்சியார் - பழிக்கு அஞ்சுவீர் என்றால். இது திருவிளையாடல் புராண பழியஞ்சின படலத்தைக் கருத்துள் கொண்டு கூறப்பட்டது. (32)

## பிச்சியார் எனப்பெயர் ஏற்பட்டதேன்?

### பிச்சியார்

### கட்டளைக் கலிப்பா

136. அடுத்த தோர்தவ வேடமும் புண்டரம்
அணிந்த முண்டமு மாய்வெள்ளி யம்பலத்து
எடுத்த தாள்பதித் தாடிக் கடைப்பிச்சைக் ,
கிச்சை பேசுமப் பிச்சன்ள னச்செல்வீர்
கடைக்க ணோக்கமும் புன்மூர லும்முயிர்
கவர்ந்து கொள்ள விடுத்த கபாலிபோல்
பிடித்த சூலமும் கைவிட்டி லீரென்றோ
பிச்சி யாரெனும் பேருமக் கிட்டதே. (33)

**தெளிவுரை**

பொருத்தமான ஒரு தவ ஒழுக்கத்துக்கு ஏற்ற கோலமும் திருநீற்றையும் பூசிய மூன்று கீற்றும் உடையவராய் வெள்ளி யம்பலத்தில் தூக்கிய திருவடியைக் கீழே பதிய வைத்துக் கால் மாறி நடித்து வாயில் தோறும் போய் ஏற்கின்ற பிச்சைக்குரிய மொழிகள் கூறிக் கொண்டு செல்லும் அந்தப் பித்தனான சிவ பெருமான் போன்று செல்கின்ற பிச்சியாரே! நின் கடைக்கண் பார்வையையும் புன்முறுவலையும் உயிரைக் கவர்கின்ற வண்ணம் வெளியே விடுத்த சிவபெருமானைப் போன்று கையில் பிடித்த சூலாயுதமும் விடாதிருக்கின்றீர் என்பதனாலோ பிச்சியார் என்ற பெயர் உமக்கு வைத்தது?

**விளக்கம்**

பிச்சியார் - பிச்சை எடுப்பவள் என்பது பொருள். சிவக் கோலத்துடன் பிச்சை எடுக்கும் ஒருத்தியைப் பார்த்துக் காமுகன் ஒருவன் கூறும் கூற்றாக அமைவது 'பிச்சியார்' என்னும் கலம்பக உறுப்பு.

வேடம் - பிச்சைக் கோலம். அடுத்த - பொருந்திய. புண்டரம் - மூன்றான திருநீற்றுக் கூற்று. சிவபெருமான் தவக் கோலத்தையும் திரிபுண்டரம் அணிந்த நெற்றியையும் உடைய வராய் இருத்தலைப் போன்று நீங்களும் காணப்படுகின்றீர். இம்மதுரை வெள்ளியம்பலத்தில் சிவன் கால் மாறி ஆடியது போல் நீவிரும் கால்மாறி வைத்துப் போகின்றீர். அப்பெருமான் கடைக்கண் பார்வையையும் புன்முறுவலையும் உயிர் கொண்டு விடுவதைப் போல் நீவிரும் விடுகின்றீர். இக்காரணத்தால் தான் உமக்குப் பிச்சியார் என்ற பெயர் ஏற்பட்டதோ! என்று காமுகன் வினவினான்.

இதில் சிவபெருமானுக்கும் பிச்சியாருக்கும் உவமை கூறப்பட்டுள்ளது. முண்டம் - நெற்றி. கடை - வீட்டின் வாயில். சிவனின் கண்பார்வை மன்மதனை எரித்தது. புன்முறுவல் முப் புரங்களை எரித்தது. (33)

## இன்றோ, நாளையோ மடல் ஏறுவோம்!

### (மடல்மா ஏறுதல்)

கட்டளைக் கலித்துறை

137. இடம்கொண்ட மானும் வலம்கொண்ட
வெண்மழு வும்எழுதும்
படம்கொண்டு வந்தனை யானெஞ்ச
மேயினிப் பங்கயப்பூந்

தடம்கொண்ட கூடல் சவுந்தர
 மாறர்பொன் தாள்பெயர்த்து
நடம்கொண்ட தோர்வெள்ளி மன்றுஏ
 றுதும்இன்று நாளையிலே. (34)

**தெளிவுரை**

உள்ளமே! இடக்கையில் கொண்ட ஒளியுடைய மழுவும் எழுதும் படமும் கொண்டு வந்தாய். இனிப் பொன் தாமரைக் குளத்தையுடைய மதுரையில் எழுந்தருளிய சுந்தர பாண்டியராகிய சோமசுந்தரக் கடவுள் பொன் போன்ற திருவடியை மாற்றி வைத்து நடனமிடும் வெள்ளியம்பலத்தில் இன்றேனும் நாளையேனும் மடல் ஏறுவோம்.

**விளக்கம்**

இப்பாடல் 'மடல்மா ஏறுதல்' என்னும் துறையில் அமைந்துள்ளது.

ஆடவர் பெண்டிர் இருவருள் ஒருவர் மற்றொருவரது வடிவத்தையும் பெயரையும் ஒரு படத்தில் ஓவியம் எழுதிக் கையில் கொண்டு பனைமடலால் ஒரு குதிரையையும் செய்வித்து அதன் மீது ஏறி அதனை மற்றவரால் இழுக்கும்படி வீதிவழியே பலரும் கூடும் பொது இடங்களில் செல்வது. அக்காலை தலைவன் அல்லது தலைவி காதலை உணர்ந்து உற்றார். அவனுக்கு அவளை மணம் செய்விப்பர். இவ்வாறு நிகழ்தற்கே மடல் ஏறுதல் நிகழும். அனேகமாக மடல் ஏறுதல் ஆடவர்க்கே உரியது. மகளிர் மடல் ஏறுதல் மரபு அன்று. ஆயினும் பெண்டிர் 'மடல் ஏறுவோம் என்று கூறுதல் உண்டு' என்பர் அறிஞர் சிலர்.

இடம் கொண்ட மான் - இடப்பக்கத்தில் கொண்ட மான். வலங்கொண்ட ஒண்மழு - வலக்கையில் கொண்ட மழு என்ற ஆயுதம். எழுதும் படம் - எழுதப்பட்ட படம்; அதாவது காதலர் தாம் விரும்புபவரின் படம்.

பங்கயப் பூந்தடம் - பொற்றாமரைக் குளம். கூடல் - மதுரை. சவுந்தர மாறர்- சோமசுந்தரப் பெருமான். பொன்தாள் பெயர்த்து - பொன் போன்ற திருவடியை மாற்றி. நடம் கொண்ட - கூத்தாடிய. வெள்ளிமன்று - மதுரையில் உள்ள வெள்ளியம்பலம். (34)

## இரங்கல்

### சந்த விருத்தம்

138. இருநிலன் அகழ்ந்ததொரு களிறுவெ ளிறும்படியொர்
இருளியி னணைந்த ணையுமாக்
குருளையை மணந்தருளின் இளமுலை சுரந்துதவு
குழகரி துணர்த்தி லர்கொலாம்
கருகியது கங்குலற வெளிறியது கொங்கைசில
கணைமதன் வழங்க அவைபோய்
உருவிய பசும்புணில்வெ ணிலவனல் கொளுந்தியதெம்
உயிர்சிறி திருந்தது அரிதே. (35)

**தெளிவுரை**

பெரிய நிலவுலகத்தை ஒரு கொம்பினால் குத்தி எடுத்து வந்த ஒப்பில்லாத ஒரு பன்றி வெள்ளை நிறத்தை அடையுமாறு ஒரு பன்றி வடிவில் கூடித், தம்மைத் தழுவும் அப்பன்றிக் குட்டிகளைச் சேர்ந்து, இரக்கத்தோடு இளைய கொங்கையில் பால் சுரந்து அளித்த அழகையுடையவர் சோமசுந்தரப் பெருமான். அவர், இரவு இருளாயிற்று; கொங்கையும் பசலையால் வெளுத்தது; மன்மதன் சில அம்புகளைச் செலுத்த அந்த அம்புகள் தைத்ததால் ஏற்பட்ட இளம் புண்ணில் வெண்ணிற நிலவின் நெருப்பு பற்றியதும், எம் உயிர் அருமையாகச் சிறிது தாங்கி இருந்ததும் ஆகிய இந்த நிகழ்ச்சிகளை அறியவில்லை போலும்!

**விளக்கம்**

இது 'இரங்கல்' என்ற துறையில் அமைந்தது. இரங்கல் - தலைவி இரங்கல். தலைவனைப் பிரிந்தமையால் இரங்கல்.

இருநிலம் - பூமி. அகழ்தல் - தோண்டுதல். ஒரு களிறு - பன்றி வடிவு கொண்ட திருமால். வெளிறும்படி - ஒப்பாகாமையால் வெட்கம் கொண்டு உடல் வெளுக்கும்படி. வெட்கத்தால் உடல் வெளுத்தல் இயல்பு. சிவபெருமான் பன்றி வடிவு கொண்டு பன்றிக் குட்டிகளுக்குப் பால் ஊட்டினார் என்பது திருவிளையாடல். அதன் பெயர் 'பன்றிக் குட்டிகளுக்கு முலையருத்திய திருவிளையாடல்' என்பது. அற - மிகவும். மதன் - மலர் அம்புகளை உடைய மன்மதன். கணை வழங்க - மலர் அம்புகளை எய்ய. பசும்புண் - பசுமையான புண்; அப்போது தான் ஏற்பட்ட புண். அனல் கொளுத்தி - தீப்பற்றியது. அணையும் மாக்குருளை - தாய் என்று எண்ணிப் பொருந்திய பன்றிக்குட்டி களை. (35)

## கொற்றியார்

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

139. அருநாமம் அரசிவசங் கரநாம மெனக்கொண்டு
அவற்றொருநா மம்பகர்ந்தோர்க்கு அரியயன்இந் திரனாம்
பெருநாமம் கொடுத்தவர்தம் கருநாமந் துடைக்கும்
பெற்றியார் தமிழ்மதுரைக் கொற்றியார் கேளீர்
ஒருநாமம் பயந்தவர்முன் றருநாமம் வியந்திங்கு
உலகரிடு நாமமதொன் றுள்ளநீர் வெள்ளைத்
திருநாம மிட்டவன்றே கெட்டவன்றோ இளையோர்
தெரித்திடுநா மமுமுனிவோர் தரித்திடுநா மமுமே.

### தெளிவுரை

ஓதுவதற்குரிய திருப்பெயர்கள் எவை என்றால் அரசிவ சங்கர என்ற திருப்பெயர்களே எனக் கொண்டு அவற்றுள் ஒரு திருப்பெயரை ஒரு முறை உச்சரித்தவர்க்குத் திருமால் பிரமன் இந்திரன் என்னும் பெரும் பட்டப் பெயர்களைத் தந்து அவர்களின் மறுபிறப்பு என்னும் பெயரையும் ஒழித்து, முத்தியைத் தரும் தன்மையுடையவரான சொக்கநாதரின் செந்தமிழ் தழைக்கும்

மதுரையில் உள்ள கொற்றியாரே! கேட்பீர்! பெண் என்னும் ஒப்பற்ற பெயரையும் பெற்ற தாய் தந்தையர் இளமையில் இட்ட பெயரையும் உலகினர் அழகு முதலானவற்றை எண்ணி இப்போது இடும் பெயர் ஒன்றையும் உடைய நீவிர், வெண்மையான திரு நாமத்தை நெற்றியில் இட்ட அப்போதே வானவர் எனத் தெரிவிக்கும் பெரும் பெயரும் முனிவர்கள் என்று தெரிவிக்கும் பெயரும் அழிந்தன அன்றோ!

**விளக்கம்**

பிச்சை ஏற்று வரும் வைணவப் பெண் கொற்றியார். அவளை நோக்கிக் காமம் கொண்ட ஒருவன் கூறும் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது.

அரசிவ சங்கர நாமங்களை அரிய நாமம் எனக் கொண்டு என இயைக்க வேண்டும். கருநாமம் - பிறவி காரணமாக ஏற்படும் அச்சம். சிவன் - அடியார்க்கு மங்களத்தை உண்டாக்குபவன். சங்கரன் - சிவத்தைச் செய்பவன். அரி - அழிப்பவன். அயன் - திருமாலிடத்துத் தோன்றியவன்.

தேவர் நாமமும் முனிவோர் நாமமும் கெட்டது என்பது வைணவியான நின்னைக் கண்டு காதல் கொண்டு பெயரும் பெருமையும் அழிந்தனர் என்பதாம். பயந்தவர் - பெற்றோர். அவர் முன் தருநாமமாகிய ஒரு நாமம் - இயற்பெயர். உலகர் இடு நாமம் என்றார் கொற்றியார் என்பதை. இளையோர் தெரித்திடு நாமம் - இளைஞரின் ஆராய்ச்சிக்குரிய புகழ்.

இளையவரும் முதியவரும் கொற்றியாரைக் கண்டால் காமம் கொண்டு கருத்தழிவர் என்றார். (36)

## மாறுபாடு ஒழிந்தால் இறைவனைக் காணலாம்!

### நேரிசை வெண்பா

140. மும்மைத் தமிழ்க்கூடன் மூலலிங்கத்து அங்கயற்கண்
அம்மைக் கமுதாம் அருமருந்தை - வெம்மைவினைக்
கள்ளத் திருக்கோயில் காணலாம் கண்டீர்நம்
உள்ளத் திருக்கோயி லுள். (37)

**தெளிவுரை**

இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழும் வழங்கும் மதுரையில் எழுந்தருளிய முதன்மையான திருவடிவமாகிய அழகிய மீனாட்சி அம்மைக்கு அமுதம் போன்ற அரிய மருந்து போன்ற சிவனை நாம் மனம் ஆகிய அழகு பொருந்திய கோயிலில் கொடிய தீவினைக்குக் காரணமான வஞ்சனையான மாறுபாடு ஒழிந்தால் பார்க்கலாம்.

**விளக்கம்**

மூலலிங்கம் - மற்ற லிங்கங்களுக்கெல்லாம் முன் தோன்றியது. ஆதலால் மூலலிங்கம் எனப்பட்டது. மும்மைத் தமிழ் - மூன்று வகைப்பட்ட இயல் இசை நாடகம் என்ற தமிழ். அங்கயற்கண் அம்மை - மீனாட்சியம்மை. அருமருந்து - அரிய மருந்து போன்ற சிவபெருமான். கள்ளத்திருக்கோயில் - கள்ளத் திருக்கு ஒயில். திருக்கு - மாறுபாடு. கண்டீர் - முன்னிலையசை; தேற்றமுமாம். (37)

## சிவபெருமான் நடனமிடும் விதம் வியப்பு!

### கட்டளைக் கலித்துறை

141. உள்ளும் புறம்பும் கசிந்தூற்று எழநெக் குடைந்துகுதி
கொள்ளும்செந் தேறல் குனிக்கின்ற வாபத்திக் கொத்தரும்ப
விள்ளும் கமலத்தும் வேத சிரத்தும்விண் மீனைமுகந்து
அள்ளும் கொடிமதில் பொற்கூடல் வெள்ளி யரங்கத்துமே. (38)

**தெளிவுரை**

அடியவரின் உள்ளத்துள்ளும் புறமான உடம்பிலும் கனிந்து நெகிழ்ந்து உடைந்து ஊற்றுநீர் போன்று கரைந்து உருகுமாறு விளங்கும் தேன் போல் இனிய சிவபெருமான், பத்தியான மலர்க்கொத்துத் தோன்ற மலர்கின்ற தொண்டரின் உள்ளத் தாமரையிலும் வேதங்களின் முடிவிலும் வானில் விளங்கும் நாள் மீன்களை மொண்டு அள்ளிக் கொள்வது போல் உயர்ந்து விளங்கும் கொடிகள் கட்டப்பட்ட மதில்களையுடைய அழகிய மதுரையில் உள்ள வெள்ளியம்பலத்திலும் நடனமாடும் விதம் என்னே வியப்பு!

**விளக்கம்**

உள்ளும்புறம்பும் - அகத்தும் புறத்தும். ஊற்று - ஊதல். தேறல் - தேன்; சிவபெருமான். குனிக்கின்றவா - ஆடுகின்றது என்னே வியப்பு. பத்திக் கொத்து - பத்தியின் தொகுதி. வேதசிரம் - உபநிடதம். விள்ளும் கமலம் - அடியவரின் உள்ளத் தாமரை.

(38)

## மடக்கு

### கட்டளைக் கலிப்பா

142. அரங்க மையற்கு வெள்ளிய ரங்கமே
ஆல யம்பிற வெள்ளிய ரங்கமே
உரங்கொள் பல்கல னென்பர வாமையே
உணர்வு றாமையு மென்பர வாமையே
விரும்பு பாடலு மாகவி மானமே
மேவு மானமு மாகவி மானமே
திருந்து தானந் தடமதிற் கூடலே
செயற்கை வெள்ளித் தடமதிற் கூடலே. (39)

**தெளிவுரை**

சோமசுந்தரப் பெருமானுக்கு நடிக்கும் இடமும் வெள்ளி யம்பலம் ஆகும். அப்பெருமானுக்குத் திருக்கோயிலும் சிவபெரு மானைத் தவிர மற்றப் பொருளை இகழ்ந்த அடியவரின் உள்ளம் ஆகும்.

அவர் தம் திருமார்பில் அணிந்துள்ள பல அணிகள் எலும்பும், பாம்பும், ஆமையோடுமாகும். அவர் என்னை அறியா திருப்பதும் யான் சிவபெருமானை வணங்காதிருத்தலே ஆகும். அப்பெருமான் விரும்பும் பாடலும் பெருமையுடைய சிறந்த பாடல்களே ஆகும். விரும்பி வீற்றிருக்கின்ற விமானமும் வானத் தினின்று இழிந்த இந்திர விமானம் ஆகும். திருத்தமுற உள்ள இயற்கையான இடமும் பெரிய மதிலை உடைய மதுரையே ஆகும். வெள்ளி மலையில் அவர் வீற்றிருத்தல் செயற்கையான தாகும்.

**விளக்கம்**

அரங்கம் - அரங்கும் எனவும் பாடம். அரங்கம் - ஆடுதற் குரிய மன்றம். வெள்ளியரங்கம் - வெள்ளியம்பலம்; இது மதுரையில் உள்ளது. ஐயற்கு - சிவபெருமானுக்கு. பிற எள்ளியர் அங்கம் - சிவபெருமான் கோயில் என்பனவற்றைத் தவிர மற்ற வற்றை வெறுத்து இகழ்ந்தவர் உள்ளம். அங்கம் - உள்ளம்.

உரம் - வன்மை. பல்கலன் - பல அணிகள். என்பரவாமையே - என்பு + அரவு + ஆமை; எலும்பும் பாம்பும் ஆமையும் ஆகும். அங்கம் - அம் + கம் எனக் கொண்டு அழகிய சிரம் எனக் கருதிக் கொண்டு பிரமரந்திரத்தானம் என்று கொள்ளு தலும் ஒன்று.

உணர்வு உறாமையும் என்பரவாமையே - இறைவர் அறியா திருப்பதும் என் துதியாமல் உள்ள தன்மையே. அறிந்திருந்தால் அருள் செய்யாமல் இரார்.

விரும்பு பாடலும் மாகவி மானம் - விரும்பும் பாடலும் பெருமையுடைய திருஞான சம்பந்தர் முதலிய அடியவர் அருளிய பாடல்கள். மானம் மாகவி;

மேவுமானமும் மாக விமானம் - வீற்றிருக்கின்ற விமானம் வானினின்று இழிந்த இந்திர விமானம். தானம் - இருப்பிடம்.

செயற்கை வெள்ளித் தடமதிற் கூடல் - சிவபெருமான் வெள்ளி மலையில் வீற்றிருத்தல் செயற்கையாகும்.

மதுரையில் இறைவன் வீற்றிருத்தல் இயற்கை; கயிலாய மலையில் வீற்றிருத்தல் செயற்கை என மதுரையின் சிறப்பைக் கவிஞர் எடுத்தோதுகின்றார். (39)

## இனிமை விளைய நகையாடுக

### விருத்தக் கலித்துறை

143. கூடார் புரந்தீ மடுக்கின்ற தும்சென்று கும்பிட்டவோர்
ஏடார் குழற்கோதை உயிருண்ப தும்மைய ரிளமூரலே
வாடாத செங்கோல் வளர்ப்பீ ரெனக்கன்னி வளநாடெனும்
நாடாள வைத்தாளும் நகையா தினிப்போடு நகையாடவே. (40)

**தெளிவுரை**

தம்முடன் கூடாத பகைவரின் திரிபுரத்தைத் தீப் பற்றி எரியும்படி செய்ததும் தம்மை வந்து வணங்கிய இதழ்களையுடைய மலர் சூடிய கூந்தலையுடைய ஒரு பெண்ணின் உயிரைக் கவர்வதும் தலைவரான உம் சிரிப்பேயாகும். வளையாத அரசாட்சி முறைமையை நீதி தவறாது செவ்வையாய் நீவிர் வளரச் செய்வீர் என்று எண்ணி எல்லா வளங்களையும் உடைய பாண்டி வளநாடு என்ற இந்நாட்டை ஆளும்படி வைத்த தடாதகைப் பிராட்டியும் சிரிக்காமல் இனிது இருக்கும்படி சிரிப்பீராக.

**விளக்கம்**

இது செவிலிக்கூற்று. தோழியின் கூற்றுமாகும். கூடார் - பகைவர். இளமூரல் - புன்னகை. கன்னி வளநாடு - பாண்டியநாடு.

திரிபுரங்களையுடைய அசுரரின் உயிரையும் காதல் கொண்ட மகளையும் ஒரு விதமாகப் புன்சிரிப்பால் உயிர் மாய்ப்பது முறையன்று என்றாள். கோதை - பெண். நகையாட - நகையாடுக என்ற பொருளில் கூறப்பட்டது.

முன்னம் சிரித்தலால் இன்னாமை உண்டாயிற்று. இப்போது இனிமை ஏற்பட நகைக்க வேண்டும் என்றபடி. (40)

## உமக்கும் எமக்கும் பகை யாதுளது?

### கொச்சக் கலிப்பா

144. நகையே அமையும்இந்த நாகரிக நோக்கு
மிகையே அனங்கன் வினைகொளல்வீ ணன்றே
தகையோர் மதுரேசன் தண்டமிழ்நா டன்னீர்
பகையே துமக்கு நமக்கும் பகர்வீரே. (41)

### தெளிவுரை

மதுரையின் தலைவனான சிவபெருமானின் குளிர்ந்த தமிழ் வழங்கும் பாண்டிய நாட்டைப் போன்று இன்பம் அளிக்கும் பெண்ணே! புன்னகை ஒன்றே என் உயிரைக் கவர்தலுக்குப் போதுமானது! புதுமையான நின் பார்வை அதிகமே யாகும். இவ்விரண்டுமன்றி மன்மதனும் போர்ச்செயலைக் கைக் கொள்வது வீணே யாகும். இவ்வாறு என்னை வருத்துவது உமக்குத் தக்கதோ! உமக்கும் எமக்கும் யாது பகைமை உள்ளது? உரைப்பீராக!

### விளக்கம்

இது தலைவன் தலைவியை முன்னிலைப்படுத்தி உரைத்ததாகும். அமையும் - போதும். நாகரிக நோக்கு - புதுமையான நோக்கம். அனங்கன் - உருவம் அற்றவனான மன்மதன். வினை கொளல் - போர்ச் செயல் செய்தல். பகர்வீர் - கூறுவீர். ஏ - அசை. (41)

## மன்மதன் கணையால் உண்டான புண்கள்!

### கலி விருத்தம்

145. வீரம் வைத்தவில் வேள்கணை மெய்த்தன
பாரம் வைத்த பசும்புண் பசும்புணே
ஈரம் வைத்த விளமதி வெண்ணிலாக்
காரம் வைத்தென் கடம்பவ னேசனே. (42)

**தெளிவுரை**

குளிர்ச்சியுடைய இளஞ்சந்திரனின் வெண்மையான நிலவு என்ற காரத்தை என் மீது வைத்த கடம்பவனத்தில் எழுந்தருளி யுள்ள இறைவனே! வீரம் பொருந்திய விற்போரில் வல்ல மன்மதனின் கணைகள் உடலில் உள்ள பருத்த கொங்கைகளின் மீது தைத்ததனால் ஆன பசும்புண் பசும் புண்ணாகவே உள்ளது.

**விளக்கம்**

இப்பாடல் தலைவியின் கூற்று. புண்ணில் காரம் வைத்தால் ஆறும் என்பது உலகியல்பு. அங்ஙனமாகவும் நிலவாகிய காரம் வைக்க ஆறாது பச்சைப் புண்ணாகவே உள்ளது. இதன் காரணம் யாது என்கின்றாள் தலைவி.

பசும்புண் பசும்புணே - புண் ஆறாமலே உள்ளது என்பது கருத்து.

காரம் - மதியின் நிலவான காரம். வேள் - மன்மதன். வீரம் வைத்த - வீரம் பொருந்திய; என்மீது கரு வைத்த என்பதுமாம்.

(42)

## உம் கொன்றை மாலை யாருக்கென இருக்கின்றதோ!

எழுசீர்ச்சந்த விருத்தம்

146. கடங்கால் பொருப்பொன் றிடும்போர் வைசுற்றும்
கடம்பா டவிச்சுந் தரரேநும்
தடந்தோள் குறித்திங்கு அணைந்தே மெனில்பின்
தரும்பே றுன்மத்தின் பெருவாழ்வோ
தொடர்ந்தே யுடற்றிந் திரன்சா பமுற்றும்
துரந்தா லுமிப்பெண் பழிபோமோ
அடைந்தே மிடைக்கொன் றையந்தா ரெவர்க்கென்று
அமைந்தே கிடக்கின் றதுதானே. (43)

### தெளிவுரை

மதநீரைப் பொழியும் மலையாகிய யானை ஒன்று தந்த தோலான போர்வையை அணிந்துள்ள கடம்ப வனத்தில் வீற்றிருக் கின்ற சோமசுந்தர இறைவரே! உம் பெருந்திருத் தோள்களைத் தழுவுகின்றதை எண்ணி இங்கு உம்மிடம் நாம் வந்து சேர்ந்தோ மானால், நாங்கள் வந்து சேர்ந்த பின்பு எங்களுக்கு நீர் கொடுக்கும் பேறு பித்துடைய பெரிய வாழ்க்கை தானோ! தொடர்ந்து வந்து வருத்தும் இந்திரனின் குற்றத்தை நீர் ஒழித்தவரே. ஆனாலும் பெண் கொலையால் ஆன இந்தப் பழி உம்மை விட்டு ஒழியுமோ! உம் அழகிய கொன்றைப் பூமாலை உம்மை அடைந்த எங்களுக்கு அன்றிப் பின்பு யாருக்கு என்று இருக்கின்றதோ?

### விளக்கம்

கடம்கால் - மதநீரைப் பொழியும். பொருப்பு ஒன்று - மலை ஒன்று. சுற்றும் - அணிந்துள்ள. கடம்பாடவி - கடம்பவனம்; மதுரை. சுந்தரரே - சோமசுந்தரக் கடவுளே. தடந் தோள் குறித்து - உம் பெரிய தோளைத் தழுவிட எண்ணி. உன்மத்தின் பெருவாழ்வு - மயக்கம் கொண்ட பெருவாழ்வு. ஊமத்தை மலரைப் போல் ஒன்றுக்கும் உதவாத வாழ்வு என்பது வேறு பொருள். யாம் விழைவது கொன்றை மலர் மாலையாய் இருக்க, நீர் அளிப்பது

இழிந்த ஊமத்த மலர் மாலையோ என்பது வேறு குறிப்புப் பொருள். இந்திரன் சாபம் - இந்திரன் பழி. அடைந்தேமிடை - அடைந்த எங்களுக்குள்.

இப்பாடல் தலைவி தலைவனை நோக்கி உரைத்தது.

உன்மத்து என்பது உன்மத்தம் ஆகும். இது மன்மத அவத்தைகளுள் ஒன்று. பின் தரும்பேறு உன்மத்தின் பெருவாழ்வோ என்பதற்கு நீவிர் எமக்கு இறந்த பின்பு தரும் பாக்கியம் உனது பித்தை யாமும் அடையச் செய்யும் சாரூபப் பதவியான பெரு வாழ்க்கையோ என்றும் பொருள் கொள்ளலாம். சாரூபம் - இறைவனைப் போன்ற வடிவம்; இங்குச் சிவபெருமானின் பித்துடைய வாழ்வைக் குறித்து நின்றது.

இந்திரன் பழி தீர்த்தது: இந்திரன் விருத்திராசுரனைக் கொன்றான். அதனால் அவனைப் பழிவந்து அடைய, அவன் சோமசுந்தரப் பெருமானை வணங்கப் பழி நீங்கப் பெற்றது.

இந்திரனின் பழி நீங்கினாலும் பெண்ணான தன் விரக வேதனையால் ஏற்படும் கொலைப்பழி நீங்காது என்பது குறிப்பு.

(43)

## மதுரையின் சிறப்பு

### <u>ஊர்</u>

### அறுசீர்ச்சந்த விருத்தம்

147. தான வெங்களி றோடும் இந்திரன் சாபமும்தொலையா
மேனி தந்தகல் யாண சுந்தரர் மேவு வண்பதியாம்
வானி மிர்ந்திட வாடு மொண்கொடி வால சந்திரனும்
கூனி மிர்ந்திட வேநிமிர்ந்திடு கூட லம்பதியே. (44)

**தெளிவுரை**

மதநீரையுடைய கொடிய ஐராவத யானையினது சாபத்துடன் இந்திரனின் சாபத்தையும் தீர்த்து நல்ல வடிவத்தைத் தந்த

கலியாண சுந்தரர் உள்ளம் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற வளம் பொருந்திய இடம், மேல் உலகத்தை நெருங்கி ஆடும் ஒளி பொருந்திய கொடிகள் இளமதியும் தேய்ந்து தன் வடிவத்தின் வளைவு மாறும்படியாய் உயர்ந்துள்ள அழகுடைய மதுரை நகரமாகும்.

**விளக்கம்**

தானம் - மதநீர். வெங்களிறு - கொடிய யானை. இந்திரன் சாபம் - இந்திரனுக்கு விருத்திராசுரனைக் கொன்றதால் ஏற்பட்ட பழி. தொலையா - போக்கி; ‘செய்யா’ என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வான் - மேல் உலகம். வால சந்திரன் - இளஞ்சந்திரன். கூன் நிமிர்ந்து - திங்கள் கலை நிறைந்து வளைவு மாறும்படி.

மேனிதந்த - இந்திரனுக்குத் தெய்வ ஒளியுடைய மேனியைத் தந்த. ஐராவதத்துக்குக் காட்டானை என்ற வடிவத்தை நீக்கி முன்னைய வடிவத்தை இறைவர் அளித்தார். ஐராவதம் என்ற யானை காட்டானையாய் ஆகும்படி துருவாச முனிவர் சபித்தார். அதனைச் சோமசுந்தரப் பெருமான் நீக்கியருளினார். இதனை இந்நூல் 18ஆம் செய்யுளால் அறிக. (44)

## தலைவன் குறிப்பறிதல்

### கைக்கிளை

மருட்பா

148. அஞ்சேல் மடநெஞ் சபிடேகச் சொக்கரருள்
செஞ்சே வடிக்கடிமை செய்யார்போல் - துஞ்சா
எறிதிரைக் கருங்கடல் ஏய்க்கும்
அறலியல் கூந்தற் காடமர்க் கண்ணே. (45)

**தெளிவுரை**

அறியாமையுடைய என்மனமே! சொக்கலிங்கப் பெருமான் அடியார்க்கு வீட்டின்பத்தைத் தந்தருளுகின்ற அழகிய சிவந்த அடிகளுக்கு அடிமை பூண்டு ஒழுகாதவரைப் போன்று ஒரு நிலையில் நில்லாது அஞ்சாதே! கரிய மணல் போன்ற கூந்தலை யுடைய இம்மங்கைக்கு அசையும் போர் செய்கின்ற கண்கள் மோதும் அலைகளை யுடைய கரிய கடலைப் போன்றதாகும்.

**விளக்கம்**

இப்பாடல் கைக்கிளையைச் சார்ந்த உட்கோள் என்ற துறையாகும். தலைவியின் பார்வையால் அவளது உடன்பாட்டை அறிந்து மகிழ்தல் பயனாகும். அபிடேகச் சொக்கர் - திருமுடியைச் சூடிய சொக்கலிங்கப் பெருமான். அடிமை செய்யார் - தொண்டைச் செய்யாதவர். எறிதிரை - வீசும் அலை. அறல் இயல் கூந்தற்கு - கரிய மணல் போன்ற கூந்தலையுடையவளுக்கு. கூந்தல் - சினை ஆகு பெயர்.

கண்களால் பொது நோக்கு ஆகிய மருட்பார்வையையும் காதல் நோக்கு ஆகிய அருட்பார்வையையும் தருதலால் நஞ்சையும் அமுதத்தையும் தந்த கடலை ஒக்கும் என்றதால், தலைவன் தலைவியின் குறிப்பை அறிந்து நெஞ்சிற்கு உணர்த்தியது. இது தலைவன் தலைவியருள் ஒருவர் மனக்கருத்தை ஒருவர் அறியாத செயலான ஒருதலைக் காமம் ஆதலால் கைக்கிளை ஆயிற்று. (45)

## என் மகள் துன்பத்தைப் போக்குவாய்!

### கட்டளைக் கலித்துறை

*செவிலி கூற்று*

149. கண்முத் தரும்பின கொங்கைபொன் பூத்த கனிபவளத்து
ஒண்முத் தரும்புமென் பெண்முத்துக் கேமுத்த முண்டிமயத்
தண்முத் தமைந்த தமனிய மேதலைச் சங்கம்பொங்கும்
பண்முத் தமிழ்க்கொர் பயனே சவுந்தர பாண்டியனே. (46)

### தெளிவுரை

இமய மலையில் தோன்றிய குளிர்ந்த முத்துப் போன்ற உமையம்மையார் ஒரு பக்கத்தில் பொருந்தப் பெற்ற பொன் போன்றவனே! முதல் சங்கத்தில் சிறந்த பண் அமைந்த மூவகைத் தமிழுக்கும் பொருளாக உள்ளவனே! சவுந்தர பாண்டியனே! கண்கள் கண்ணீர் துளிக்கப் பெற்றன. கொங்கைகள் பசலை நிறம் கொள்ளப் பெற்றன. கனிந்த பவளம் போன்ற வாயில் ஒளியுடைய முத்தைப் போல் பற்கள் பொருந்திய என் மகளுக்கு உன்னை விட்டுப் பிரிந்திருத்தலே ஏற்பட்டுள்ளது.

### விளக்கம்

நீ விரைவில் வந்து இவளை அணைந்து இவள் உற்ற துன்பத்தைப் போக்க வேண்டும் என்று செவிலி சோமசுந்தரப் பெருமானை நோக்கிக் கூறுகின்றாள். இமயம் - இமயமலை. தமனியமே - பொன் போன்றவளே; உவமை ஆகுபெயர். கண் முத்து அரும்பின - கண்கள் முத்துக்களைப் போல் கண்ணீர் சிந்தின. கொங்கை பொன் பூத்தன - பொன் போன்ற பசலை கொங்கையில் ஏற்பட்டது. பசலை என்பது தலைவனைப் பிரிந்த தலைவிக்கு உண்டாகும் நிற வேறுபாடு. பெண் முத்து - பெண்ணான முத்துப் போன்றவளுக்கு! முத்தமே உண்டு - நின்னை விட்டுப் பிரிந்திருத்தலே உண்டு. பவளம் - பவளம் போன்ற வாய். (46)

## என் மகள் துன்பத்தைப் பொறுத்துக் கொள்வாளோ!

### பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*செவிலித்தாய் கூற்று*

150. பாணறா மழலைச் சீறியாழ் மதுரப்
பாடற்குத் தோடுவார் காதும்
பனிமதிக் கொழுந்துக் கவிர்சடைப் பொதும்பும்
பாலித்தாய் பாட்டளி குழைக்கும்

கோணறா வுளைப்பூங் கொத்தலர் குடுமிக்
குறுங்கணெட் டிலைச்சிலை குனித்த
கூற்றுயிர் குடித்தாய்க் காற்றலா மலதென்
கொடியிடைக் காற்றுமா றுளதோ
சேணறாப் பசும்பொன் தசும்பசும் பிருக்கும்
சிகரியிற் றகரநா றைம்பால்
சேயரிக் கருங்கண் பசுங்கொடி நுடங்கும்
செவ்வியிற் சிறைமயி லகவத்
தூணறா முழவுத் தோள்மடித் தும்பர்
சுவல்பிடித் தணந்துபார்த் துணங்கும்
தோரண மாடக் கூடலில் சோம
சுந்தரா சந்த்ரசே கரனே. (47)

**தெளிவுரை**

(அடி3) உயர்ச்சி நீங்காத பசும் பொன்னால் ஆன கலசம் நெகிழ்ந்துள்ள மலை போன்ற மேன் மாளிகை மீது தோகையை விரித்த மயில்கள் தகரமான மயிர்ச் சாந்து மணம் கமழும் கூந்தலை யுடைய சிவந்த வரிகள் பொருந்திய கண்களையுடைய பசுமை யான கொடி போன்ற ஒரு மடந்தை அசைந்தாடும் தன்மை போல் கூத்தாடும், கூத்தாட

(அடி4) அந்த நடனத்தைத் தூணின் தன்மை நீங்காத மத்தளம் போல் திரண்டு உருண்ட தோளை மடித்து வைத்துப் பிடரியைக் கையால் தாங்கி அண்ணாந்து நோக்கி வருவதற்குக் காரணமான தோரணங்களால் அமையப் பெற்ற மாளிகைகளை யுடைய மதுரைப் பதியில் வீற்றிருக்கின்ற சோமசுந்தரப் பெருமானே! சந்திர சேகரனே!

(அடி1) இசை நீங்காத மழலைமொழி போன்ற சிறிய வீணையின் இசையுடன் கூடிய பாடலுக்குத் தோடு அணிந்த நீண்ட செவியும் குளிர்ந்த இளம்பிறைக்கு விளங்கும் சடையின் பொந்தையும் கொடுத்தருளியவன், பாடும் வண்டுகளால் வளைக்கப்படும்

(அடி2) வளைவு நீங்காத மேலே தூய்மையுடைய பூங்கொத்து மலர்ந்த உச்சியையும் சிறிய கணுக்களையும் நீண்ட இலைகளையும் உடைய கரும்பாகிய வில்லை வளைத்த கூற்றுவன் போன்ற காமனின் உயிரை உண்டவன் ஆகிய உனக்குப் பொறுத்திருக்கக் கூடுமே அல்லாது என் மகளான பூங்கொடி போன்ற இடையையுடைய இவளுக்குப் பொறுத்திருத்தல் கூடுமோ!

**விளக்கம்**

இது செவிலித் தாய் கூற்று. சோம சுந்தரரைப் பார்த்துக் கூறியது.

(அடி1) பாண் அறா - பாட்டு நீங்கப் பெறாத. சீறியாழ் - சிறிய யாழ். யாழில் ஒருவகை. மதுரப் பாடற்கு - இனிய பாடலுக்கு. தோடு - காதணி. வார் காது - நீண்ட காது. பனிமதி - குளிர்ந்த சந்திரன். பொதும்பு - பொந்து. அளி - வண்டு.

(அடி2) கோண் - வளைவு. உளைப்பூ - மேலில் துய்யினை உடைய பூக்கள். சிலை - வில். குனித்த - வளைத்த. கூற்று உயிர் குடித்தாய்க்கு - இயமனின் உயிரைப் பருகியவர்க்கு. நெட்டிலைச் சிலை - நீண்ட இலையையுடைய கரும்பாகிய வில். கூற்று - இயமன். மன்மதனின் உயிரைப் போக்கிய நினக்குப் பிரிவுத் துன்பத்தைப் பொறுத்தல் எளிதாகும். கொடியிடை - தலைவி.

(அடி3) சேண் அறா - உயர்ச்சி நீங்காத. சிகரி - கோபுரம். தகரம் - மயிர்ச்சாந்து. ஐம்பால் - ஐந்து வகையாகப் பின்னி முடிக்கப்படும் கூந்தல். சேய் அரி - சிவந்த வரிகள். பசுங்கொடி - பசுமையான பூங்கொடி போன்ற மகளிர். செவ்வியின் - அழகுடன். சிறைமயில் - இறகுகளையுடைய மயில். அகவ - ஆட.

(அடி4) தோள்மடித்து - தோளை மடித்து; உயரம் அதிக மானதால் தோளை மடித்து அண்ணாந்து பார்த்தனர் தேவர். உம்பர் - தேவர். சுவல் - பின்கழுத்து. அணந்து பார்த்து - அண்ணாந்து பார்த்து.

இறைவன் தம் செவிகளில் வீணை இசையைக் கேட்பவர்; தலையில் சந்திரனை அணிந்தவர். அவரால் பிரிவுத்துன்பத்தைப் பொறுக்க முடியும். ஆயின் என் மகளுக்குத் துன்பத்தைப் பொறுத்தல் கூடுமோ என்று செவிலித்தாய் வினவுகின்றாள். கந்தருவர் இருவர் - கம்பளர் அசுவதரர் எனபவர் இறைவரின் காதுகளில் இருந்து இசை பாடிய வண்ணம் உள்ளனர். இருவர் - தும்புருவும் நாரதருமாம். (47)

## கூத்தை அருளல் வேண்டும்

### நேரிசை யாசிரியப்பா

151. கரும்பொறிச் சுரும்பர் செவ்வழி பாடச்
சேயிதழ் விரிக்கும் பொற்பொகுட்டு அம்புயம்
பாண்மகற் கலர்பொற் பலகை நீட்டும்
கடவுள்செங் கைக்குப் படியெடுப் பேய்க்கும்.
5 தடமலர்ப் பொய்கைத் தண்தமிழ்க் கூடல்

ஒண்ணுதல் தழீஇய கண்ணுதல் கடவுள்
எண்மர் புறந்தரூஉ மொண்பெருந் திகைக்குத்
தூய்மைசெய் தாங்குப் பானிலா விரிந்த
இரசதங் குயின்ற திருமா மன்றகம்
10 பொன்மலை கிடப்ப வெள்ளிவெற்பு உகந்தாய்க்குச்

செம்பொன் மன்றினும் சிறந்தன் றாயினும்
கருந்தாது குயின்றவென் கல்நெஞ் சகத்தும்
வருந்தியும் வழங்கல் வேண்டும்
இருவேறு அமைந்தநின் னொருபெருங் கூத்தே. (48)

### தெளிவுரை

கருமையான புள்ளிகளையுடைய வண்டுகள் செவ்வழி என்ற பண்ணைப் பாடச் செம்மையான இதழினை மலர்த்துகின்ற கொட்டையை உடைய பொன் தாமரை மலரானது ஒரு பாணனுக்குப் பொற்பலகையை நீட்டி அளித்தார் சோமசுந்தரக்

கடவுள். அக்கடவுளின் சிவந்த ஒரு கைக்கு உவமையாகக் கூறுவதைப் போல் விளங்கும் பெரிய மலர்களையுடைய பொற்றாமரைக் குளத்தையுடைய குளிர்ந்த தமிழ் வழங்கும் மதுரையில் எழுந்தருளியுள்ள மீனாட்சியம்மையைத் தழுவிய நெற்றிக்கண்ணையுடைய இறைவ!

எட்டுத் திக்குப் பாலகர்களால் பாதுகாக்கப்படும் ஒள்ளிய எட்டுத் திசைகளுக்கும் தூய்மையைச் செய்ததைப் போன்று பால் போன்று வெள்ளிய நிலவைப் போல் அருளி, வெள்ளியால் ஆன அழகிய பெரிய அம்பலத்தின் இடம், பொன் மலையான மேரு மலை உரியதாய் விளங்கவும் வெள்ளி மலையான கயிலாயத்தை விரும்பி நல்ல இருப்பிடமாய்க் கொண்டுள்ளீர். இத்தகைய நுமக்குச் சிவந்த பொன்னம்பலத்திலும் என் இரும்பைப் போன்ற வலிய உள்ளத்திலும், வெவ்வேறு வகையான ஆண் உருவமும் பெண் உருவமும் என்னும் இரண்டு வடிவமும் அமைந்த உன் ஒப்பில்லாத திருக்கூத்தினை வருத்தப்பட்டாயினும் செய்தருளல் வேண்டும்.

**விளக்கம்**

இறைவர்க்குச் சிறந்த மேரு மலையான பொன்மலையும் பொன்னம்பலமும் உரியவாய் விளங்க, அவற்றை விடுத்து, வெள்ளி மலையான கயிலாயத்தையும் வெள்ளியம்பலத்தையும் சிறந்தனவாய்க் கொண்டது போல் எவற்றையும் விட இழிந்த என் இரும்பைப் போன்ற மனத்திலும் எழுந்தருளி நடமிடல் வேண்டும் என வேண்டுகின்றார்.

சுரும்பு பாடுதல் பாணன் பாடுதலுக்கு உவமை. தாமரை மலர்க்குச் சிவபெருமான் திருக்கை உவமை. செவ்வழி - ஒருபண். பாண் மகன் என்றது பாண பத்திரனை. படிஎடுப்பு - ஒப்பான ஒரு பொருளை எடுத்தல்.

கடவுள் - கடவுளே; விளி.

தடமலர்ப் பொய்கை - பெரிய மலர்கள் மலர்ந்துள்ள நீர்நிலை. ஒண்ணுதல் - ஒளியுடைய நெற்றியை உடைய உமை

அம்மையார்; அன்மொழித் தொகை. தழீஇய - தழுவிய. எண்மர் - அட்டதிக்குப் பாலகர்; எட்டுப்பேர். புறந்தரூஉம் - காவல் செய்யும்.

பானிலா - பால் போன்ற நிலவு ஒளி. இரசதம் - வெள்ளி. குயின்ற - பொருந்திய. திருமாமன்றம் - மதுரையில் உள்ள வெள்ளியம்பலம். பொன்னம்பலம் - தில்லையில் உள்ளது. பொன் மலை - பொன்மயமான மேரு மலை. உகந்தாய்க்கு - விரும்பிய நினக்கு.

கருந்தாது குயின்ற - இரும்பால் ஆன. கருந்தாது - இரும்பு. சிறந்தன்று - சிறந்தது. இருவேறு அமைந்த கூத்து என்றது இயல்பாய் ஆடிய கூத்தும் கால்மாறி ஆடிய கூத்தும். வழங்கல் வேண்டும் - யாம் காண ஆடியருள வேண்டும்.

சோமசுந்தரக் கடவுள் தம்மை வழிபட்ட பாணபத்திரனுக்குப் பொற்பலகையை அளித்தார். (48)

## கூற்றுவனே, எம்மை விட்டுப் போ!

### நேரிசை வெண்பா

152. தேத்தந்த கொன்றையான் தெய்வத் தமிழ்க்கூடல்
மாத்தந்த வேழ மதமடங்க - மீத்தந்த
மாகவி மானம் வணங்கினமாற் கூற்றெமைவிட்டு
ஏகுஅவி மானமுனக் கேன். (49)

### தெளிவுரை

தேனைப் பொழிகின்ற கொன்றை மலர் மாலையையுடைய சிவபெருமானின் தெய்வத் தன்மையுடைய தமிழ் வழங்கும் மதுரையில் உள்ள, பெரிய கொம்புகளையுடைய எட்டு யானைகள் தம் மதநீர் ஒடுங்கும்படி மேற்கொண்டு சுமந்த பெரிய வான் உலகத்தினின்று இழிந்த இந்திரவிமானத்தை நாம் வணங்கினோம். ஆதலால், இயமனே, எம்மைக் கைவிட்டுப் போவாயாக! உனக்குச் செருக்கு ஏன்?

**விளக்கம்**

தேத்தந்த - தேன் + தந்த; தேனைச் சிந்தும். கொன்றையான் - கொன்றை மாலையைச் சூடியவன். மாத்தந்த வேழம் - மா + தந்தம் + வேழம்; பெரிய கொம்புகளையுடைய யானை. எட்டு யானைகள் தம் மதம் ஒடுங்குமாறு இந்திர விமானத்தைச் சுமக்கின்றன. அதில் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியுள்ளார். அவரை வணங்கினோம். ஆதலால் எம்மை விட்டு எமனே செல்வாயாக என்றார்.

இந்திர விமானம்: இது பற்றிய குறிப்பைச் செய்யுள் 18ல் காண்க. (49)

## இறைவரின் கொடைத்தன்மை!

### கட்டளைக் கலித்துறை

153. ஏனின் றிரங்குதி யேழைநெஞ் சேவண்டு இமிர்கடப்பங்
கானின் றதுவுமொர் கற்பக மேஅந்தக் கற்பகத்தின்
பானின்ற பச்சைப் பசுங்கொடி யேமுற்றும் பாலிக்குமால்
தேனின்ற ஐந்தருச் சிந்தா மணியொடத் தேனுவுமே. (50)

**தெளிவுரை**

அறிவற்ற என் நெஞ்சே! எதனால் நீ கவலை அடை கின்றாய்? வண்டுகள் ஒலிக்கின்ற கடம்பவனத்தில் நிற்பதும் ஒரு கற்பக மரம் ஆகும். அந்தக் கற்பக மரத்தின் ஒரு பக்கத்தில் பொருந்திய இளம் பசுமை வண்ணம் கொண்ட கொடியைப் போன்ற உமையம்மையே! தேன் பொருந்திய ஐந்து மரங்களையும் சிந்தாமணியையும் காமதேனுபசுவையும் ஆகிய யாவற்றையும் அடியார்க்குக் கொடுத்தருளுவான்!

**விளக்கம்**

இரங்குதி - இரங்குகின்றாய். ஏழை நெஞ்சே - அறிவற்ற நெஞ்சே! வண்டு இமிர் - வண்டுகள் ஒலிக்கும். கடப்பங்கான் -

கடம்பு + கான்; கடம்பவனம். கற்பக மரம் - சோமசுந்தரப் பெருமான். பசுங்கொடி - உமையம்மையார். ஐந்தரு - கற்பகம் முதலிய ஐந்து மரங்கள். பாலிக்குமால் - அருள் செய்யும். சிந்தா மணி - வான் உலகில் உள்ள மணி; வேண்டியவர்க்கு வேண்டிய வற்றை எல்லாம் அளிக்கும் தன்மையுடையது. தேனு - காமதேனு என்ற பசு; இதுவும் வேண்டியவர் வேண்டியவற்றை யெல்லாம் அளிக்கும். (50)

## நின் மாறி ஆடும் வல்லமை நின் அடியார்க்கும் வருமோ!

### பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

154. தேன றாதசி லைக்க ரும்புகொ
லைக்க ரும்பொரு வேம்பெனும்
தேம்பு யத்தணி வேம்பி னைக்கனி
தீங்க ரும்பெனு மிவ்வனம்
மான றாதம ழைக்க ணங்கையு
மாறி யாடத் தொடங்குமால்
மாறி யாடுநின் வல்ல பந்தொழவந்த
பேர்க் கும்வ ருங்கொலோ
கான றாதசு ருப்பு நாண்கொள்
கருப்பு வில்லியைக் காய்ந்தநாள்
கைப்ப தாகை கவர்ந்து கொண்டதொர்
காட்சியென்ன வெடுப்பதோர்
மீன றாதவ டற்ப தாகைவி
டைப்ப தாகையு டன்கொளும்
வீர சுந்தர மாற மாறடும்
வெள்ளியம்பல வாணனே. (51)

#### தெளிவுரை

நறுமணம் நீங்காத வண்டுகளின் ஒழுங்காகிய வில் நாணியைக் கொண்ட கரும்பு வில்லையுடையவன் மன்மதன்.

அவனைச் சினந்து எரித்த காலத்தில் அவனது கையில் உள்ள மீனக் கொடியைத் தான் கவர்ந்து கொண்டது போன்று உயர எடுக்கப்படுவதான ஒரு மீன் நீங்காத வன்மை பொருந்திய கொடியைக் காளைக் கொடியுடன் கொண்ட வீரம் உடைய சுந்தர பாண்டியரே! பகைவரை அழிக்கும் வெள்ளி அம்பலவாணனே! இனிமை நீங்காத மன்மதன் வில்லாகப் பயன்படும் வயலில் தோன்றிய கரும்பை மிகவும் கசப்புடையது வேம்பு என்று (இவள்) சொல்வாள்.

நின் அழகுத் தோளில் அணிந்திருக்கின்ற வேப்பம்பூ மாலையை மிக இனிமை தருதலால் மிகவும் இனிமையுடைய கரும்பு என்பாள். இங்ஙனம் மான் பார்வையின் தன்மை நீங்காத மழைபோல் குளிர்ந்த விழிகளையுடைய இம்மகளும் மாறி உரையாடத் தொடங்குவாள். மாறி ஆடும் நின் வல்லமை உன்னை வணங்குபவர்க்கும் வருமோ!

**விளக்கம்**

இது செவிலித் தாயின் கூற்று.

தேன் அறாத - இனிமை நீங்காத. கொலைக் கரும்பு - கொல்லும் தொழில் செய்வதற்குத் தோன்றிய கரும்பு. வேம்பு எனும் - வெறுப்பாள்; கசப்புடையது என்பாள். தேம்புயத்தணி வேம்பு - சிவபெருமான் சுந்தர பாண்டியரான காலத்தில் தோள் களில் அணிந்த வேப்பமாலை. கனி தீங்கரும்பு எனும் - இனிமை மிக்க என்று விரும்புவாள். மானம் அறாத கண், மழைக்கண் எனக் கூட்டுக. மான் - மான் கண்ணின் தன்மை. மாறியாட - இயல்புக்கு மாறாகப் பேச. வல்லபம் - வல்லமை.

கான் அறாத - நறுமணம் நீங்காத. சுருப்பு - சுரும்பு என்பது விகாரப்பட்டது; வண்டு. நாண் - வில்லின் நாண். மன்மதன் வில்லுக்கு நாண் கயிறாக உள்ளது வண்டுகள். கருப்பு வில்லி - மன்மதன். காய்ந்த நாள் - எரித்த போது. கைப்பதாகை - கையில் எடுத்த கொடி. ஒருவர் மற்றவரை வென்ற போது அவர் கொடியைப் பறித்துக் கொள்வது மரபு. சுந்தர மாற - சோம சுந்தரப் பாண்டியரே.

கொலை - 'கொல்லை' என்பதன் விகாரம்; வயல். ஆடல் - கூத்தாடுதல். (51)

## நடுவுநிலைமை அல்லாத தன்மை எப்படி வந்தது?

### வேறு

155. வாணிலாப் பரப்பு மகுடகோ டீரம்
மறிபுனல் கங்கைநங் கைக்கும்
வையம்ஈன் றளித்த மரகதக் கொடிக்குன்
வாமபா கமும்வழங் கினையால்
பூணுலாம் களபப் புணர்முலை யிவட்குன்
பொற்புயம் வழங்கலை எமர்போற்
பொதுவினின் றாய்க்கு நடுவின்மை யிடையே
புகுந்தவா றுஎன்கொலோ புகலாய்
தூணுலாம் பசும்பொன் தோரண முகப்பிற்
சூளிகை நெற்றிநின்று இறங்கும்
சுரிமுகக் குடக்கூன் வலம்புரிச் சங்கம்
தோன்றலு மூன்றுநாள் நிரம்பா
நீணிலா வெனக்கொண் டணங்கனார் வளைக்கை
நெட்டிதழ்க் கமலங்கண் முகிழ்க்கும்
நீடுநான் மாடக் கூடலில் பொலியும்
நிமலனே மதுரைநா யகனே. (52)

### தெளிவுரை

(அடி3) தூண்கள் பொருந்தியுள்ள பசும் பொன்னால் ஆன தோரணம் கட்டப்பட்ட தலை வாயிலின் முன் இடத்தில் மேல் மாடத்தின் நுனியினின்றும் இறங்கி வரும் சுரிந்த முகத்தையுடைய குடம் போன்று பருத்த பின்பக்கம் வளைந்துள்ள வலம்புரிச் சங்கானது, காணப்பட்ட அளவில் அச்சங்கை மூன்று நாள் நிரம்பாத

(அடி4) இனி நீண்டு வளரும் தன்மை கொண்ட மூன்றாம் பிறைமதியாகும் என்று பிழைபட எண்ணித் தெய்வப் பெண்

போன்ற இளமகளிரின் வளையல் அணிந்த கைகள் என்னும் நீண்ட இதழ்களை யுடைய தாமரைப் பூக்கள் குவிகின்ற நான்மாடக் கூடலான மதுரையில் எழுந்தருளியிருப்பவனே! மதுரையின் தலைவனே!

(அடி1) ஒளியுடைய நிலவைப் பரப்பும் திருமுடியின் சடையை அலை மடங்கும் நீரையுடைய கங்கைக்கும், உலகங்களை எல்லாம் ஈன்ற உமையம்மைக்கு நின் இடப் பாகத்தையும் தந்தருளினாய்.

(அடி2) அணிகளை அணிந்த கலவைச் சாந்து பூசப் பெற்ற நெருங்கிய கொங்கைகளை யுடைய இவளுக்கு நின் அழகிய தோள்களை வழங்கவில்லை. எம்மவர் போன்று யாவர்க்கும் பொதுவாக நின்ற உனக்கு நடுவிலே நடுநிலைமை அல்லாத தன்மை சேர்ந்த விதம் ஏதோ கூறுவாய்!

**விளக்கம்**

(அடி1) மகுட கோடீரம் - முடியாய் அமைந்திருக்கும் சடை. வாணிலா - வாள் + நிலா; ஒளியுடைய நிலவு. கங்கை நங்கை - கங்கையான மடந்தை. வையம் ஈன்று அளித்த - உலகங்களை யெல்லாம் பெற்ற. மரகதக் கொடி - மரகதக் கொடி போன்ற பசிய நிறம் உடைய உமையம்மையார். வாம பாகம் - இடப்பாகம். வழங்கினையால் - அளித்தாய்; ஆல் அசைநிலை.

(அடி2) பூண் உலாம் - அணிகளை அணிந்த. களபம் - நறுமணக் கலவைச் சாந்து. பொற்புயம் - அழகிய தோள். தோளில் எவரும் இல்லையே! அதனால் அதனை இவளுக்கு வழங்கலாமே என்பது குறிப்பு. பொதுவின் நின்றாய்க்கு - வெள்ளியம்பலத்தில் நின்ற உனக்கு; நடுவு நிலையில் நின்ற உனக்கு என்பது வேறு பொருள். நடுவின்மை - நடுநிலைமை இல்லாமை; இடை இல்லாமை என்ற வேறு பொருளும் கொள்ளலாம். புகுந்தவாறு - உண்டான விதம்.

(அடி3) தூண் உலாம் - தூண்கள் பொருந்திய. சூளிகை - மேல் மாடம்; உச்சிமாடம். முகப்பு - வாயில். நெற்றி நின்று

இறங்கும் - உச்சியினின்று இறங்குகின்ற. சுரிமுகக் குடக்கூன் வலம்புரிச் சங்கம் - சுரிந்த முகத்தையுடைய குடம் போனற வளைவான வலம்புரிச்சங்கு

(அடி4) அணங்கனார் - தெய்வ மங்கையரைப் போன்றவர்.

(3-4) பிறையைக் கண்டு கமலம் - தாமரை - குவிதல் இயல்பு. ஆதலால் கைக்கமலங்கள் முகிழ்க்க என்றார். கன்னி மகளிர் பிறைச் சந்திரனை வணங்குதல் மரபு.

இறைவ, நின்னை அடைந்த ஒருத்திக்குச் சடையையும், மற்றொருத்திக்கு இடப்பாகத்தையும் தந்தாய். இத்தகைய நீ இவளுக்குத் தோளைத் தராதிருப்பது நடுவு நிலைமை ஆகாது என்றாள் செவிலித்தாய். (52)

## சிவபெருமான் ஏற்கும் பிச்சை

### கட்டளைக் கலிப்பா

156. மதும லர்க்குழ லீர்பிச்சை என்றுநம்
மனைதொ றும்திரி வார்பிச்சை யிட்டபோது
அதிலொர் பிச்சையும் கொள்ளார்கொள் கின்றதிங்கு
அறிவு நாணுநம் மாவியு மேகொலாம்
பதும நாறும் பலிக்கலத் தூற்றிய
பச்சி ரத்தம் பழஞ்சோ றெனிற்பினைப்
புதிய துந்நம் முயிர்ப்பலி யேயன்றோ
பூவை பால்கொள் புழுகுநெய்ச் சொக்கர்க்கே. (53)

### தெளிவுரை

'தேன் பொருந்திய மலர்களைச் சூடிய கூந்தலை உடையவளே! எனக்கும் பிச்சை இடுவாயாக!' என்று கூறிக் கொண்டு நம் வீடுகள் தோறும் அலைகின்றவர் சிவபெருமான். அவர்க்குப் பிச்சையிட்டபோது அந்தப் பிச்சை ஒட்டில் பிச்சையை ஏற்றுக் கொள்வதில்லை. இப்போது அவர் வாங்கிக் கொள்வது நம்

அறிவையும் நாணத்தையும் உயிரையும் போலும். உமை யம்மையை இடப்பாகத்தில் கொண்ட புழுகு நெய்ச் சொக்கன் என்ற பெயரையுடைய சோமசுந்தரர்க்குத் தாமரை மலரில் தோன்றிய நான்முகனின் தலையான பிச்சைப் பாத்திரத்தில் முன்னே சொரிந்த திருமாலின் இரத்தம் பழைய உணவு என்றால் பின்னர்ப் புதிய உணவும் நம்முடைய உயிர் என்ற பிச்சை அன்றோ!

**விளக்கம்**

இச்செய்யுள் சொக்கப் பெருமானின் பிச்சாடனத் திருவிழா நிகழும் போது அத்திருக் கோலத்தின் தோற்றத்தைப் பார்த்துக் காதல் கொண்ட ஒரு மடந்தை தான் தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

குழலாய் - கூந்தலை யுடையவளே. திரிவார் - சிவன். ஓர் பிச்சையும் - சிறிது பிச்சையிடப்பட்ட பொருளையும். கொள் கின்றது - பிச்சையாகப் பெற்றுக் கொள்வது. பதுமம் நாறும் - தாமரை மலரில் தோன்றிய. பலிக்கலம் - பிச்சைப்பாத்திரம்; அது நான்முகனின் தலை. பச்சிரத்தம் - இளைய குருதி. பழஞ் சோறு - பழைய உணவு; சோறு என்பது உணவு என்ற பொருளில் கூறப்பட்டது. பூவை பால் கொள - உமையம்மையை ஒருபாகத்தில் கொண்ட. புழுகு நெய்ச் சொக்கர் - இறைவரின் திருநாமம்.

பிச்சை ஏற்க வந்த போது இறைவரைக் கண்ட மங்கையர் காமம் கொண்டனர். ஆதலால் அவர்கள் அறிவும் நாணமும் இழந்தனர்; உயிரும் இறக்கும் காலத்தைப் போல் ஆயினர்.

வயிரவ மூர்த்தி பிரம கபாலத்தை ஏந்தித் திருமாலிடம் பிச்சை ஏற்க வந்தார். அவ்வமயம் அவர் தம் தலையை அரிந்து இரத்தம் உதவினார். ஆயினும் அப்பாத்திரம் பாதியாயினும் நிரம்பவில்லை என்பது கதை. (53)

## பைங்கிளியே பயன் தேர்ந்து வா!

## கிள்ளைவிடு தூது

## (கிள்ளை - கிளி)

### கட்டளைக் கலித்துறை

*தலைவி கூற்று*

157. புழுகுநெய்ச் சொக்கர் அபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்சொக்கர்
அழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்கர் அங்கயற்கண்
தழுவி சங்கத் தமிழ்ச்சொக்க ரென்றென்று சந்ததநீ
பழகிய சொற்குப் பயன்தேர்ந்து வாஇங்கென் பைங்கிளியே. (54)

**தெளிவுரை**

ஒரு தலைவி பசுங்கிளியைப் பார்த்து ''பசிய கிளியே! புழுகு நெய்ச் சொக்கர், கர்ப்பூரச் சொக்கர், அழகிய சொக்கர், கடம்ப வனத்துச் சொக்கர், அங்கயற்கண் அம்மையைத் தழுவிய சங்கத் தமிழ்ச் சொக்கர் என்று எப்போதும் நீ பயின்று வந்த சொல்லுக்குப் பயனைத் தெரிந்து இங்குத் திரும்பி வருவாயாக!'' என்றாள்.

**விளக்கம்**

'கிளியே என்னிடம் சொல் பயின்றனை அன்றோ. இச்சொல் பயிற்சிக்குப் பயனாக என் வருத்தத்தைச் சொக்க நாதரிடம் கூறி வருவாய்!' என்று உரைத்தாள்.

அங்கயற்கண் அம்மை - மீனாட்சியம்மை. பயன் - சொக்கநாதரின் உடன்பாடு. தேர்ந்து வா - ஆராய்ந்து வா. (54)

## காக்கை இடப்புறம் வந்தது

### நேரிசை வெண்பா

*செவிலி கூற்று*

158. பைந்தமிழ்தேர் கூடல் பழியஞ்சி யார்க்கவமே
வந்ததொரு பெண்பழியென் வாழ்த்துகேன்-அந்தோ
அடியிடுமுன் னையர்க் கடுத்தவா கெட்டேன்
கொடிஇடமாப் போந்த குறை. (55)

**தெளிவுரை**

பசுமையான தமிழ் ஆராய்ச்சிக்கு இடமான மதுரையில் எழுந்தருளிய பழிக்கு அஞ்சியவரான சொக்க நாதர்க்கு வீணாக இப்பெண் கொலையால் ஆன பழி ஏற்பட்டு விட்டது! இது என்னே! அவர்க்குப் பழி நீங்குமாறு வாழ்த்துவேன்! ஐயோ, தலைவர்க்கு இந்த ஊர்க்கு வரப் புறப்படுவதற்கு முன்னம் காக்கை இடப்புறம் ஆக வந்ததனால் ஆன குற்றமே இதற்குக் காரணம், கெட்டேன்!

**விளக்கம்**

அவமே - வீணாக. பழியஞ்சியார் - இறைவரான சொக்க நாதர். பழி - பெண் கொலைபடுவதால் உண்டாகும் பழிப்பு. வாழ்த்துகேன் - வாழ்த்துவேன். ஐயர் - சோமசுந்தரப் பெருமான். அடிஇடுமுன் - புறப்படுவதற்கு முன்பு. அடுத்தவா - அடுத்தது என்ன வியப்பு! கெட்டேன் - இரக்கம் தரும் குறிப்புச் சொல். கொடி இடமாப் போந்த குறை - காக்கை இடப்பக்கமாக வந்த துன் நிமித்தமான குறையே காரணம். உமையம்மையார் இடப் பாகத்தில் அமர்ந்த குறை என்பது உண்மையான பொருள். கொடி - காக்கை. இடமா - இடமாக என்பதன் தொகுத்தல் விகாரம். (55)

## தலைவியின் வருத்தம்

### காலம்

### மடக்கு

#### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

159. குறுமுகைவெண் டளவளவின் மணந்துவக்கும் காலம்
கொழுநரொடும் மிளமகளிர் மணந்துவக்கும் காலம்
மறுகுதொறு நின்றெமர்க ளுருத்திகழும் காலம்
வரிசிலைகொண் டுருவிலியு முருத்திகழும் காலம்
சிறுமதிநம் பெருமதியி னுகப்படரும் காலம்
தென்றலிளங் கன்றுமுயி ருகப்படரும் காலம்
நிறையினொடு நாணினொடு மகன்றிரியும் காலம்
நேசர்மது ரேசர்வரை யகன்றிரியும் காலம். (56)

**தெளிவுரை**

வெண்மையான முல்லைக் கொடிகளின் சிறிய அரும்புகள் அளவற்ற நறுமணத்தை வீசத் தொடங்குகின்ற காலம். இள மங்கையர் தங்கள் தலைவர்களுடனே கூடி மகிழ்ச்சி அடையும் காலம்.

எம் உறவினர்கள் தெருத்தோறும் பொருந்தி என்மீது சினம் கொண்டு எம்மை இகழ்ந்து பழி சொல்லும் காலம். மன்மதனும் கட்டமைந்த கரும்பு வில்லைக் கையில் எடுத்துக் கொண்டு வடிவுடன் வெளிப்பட்டு விளங்கும் காலம்.

இளம்பிறைச் சந்திரன் நம் பெரிய அறிவின் விருப்பத்தை அழிக்கின்ற காலம். இளந் தென்றற் காற்றும் உயிர் நீங்கும்படி இயங்கும் காலம்.

என் மனம் கற்போடும் நாணத்தொடும் மாறுபடும் காலமும் நம் அன்பரான மதுரைச் சொக்கநாதர் இம்மலையை விட்டு நீங்கி என்னைப் பிரிந்த காலமே ஆகும்.

**விளக்கம்**

கார்கால வரவு கண்டு காதல் மிக்கு வருந்தும் தலைவி கூறியது.

வெண் தளவு - வெண்மை நிறம் உடைய முல்லைக் கொடி. மணம் துவக்கும் காலம் - நறுமணம் தொடங்கும் காலம்.

கொழுநர் - கணவர். மணந்து உவக்கும் காலம் - புணர்ந்து மகிழும் காலம். மறுகு தொறும் - தெருக்கள் தோறும். உருத்து - சினந்து. இகழும் - இகழ்ச்சி செய்யும். எமர்கள் - எம் உறவினர் களாகிய மகளிர். உருவிலி - காமன். சிறுமதி - இளம் பிறை. பெரு மதியின் உகப்பை அடரும் காலம் - பெரிய அறிவின் விருப்பத்தை இயக்கும் காலம். உகப்பாவது - மகிழ்ச்சி. உயிர் உருகப்படரும் காலம் - உயிர் நீங்கத் துன்பம் உண்டாகும் காலம். அகன் திரியும் - உள்ளம் வேறுபடும். மதுரேசருக்குரிய வரையை அகன்று நீங்கும் காலம்; இது தலைவர் தன்னைப் பிரிந்திருத்தலைச் சுட்டியது. (56)

## செம்மேனிக்கு உண்டாங் கொல் தீங்கு!

### நேரிசை வெண்பா

*தலைவி கூற்று*

160. அம்மாநம் மேலன்று பட்ட தருள்கூடல்
பெம்மான்மேற் பட்ட பிரம்படியே - இம்முறையும்
எம்மேனி காமநோய்க்கு ஈடழிந்த வாவடிகள்
செம்மேனிக் குண்டாங்கொல் தீங்கு. (57)

**தெளிவுரை**

அருளையுடைய மதுரைச் சிவபெருமான் மேலே அரி மர்த்தன பாண்டியன் அடித்த பிரம்பின் அடி அக்காலத்தில் நம் மேல் பட்டது. என் உடல் காம நோய்க்கு வன்மை கெட்ட விதத்தால் இப்பொழுதும் அக்கடவுளின் சிறந்த திருமேனிக்குத் தீமை உண்டாகியிருக்குமோ! அறியேன்!

**விளக்கம்**

அம்மா - வியப்பிடைச் சொல். பெம்மான் - சிவபெருமான். பிரம்படி - அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடித்த அடி. முன் பாண்டியன் அடித்த அடி நம்மேல் பட்டது. இப்போது அவருக்கு முதலில் உண்டான காம நோய் நமக்கும் உண்டாயிற்று எனத் தலைவி யுரைத்தாள். அழித்தவா - அழித்த விதம். (57)

## இடம் திறம்!

### சித்து

#### கட்டளைக் கலிப்பா

161\. குரும்பை வெம்முலை சேர்மது ரேசர்பொன்
கோபு ரத்தில் கொடிகட்டு சித்தர்யாம்
கரும்பை முன்புகல் லானைக் கிடுஞ்சித்தர்
கையில் செங்கல் பசும்பொன்ன தாக்கினேம்
இருந்த வீடும் வறும்பாழ தாமவர்க்கு
எருத்துக் கொட்டிலும் பொன்னேய்ந் திடச் செய்தேம்
அருந்த னந்நமக் கோதன மேயப்பா
ஆட கத்துமற் றாசையவ் வையர்க்கே. (58)

**தெளிவுரை**

தென்னையின் இளங்காயைப் போன்ற விரும்பப்படும் முலையை யுடைய உமையை ஒரு பக்கத்தில் கொண்ட மதுரைச் சொக்கநாதரின் பொன்னால் ஆன கோபுரத்தின் மேல் கொடி கட்ட வல்ல சித்தர் யாம். முன்னம் கரும்பினைக் கல் யானைக்குத் தந்து உண்ணும்படி செய்த சித்தரான சோமசுந்தரப் பெருமானின் கையில் உள்ள சிவந்த கல்லைப் பொன்னாகச் செய்தோம். அவர்தம் கையில் வில்லாக உள்ள சிவந்த மலையாகிய மேருவை பொன்னாகச் செய்தோம்.

தாம் இருந்த வீடும் அனுபவிக்கப்படும் பொருள் ஒன்றும் இல்லாத பாழிடமாகக் கொண்ட அவர்க்கு எருதைக் கட்டும் கொட்டகையையும் பொன்னால் மேல் கூரை போடச் சொன்னோம். (வான் வெளியில் இருக்கும் அவர்க்கு எருதான திருமால் தங்கும் இடமான திருவரங்கக் கோயிலைப் பொன்னால் செய்து தந்தோம்.)

திருமாலுக்குப் பொருந்திய மனைவியும் இலக்குமியாக விளங்கச் செய்தோம். இத்தகைய நமக்கு அரிய பொருளே சோறு ஆகும். (உண்கின்ற உணவு சோறாகும்.) அப்பா! அந்தத் தலைவர்க்கே பொன்னில் ஆசையுள்ளது. (ஆடும் இடமான அம்பலத்தில் ஆசையுள்ளது.)

**விளக்கம்**

சித்து: சித்தர் ஒருவர் தம் திறமையை ஒருவனுக்கு எடுத்துக் கூறுவதாகச் செய்யுள் செய்வதாகும்.

குரும்பை - தென்னையின் இளங்காய். வெம்முலை - விரும்பப்படும் கொங்கை. இங்கு உமையம்மையாரைக் குறித்து நின்றது.

கரும்பை முன்பு கல்லானைக்கிடும் சித்தர் - சிவபெருமான் சித்தராக வந்த போது தம் திறத்தை விளக்குதற் பொருட்டுக் கல் யானைக்குக் கரும்பைத் தந்து அஃது உண்ணுமாறு செய்தார். இது திருவிளையாடல் புராணத்தில் காணப்படும் வரலாறு.

செங்கல் பசும்பொன்னதாக்கினோம் - செங்கல்லைப் பசிய பொன்னாகச் செய்தோம். செம்மையான பசும் பொன்னாகச் செய்தோம் என்பது நேர் பொருள். இயற்கையாய் உள்ளதைத் தம் திறமையால் அமைத்ததாகக் கூறுவது சித்தரின் இயல்பு.

வீடும் வறும் பாழதாம் - இறைவனின் வீடும் வெறும் பாழாக இருந்தது. எருதுக் கொட்டிலும் பொன் வேய்ந்திடச் செய்தோம். எருதுக் கொட்டிலையும் பொன்னாக அமைத்தோம். சிவபெரு மானின் ஊர்தியான திருமாலின் இருப்பிடத்தையும் - திருவரங் கத்தையும் பொன்னாக்கினோம்.

வறும்பாழ் - சிதாகாயம். எருத்துக்கு ஒட்டு இல்லும் பொன் ஏய்ந்திடச் செய்தோம் என்பது தகுந்த பொருள். திருமாலான காளைக்குப் பொருந்திய திருமகளைப் பொன்னிறம் பொருந்தச் செய்தோம். ஓதனமாவது உணவு. அருந்தனம் - எமக்கு அரிய பொருள். அப்பா - சித்தர் கூறும் சொல்.

ஆடகத்து மற்றாசையவ் வையர்க்கே - அவர்க்குப் பொன்னிடம் ஆசை உள்ளது; ஆடும் இடமான அம்பலத்தில் ஆசை உள்ளது.

இதில், எல்லாம் வல்ல சித்தரான சிவபெருமானுக்கும் தனக்கும் உள்ள வேறுபாட்டைச் சித்தர் கூறியுள்ளார். (58)

## இறைவர்க்குரியவை

### மடக்கு

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

162. ஐய மணிக்கல மென்பணியே
அன்பணி யக்கொள்வ தென்பணியே
மெய்யணி சாந்தமும் வெண்பலியே
வேண்டுவ துங்கொள வெண்பலியே
எய்ய வெடுப்பதொர் செம்மலையே
ஏந்தி யணைப்பதொர் செம்மலையே
வையகம் வாய்த்த வளம்பதியே
வாழ்வது கூடல் வளம்பதியே. (59)

**தெளிவுரை**

சொக்க நாதர்க்கு வியப்பைத் தரும் மணிகள் இழைக்கப் பெற்ற அணிகள் எலும்பு மாலைகளே! அவர், அன்பு பொருந்த ஏற்றுக் கொள்வது என் அடிமைத் தொழிலையே ஆகும்.

அப்பெருமான் தம் உடலில் அணிந்து கொள்ளும் சந்தனமும் வெண்மையான திருநீறேயாம். அவர் பெற்றுக் கொள்ள விரும்புவது கருதத்தக்க பிச்சையே ஆகும்.

அப்பெருமான் முப்புரங்களை அழித்த காலத்தில் அம்பை எய்வதற்காக வில்லாகக் கையில் எடுத்தது சிவந்த (மேரு) மலையே ஆகும். அவர் விருப்புடன் தூக்கி எடுப்பது ஒப்பில்லாத முருகப் பெருமான் என்ற புதல்வரையே! அவர், உலகங்களை யெல்லாம் பெற்ற உமையம்மையின் அழகிய கணவர் ஆவார். அவர் எழுந்தருளியிருப்பது எல்லா வளங்களையும் உடைய மதுரை என்ற பதியாகும்.

**விளக்கம்**

ஐய - வியப்பு; அழகு. மணிக்கல மென்பணி- மணிக்கலன் + என்பு + அணி; அணியும் மணிபதித்த அணி எலும்புகளாகும். அன்பணியக் கொள்வது என் பணியே - அன்பு + அணிய + கொள்வது + என் + பணி; அன்பு பொருந்த ஏற்றுக் கொள்வது என் தொண்டு.

வெண்பலி - வெண்மையான திருநீறு. சாந்தம் - சந்தனம். வேண்டுவது உளங்கொள வெண்பலியே - வேண்டுவது + உளம் + கொள + எண் + பலியே; அவர் விரும்பிப் பெறுவது நினைக்கத் தக்க பிச்சையாகும்; எண் பலி என்பது எளிய பிச்சை என்றும் பொருள்படும்.

செம்மலை - சிவந்த மேருமலை; புதல்வரை. செம்மல் - புதல்வன்; முருகப் பெருமான். வையகம் வாய்த்த வளம்பதியே - வையகம் + வாய்த்தவள் + அம் + பதியே; உலகங்களை எல்லாம் ஈன்ற உமையம்மையின் அழகிய கணவர். பதி - கணவர். வளம்பதி - வளம் உடைய திருப்பதி. பதி - நகரம். (59)

## என் மகள் அடைந்த துன்பம்

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*செவிலி கூற்று*

163. ஏடார் புண்டரிகத் திளமான் முதுபாடல்
எழுதா மறையோடும் இசைமுத் தமிழ்பாடப்
பீடார் கூடல்வளம் பாடா வாடல்செயும்
பெருமான் முன்சென்றாள் சிறுமான் என்சொல்கேன்
பாடாள் அம்மனையு நாடா ளெம்மனையும்
பயிலாள் தண்டலையும் முயலாள் வண்டலையும்
ஆடாள் மஞ்சனமும் தேடா ளஞ்சனமும்
அயிலாள் அன்னமுமே துயிலாள் இன்னமுமே. (60)

**தெளிவுரை**

என் மகள், ''இதழ்கள் பொருந்திய வெண்தாமரையில் வீற்றிருக்கின்ற இளைய மான் போன்ற பார்வையையுடைய கலைமகளின் பழமையான பாடல்களாய் உள்ள எழுதப்படாத இயல்புடைய வேதங்களுடன் இசையுடன் கூடிய மூவகைத் தமிழ்ப் பாடல்களையும் பாட, பெருமையுடைய மதுரையின் சிறப்பைத் தாம் பாடியபடி கூத்திடும் சிவபெருமானுடைய திருமுன்பு, சிறிய பெண்மானைப் போன்ற இவள் முன்னம் ஒருமுறை சென்றாள். அதனால் விளைந்ததை என்ன என்று எடுத்துரைப்பேன்? அப்போது முதல் இப்போது வரை அம்மனைப் பாடலையும் பாடாள். எந்த வீட்டையும் தேடிச் செல்ல மாட்டாள். பூஞ் சோலையுள் போய்ப் பழகாள். விளையாட்டுக்களை முயன்று ஆடாள். நீராடாள். கண்ணில் தீட்ட மையைத் தேடாள். சோற்றையும் உண்ண மாட்டாள்; இன்னும் உறங்காமல் உள்ளாள்.

**விளக்கம்**

ஏடார் - இதழ்கள் பொருந்திய. புண்டரிகத்திள மான் - தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இளைய மான் போன்ற கலை

மகள். எழுதா மறை - வேதம். பீடார் - பெருமை பொருந்திய. பாடா - பாடி. ஆடல் செயும் - ஆடும். பெருமான் - சிவபெரு மான். சொல்கேன் - சொல்வேன். அம்மனை - அம்மானைப் பாட்டு. தண்டலை - தண்மை + தலை; சோலை. வண்டலை முயலாள் - விளையாட்டை முயன்று மேற் கொள்ளாள். அஞ்சனம் - கண்ணில் பூசும் மை. அயிலாள் - உண்ணாள். (60)

## இவளது சேர்க்கையைப் பெற்றால்......

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

### *செவிலி கூற்று; தோழி கூற்றுமாம்*

164. இன்னியந் துவைப்பச் சங்க மேங்கிடச் செழியர் ஈன்ற
கன்னியை மணந்தே யன்றோ கன்னிநா டெய்தப் பெற்றார்
மின்இவள் முயக்கும்பெற்றால் வெறுக்கைமற் றிதன்மேல் உண்டோ
கொன்னியல் குமரி மாடக் கூடலம் பதியு ளார்க்கே. (61)

**தெளிவுரை**

சோமசுந்தரக் கடவுள் இனிய வாத்தியங்கள் முழங்கவும் சங்குகள் ஊதவும், மலயத்துவச பாண்டியன் ஈன்ற பெண்ணான நடாதகையைத் திருமணம் செய்து கொண்டதால் அன்றோ, பாண்டிய நாட்டை ஆளும் பேறு பெற்றார்? பெருமை பொருந்திய அழிவற்ற வீடுகளை யுடைய அழகிய மதுரைப் பதியில் உள்ள அப்பெருமானுக்கு மின்னற் கொடி போன்ற இவளது சேர்க்கையையும் அடைந்தால் இதனினும் மேற்பட்ட செல்வம் வேறு உள்ளதோ!

**விளக்கம்**

இன்னியம் - இனிய இசைக் கருவிகள். துவைப்ப - ஒலிக்க. ஏங்கிட - ஒலிக்க. மின் இவள் - மின்னல் போன்ற இவள். முயக்கும் - சேர்க்கையும். வெறுக்கை - செல்வம். குமரி - அழியாமையையுடைய. (61)

## மேகங்களே, தனியே செல்லாதீர், சிறைப்படுவீர்!

### கார்

### விருத்தக் கலித்துறை

165. கேளார் புரஞ்செற்ற வின்னாரி
தோயக் கிளர்ந்துற்றதோர்
தோளாளர் கூடற் பதிக்கேகும்
முகில்காள் சொலக்கேண்மினோ
வாளாவொர் மின்னுங்கண் மழைசிந்த
வென்சொன் மறுத்தேகன்மின்
தாளாண்மை அன்றே தளைப்பட்ட
ஊரில் தனித்தேகலே. (62)

**தெளிவுரை**

தேவர்க்குப் பகைவரான அசுரர்களின் திரிபுரங்களை அழித்தற்குக் கருவியான மேருமலையான வில்லினது நாணி (ஆதிசேடன்) தன் மீது பொருந்த எழுந்த உயர்ந்த தோள்களை யுடைய சோமசுந்தரரின் மதுரையின் திருப்பதிக்குச் செல்கின்ற மேகங்களே, நான் சொல்வதைக் கேளுங்கள். ஒரு மின்னற் கொடியைப் போன்ற தலைவியும் வீணாகக் கண்ணில் மழையைப் பொழியுமாறு என் வார்த்தையையும் விலக்கி நீங்கள் அருகே செல்ல வேண்டா. முன் ஒரு காலத்தில் சிறைப்பட்ட ஊரில் மீண்டும் தனியே செல்லுதல் சிறந்த முயற்சியன்று.

**விளக்கம்**

பொருள் தேடி முடித்துத் திரும்பும் தலைவன் மேகத்தை நோக்கிக் கூறியது.

கேளார் - பகைவர்; திரிபுராதிகள். செற்ற - அழித்த. வின்னாரி தோயக் கிளர்ந்துற்றதோர் தோளாளர் - வில் + நாரி + தோய + கிளர்ந்து + உற்றதோர் தோளாளர் - வில்லிலே தொடுத்த

நாணி தோய அக்காலத்தில் பருத்த தோள்களை உடையவர் (சிவபெருமான்). கேண்மினோ - கேளுங்கள். வாளா - வீணாக. மின்னும் - மின்னல் போன்ற தலைவி. மழை சிந்த - நீர் சிந்த . ஏகன்மின் - போகாதீர். தாளாண்மை - முயற்சி. தளைப்பட்ட ஊர் - மேகங்கள் சிறைப்படுத்திய மதுரை. முன்காலத்தில் உக்கிர குமார பாண்டியன் மேகங்களுக்கு விலங்கிட்டனன். அதைநினைத்துத் 'தளைப்பட்ட ஊர்' என்றார். 'அம்மதுரையில் தனித்து ஏகல் நல்லதன்று; என்னோடு வருக' என்றவாறு.

கார்காலத்தில் திரும்பி வருவதாகப் பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வரும் போது மேகங்களை நோக்கிச் சிறிது தாழ்த்துப் போக வேண்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதுவே, 'கார்' என்று உறுப்பின் இலக்கணம். (62)

## இடைச்சியார்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

166. கண்டமும் காமர் மெய்யும் கறுத்தவர் வெளுத்த நீற்றர்
எண்டரு மதுரை யிற்சிற் றிடைச்சிபே ரிடைச்சி யென்பீர்
தொண்டைவா யமுதிட்டு என்தன் பாலிங்குத் தோயீர் வாளா
மண்டுமென் னகத்தி லென்னீர் மத்திட்டு மதிக்கின் றீரே. (63)

### தெளிவுரை

கழுத்தும் விரும்பப்படும் (பாதியுடலும்) கரிய நிறமுமாய் உள்ளவரும், வெண்மையான திருநீற்றையுடையவருமான சொக்க நாதரின் மதுரையில் உள்ள சிறிய இடையையுடைய இடைச்சியர் பெயரை உடையவரே! உம் கொவ்வைப் பழம் போன்ற உதட்டில் அமுதம் போன்ற இனிய இரசத்தைத் தந்து என்னிடம் இங்கே கூடுவீராக! இப்போது பாலை அமுதிட்டு (மோரை யிட்டுத்) தோய்ப்பீராக. வாளா என் உள்ளத்தில் நீர் ஏன் மயக்கத்தைச் செய்து கலக்குகின்றீர். (தயிர் இல்லாத வறுமையான என் வீட்டில் நீர் ஏன் மத்தை இட்டுக் கடைகின்றீர்?)

**விளக்கம்**

இது, தெருவில் தயிர்க்குடத்தைக் கொண்டு விற்கும் ஒருத்தியைப் பார்த்துக் காதல் கொண்ட ஒருவன் தன் வேட்கையை வெளிப்படுத்திக் கூறுவதாம். இதுவே, 'இடைச்சியார்' என்பதன் இலக்கணம்.

அமுதிட்டு என்றது பாலில் மோர்ப்பிரை குத்துதலை உணர்த்தும். அமுது - (இங்கு) மோர். (இடையர் மோரை அமுது என்பர்.) அம் மோரை இட்டு என் பாலைத் தயிராகத் தோயச் செய்வீர் என்றான். வீணாக என் வீட்டில் பாலும் இன்றிப் பிரை குத்துதலும் இன்றி நீரை மட்டும் மத்தை இட்டுக் கடைதலால் யாது பயன்! என்றான். மதித்தல் என்பது தயிர் கடைதலையுணர்த்தியது.

கண்டம் - கழுத்து. காமர் மெய் - அழகிய உடல்; உமையம்மையார் உடல். கறுத்தவர் - சிவபெருமான். வெளுத்த நீற்றர் - வெண்ணிறத் திருநீற்றை அணிந்தவர். எண் தருமதுரை - சிறந்தது என யாவராலும் மதிக்கக் கூடிய மதுரை நகர். பேர் இடைச்சி என்பீர் - இடைச்சி என்ற பெயரையுடையவரே. தொண்டை வாய் - கொவ்வைக் கனியைப் போன்ற வாய். என்றன் பால் - என்னிடம். தோயீர் - தோயச் செய்வீராக. (63)

## சொக்கநாதருக்கு என்ன சிறப்பு!

### கட்டளைக் கலித்துறை

*தலைவி கூற்று*

167. ஈர மதிக்கும் இளந்தென் றலுக்குமின் றெய்யுமதன்
கோர மதிக்கும் கொடுங்கோ லுளகொடுங் கோன்மைமுற்றும்
தீர மதிக்கும்செங் கோன்மையென் னாம்சில தேவர்மதி
சோர மதிக்கும் கடல்தீ விடங்கொண்ட சொக்கருக்கே. (64)

**தெளிவுரை**

குளிர்ச்சியுடைய சந்திரனுக்கும் இளமையான தென்றற் காற்றுக்கும் இப்போது மலர் அம்புகளை எய்கின்ற மன்மதனின்

பயங்கரமான கரும்பு வில்லும் கொடிய அம்புமே கொடியவை. கொடுங்கோன்மை முழுவதும் நீங்கும்படி மதிக்கும் செங் கோன்மை சில தேவர்கள் (நஞ்சின் கொடுமைக்கு ஆற்றாமல்) அறிவு தளர, அத்தளர்ச்சியை ஒழிக்க, கடையப்பட்ட திருப்பாற் கடலினின்றும் தோன்றிய கொடிய நஞ்சை அமுது செய்த சொக்க நாதருக்கு என்ன சிறப்பு உள்ளது?

**விளக்கம்**

ஈரமதி - குளிர்ந்த சந்திரன். மதன் - காமன். கோரமதி - கொடுமையுடைய அறிவு. கொடுங்கோல் உள - கொடுங் கோல் தன்மைகள் உள்ளன.

காமனின் தேரான தென்றற் காற்றும் குடையுமாய் என்னை வருத்தும் சந்திரனையும் மன்மதனையும் அடக்காத இறைவர்க்கு அக்காமனின் வில்லம்புக் கொடுமையை வென்றார் என்னும் புகழ் என்ன சிறப்புடையது? என்றாள் தலைவி. மதிக்கும் கடல் - கடைந்த பாற்கடல். (64)

## உயிர் வடிவம் உடையது

### வஞ்சி விருத்தம்

168. கரிய கண்டம் கரந்தவோர்
நிருபர் கூடலின் நெஞ்சிரே
உருவ மும்பெண் ணுருக்கொலாம்
அருவ மென்பதன் ஆவியே. (65)

**தெளிவுரை**

நஞ்சை அருந்தியதால் கருமை அடைந்த காள கண்டத்தை மறைத்து வந்த ஒப்பற்ற மன்னரான சுந்தர பாண்டியரின் மதுரையில் பற்று வைத்த உள்ளமே! என் உயிரின் வடிவமும் பெண்ணின் வடிவம் போன்றது. அத்தகைய வடிவம் இல்லாதது என்று உரைப்பது ஏன்?

**விளக்கம்**

தலைவியைக் கூடிய தலைமகன் அவளது நலத்தைப் பாராட்டி நெஞ்சிற்கு உரைத்தது. பெண்ணின் உருவமே என் உயிர் எனக் கூறினான். சோம சுந்தரர் மனிதத் திருவுருக் கொண்டு வந்ததனால் 'கரிய கண்டம் கரந்த' என்றார். நெஞ்சிரே - நெஞ்சமே. என் உயிரை உருவம் அற்றது என்பது ஏன்? அதன் உருவம் பெண் வடிவம் என்றான். அதாவது தலைவியையே உயிராக எண்ணிக் கூறியபடி. (65)

## என் நோய் நீங்கவில்லையே!

### கலிநிலைத்துறை

*தலைவி கூற்று*

169. ஆவா என்னே தென்னவர் கோற்குஅன் றணிசாந்தம்
நீவா நின்றாய் நின்றில காமா னலமென்னே
கோவாம் வில்லி கொடுந்தனு வும்கூன் நிமிராதால்
மூவா முதலார் மதுரையி தன்றோ மொழிவாயே. (66)

**தெளிவுரை**

ஆ! ஆ! என்ன! தென்னாடான பாண்டிய நாட்டில் அக்காலத்தில் திருஞான சம்பந்த நாயனார் மேலே அணிந்த திருநீற்றை இப்போது என் உடம்பில் நீ தடவுகின்றாய்! அப்படித் தடவியும் பாண்டியனுக்கு வெப்பு நோய் அக்காலத்தில் நீங்கியதைப் போல் என் காம நோய் வெப்பம் நீங்கியதில்லை. என்னே! இது என்னே! தலைவனான வில்லில் வல்ல மன்மதனின் கொடிய வில்லும் வளைவு நிமிர்ந்ததில்லை. விற்போரில் வல்ல பாண்டிய மன்னனின் வளைந்த முதுகு நிமிர்ந்தாற் போல் முடிவற்ற முதன்மையான பரமசிவனது மதுரைப் பதி இதுவன்றோ! சொல்வாயாக!

**விளக்கம்**

இது தலைவி தன் மீது திருநீறு பூசிய தோழியை நோக்கிக் கூறியது. தென்னவர் கோன் - கூன் பாண்டியன். அணி சாந்தம் - பூசிய திருநீறு. நீவா நின்றாய் - தடவுகின்றாய். காமானலம் - காமத்தீ. வில்லி - கரும்பு வில்லையுடைய மன்மதன். கொடுந்தனு - கொடிய கரும்பு வில். மூவா முதலார் - முதுமை அடையாத சிவபெருமான்.

திருஞான சம்பந்தர் கூன் பாண்டியனின் வெப்பு நோயைப் போக்கத் திருநீற்றைப் பூசிய போது அவனது கூனும் நோயும் நீங்கின. ஆதலால், இவ்வூர் அத்தகைய மதுரையன்றோ என்றார். இவ்வரலாறு திருவிளையாடற் புராணத்தின் 'பாண்டியன் சுரம் தீர்த்த படலத்தால்' அறியலாம். (66)

## உலகம் முழுவதும் கெண்டை மீனுக்கு நிகர்!

### வலைச்சியார்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

170. மொழிக்கய லாகி வேத முடிவினின் முடிந்து நின்ற
வழிக்கய லாகார் கூடல் வலைவாணர் பெருவாழ்வு அன்னீர்
கழிக்கயல் விற்பீர் மற்றிக் காசினி யேழும் உங்கள்
விழிக்கய லுக்கே முற்றும் விலையென்ப விளக்கிட்டீரே. (67)

**தெளிவுரை**

சொல்லுக்கு வேறாய் மேம்பட்டவராய் மறை முடிவில் முடிந்துள்ள வழியினுக்கு அப்பாற்பட்ட சிவபெருமான் உறையும் உப்பங்கழியில் கெண்டை மீனை விற்கும் நின் ஏழு தீவுகளாகிய இவ்வுலகம் முழுவதும் உம் கண்களாகிய கெண்டை மீனுக்கே விலையாகும் என்பதைத் தெரிவித்தனர் போலும்!

**விளக்கம்**

மொழிக்கு அயலாகி - சொல்லுக்கு அப்பாற்பட்டு. வேத முடிவு - உபநிடதம். வலைவாணர் - வலைஞர். கழிக்கயல் - உப்பங்கழியில் உள்ள மீன்கள். உங்களது பார்வையில் யாவரும் மயங்குவர் என்பது கருத்து.

இப்பாடல் மீன் விற்கும் வலைச்சியை நோக்கி அவளிடம் காதல் கொண்ட ஓர் இளைஞன் கூறியது. காசினி - பூமி.

தலைவன் தான் மயக்கம் கொண்டதை உலகின் மீது ஏற்றிக் கூறினான். (67)

## கரும்பே, நீ மலரம்புகளை எய்யாதே!

### நேரிசை வெண்பா

*பாங்கி கூற்று*

171. விற்கரும்பே யொன்றிதுகேள் மென்கரும்பே அன்னார்தம்
சொற்கரும்பே முற்றுமலர் தூற்றுமால் - நற்கரும்பை
ஆளார் கடம்பவனத் தையருமற்று என்நீயும்
வாளா அலர்தூற்று வாய். (68)

**தெளிவுரை**

காமனின் வில்லான கரும்பே! நான் சொல்லும் இவ்வொரு சொல்லைக் கேட்பாய்! மென்மையான கரும்பைப் போன்ற மகளிரின் சொல்லான கரும்பே ஊர் முழுதும் அறியுமாறு இவளைப் பழிதூற்றும் கடம்பவனத்தில் வீற்றிருக்கின்ற தலைவரும் நல்ல கரும்பைப் போன்ற இத்தலைவியை வந்து கூடவில்லை. என்னே, நீயும் வீணே இவள் மீது எய்கின்றாய்?

**விளக்கம்**

தோழி காமனின் கரும்பை நோக்கிக் கூறியது. மென் கரும்பே அன்னார் - மென்மையான கரும்பைப் போன்ற

மங்கையர். அலர் தூற்றுமால் - பழிகூறும். ஆல் - அசை. வாளா - வீணே. அலர் தூற்றுவாய் - மலர் அம்புகளை எய்கின்றாய்; பழி தூற்றுவாய். சொற்கரும்பே - சொல்லாகிய கரும்பே. நற்கரும்பு - தலைவி. (68)

## வியப்படையாததற்குக் காரணம் யாது?

### கட்டளைக் கலிப்பா

172. வால வ்ருத்த குமாரன் எனச்சில
வடிவு கொண்டுநின் றாய்என்று வம்பிலே
ஞால நின்னை வியக்கு நயக்குமென்
நடனம் கண்டும் வியவாமை யென்சொல்கேன்
பால லோசன பாநுவி லோசன
பற்ப லோசன பக்த சகாயமா
கால காலத்ரி சூல கபாலவே
கம்ப சாம்ப கடம்ப வனேசனே. (69)

### தெளிவுரை

நெற்றியில் தீக்கண்ணையுடையவனே! கதிரவனான வலக் கண்ணை யுடையவனே! திங்கள் என்னும் இடக்கண்ணை யுடையவனே! அடியார்க்குத் துணையாய் இருப்பவனே! பெரிய கூற்றுவனுக்கும் கூற்றுவனாய் உள்ளவனே! மூன்று தலையை யுடைய சூலப்படையையுடையவனே! பிரம கபாலத்தை யுடையவனே! ஏகாம்பரநாதனே! உமையுடன் கூடியவனே! கடம்பவனத் தலைவனே!

குழந்தையாகவும் முதியவனாகவும் இளமைப் பருவம் உடையவனாகவும் கோலம் கொண்டு நின்றாய் என்று உலகினர் எல்லாம் நின்னை வீணே வியந்து போற்றுவர். சிறந்த என் நாடகத்தைப் பார்த்தும் வியப்படையாமைக்குக் காரணம் என்ன என்று கூறுவேன்?

**விளக்கம்**

வாலவ்ருத்த குமாரன் எனச் சில வடிவு கொள்ளல் என்றது திருவிளையாடற் புராண விருத்த குமார பாலரான படலத்தால் அறிவதாகும். வம்பிலே - வீணே. என் நடனம் கண்டு - பிறந்து பிறந்து பல முறை பாலனாகவும் பின் குமாரனாகவும் கிழவனாகவும் ஆகும் ஆடலைக் கண்டு. பாலலோசனனே - பாலம் + லோசனனே; நெற்றியில் கண்ணை உடையவனே. பாலம் - நெற்றி; லோசனன் - கண்ணை உடையவன். பானுவிலோசன - கதிரவன் ஆன கண்ணையுடையவரே! பானு - கதிரவன். பற்ப லோசன - தாமரை போன்ற குளிர்ந்த கண்ணையுடையவரே. அதாவது குளிர்ந்த சந்திரன் ஆன கண்ணை உடையவரே. பற்பம் - தாமரை.

என்னை ஆட்கொண்டு என் பிறவியை ஒழிக்க வேண்டும் என்பது ஆசிரியர் கருத்து.

விருத்த குமார பால வடிவம் பெற்ற வரலாறு:-

மதுரையில் விருபாக்கன் என்ற அந்தணன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி சுப விரதை என்பாள். அவ் விருவருக்கும் ஒரு பெண் தோன்றினாள். அவள் பெயர் கௌரி. அவளை வைணவப் பிரமசாரி ஒருவனுக்கு மணம் செய்து தந்திருந்தனர். கௌரி சைவ அடியாரைக் கண்டு உபசரிக்க வழியில்லையே என வருந்தியபடி இருந்தாள். அவளை மாமனாரும் மாமியும் கொடுமைப்படுத்தினர். ஒருகால் அவளுடைய மாமனும் மாமியும் அயலூர்க்குப் போயிருந்தனர். அப்போது சோமசுந்தரக் கடவுள் முதிய வடிவத்துடன் அவளிடம் வந்தார். பின் இளங்குமரன் ஆனார். மாமனும் மாமியும் வந்த போது குழந்தையானார். (69)

## இது என்ன நியாயம்!

### கலிவிருத்தம்

173. கட்டு வார்குழ லீர்கயற் கண்ணினாட்
கிட்ட மாஞ்சொக்க ரைக்கரை யேற்றினீர்
மட்டில் காம மடுப்படிந் தேற்கெனே
கொட்டு வீர்பின்னுங் குங்குமச் சேற்றையே. (70)

**தெளிவுரை**

நன்றாக முடித்த நீண்ட கூந்தலையுடைய மங்கையரே! மீனாட்சி அம்மைக்கு விருப்பமான சொக்க நாதரை நீங்கள் நீர் நிலையினின்று கரையேறச் செய்தீர். அளவற்ற காமமான மடுவிலே விழுந்து கிடக்கும் என்னைக் கரையேற்றாமல் மீண்டும் குங்குமச் சேற்றை மேலே பூசுகின்றீர். இது என்ன நியாயம்?

**விளக்கம்**

தெப்பத் திருவிழாவில் சொக்க நாதரைக் கரையில் எழுந்தருளச் செய்வதைக் கண்டு காமம் கொண்ட தலைவி ஒருத்தி கூறியதாய் இச் செய்யுள் அமைந்துள்ளது.

கட்டிய நீண்ட குழலையுடையீர் என்றது சொக்க நாதரைத் தெப்பத்தை விட்டுக் கரையேற்றுகையில் உடன் இருந்த உருத்திர கணிகையரைக் குறிக்கும். கயல் கண்ணினார் - அங்கயற்கண் அம்மையார். இட்டமாம் - விருப்பமான. மட்டில் - அளவில்லாத. குங்குமச் சேறு - குங்குமச் சாந்து.

சொக்க நாதரை மட்டும் கரையேற்றி விட்டுக் காம மடுவில் வீழ்ந்த என்னைக் கரையேற்றாமல் என் மீது குங்குமச் சேற்றைக் கொட்டுவது உங்கள் இயல்புக்கு முரணானது அன்றோ என்பது குறிப்பு. (70)

## எமனார்க்கு அஞ்சேம்!

### நேரிசை வெண்பா

174. குங்குமச்சேறு ஆடும் கொடிமாட வீதியில்வெண்
சங்குமொய்க்கும் சங்கத் தமிழ்க்கூடல் - அங்கயற்கண்
அம்மையிடம் கொண்டாரை அஞ்சலித்தே மஞ்சலமற்று
இம்மையிடம் கொண்டார்க்கு இனி. (71)

**தெளிவுரை**

குங்குமக் குழம்பு நிறையப் பெற்ற கொடிகள் கட்டிய மேல் வீடுகளையுடைய திருவீதி. அதில் வெண்மையான சங்குகள் வந்து தவழும். இத்தகைய இயல்புடைய சங்கத்தில் பயின்ற தமிழ் வழங்கும் மதுரையில் அழகிய கயல்மீன் போன்ற கண்களை யுடைய அம்மையை இடப்பாகத்தில் கொண்ட சோமசுந்தரக் கடவுளைக் கை கூப்பித் தொழுதோம். எனவே, இனி எருமைக் கடாவினை ஊர்தியாய் உடைய கூற்றுவனுக்கு யாம் அஞ்சமாட்டோம்.

**விளக்கம்**

குங்குமச் சேறு ஆடும் வீதி - கொடி மாட வீதி எனப் பிரித்துக் கூட்டுக. ஒருவருக்கொருவர் குங்குமச் சேற்றை வீசி விளையாடும் வீதி என்றும், கொடிகள் கட்டப்பட்ட வீதியென்றும் பொருள் கொள்க.

சங்கத் தமிழ்க்கூடல் - தமிழ்ச்சங்கத்தையுடைய மதுரைப் பதி.

சங்கு மொய்க்கும் - சேறு இருக்குமாயின் சங்குகள் மொய்க்கும். ஆதலால் மதுரை வீதியில் குங்குமச் சேறு இருந்தது என்க. இது மதுரையின் சிறப்பையுணர்த்தியது.

அஞ்சலித்தேம் - வணங்கினோம்.

இம்மையிடம் கொண்டார்க்கு - இ + மயிடம் + கொண்டார்க்கு; மையிடம் - மயிடம் - மயிஷம்; எருமை. எருமையூர்தி யுடைய இயமனார்க்கு. எதுகை நோக்கி 'மயிடம்' என்பது 'மையிடம்' என வந்தது. (71)

## பனைமடல் குதிரையில் வருவேன்!

### மடல்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

175. இன்னீ ரமுதுக் கிடமும் கடுவுக்கு
எழிலார் களனும் களனா வருளா
நன்னீ ரமுதக் கடலா கியுளார்
நரியைப் பரியாக் கிநடத் தினரால்
அந்நீர் மையின்மிக் கென்னீ மையெனா
அடன்மா மடன்மா வரமா றுசெயா
மைந்நீ ரளகத் திளமா னையனீர்
வருவேன் மதுரைத் திருவீ தியிலே. (72)

**தெளிவுரை**

மையினைப் போன்ற கருமையான தன்மை கொண்ட கூந்தலையுடைய இளமானைப் போன்ற மங்கையரே! இனிய இயல்புடைய அமுதம் போன்ற உமையம்மையாருக்கு இடப் பாகத்தையும் பாற்கடலில் தோன்றிய நஞ்சுக்குத் திருக் கழுத்தையும் கொடுத்தருளி நல்ல தன்மையுடைய அமுதக் கடல் போல் இன்ப மயமான சோம சுந்தரக் கடவுள் நரிகளைப் பரிகள் ஆக்கினார். அத் தெய்வத் தன்மையினும் என் நலம் சிறந்தது என்று கண்டோர் கூறும்படி பனைமடலால் ஆன குதிரையை அடல் மாவாக வருமாறு வேறுபடுத்தி நாளை மதுரையின் அழகிய வீதியிலே வருவேன்.

**விளக்கம்**

இப்பாடல் தலைவன் மடலேறுதலை உணர்த்துவது. தோழியை நோக்கியுரைத்தான். தலைவன் தான் நாண் இழந்தமை வெளிப்படையாகத் தோன்ற 'யான் நாளை நின் ஊர்த் தெருவில் மடல் ஊர்ந்து வருவேன்' என்றான்.

இன்நீர் - இனிய இயல்புடைய. அமுதுக்கு இடமும் - அமுதத்தைப் போன்ற உமாதேவியார்க்கு இடப்பாகமும். கடு - நஞ்சு. எழில்ஆர் களமும் - அழகு பொருந்திய கழுத்தும். களனா - இடமான. அருளா - அருளி.

நன்னீர் அமுதக் கடலாகியுள்ளார் - நல்ல இயல்புடைய அமுதக் கடலைப் போன்ற சோமசுந்தரக் கடவுள். நரியைப் பரியாக்கினார் - நரிகளை எல்லாம் குதிரைகளாக மாற்றினார். இது திருவிளையாடற் புராணத்தின் 'நரி பரியாக்கிய படலம்' என்பதில் காணப்பெறுவது.

அந்நீர்மையின் மிக்கென்னீர்மை எனா - அச்சிவபெருமானின் நரியைப் பரியாக்கியதை விட என் செயல் சிறந்தது என்று கண்டோர் கூறும்படி. எனா - என்று சொல்லும்படி.

அடல்மா மடல்மாவரமாறு - மடல்மா அடல் மா வரமாறு செயா - பனை மடலால் ஆன வன்மையான குதிரையாய் வரும் படி வேறுபடுத்தி மாற்றி. மடல் - பனைமடல். மா - குதிரை; பனை மடலால் ஆன குதிரை. மாறுசெயா - வேறுபடுத்தி.

சொக்கப் பெருமான் உயிர் உள்ள ஒரு விலங்கை மற்றொரு விலங்காக மாற்றுவர். ஆயின் யானோ உயிர் அற்ற பனைமடலால் ஒரு குதிரையை உயிர் உள்ள குதிரையைப் போலச் செய்வேன் என்றான் தலைவன்.

தலைவன் தான் விரும்பிய தலைவியை மணக்க இயலாத நிலை ஏற்படின், இப்படி 'மடல்மா ஏறுதல்' இயல்பு. இஃது ஒரு புறப் பொருள் துறை. (72)

## மன்மதன் கைவில் இயல்பு

### எழுசீர்ச் சந்தவிருத்தம்

### *தலைவன் கூற்று*

176. திருவைப் புணர்பொன் புயமைப் புயல்கைத்
திகிரிப் படையுய்த் தவர்கூடல்
தருமொய்த் தருமைச் சிறைபெற் றனமுத்
தமிழ்வெற் பமர்பொற் கொடிபோல்வீர்
புருவச் சிலையின் குழைபட் டுருவப்
பொருகட் கணைதொட்டு அமராடும்
செருவில் தொலைவுற் றவரைக் கொலுநற்
சிலைசித் தசர்கைச் சிலைதானே. (73)

**தெளிவுரை**

திருமகளைத் தழுவுகின்ற திருமாலின் கையில் சக்கரப் படையைக் கொடுத்தவரான சிவபெருமானின் மதுரையில் உள்ள மரங்கள் மேலே தொடர்ந்து இருத்தலால் பெறுவதற்கு அரிய இறகுகளை மீண்டும் பெற்றாற் போன்ற மூவகைத் தமிழும் வழங்கும் மலையிலே உள்ள அழகிய பூங்கொடியைப் போன்ற மடந்தையரே! புருவம் என்ற வில்லிலே காதில்பட்டு உருவுமாறு பிறழ்கின்ற கண்ணான அம்பை எய்து, மகளிர் செய்கின்ற போரில் நின்று நீங்காத என் போன்றவரைக் கொல்லும் சிறந்த வில்லே மன்மதன் கையில் வைத்துள்ள வில் ஆகும்.

**விளக்கம்**

இது தலைவன் தலைமகளை நோக்கி யுரைத்தது. தோழியை நோக்கிக் கூறியதாகவும் கொள்ளலாம்.

திரு - திருமகள்; இலக்குமி. மைப்புயல் கை - மை போன்ற திருமாலின் கையில் உள்ள. திகிரிப்படை - சக்கரப்படை; திருமாலுக்குச் சக்கரப்படையைச் சிவபெருமான் தந்தார் என்பது வரலாறு. மரங்கள் மொய்க்கப் பெற்று அதனால் சிறை பெற்றார்

போன்ற முத்தமிழ் வெற்பு என்பது 'தரு மொய்த்து அருமைச் சிறை பெற்றன முத்தமிழ் வெற்பு' என்ற தொடரால் அறிகிறோம். இவ்வெற்பு - மலை - மதுரையைச் சார்ந்து விளங்குவது.

பொற்கோடி போல்வீர் - பொன் கொடியைப் போன்றவரே! (மடந்தையரே)

மரங்கள் மலையின் சிறகுகளை ஒத்தன என்க. குழை - காதணி. புருவமாகிய சிலையில் கண் என்ற அம்பைத் தொடுத்து. தொலைவுற்றவரை - தோற்றவரை. நற்சிலை - இகழ்ச்சிக் குறிப்பு. சித்தசர் - காமன். பன்மை இகழ்ச்சிக் குறிப்பு. நின் கண்ணால் வருத்தியவரைப் பின்னும் வருத்தக் காமன் அம்பு கொல்லும். தோற்றவரைக் கொல்வது அறமாகாது. ஆதலால் அவ்வாறு செய்வது பொருந்தாது என்றார்.

சிலை - கரும்பு வில். (73)

## செம்மல் கொள்கை நன்று!

### கட்டளைக் கலித்துறை

*தோழி தலைவியை நோக்கிக் கூறியது*

177. சிலைசிலை யாக்கொண்ட தென்மது
 ரேசர் சிலம்பில்வில்வேள்
 மலைசிலை யாக்கொண்ட வானுத
 லாய்நின் மருங்குல்சுற்றும்
 இலைசிலை யாக்கொண்டு இளமானை
 எய்திடு மிங்கிவர்பூங்
 குலைசிலை யாக்கொண் டவர்போலு
 மால்செம்மல் கொள்கைநன்றே. (74)

**தெளிவுரை**

மேரு மலையை வில்லாகக் கைக் கொண்ட தென்மதுரை நாதரது மலையில் மன்மதன் போர் செய்யும் வில்லைக் கையிலே கொண்டாற் போல் ஒளி பொருந்திய நெற்றியையுடையவளே!

நின் இடையில் உடுக்கப்படுவதான தழையை வில்லாகக் கொண்டு இளைய மானை எய்கின்ற இங்குள்ள இத்தலைவர் பூங்கொத்தை வில்லாகக் கொண்ட காமன் போலும்! இவரது கொள்கை நன்றாயிருந்தது.

**விளக்கம்**

தலைவன் தலைவியும் தோழியும் ஒருங்கு இருந்த போது தழையை ஏந்தி 'யான் எய்த அம்புடன் ஒரு மான் இங்கு வந்ததோ?' என்று கேட்ட காலத்தில் தோழி தலைவியை நோக்கி நகையாடிக் கூறியது இது.

சிலை சிலையாகக் கொண்ட - சிலை இரண்டுள் முதல் 'சிலை' மேருமலை; இரண்டாம் 'சிலை' வில். எனவே மேரு மலையை வில்லாகக் கொண்ட. வேள் - காமன். மலை சிலையாக் கொண்ட வாள் நுதலாய் - போர் செய்கின்ற மலையை வில்லாகக் கொண்ட ஒளி பொருந்திய புருவத்தை உடையவளே! மலை - போரிடல். நின் மருங்கும் சுற்றும் இவை - நின் இடையைச் சுற்றி உடுக்கக் கூடிய தழையை.

பூங்குலை சிலையாக் கொண்டவர் - பூங்கொத்தை வில்லாகக் கொண்ட மன்மதன்.

செம்மல் - தலைவன்.

தலைவன் வேட்டை மேல் வந்ததாகக் கூறுவது பொய். அவனது நோக்கம் வேறு என்று தோழியுரைத்தாள். (74)

## கணவரைத் தேடும் இடம் நன்று!

### பாண்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

178. கொங்குரை யாற்றி லிட்டுக் குளத்தினில் தேட நீடு
மங்குல்தோய் முதுகுன் றையர் மதுரையோ மதியில் பாணா
எங்கையர் மனைக்கண் வைத்தாங் கெம்மிடைத் தேர்தி மற்றம்
மங்கையர் மனம்போ லன்றே மகிழ்நர்தம் வாழ்க்கை தானே. (75)

**தெளிவுரை**

அறிவற்ற பாணனே! மாற்று உயர்ந்த பொன்னை மணி முத்தாற்றில் இட்டுத் திருவாரூர்க் குளத்தில் தேடிப் பார்க்க, அங்கு அது பொருந்தியிருத்தற்குக் காரணமான மேகங்கள் தவழப் பெற்ற முதுகுன்றமோ! சோம சுந்தரரின் மதுரையோ? அன்று. என் கணவனை அங்கு என் தங்கையர் ஆன பரத்தையரின் வீட்டில் வைத்து எம் வீட்டில் வந்து தேடுகின்றாய். மேலும் என் கணவரின் வாழ்வு அம்மகளிரின் விருப்பம் போல் உள்ளதன்றோ!

**விளக்கம்**

பரத்தையின் பிரிந்த தலைவனிடமிருந்து வந்த பாணனை நோக்கித் தலைவி கூறியது; தோழி கூறியதுமாகும்.

கொங்குரை - மாற்றுயர்ந்த பொன். கொங்கு நாட்டில் பல விடத்துப் பொன் அகப்படுதலாலும் அது மாற்றறிய உரைக்கப் படும் ஆணிப் பொன் ஆதலாலும் பொன்னைக் 'கொங்குரை' என்றார். உரை - உரையாணிப் பொன்.

சுந்தர மூர்த்தி நாயனார் ஒருகால் சிவன் தந்த பொன்னை முதுகுன்றில் ஓடும் மணி முத்தாற்றில் இட்டார். பின் அதனைத் திருவாரூர்க் கமலாலயத்தில் எடுத்தார். அஃது இங்குத் தலைவியால் சுட்டப்பட்டது.

முதுகுன்று, ஐயர் மதுரையோ - முதுகுன்றையுடைய இறைவரின் மதுரையோ நீ வாழும் இடம்? அதனால் தான் தலைவரைப் பரத்தையர் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போய் அங்கே வைத்து விட்டு இங்கு வந்து தேடுகின்றாய் என்றாள். மங்குறோய் - மங்குல் + தோய்; மேகம் தங்கும்படியான. எங்கையர் - என் தங்கையர்; அவர் பரத்தையர். தேர்தி - தேடு கின்றாய். அம் மங்கையர் மணம் போல். பரத்தையரான அம் மடந்தையரின் விருப்பம் போல். மகிழ்நர் - கணவர்.

தலைவியின் கருத்தை அறிந்து வருமாறு தலைவனிடமிருந்து வந்த பாணனை நோக்கி இது கூறப்படுவதாகும். இவ்வாறு அமைத்துப் பாடுவதே 'பாண்' என்னும் கலம்பக உறுப்பு ஆகும். (75)

## எது சிறந்தது?

### கிள்ளைவிடு தூது

### நேரிசை வெண்பா

179. வாழிமடக் கிள்ளாய் மதுரா புரிவாழும்
ஊழி முதல்வர்க் குருவழிந்தேன் - ஆழியான்
சேய்தொடுத்த வம்போ திரள்முலையும் கண்மலரும்
தாய்தொடுத்த வம்போ தலை. (76)

**தெளிவுரை**

இளங்கிளியே வாழ்க! மதுரைப் பதியில் எழுந்தருளி யிருக்கின்ற ஊழிக் காலத்து முதல்வரான சிவபெருமானைக் கண்டு என் அழகு கெட்டுக் காம நோய் மிக்கேன். சக்கரப்படையை உடைய திருமாலின் மகனான மன்மதன் எய்த அம்புகளோ திரண்ட முல்லை மலரும் தேனையுடைய மற்றை மலர்களும் ஆகும். என்தாய் தொடுத்துக் கூறும் பழிச் சொல்லோ அவற்றை விடக் கொடியதாகும்.

**விளக்கம்**

தலைவி கிளியை நோக்கிக் கூறியது இது.

உரு அழிந்தேன் - அழகு கெடப் பெற்றேன். ஆழியான் சேய் - திருமாலின் மகனான காமன். தொடுத்த - எய்த. காமன் எய்த அம்புகள் முலையிலும் கண்மலரிலும் பட்டன. தாய் தொடுத்த பழி மொழியோ தலையளவும் உள்ளது என்றாள். காமன் அம்புகளால்

பசலை முலையிலும் நீர்ப் பெருக்குக் கண்ணிலும் உள்ளன என்பது தலைவியின் கருத்து. தாய் கூறும் வம்பு தலை மயக்கத்தைத் தருவது எனவும் கொள்ளலாம். கிள்ளை - கிளி. (76)

## உன்னைத் தூதாக அனுப்பியவனின் தலையை வெட்டி வா!

### மறம்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

180. தருமுகத்து நிமிர்குடுமி மாடமலி கூடல்
சவுந்தரபாண் டியர்குடியாம் சமரினிடை யாற்றாது
ஒருமுகத்தி லொருகோடி மன்னர்மடிந் தொழிந்தார்
உனைவிடுத்த மன்னவன்யா ருரைத்திடுவாய் தூதா
மருமுகத்த நெறிக்குழலெம் மறக்கொடியை வேட்பான்
மணம்பேசி வரவிடுத்த வார்த்தையது சொன்னாய்
திருமுகத்தி லெழுத்திதுவேல் திருமுடியிலெழுத்தும்
தேர்ந்தறியக் கொண்டுவா சிகையினொடும் சென்றே. (77)

**தெளிவுரை**

வான் உலகில் உள்ள கற்பக மரத்தின் நுனியை அளாவி உயர்ந்த உச்சியைக் கொண்ட மாளிகைகள் பொருந்திய மதுரையில் உள்ள சுந்தர பாண்டியரின் குலத்தில் தோன்றியவர்கள் நாங்கள். போர்க்களத்தில் எங்கட்கு முன்னால் நிற்கமாட்டாது ஒரே முகமாகப் பல நூற்றுக்கணக்கான மன்னர்கள் மடிந்து போனார்கள். தூதனே! உன்னைத் தூதாய் அனுப்பிய மன்னர் யார்? சொல்வாயாக! 'நறுமணத்தைத் தன்னிடம் கொண்ட சுருண்ட கூந்தலையுடைய எம் இளைய பூங்கொடி போன்ற பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டாக மணம் பேசி வருமாறு அனுப்பிய செய்தியைக் கூறினாய். திருமுகத்தில் எழுதியுள்ள எழுத்து இதுவானால், அழகிய தலையில் எழுதப்

பட்டுள்ள விதி எழுத்தையும் ஆராய்ந்தறியும்படி நீ சென்று குடுமியுடன் பிடித்துத் தள்ளிக் கொண்டு வருவாயாக!'

**விளக்கம்**

மறம் என்பது தன் மகளை மணம் பேசும்படி ஓர் அரசனால் அனுப்பப்பட்ட தூதனை நோக்கி பெண் கொடுக்க மறுத்து அம் மன்னனை இகழ்ந்து பேசுவதாகும்.

வான் உலகில் உள்ள கற்பக மரத்தின் நுனியை அளாவி மாளிகைகள் உயர்ந்துள்ளன. அத்தகைய இயல்புடைய மதுரை. குடியாம் - குடிமக்கள் ஆவோம். சமர் - போர். திருமுகத்தில் எழுத்து - மணம் பேசி மன்னன் எழுதிய ஓலை. திருமுடியில் எழுத்து - தலை எழுத்து. சிகையாவது குடுமி; மணம் பேச அனுப்பிய மன்னனின் குடுமி. இது தூது பேச அனுப்பிய மன்னனின் தலையை வெட்டி வா என்ற பொருளையுடையது.

'சமரில் ஆற்றாது... சொன்னாய்' என்பது வரைய வந்த தூதனை நோக்கி மறவன் உரைத்தது. திருமுகத்தில் என்பது முதல் தன்னிடம் இருந்த ஒரு மறவனை நோக்கியுரைத்தது. (77)

## நீ நினைத்தது அது!

### குறம்

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

181. செல்லிட்ட பொழில்மதுரைத் தேவர்மணந் தடாதகா
 தேவிக் கன்று
சொல்லிட்ட குறுமகள்யான் தும்மலுநல் வரத்தேகாண்
 சுளகில் அம்மை
நெல்லிட்ட குறிக்குநீ நினைந்ததொரு பொருளதுநித்
 திலக்கச் சார்க்கும்
வல்லிட்ட குறியினொடும் வளையிட்ட குறியுளதோர்
 வடிவு தானே. (78)

**தெளிவுரை**

மேகங்கள் தங்குகின்ற சோலை சூழப் பெற்ற மதுரை நகரில் உள்ள சுந்தர பாண்டியரின் திருமணத்தைத் தடாதகைப் பெரு மாட்டிக்கு முன்னமே அறிந்து சொன்ன குறப் பெண் நான் ஆவேன். தும்மலும் நல்ல வரவாக உள்ளது. முறத்தில் நின் தாய் நெல்லைக் கொண்டு வந்து இட்ட குறியை ஆராய்ந்து கூறுமிடத்து நீ உள்ளத்தில் பெறக் கருதியது ஒரு பொருள் இருக்கின்றது. முத்துக்களால் ஆன கச்சுக் கொண்டு இறுக்கமாகக் கட்டப்பட்ட சூதாட்டக் கருவியைப் போன்ற கொங்கைகள் பட்ட தழும்பான குறியுடன் கை வளைப்பட்டதனால் ஆன தழும்புகளையும் உடைய ஒரு வடிவு தான் அது.

**விளக்கம்**

ஒரு குறத்தி தலைவியை நோக்கிக் குறி கூறுவதாய் பாடப்படுவது குறம்.

செல் - மேகம். தேவர் மணம் - பாண்டியர் தடாதகைப் பெரு மாட்டியார்க்கு நிகழ்ந்த திருமணம். சொல்லிட்ட - கூறிய. குறியைச் சொல்லத் தொடங்கும் போது அங்கு இருப்பவருள் ஒருவர்க்கு உண்டாகும் தும்மல் சகுனமாகக் கொள்ளப்படும். வரத்து - வரவு. சுளகு - சிறிய முறம். சுளகில் நெல்லை இட அதை எண்ணிப் பார்த்துக் குறி சொல்லத் தொடங்கினாள் குறத்தி. குறிக்கு - குறியின் பயன் யாது என்றால் நீ நினைத்தது ஒரு பொருள். அது இத்தன்மையது என்றாள் பின்னர். நித்திலம் - முத்து. கச்சு - பெண்டிர் மார்பில் அணியும் உடை. வல் - சூதாடு கருவி போன்ற வடிவுடைய கொங்கை.

நீ எண்ணியது பரமசிவம். அது அம்பிகையின் கொங்கைத் தழும்பையும் வளைத் தழும்பையும் கொண்ட வடிவம் கொண்டது என்பதாம்.

## சிவபெருமானிடம் கூறுபவர் எவரும் இலர்

### சந்தக் கலித்துறை

*செவிலி கூற்று; தோழி கூற்றுமாம்*

182. வடகலை அலபல கலையொடு தமிழ்வள ரும்கூடல்
விடவர வரையினர் திருமுன்இ தொருவர்வி ளம்பாரோ
குடதிசை புகையெழ வழலுமிழ் நிலவுகொ ழுந்தோடப்
படவர வெனவெரு வருமொரு தமியள்ப டும்பாடே. (79)

**தெளிவுரை**

மேற்குத் திக்கில் புகைமேல் எழுமாறு தீயைச் சொரிகின்ற இளம்பிறை ஒளியை வீச அதைக் கண்டு படத்தையுடைய பாம்பு என்று அஞ்சுகின்ற தனித்த இத்தலைவி அடைகின்ற துன்பத்தை வடமொழியும் மற்றப் பல மொழியும் தமிழ் மொழியும் வளர்வதற்கு இடமான மதுரையில் எழுந்தருளியுள்ள நஞ்சை யுண்ட பாம்பை அரைநாணாகக் கட்டியுள்ள சிவபெருமான் திருமுன்பு இதை எடுத்துக் கூறுபவர் எவரும் இலர்.

**விளக்கம்**

மதுரையில் வடகலையும் பலகலையும் தமிழும் வளரும் என்பதாம். விட அரவு அரையினர் - நஞ்சையுடைய பாம்பை இடையில் அணிந்த சிவபெருமான். திருமுனிதொருவர் - திருமுன் + இது + ஒருவர். குடதிசை - மேற்குத்திக்கு.

புகை எழும்படி நெருப்பைச் சொரிகின்ற நிலவு மேற்குத் திக்கில் கொழுந்தோட என்க. பிறையாதலால் மேற்குத் திக்கைக் கூறினார். படஅரவு என - நெருப்பைக் கண்டு அஞ்சும் படத்தை யுடைய பாம்பு எனத் தலைவி வருந்துகின்றாள். அவளது துன்பத்தை இறைவர்க்குக் கூறாரோ! என இயைகிறது. எவரேனும் போய்த் தூது உரைப்பின் நல்லது என்பது எச்சப் பொருள். தமியள் - தனித்திருப்பவள்; தலைவரைப் பிரிந்திருப்பவள். வெருவரும் -

அஞ்சும். பலநாட்டு மக்களும் மதுரையில் வாழ்ந்தனர். ஆதலால் 'வட கலைஅல பல கலையொடு தமிழ் வளரும்' என்றார். (79)

## குலக்கொழுந்து மதிக்கொழுந்துக்கு என் செய்வாள்?

### கட்டளைக் கலித்துறை

*செவிலி கூற்று*

183. பாட்டுக்கு உருகும் தமிழ்ச்சொக்க நாதர் பணைப்புயமே
வேட்டுக் குருகுமெய்ந் நாணும்விட்டாள்வண்டு மென்கிளியும்
பேட்டுக் குருகும்விட் டாளென்செய் வாளனல் பெய்யுமிரு
கோட்டுக் குருகு மதிக்கொழுந் துக்கென் குலக்கொழுந்தே. (80)

**தெளிவுரை**

நல்ல குடியில் பிறந்த கொழுந்தைப் போன்ற என் மகள், தமிழ்ப் பாட்டுக்கு உள்ளம் மகிழ்கின்ற சொக்கலிங்கப் பெருமானின் பருத்த தோள்களையே விரும்பிக் கைவளையலையும் தனக்கு இயல்பாக உள்ள நாணத்தையும் இழந்தாள். வண்டையும் மென்மையான கிளியையும் நாரைப் பெடையையும் அவரிடம் தூது விட்டாள். தீயைச் சொரியும் இரண்டு நுனிகளையுடைய வெண்மையான இளம்பிறை பொழியும் நிலவுக்கு என்ன செய்வாள்?

**விளக்கம்**

பாட்டுக்கு உருகும் - தமிழ்ப் பாடலைக் கேட்டு மனம் கனியும். இறைவர்.

குருகு - வளையல். பேட்டுக்குருகும் - பெண் நாரையும்; குருகு என்பது ஒருவகைப் பறவை என்பாரும் உளர். இரு கோடு குருகு மதிக் கொழுந்து - இரண்டு முனையைக் கொண்ட பிறைச் சந்திரனுக்கு. குருகு - குருத்து. விட்டாள் - தூதாக அனுப்பினாள். (80)

## மதுரையில் போய்த் தூது சொல்வீர்

## மேகவிடு தூது

### எழுசீர்ச் சந்த விருத்தம்

*தலைவி கூற்று*

184. ஏமவெற் பென்றுகயி லாயவெற் பென்றுமல
யாசலத் தென்று முறைவார்
கோமகட்கு அன்பர்மது ரேசர்முச் சங்கம்வளர்
கூடலில் சென்று புகலீர்
தாமரைக் கண்துயிலு மாலெனச் சந்தமலி
சாரலில் துஞ்சு முகில்காள்
மாமதிப் பிஞ்சுமிரை தேர்குயிற் குஞ்சுமுயிர்
வாய்மடுத் துண்டொ ழிவதே. (81)

**தெளிவுரை**

செந்தாமரை மலர் போன்ற திருக்கண் வளரும் திருமாலைப் போன்று சந்தன மரங்கள் நிறைந்த பொதிய மலைப் பக்கங்களில் தங்கியுள்ள மேகங்களே! சிறந்த இளம்பிறையும் இரையைத் தேடும் குயில் குஞ்சும் என் உயிரை வாயுள் கொண்டு உண்ண நான் ஒழிவதை, பொன்மயமான மேருமலையிலும் கயிலாய மலையிலும் பொதிய மலையிலும் எழுந்தருளியிருப்பவரும், மலயத்துவச பாண்டியரின் மகளான தடாதகைப் பெருமாட்டியின் கணவரும், மதுரையில் எழுந்தருளியிருப்பவரும், இனிய சிவ பெருமானுக்கு உரிமையான தலைச் சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் ஆகியவையும் வளர்ந்த மதுரையில் போய்ச் சொல்வீராக!

**விளக்கம்**

தலைவனைப் பிரிந்த ஒரு தலைவி அத்தலைவனிடம் மேகத்தைத் தூது விடுப்பதாக இச்செய்யுள் விளங்குகிறது. ஏம

வெற்பு - மேருமலை. என்று - எண் இடைச்சொல். மலயாசலம் - பொதிய மலை. சிவபெருமான் பொதிய மலையில் அகத்தி யர்க்குத் தன் மணக் கோலத்தைக் காட்டியருளினார். ஆதலால் அவர் பொதிய மலையில் இருப்பதாகக் கூறப்பட்டது. கோமகட்கு அன்பர்- அரசியான தடாதகைப் பெருமாட்டிக்குக் கணவர். முச்சங்கம் - மூன்று சங்கம்; தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம், இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ்க்கும் உரிய சங்கமுமாம். புகலீர் - கூறுவீராக. தாமரைக்கண் துயிலும்மால் - தாமரை போன்ற கண்ணை மூடி உறங்கும் திருமால். சந்தம்மலி - சந்தன மரங்கள் மிக்க. முகில்காள் - மேகங்களே. மாமதிப்பிஞ்சு - சிறந்த பிறைச் சந்திரன். குயில்குஞ்சு - குயிற் பறவையின் குஞ்சு. உயிர் வாய் மடுத்து உண்டு - என் உயிரை உண்டு. ஒழிவதே - ஒழிதலை. 'ஒழிதலைத் தலைவர்க்குப் புகல்வீர்' என இயைக்க.

சந்திரனின் ஒளியும் குயில் குரலும் காமத்தை மிகுவித்துத் துன்பத்தைத் தருதலால் 'உயிர்வாய் மடுத்து உண்டு' எனத் தலைவி யுரைத்தாள்.

மால் - கரிய நிறம் காரணமாக மேகத்துக்கு உவமை கூறப்பட்டது. (81)

## மகத்துவம் அனைத்தும் செப்பினுள் அடக்குவேன்!

### சம்பிரதம்

### சந்தவிருத்தம்

185. மட்டறுக டற்புவிய னைத்தும்ஓர்இ மைப்பினின்ம
றைத்துடன்வி டுத்தி டுவன்மற்று
எட்டுவரை யைக்கடலை முட்டியுள டக்கிடுவன்
இத்தனையும் வித்தை யலவால்
துட்டமத னைப்பொடிப டுத்திமது ரைக்குளுறை
சொக்கர்குண மெட்டி னொடுமா
சிட்டர்கள் துதித்திடும கத்துவம்அ னைத்துமொரு
செப்பினுள டக்கி டுவனே. (82)

## தெளிவுரை

அளவற்ற கடலால் சூழப்பட்ட உலகம் முழுவதையும் ஒரு நொடிப் போதில் மறையச் செய்து மீண்டும் புலப்படும்படி செய்வேன். இன்னும் எட்டாகிய குல மலைகளையும் கடல் களையும் ஒரு பிடியுள் அடக்கிவிடுவேன். இவ்வளவும் எங்கள் ஆற்றலுக்குப் பெரிய செயல் அன்று. கொடிய காமனைச் சாம்பலாக எரித்து மதுரையில் உள்ள சொக்க நாதரின் எட்டுத் திரு குணங்களுடன் பெரிய அடியார்கள் துதிக்கின்ற மகிமை அனைத்தையும் ஒரு சிமிழியினுள் அடக்கி விடுவேன்.

## விளக்கம்

மட்டு - அளவு; எல்லை. ஓர் இமைப்பினின் மறைத்து உடன் விடுத்திடுவன் - ஓர் இமைப் போதில் மறைத்து உடனே வெளிப் படச் செய்வேன். ஒருமுறை இமைப்பதால் மறையுமாறு செய்து உடனே இமையை மூடி விடுப்பேன் என்பது நேர் பொருள். கண்ணை மூடும்போது உலகம் மறைதலும் விழித்த போது உலகம் காணப்படுதலும் இயல்பு. இதனை உரைத்ததாகக் கொள்க.

எட்டு வரையைக் கடலை முட்டியுள் அடக்கிடுவன் - வாங்கி எட்டு மலைகளையும் கடலையும் மூடிய கைக்குள் அடக்கி விடுவேன் என்பது படக் கூறப்பட்டது. வாங்கிக் கொண்டு எள் துவரை கடலை என்னும் தானியங்களைக் கைப் பிடிக்குள் அடக்கி விடுவேன் என்பது நேர்பொருள்.

இத்தனையும் வித்தையல - என் ஆற்றலால் செய்யத் தக்கவை என வேறு உள்ளன என்ற பொருளுக்கு ஏற்ற குறிப்பையும் யாவரும் செய்தற்குரிய எளிய செயல்களே என்று செய்யும் பொருளுக்கு ஏற்ற குறிப்பையும் உடையது. துட்டமதன் - துஷ்டனான காமன்; கொடிய காமன். குணம் எட்டு - இறைவர்க்குரிய எட்டுக் குணங்கள். அவை வருமாறு: 1. தன் வயத்தனாதல் 2. தூய உடம்பினனாதல். 3. இயற்கையுணர்வின னாதல். 4. முற்றும் உணர்தல். 5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல். 6. பேரருளுடைமை 7. முடிவிலாற்றலுடைமை. 8. வரம்பி லின்ப முடைமை.

சிட்டர் - திருஞான சம்பந்த மூர்த்திநாயனார் முதலியவர்.

ஒரு செப்பு - ஒருவகைப் பாத்திரம்; சிமிழ். ஒரு சொல் அதாவது பிரணவம். இறைவனைப் போற்றித் துதிக்கும் துதிகள் பாராட்டுரைகள் அனைத்தையும் ஒரு சொல்லில் - பிரணவத்தில் - அடக்குவேன் என்றான்.

சம்பிரதம் என்பது இரசவாதத்தில் வல்லவன் தன் சிறப்பைத் தானே சொல்லல். அது செய்வதற்கு எளிய செயல்களையே செயற்கரிய செயல்களாகக் கூறுதல் இதன் இயல்பாகும். (82)

## மதனார் சிலை வளைத்தார்

### நேரிசை வெண்பா

*தலைவி கூற்று; தோழி கூற்றுமாம்*

186. அடுத்த பதஞ்சலியார் ரஞ்சலியா நிற்ப
எடுத்த பதஞ்சலியா ரேனும் - தடுத்தவற்கா
மாறிக் குனித்தார் மலைகுனித்தென் மாமதனார்
சீறிக் குனித்தார் சிலை. (83)

**தெளிவுரை**

சிவபெருமான் தம்மை அடைக்கலமாக அடைந்த பதஞ்சலி முனிவர் கைகூப்பித் தொழுதவண்ணம் நிற்க, தூக்கிய திருவடி மாறி அசையாமல் திருக்கூத்தாடியருளினார் ஆயினும், தடுத்த இராச சேகர பாண்டியனுக்காக அவர் கால்மாறி ஆடினார். மேருமலையை வில்லாக வளைத்ததால் என்ன பயனோ! வன்மை யுடைய காமன் சினந்து தன் கரும்பு வில்லை வளைத்து அம்பு தொடுத்தார்!

**விளக்கம்**

அடுத்த பதஞ்சலியார் - தம்மை அடைக்கலமாக அடைந்த பதஞ்சலி முனிவர். எடுத்த பதஞ்சலியார் - எடுத்த + பதம் +

சலியார்; ஆடுதற்காகத் தூக்கிய திருவடி சலிக்காதவர். தடுத்தவற்கா - தடுத்த இராச சேகரப் பாண்டியனுக்காக. மாறிக் குனித்தார் - கால் மாறி ஆடினார். இராச சேகர பாண்டியன் ஆடற் கலையைக் கற்றான். அப்போது ஆடுதலில் உண்டாகும் துன்பத்தையுணர்ந்தான். தமக்குத் துன்பம் உண்டாவது போலவே நெடுங்காலமாகத் தூக்கி நின்றாடும் இறைவர்க்கும் துன்பம் உண்டாகுமே என்று எண்ணி இறைவரிடம் கால் மாற்றி ஆட வேண்டும் என வேண்டிக் கொண்டான். இறைவர் அவ்வாறே ஆடினார். இதுவே இங்குத் தடுத்தவற்கா மாறிக் குனித்தார் எனப்பட்டது.

மலை குனித்து என் - மேருமலையை வில்லாக வளைத் ததால் என்ன பயன். சிலை - வில். இவர் வளைத்ததால் என்ன பயன்? காமன் தன் செயலைக் கை விடவில்லையே என்றாள். மாமதனார் - ஆர் விகுதி இகழ்ச்சிக் குறிப்பு. (83)

## மதுரேசர் தந்த வரமே!

### எழுசீர்ச் சந்தவிருத்தம்

### *செவிலி கூற்று*

187. சிலையோ கரும்புபொரு கணையோ அரும்புசிவ
சிவஆ வியொன்றும் உளதோ
இலையோ அறிந்திலமிம் மதனாண் மையென்புகல்வது
இதுவே தவம்பி றிதெனாம்
முலையே யணிந்தமுகிழ் நகையீ ரொர்பெண்கொடியின்
முலையோடு முன்கை வளையால்
மலையே குழைந்திடுதம் இருதோள் குழைந்துறைநம்
மதுரே சர்தந்த வரமே. (84)

**தெளிவுரை**

முல்லை அரும்பைப் போன்ற பற்களையுடைய மடந்தை யரே! மன்மதனின் வில்லோ கரும்பு. போர் செய்யும் அம்புகளோ

அரும்பு. ஆ! காமனுக்கு உயிர் ஒன்று உள்ளதோ இல்லையோ! அறியோம். இக்காமனின் வன்மை யாது எனப் புகல்வது? இந்த வன்மை அவனுக்கு அமைந்தது சிறந்த தவமாம்! வேறு ஆண்மை யால் பயன் என்ன? ஒரு பூங்கொடியைப் போன்ற மடந்தையின் முலைகளாலும் முன்னங்கை வளையல்களாலும் மேருமலையும் குழைதற்குக் காரணமான இரண்டு தோள்களும் நெகிழ்ந்த தம் மதுரைச் சொக்கநாதர் அவனுக்குத் தந்தருளிய வரமாகும்.

**விளக்கம்**

சிலை - வில். பொருகணை - போர் செய்யும் அம்பு. சிவசிவ - இரக்கத்தை உணர்த்தி வரும் சொல். ஆவியாவது தலைவியின் உயிர். வலிமை இல்லாத வில்லையும் அம்பையும் கொண்ட மன்மதன் இவளது ஆவி இருக்கின்றதோ இல்லையோ என்னுமாறு செய்தான். அவனது ஆண்மையும் செய்த தவமும் சிறந்தவை என்றாள் தலைவி. இதுவே தாம் - இதுவே உண்மையான தவம். பிறிது என் - வேறு என்ன? முலை - 'முல்லை' என்பதன் இடைக் குறை விகாரம். முகிழ்நகை - தோற்றிய சிரிப்பு. ஒரு பெண் கொடி - உமையம்மையார். குழைந்திடும் - குழைவதற்குக் காரணமான. மதனின் ஆண்மை மதுரேசர் தந்த வரத்தினால் ஆயது என்பது கருத்து.

இது காதல் கொண்ட தலைவி ஒருத்தி வருந்தியுரைப்பது!

(84)

## கண்களால் காண்பாய்!

## உருவவெளிப்பாடு

### கட்டளைக் கலித்துறை

188. வரும்புண்டரீகம் இரண்டாலொர் கல்லுமென் வன்னெஞ்சமாம்
இரும்பும் குழைத்த மதுரைப் பிரான்வெற்பில் ஏழ்பரியோன்
விரும்பும் தடமணித் தேர்வல வாவெஞ் சுரமிதன்றே
கரும்பும் கனியும் மிளநீரும் பாரெங்குங் கண்களினே. (85)

**தெளிவுரை**

திருக்கை திருவடி என்ற இரண்டு செந்தாமரை மலர்களாலும் (மேருவாகிய) ஒரு மலையையும், என் வலிய மனமாகிய இரும்பையும் வளையச் செய்கின்ற மதுரையில் சொக்க நாதரின் மலையில் ஏழு குதிரைகளையும் உடைய கதிரவனும் விரும்பும் பெரிய அழகிய தேரை ஓட்ட வல்ல பாகனே! இந்த இடம் வெப்பம் மிக்க பாலை நிலம் அன்றோ! எல்லாவிடத்தும் கரும்பையும் பழத்தையும் தென்னையின் இளங்காயையும் கண்களால் காண்பாயாக!

**விளக்கம்**

வினை முற்றி மீளும் தலைவன் இடைவழியில் தலைவியின் உருவெளித் தோற்றத்தைக் கண்டு தேர்ப் பாகனொடு கூறியது. புண்டரீகம் இரண்டு - திருவடி, திருக்கை. கல் - மேருமலை. அதனைக் குழைத்த புண்டரீகம் என்றது இறைவியின் கைகளை. நெஞ்சம் என்ற இரும்பைக் குழையச் செய்த புண்டரீகம் இரண்டு என்றது திருவடிகளை. ஏழ்பரியோன் - ஏழு குதிரைகளைப் பூட்டிய தேரையுடைய கதிரவன். அவன் விரும்புதல் என்பது இவன் தேரை ஓட்டற்குத் தக்கவன் என்று விரும்புதல். வலவன் - தேர் ஓட்டி; இது 'வலவா' என்று விளியேற்றது.

வெஞ்சுரமிதன்றே - வெம்சுரம் + இது + அன்றே - வெப்பம் உடைய பாலை நிலம் இதுவன்றோ. கரும்பும் கனியும் இளநீரும் பார் - கரும்பையும் (தலைவியின் புருவத்தையும்) கனியையும் (தலைவியின் உதட்டையும்) இளநீரையும் (தலைவியின் கொங்கைகளையும்) பார்ப்பாயாக!

பாலை நிலத்தில் கரும்பு தோன்றியது என்னே வியப்பு என்பது கருத்து. (85)

## சந்திரன் என்ற தீ!

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*தலைவி கூற்று*

189. கருவிட்ட காடெறிந்து கடம்பவனத் திருப்பீரும்
கடுக்கைக் காட்டின்
மருவிட்ட கொள்ளைவெள்ள மடுப்படிந்து மூண்டெழுமால்
மதித்தீக் கெட்டேன்
செருவிட்ட விழிமடவார் வாயிட்டுச் சுடுவதல்லாற்
செங்கை யிட்டும்
எருவிட்டு மூட்டிடநீர் விறகிட்டு மூட்டியவா
என்சொல் கேனே. (86)

**தெளிவுரை**

அடியார்களின் கருப்பமாகிய காட்டை வெட்டிக் கடம்பவனத்தில் இருப்பவரே! சந்திரனாகிய தீ உம் கொன்றை மலர்த்தொகுதியின் நறுமணம் வாய்ந்த கங்கையாற்றின் வெள்ள மாகிய மடுவில் முழுகி மேலே எழுகின்றது. நான் கெட்டேன்! போர் செய்கின்ற கண்களையுடைய மகளிர் தம் வாயால் சொல்லும் பழி மொழியால் என்னை வருத்துவதல்லாது சிவந்த தம் கையினால் சேர்க்கப்படுகிற எருக்களை மேலே இட்டு அந்தச் சந்திரனான தீயை மேலே மூளச் செய்ய நீர் விறகை இட்டு வளர்த்த விதத்தை நான் என்னவென்று உரைப்பேன்?

**விளக்கம்**

கரு இட்டகாடு எறிந்து - கருப்பத்தில் செலுத்தும் பிறவியின் தொகுதியைப் போக்கி. கடம்பவனம் - மதுரை நகர். கடுக்கைக் காட்டின் மரு - கொன்றை நாட்டின் நறுமணம்.

வெள்ளம் - கங்கை நீர். படிந்து - மூழ்கி. மூண்டு எழும் - மேலே எழும். சிவபெருமானின் திருமுடியில் கொன்றை கங்கை

சந்திரன் என்பன ஒருங்கிருத்தலால் இவ்வாறு கூறினார். நீருள் படிந்தும் சந்திரனான தீ எழுந்தது என்பது ஓர் அணிநயம் கொண்டது. அது விரோதாலங்காரம். செருவிட்ட - போர் செய்த. வாய் இட்டுச் சுடுவதல்லால் - (அவர்கள்) கூறும் பழியினால் வருந்துவதல்லாது.

செங்கை இட்டும் எருஇட்டும் மூடிட - மகளிர் எருவட்டையைக் கையால் விசிறித் தீ மூட்டுதல் இயல்பு. ஆதலால் எருவிட்டும் மூட்டிட என்றார்.

சோம சுந்தரப் பெருமான் விறகு சுமந்த காலத்தில் அவர் திருமுடிமேல் சந்திரன் இருப்ப அதன் மேல் விறகு வைக்கப் பட்டதை விறகிட்டு மூட்டியதாகச் சொன்னாள். மூட்டியவா - மூட்டியவாறு. இப்பகுதி விறகு சுமந்த திருவிளையாடலை உணர்த்துகிறது. (86)

## காமனின் வில்லை முறித்தால் குறைவுண்டோ!

### கலி நிலைத்துறை

### *தலைவி கூற்று*

190. என்போடு உள்ளமும் நெக்குரு கப்புக் கென்போல்வார்க்கு
அன்போ டின்பு மளித்தருள் கூடலெம் மடிகேளோ
தன்போற் காமன் சாப முடித்தால் தாழ்வுண்டே
முன்போர் காமன் சாப மனைத்து முடித்தாய்க்கே. (87)

### தெளிவுரை

எலும்பும் உள்ளமும் நெகிழ்ந்து கரையும்படி எழுந்தருளி என்னைப் போன்ற இளமகளிர்க்கு அன்பையும் இன்பத்தையும் அளிக்கின்ற மதுரையில் வீற்றிருக்கின்ற தெய்வமே! முன்பு ஒப்பில்லாத கற்பகச் சோலைக்குத் தலைவனான இந்திரனின் குருவைக் கொன்ற குற்றம் முழுவதும் ஒழித்திட்ட உமக்கு, தன்னைத் தானே ஒத்துள்ள மன்மதனின் வில்லை முறித்தால் - அழித்தால் - யாது குறையுள்ளது?

**விளக்கம்**

என்போடு - எலும்புடன். நெக்கு உருக - நெகிழ்ந்து உருக. இன்பும் - இன்பத்தையும். அடிகேளோ - இறைவரே! ஓ - அசை. தன் போல் காமன் - தன்னைத் தானே ஒத்த காமன். சாபம் - வில். முன்போர் காமன் சாபம் - ஓர் + கா + மன் + சாபம் - ஒப்பற்ற இந்திரனின் சாபத்தை. கா - கற்பகச் சோலை. இத்தலத்தில் தான் இறைவர் இந்திரனின் சாபத்தைத் தீர்த்தார்.

முன்பு ஒரு காமனின் சாபத்தை முடித்த நினக்கு இப்போது இக்காமனின் சாபத்தையும் முடித்தால் தாழ்வு உண்டோ என்றாள் தலைவி. (87)

## நின் திருவடிகளை வணங்கித் துதிப்போம்.

### நேரிசை யாசிரியப்பா

191. முள்தாள் பாசடை நெட்டிதழ்க் கமலத்து
இரைவர வுறங்கும் குருகு விரிசிறைச்
செங்கா னாரைக்குச் சிவபதங் கிடைத்தெனப்
பைம்புனன் மூழ்கிப் பதும பீடத்
5 தூற்றமி றாமு முலப்பில் பஃறவம்

வீற்றுவீற் றிருந்து நோற்பன கடுக்கும்
குண்டுநீர்ப் பட்டத் தொண்டுறைச் சங்கமும்
வண்தமிழ்க் கடலின் தண்டுறைச் சங்கமும்
முத்தகம் பயின்று காவியம் கற்றுச்
10 சித்திரப் பாட்டியல் தேர்ந்தன செல்லும்

தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூடல்
இடங்கொண் டிருந்த இமையா முக்கண்
கருமிடற் றொருவநின் திருவடி வழுத்துதும்
தாய்நலம் கவருபு தந்தையுயிர் செகுத்தாங்கு
15 இருபெருங் குரவரின் ஒருபழி சுமந்த

புன்தொழி லொருவற்குப் புகலின்மை தெரீஇ
அன்றருள் சுரந்த தொன்றோ சென்றதோர்
வலியாற் கருள்வதூஉம் நோக்கி
எளியார்க் கெளியைமற் றென்பது குறித்தே. (44)

## தெளிவுரை

முள்ளையுடைய தண்டையும் பசுமையான இலையையும் நீண்ட இதழையும் உடைய தாமரை மலரில், தனக்கு ஏற்ற உணவு ஆன பெரிய மீன் வருகின்ற வரையில் உறங்குவதைப் போல் உள்ள பரந்த இறகுகளையும் சிவந்த கால்களையும் உடைய நாரைக்குச் சிவபதம் கிட்டப் பெற்ற இடம் என்று நினைத்து, பற்றுக் கோடு இல்லாத தாமும் குளிர்ந்த நீரில் ஆடிப் பதுமாசனத்தி லிருந்து ஒழியாத பல தவங்களைத் தனித்தனியே செய்வதைப் போல் தோன்றும், ஆழமான நீரையுடைய பொன் தாமரைக் குளத்தில் ஒளி பொருந்திய நீர்த்துறையில் உள்ள சங்குகளும் வளமையான தமிழ்க் கடலின் இனிய துறைகளில் பயின்ற புலவர் சங்கங்களும், முத்துக்கள் அங்கும் பயிலப் பெற்று (முத்தகச் செய்யுளில் பழகி) நீரை விட்டு வெளியேறிச் சோலைகளுக்குள் நடக்காமல் காப்பியங்களைப் பயிற்சி செய்து அழகிய இசையினது கூறுபாட்டை ஆராய்ந்து ஒலித்து (சித்திரக் கவிகளையும் பாட்டு இலக்கண நூல்களையும் ஆராய்ந்து அறிந்தனவாகி) தவழ்ந்து செல்லும் பெரிய வயல்கள் சூழ்ந்த இனிய தமிழ் வழங்கும் மதுரையைத் தாம் வழங்கும் இடமாகக் கொண்டு வீற்றிருக்கின்ற இமைக்காத மூன்று கண்களையும் கரிய கழுத்தையும் உடைய கடவுளே! தாயின் இன்பத்தை அனுபவித்துத் தந்தையின் உயிரைக் கொன்று அவ்விருவர்க்கும் செய்த (தாயைப் புணர்தல், தந்தையைக் கொல்லல் ஆகிய) ஒப்பில்லாத பழியையும் பாவத்தையும் மேற்கொண்ட இழிந்த செய்கையுடைய ஒருவனுக்கு உன்னை யல்லாது வேறு காவல் இல்லாமையை அறிந்து அக் காலத்தில் அவனுக்கு அருள் புரிந்தது மட்டுமோ, நின்னிடம் வந்து அடைக்கலம் புகுந்த ஒரு கரிக் குருவிக்கு நீ திருவருள் செய்ததையும் கண்டு எளியவர்க்கு எளிதில் அருள் செய்யும்

தன்மை உடையாய் என்று நினைத்து யாம் நின் திருவடிகளை வணங்கித் துதிப்போம்.

**விளக்கம்**

முட்டாட் பாசடை நெட்டிதழ்க்கமலம் - முள்ளையுடைய தண்டையும் பசிய இலையையும் நீண்ட இதழையுமுடைய தாமரை மலர். குருகு - நாரை. இரை வர உறங்கும் - தனக்கு ஏற்ற பெருமீன் ஆகிய இரை வரும்வரை உறங்குகின்ற. பதும பீடம் -தாமரை ஆகிய இருக்கை.

ஒரு நாரை சொக்கநாதரின் அருட்சிறப்பைக் கேட்டு மதுரைக்கு வந்து பொற்றாமரைக் குளத்தில் நீராடிக் கோயிலை வலம் வந்து வணங்க அதற்கு இறைவர் முத்தியைத் தந்தார் என்பது திருவிளையாடல் புராண வரலாறு.

பஃறவம் - பல் + தவம். நோற்பன கடுக்கும் - நோற்பதைப் போல் விளங்கும். ஊற்றம் - மனத்திட்பம். உலப்பில் - அழிவில்லாத. வீற்று வீற்று இருந்து - தனித்தனியே அமர்ந்திருந்து. கடுக்கும் - ஒக்கும்.

(7-10) சங்கிற்கும் தமிழ்ச்சங்கத்துக்கும் சிலேடை; குண்டு நீர் - ஆழமான நீர். பட்டம் - குளம். சங்கம் - சங்கு; தமிழ் என்ற கடலின் குளிர்ந்த துறைகளைப் பயிலும் சங்கமும். இங்குச் சங்கம் என்றது புலவர் கூட்டத்தை.

சங்கு முத்தினை வயிற்றகத்தில் கொண்டு காவில் பயில்வது அற்று, சித்திரமான பாட்டின் இயல்பைத் தேர்ந்து முழங்கு வனவாய்ப் போகும் என்க. கா - சோலை. இயங்கு - இயங்குதல். சித்திரம் - அழகு. பாட்டு - பலவகை ஒலி.

தமிழ்ச்சங்கம் முத்தகம் என்ற செய்யுள்களைப் பயின்று காவியங்களைக் கற்றுச் சித்திரங்களின் இலக்கணங்களை ஆராய்தலுற்று நடைபெறும். முத்தகம் என்பது வினை முற்றுப் பெற்று வரும் தனிச் செய்யுள். பாட்டியல் - பாவின் இயல்பை உரைக்கும் பாட்டியல் இலக்கணமும் ஆகும்.

(11-19) தடம்பணை - பெரிய வயல்கள். கூடல் - மதுரை. இமையா முக்கண் - இமைத்தல் அற்ற மூன்று கண்கள். கருமிடறு - கரிய கழுத்து. ஒருவ - ஒப்பில்லாதவனே! வழுத்துதும் - வணங்கு கிறோம்.

தாய் நலம் கவர்பு - தாயின் அழகை நுகர்ந்து; அதாவது தாயைப் புணர்ந்து. தந்தை உயிர் செகுத்து - தந்தையின் உயிரை அழித்த. இவ்வாறு கொடுமையாற்றிய மறையவனுக்கு வந்த பெரும் பாவத்தை நீக்கிய வரலாற்றை மாபாதகம் தீர்த்த திரு விளையாடலால் உணரலாம்.

புகல் இன்மை - அடைக்கலமாய் அடையும் இடம். தெரீஇ - தெரிந்து. வலியாற்கருள்வதூஉம் - வலியான் என்ற குருவிக்கு அருள் செய்வது. வலியான் - கரிக்குருவி. எளியார்க்கு எளியை - எளியவர்க்கு எளிமையாதல் எண்ணி எளியேமாகிய எம்மையும் ஆண்டருள் என்ற கருத்தினால் வழுத்துவோம் என இயையும்.

(88)

## மதுரேசர் தலையில் சூடும் சந்திரன் என்று கூறும் காரணம் விளங்கவில்லை

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*இது பிறையை நோக்கித் தோழி கூறியது*

192. குறுமுயலும் சிலகலையும் இழந்தொருமான் உயிரைக்
கொள்ளைகொள்ள வெழுந்தமதிக் கூற்றே யாற்றாச்
சிறுதுயிலும் பெருமூச்சுங் கண்டுமிரங் கலையால்
தெறுமறலி நீயேயித் தெண்ணி லாவும்
எறியுநெடும் பாசமே யுடலுமறக் கூனி
இருணிறமு முதிர்நரையால் இழந்தாய் போலும்
நறுநுதலார் என்கொலுனை மதுரேசர் மிலைச்சும்
நாகிளவெண் திங்களௌன நவில்கின் றாரே. (89)

### தெளிவுரை

சிறு முயல் களங்கத்தையும் சில ஒளிக் கூறுகளையும் நீக்கி ஒரு மான் போலும் இவளது உயிரைக் கவர்ந்து போக வந்த இளம்பிறையான இயமனே! இவளது பொறுக்க முடியாத சிறிய உறக்கத்தையும் பெரு மூச்சையும் பார்த்தும் நீ இரங்கவில்லை. உயிர்களைக் கவர்கின்ற நீயே இயமன் ஆவாய்! தெளிவான உன் ஒளியும் இயமனான நீ உயிர்களின் மேல் வீசும் பெரிய காலமுமே ஆகும். உடலும் மிக வளையப் பெற்றுக் கரிய நிறமும் முதிர்ந்த நரையான வெண்மையான நிறத்தால் இழந்து விட்டாய் போலும்! இவ்வாறிருக்க, அழகிய நெற்றியையுடைய இளம் பெண்கள் உன்னை என்ன காரணத்தால் சோமசுந்தரர் முடியில் சூடுகின்ற மிகவும் இளமையான வெண்மையான சந்திரன் எனக் கூறுகிறார்கள்? அதன் காரணம் விளங்கவில்லையே!

### விளக்கம்

முயல் - களங்கம். கலை - கிரணம். பிறைச்சந்தினுக்குக் களங்கமில்லை. ஆதலால் முயலை இழந்ததாகக் கூறினாள். சந்திரனே, நீ ஒரு முயலையும் ஆண்மானையும் இழந்து விட்டு வேறொரு பெண்மானின் உயிரைக் கவர எழுந்தாய் என்பது இங்குப் பொதிந்துள்ள இகழ்ச்சிப் பொருள். ஒரு மான் என்றது தலைவியை. ஆற்றா - பொறுக்க இயலாத. இரங்கலையால் - இரக்கம் கொள்ளவில்லை. தெறுமறலி - கொல்லும் இயமன். தெண்ணிலா - தெளிவான நிலவு ஒளி. பாசம் - கயிற்றின் வடிவில் அமைந்த ஓர் ஆயுதம். இயமனுக்கு இயல்பான உடல் நெறிப்பும் கருநிறமும் முதுமையால் ஒழிந்தனவாகக் கூறினார். நறுநுதலார் - நல்ல நெற்றியையுடைய மடந்தையர். மிலைச்சும் - சூடும். நாகிள வெண்திங்கள் - மிக இளைய வெண்மையான திங்கள். நவில்கின்றார் - கூறுகின்றனர். (89)

## ஐயத்தைப் போக்குவது கொடுமையே ஆகும்.

பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

193. நவ்வி யங்கண் மானு மானு மினிது கந்தி டம்கொள்வார்
நஞ்ச மார்ந்தென் னெஞ்ச மார்ந்து நனிக ளங்க றுத்துளார்
கைவி ளங்கு குன்று மன்றுங் கோவி லாக்கு னித்துளார்
கன்னி நாடர் மதுரை வாணர் கயிலை வெற்பர் வெற்பனீர்
கொவ்வை வாய்வி ளர்ப்ப மைக்க ருங்க ணுஞ்சி வப்பவே
குளிர்த ரங்க வைகை நீர்கு டைந்து டன்தி ளைத்திரால்
பைவி ரிந்த வல்கு லீரும் மன்னை மார்கள் சங்கையிற்
படில வர்க்கு வீணி னீவிர் பரிக ரித்தல் பாவமே. (90)

### தெளிவுரை

சிவபெருமான், மானின் பார்வையைப் போலும் பார்வையை யுடைய பெண்ணான உமையம்மையாரையும் மானையும் தனித்தனி இனியனவாய் விரும்பி முறையே இடப் பக்கத்தும் இடக்கையிலும் கொண்டவர். ஆலகால நஞ்சையுண்டு நல்ல கழுத்துக் கறுத்துள்ளவர். என் மனத்தில் நிறைந்து மனக் குற்றத்தை நன்கு தீர்த்தவர். கையில் விளங்கும் இமய மலையையும் பெரிய வில்லாக வளைத்தவர். பொன்னம் பலத்தையும் வெள்ளியம்பலத்தையும் ஆலயமாகக் கொண்டு அவற்றில் திருக்கூத்து ஆடியவர். பாண்டிய நாட்டை உடையவர். அத்தகையவரின் மலையை ஒத்துச் சிறந்த மடந்தையரே!

கொவ்வைப்பழம் போல் சிவந்துள்ள உம் உதடுகள் வெளுக்கவும் மையிட்ட கருமையான கண்கள் சிவக்கும்படியும் குளிர்ந்த அலைகளையுடைய வையை ஆற்றின் நீரிலே முழுகி அதில் விளையாடினீர். பாம்பின் படத்தைப் போன்று பரந்த அல்குலை உடையவர்களே! உம் அன்னையர் ஐயம் கொண்டால் அவர்களுக்கு வீணாக நீங்கள் அந்த ஐயத்தைப் போக்குவது கொடுமையே ஆகும்!

**விளக்கம்**

நவ்வியம் - மான். அம்கண் - அழகிய கண் பார்வை. மானும் மானும் - ஒத்திருக்கும் உமையாளான மான் போன்றவள். இனிது கந்திடங் கொள்வார் - இனிது + உகந்து + இடம் + கொள்வார் - இனிதாய் விரும்பி இடப்பக்கத்திலும் இடக் கையிலும் கொண்டிருப்பவர். நஞ்சமார்ந் தென்னெஞ்சமர்ந்து நனிகளங்கறுத்துளார் - நஞ்சம் + ஆர்ந்து + என் + நெஞ்சு + அமர்ந்து + நனி + களம் + கறுத்தார்; விடத்தை உண்டு என் மனத்தில் நிறைந்து மனக்குற்றத்தை நன்கு தீர்த்தருளியவர்.

குன்று - இமய மலை. கோவிலாக்குனித்துளார் - கோ + விலா + குனித்து + உளார்; பெரிய வில்லாக வளைத்துள்ளவர். மன்று - பொன்னம்பலம்; வெள்ளியம்பலம். கயிலை வெற்பர் - கயிலை மலையை உடையவர். வெற்பனீர் - வெற்பு + அனீர்; மலையைப் போன்றவரே. விளர்ப்ப - வெளுக்க. மைக்கருங்கணும் - மை தீட்டப் பெற்ற கருமையான கண்ணும். குளிர் தரங்க வைகை நீர் - குளிர்ந்த அலையையுடைய வையை ஆற்று நீர். திளைத்திர் - விளையாடுகின்றீர். பை விரிந்த அல்குலீர் - பை + விரிந்த + அல்குலீர்; பாம்பின் படம் போன்ற அல்குலை உடைய பெண்களே! சங்கையில் படில் - ஐயம் கொண்டால். பரிகரித்தல் - போக்குதல். பாவம் - கொடுமையாகும். தாய்மாரின் ஐயத்தைப் போக்குதல் அரிது என்பது கருத்து. (90)

## மகளிர் நின்னை விரும்புவது இயற்கையே!

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

*கண்டோர் கூற்று*

194. பாமிக்குப் பயில்மதுரைப் பரஞ்சுடரே ஒருத்திகயல்
பார்வை மட்டோ
காமிக்கு மடந்தையர்கண் கயலெல்லாம் உமையடைதல்
கணக்கே யன்றோ

மாமிக்குக் கடலேழும் வழங்கினீரொருவேலை
மகனுக்கு ஈந்து
பூமிக்குள் கடலைவறி தாக்கினீர் பவக்கடலும்
போக்கி னீரே. (91)

## தெளிவுரை

செந்தமிழ்ப் பாடல்கள் மிக்கு வழங்குகின்ற மதுரையில் எழுந்தருளிய முதன்மையான ஒளி வடிவான இறைவரே! நீவிர் உம்முடைய மாமியாரான காஞ்சன மாலைக்கு ஏழுகடல்களையும் கொடுத்தருளினீர். ஒரு வேற்படையை நின் மகனான உக்கிர குமாரனுக்குத் தந்து உலகத்தில் உள்ள கடல் வற்றும்படி நின் அடியவர்க்குப் பிறவியான கடல்களையும் ஒழித்தீர். ஆதலால் மீனாட்சியம்மையின் கண் ஒன்று மட்டுமோ விரும்பும் மடந்தை யரின் கண்ணாகிய கயல் மீன்கள் எல்லாம் உம்மிடம் வந்து சேர்தல் முறையே ஆகும் அன்றோ!

ஏழுகடலை மாமிக்குத் தந்து, ஒரு வேலை மகனுக்குத் தந்து, பூமியில் கடலை வற்றச் செய்து, அடியாரின் பிறவிக்கடலையும் போக்கியதால் கயல்கள் தாம் வாழ்வதற்கு இடங்களைப் பெறாமல் உம்மை அடைந்தன. இது நியாயமே ஆகும் என்பது கருத்து.

## விளக்கம்

பாமிக்கு - பா + மிக்கு; பாடல்கள் மிக்கு. பரஞ்சுடரே - மேலான ஒளியே. ஒருத்தி - உமையம்மையார். காமிக்கும் - விரும்பும். மாமியாவார் - காஞ்சனமாலை. அவர்க்குக் கடல் ஏழும் வழங்கியது - நீராடும் பொருட்டு மதுரையில் உள்ள ஒரு சிவ தீர்த்தத்தில் ஏழு கடல்களும் வரும்படி செய்தது.

ஒரு வேலை - ஒரு வேல் என்ற படையை; ஒரு கடலை என்ற மற்றொரு பொருள். மகன் என்றது உக்கிர குமார பாண்டியன். அப்பாண்டியன் கடல் வற்றும்படி வேலை விட்டதால் 'கடலை வறிதாக்கினீர்' என்றார். பவக்கடல் - வெற்றிக் கடல். (91)

## பசலை பரவப் பெற்றுத் துன்புறுகிறாள்

### *தோழி கூற்று*

(இறைவரைக் கண்டு காதல் கொண்ட தலைவியின் நிலைக்கு இரங்கிக் கூறியது)

195. நீரோடு குறுவெயர்ப்பு நெருப்போடு நெட்டுயிர்ப்பும்
நெடுங்கண் நீரில்
பீரோடு வனமுலையும் குறையோடு நிறையுயிரும்
பெற்றா ளன்றே
காரோடு மணிகண்டர் கடம்பவனச் சொக்கர்நறை
கமழ்பூங் கொன்றைத்
தாரோடு மனம்செல்லத் தளையோடும் தான்செல்லாத்
தமியள் தானே. (92)

**தெளிவுரை**

கரிய நிறம் உடைய நீலமணி போன்ற கழுத்தை யுடையவர்க்குக் கடம்ப வனத்தில் வீற்றிருக்கின்ற சொக்க நாதரின் நறுமணம் வீசுகின்ற அழகிய கொன்றையுடன் சேர்ந்து தன் மனம் போய்விடத் தன் தாயோடு இருப்பதால் தான் போகமாட்டாத அந்தச் சொக்கரையன்றி வேறு கதியில்லாத தனியளான இத்தலைமகள், நீராக ஓடும் சிறிய வியர்வைத் துளிகளையும் தீயைப் போல மேல் எழும் வெப்பம் பொருந்திய பெரு மூச்சையும் பெரிய கண்ணீருடனே பசலையுடைய அழகிய கொங்கைகளையும் குறைவுடன் நிறைந்த உயிரையும் அடைந்துள்ளாள்.

**விளக்கம்**

சிவபெருமானைக் கண்டு காதல் கொண்ட தலைவியை நோக்கித் தோழி சொன்னது. செவிலித்தாய் கூறியதுமாம்.

நீரோடு குறுவெயர்ப்பு - நீராக ஓடும் குறிய வேர்வை. நெருப்பு - வெப்பம். நெட்டுயிர்ப்பு - நீண்ட பெருமூச்சு. பீர் - பசலை; பீர்க்கம் பூவைப் போன்ற பொன் நிறம் உடையது பசலை. ஆதலால் 'பீர்ஓடும்' என்றார். குறையோடு நிறையுயிர் - குறையுடன் நிறைந்த உயிர். காரோடு மணிகண்டர் - கருமை பொருந்திய நீல மணிபோன்ற கழுத்தை உடையவர். நறை கமழ் பூங்கொன்றை - நறுமணத்தையுடைய அழகிய கொன்றை. தளையோடும் - தள்ளையோடும்; தாயுடன். தள்ளை - தாய். இவை உண்டாகா என்பது குறிப்பு. (92)

## தமிழ்ப் பெருமையை யார் அறிவார்?

பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

196. தமரநீர்ப் புவனம் முழுதொருங் கீன்றாள்
தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவும் தனிமுத லொருநீ
சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி யுக்கிர னெனப்பேர்
கொண்டதும் தண்தமிழ் மதுரம்
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக்
கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்
பமரம்யாழ் மிழற்ற நறவுகொப் புளிக்கும்
பனிமலக் குழலியர் பளிக்குப்
பானிலா முன்றில் தூநிலா முத்தின்
பந்தரில் கண்ணிமை யாடாது
அமரர்நா டியரோ டம்மனை யாட
ஐயநுண் ணுசுப்பள வலவென்று
அமரரு மருளும் தெளிதமிழ்க் கூடல்
அடலரா அலங்கல்வே ணியனே. (93)

**தெளிவுரை**

(அடி3) வண்டுகள் யாழ் இசைபோல் ஒலி செய்யத் தேனைச் சிந்தும் குளிர்ச்சியுள்ள மலர்களை அணிந்த கூந்தலையுடைய மானுட மகளிர், பளிங்குக் கல்லால் ஆன வெண்மையான நிலா முற்றத்தில் தூய்மையான நிலவு போல் ஒளி வீசும் வெண்மையான முத்துக்களால் ஆன பந்தலில் கண்கள் இமைக்காமல்

(அடி4) தெய்வ மகளிருடன் அம்மானை ஆட, ஐயம் இடையில் மட்டுமன்று என்று எண்ணித் தேவர்களும் திளைக்கின்ற தெளிவான தமிழ் வழங்கும் மதுரையில் எழுந்தருளியுள்ள வன்மையான பாம்புகளால் கட்டப்பட்டு மாலையாகச் சூடிய சடையை உடைய சோமசுந்தரப் பெருமானே!

(அடி1) ஒளியையுடைய கடல் நீரால் சூழப்பட்ட உலகம் முழுவதையும் ஒரு சேரப் பெற்றவளான உமையம்மை தடாதகை என்ற பெயரைப் பெற்று மதுரைப் பதியில் வந்து தோன்றியதும்! ஒப்பில்லாத கடவுளான நீ சுந்தர பாண்டியனாகி மதுரையை ஆள வந்ததும்

(அடி2) முருகப் பெருமான் உக்கிர குமார பாண்டியன் என்று பெயர் கொண்டு மதுரையில் பிறந்ததும் குளிர்ந்த தமிழ் மொழியின் சுவையைக் கொள்ளை கொண்டு நுகர்தற்கு ஏற்பட்ட விருப்பத்தால் என்றால், தெளிவுடைய தமிழ்ப் பெருமையை யார் அறிவார்?

**விளக்கம்**

முதல் இரண்டடிகள் தமிழின் சிறப்பை விளக்கும்.

(அடி1) தமரம் - ஒலி; முழக்கம். புவனம் முழுது ஒருங்கு ஈன்றாள் - உலகங்களை எல்லாம் ஒருசேரப் பெற்ற உமையம்மை. தரிக்க வந்ததுவும் - பூண்டு மதுரையில் வந்ததும். சவுந்தர மாறன் - மதுரையில் தோன்றிய சிவபெருமானின் பெயர் சவுந்தர மாறன்.

(அடி2) குமரவேள் - முருகப் பெருமான். உக்கிரன் - உக்கிர குமார பாண்டியன். மதுரம் - இனிமை. கூட்டுண - கொள்ளை

கொண்டு உண்ண. கொழிதமிழ் - தெளிந்த தமிழ். வேட்கையால் - விருப்பத்தால்.

(அடி3) பமரம் - வண்டுகள். யாழ் மிழற்ற - யாழ் போல் இசைபாட. நறவு - தேன். பளிக்குப் பானிலா முன்றில் - பளிங்கைப் போன்ற பால் நிலவு வீசும் முற்றத்தில். தூநிலா முத்தின் பந்தர் - தூய நிலவு ஒளி போல் ஒளிவீசும் முத்தால் ஆன பந்தல். அமரர் நாடியர் - தேவ மகளிர். அம்மனை ஆட - அம்மானை ஆட்டம் ஆட. ஐயம் நுண் நுசுப்பளவு அல்ல - சந்தேகம் அவரது நுண்ணிய இடையின் திறத்தில் மட்டுமன்று; உடலிலும் உண்டு. இயற்கையில் இம்மகளிர்க்குக் கண் இமையாதிருத்தலினாலும் பேரழகாலும் இவர் மேனி தெய்வமகளிர் மேனியை ஒத்துத் தோன்றின. எனவே 'இவர்கள் தெய்வமகளிரோ' என்ற ஐயத்தை அவை ஏற்படுத்தின.

அடல் அரா அலங்கல் - வலிமையுடைய பாம்பாகிய மாலை.

(93)

## என்மீது எய்யப்படும் அம்புகள் பல!

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*தலைவி கூற்று*

197. அடுத்தங்கு உலவாக் கோட்டைசுமந்து
அளித்தீ ரொருவற்கு அதுநிற்கத்
தொடுக்கும் கணைவேள் தனக்குலவாத்
தூணி கொடுத்தீர் போலுமால்
எடுக்கும் கணையைந் தெய்தகணை
எண்ணத் தொலையா வென்செய்கேன்
திடுக்கங் கொளமால் சிலைதனைச்
சினத்தீர் கடம்ப வனத்தீரே. (94)

**தெளிவுரை**

திருமால் நடுக்கத்தை அடையும்படி அவன் மகனான கரும்பு வில்லையுடைய மன்மதனைக் கோபித்து எச்சரித்தவனான கடம்ப வனத்தில் உள்ள இறைவரே! நீர் ஓர் அடியவர்க்கு முற்காலத்தில் மனம் பொருந்திக் குறைவு படுதலற்ற நெற்கோட்டையைச் சுமந்து கொண்டு போய்த் தந்தீர். அஃது இருக்க, உயிர்களின் மேல் தொடுக்கின்ற அம்புகளையுடைய மன்மதனுக்கும் எடுக்கக் குறையாத அம்பறாத் தூணியை அளித்தருளினீர் போலும்! ஆகவே, மன்மதன் எடுக்கும் அம்புகள் ஐந்தாகும். என்மீது எய்த அம்பு எண்ணிக் கணக்கிட அளவுபடாவாம்; என் செய்வேன்!

**விளக்கம்**

இது தலைவனைப் பிரிந்துள்ள தலைவியின் கூற்று.

உலவாக் கோட்டை - எடுக்க எடுக்கக் குறையாத நெல்லை யுடைய கோட்டை. இதனைச் சிவபெருமான் அடியார்க்கு நல்லார் என்ற வேளாளருக்குத் தந்தார். இது 'உலவாக் கோட்டை யருளிய திருவிளையாடல்' ஆகும்.

மதுரையில் ஒரு வேளாளன் தன் மனைவியுடன் சிவனடியார் பூசனையை நாள்தோறும் இடைவிடாமல் செய்து வந்தான். ஒரு காலத்தில் சிவபெருமான் அவனது குணச் சிறப்பை அனைவருக்கும் புலப்படச் செய்ய எண்ணினார். அதனால் மிகவும் வருந்தியும் விடாமல் தான் முன் கொண்டவிரதத்தை நடத்தி மிகக் கடன்பட்டு ஒருநாள் தானும் தன் மனைவியும் பட்டினியாய்க் கிடந்து பின் இறைவனிடம் போய் முறையிட்டான். அவர் எடுக்க எடுக்கக் குறையாமல் இருக்கக் கூடிய நெற் கோட்டையைத் தந்தருளினார்.

ஒருவற்கு - அடியார்க்கு நல்லார் என்ற வேளாளற்கு. உலவாத்தூணி - அம்பு எடுக்க எடுக்கக் குறையாத அம்பறாத் தூணி; தூணி என்பதற்கு நான்கு மரக்கால் என்று வேறு பொருளும் பட நின்றது. மன்மதன் எடுக்கும் கணை ஐந்து என்றாலும் தொடுக்கும் கணைகளோ எண்ணற்றவை. ஆதலால் அவனுக்கு

உலவாத் தூணி ஒன்று இருக்கும் என்றும், அஃது உம்மால் கொடுக்கப்பட்டது என்றும் தோன்றுகின்றது என்றாள்.

மால் - திருமால். திடுக்கம்கொளல் - திடுக்கிடல். மன்மதன் தன் பிள்ளையாதலால் திருமால் அச்சம் கொண்டார். சினத்தீர் - சினந்தீர் என்பதன் வலித்தல் விகாரம். நீவிர் காமனைச் சினந்தும் பயன் இல்லை என்பதாம். (94)

## நீ மடலேற இயலாது!

### எழுசீர்ச் சந்தவிருத்தம்

198. கடமுடையு நறுநெய்க்குள் முழுகியெழு வதையொத்த
கரடமத கரிபெற்றொர் பிடியேபோல்
மடவநடை பயில்பச்சை மயிலையொரு புறம்வைத்த
மதுரையழ கியசொக்கர் வரைவேலோய்
நடையுமெழு துவைநிற்கு நிலையுமெழு துவைசொற்குள்
நலமுமெழு துவைசித்ர ரதிபோல்வாள்
இடையுமெழு துவைமுற்று மிலதொர்பொரு ளையுமொக்க
எழுதில்எவர் உனையொத்த பெயர்தாமே. (95)

இது தலைமகன் மடலேறுவேன் என்ற பொழுது தலைவியின் அவயவங்களைப் படத்தில் எழுதுதல் அரிதெனக் கூறித் தோழி நடுத்தது.

### தெளிவுரை

குடம் உடைந்து வழியும் நல்ல நெய்யில் முழுகி எழுந்தாற் போன்று கன்னங்களிலிருந்து ஒழுகும் மதநீரையுடைய யானை முகக் கடவுளான விநாயகப் பெருமானைப் பெற்ற ஒரு பெண் யானையைப் போன்று இளமையான நடை யழகும் பச்சை நிறம் உடைய மயிலைப் போன்ற உமாதேவியை இடப்பக்கத்தில் கொண்ட அழகுடைய சொக்கநாதரின் மலையில் உள்ள கையில் வேலை யுடையவனே!

அழகிய இரதியைப் போன்ற தலைமகளின் நடையையும் எழுதும் வல்லமை உடையாய். நிற்கும் பலவகை நிலையையும் எழுதும் வல்லமை உடையாய். சொல்லினுள் பொதிந்த இனிமையையும் எழுதும் வல்லமை உடையாய். அவளுடைய இடையையும் எழுத வல்லாய். முற்றும் வடிவம் இல்லாததொரு பொருளையும் தலைவியுடன் எழுதினால் உன்னைப் போன்ற சிறந்த மனிதர் வேறு யார்?

**விளக்கம்**

கடம் - குடம். கரடம் - மதநீர்ச்சுவடு. கரி - யானை முக முடைய விநாயகர். மடவநடை - இளமை பொருந்திய நடை. பச்சை மயில் - பசிய நிறம் உடைய உமையம்மையார்.

எழுதுவை - எழுதும் வல்லமை உடையாய். நலம் - இனிமை. சித்ர ரதி போல் - அழகுடைய இரதியைப் போல்.

முற்றும் இல்லாததொரு பொருளை எழுதும் வல்லமை உனக்கு உளதானால் இவள் நடை முதலியவற்றை எழுத இயலும் என்றாள். அவை எழுதுதற்கு அரியவை. ஆதலால் நின்னால் மடல் ஏறுதல் இயலாது. தலைவன் தலைவியின் படத்தை எழுதி வருவதாக உரைத்ததால் தோழி இவ்வாறு உரைத்தாள். (95)

## வியப்பை ஏற்படுத்தும் தோற்றம்!

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

199. மேதகைய பலகலைபோர்த் தறம்வளரும் தமிழ்க்கடல்
விகிர்த கேண்மோ
ஏதமினின் திருவுருவொன்று ஈருருவாய் நின்றதினும்
இறும்பூ தந்தோ
போதலர்பைந் துழாய்ப்படலைப் புயல்வண்ணத் தொருவனிரு
பூவை மார்க்குக்
காதலனாய் மற்றுனக்கோர் காதலியாய் நிற்பதொரு
காட்சி தானே. (96)

### தெளிவுரை

மேன்மையான பல கல்விகளை மேற்பரப்பித் தருமத்தையும் வளர்க்கின்ற மதுரையில் எழுந்தருளியுள்ள மேலானவனே, கேட்பாயாக! மலர்கள் மலர்ந்த பசிய துழாய் மாலையைச் சூடிய மேகம் போல் கரிய நிறம் உடைய ஒருவனான திருமால் திருமகள், நிலமகள் என்னும் இரண்டு மகளிர்க்கும் தான் கணவனாகி உனக்கு ஒரு மனைவியாகி நிற்கிறான். இத் தோற்றமானது குற்றம் அற்ற உன்னுடைய அழகிய வடிவம் ஒன்று தானே - ஆண்பாதியும் பெண்பாதியுமாய் - இருவடிவும் தாங்கியிருப்பதை விட மயக்கத்தை உண்டாக்குவதாம்!

### விளக்கம்

மேதகைய - மேன்மையான. போர்த்து - பரப்பி. விகிர்த - மேலானவனே; வேறுபாடு உடையவனே. இந்த விளி பின் வரும் செய்திகளுக்கு ஏற்ப அமைந்தது. அர்த்த நாரீச வடிவத்தையே திருவுருவொன்று ஈர் உருவாய் நின்றது என்றான். இறும்பூது - ஆச்சரியம். போது அலர் - மலர் மலரும். பைந்துழாய் - பசிய துளசி. படலை - மாலை. புயல் வண்ணத் தொருவன் - மேகம் போன்ற கரிய நிறமுடைய திருமால். இருபூவைமார் - இரண்டு மங்கையர்; அவர்கள் திருமகள், நிலமகள். காதலி - மனைவி. திருமாலைச் சிவபெருமானின் மனைவியாகக் கூறுவர்.

சிவபெருமான் அழகிய ஆண்வடிவு கொண்டு தாருகா வனத்தில் பிச்சையேற்கத் தொடங்கிய போது திருமால் மோகினி வடிவு கொண்டு அவர்க்கு மனைவியாயினர் என்பது வரலாறு.

கேண்மோ - கேள் + மோ; மோ - முன்னிலை யசை. (96)

## மெள்ளத் திருப்பீர்!

### நேரிசை வெண்பா

200. காண்டகைய செல்வக் கடம்பவனத் தானந்த
தாண்டவம்செய் தாண்டவர்நீர் தாமன்றே-பூண்டடியர்
உள்ளத் திருப்பீரெம் முள்ளத்தை யும்மும‍தா
மெள்ளத் திருப்பீர் மிக. (97)

**தெளிவுரை**

அடியவரின் திருவுள்ளத்தில் பொருந்தியிருப்பவரே! யாவராலும் விரும்பப்படும் தன்மையுடைய எல்லாச் செல்வங்களையும் உடைய கடம்பவனத்தில் ஆனந்தத் திருக்கூத்தாடி அனைத்து உயிர்களையும் அடிமை கொண்டவர் நீவிர் அல்லரோ! எம் உள்ளத்தையும் உம்முடையதாகும்படி மெல்ல மிகவும் மாற்றுவாயாக!

**விளக்கம்**

காண்டகைய - காணத் தக்க தகுதியுடைய. ஆனந்த தாண்டவம் - பதஞ்சலி முனிவருக்காகச் செய்தருளிய சொக்கத் தாண்டவம். பூண்டு - அன்பு கொண்டு. (97)

## மேகங்கள் கண்ணீரைக் குடித்து எழுந்தன

கார்காலம் கண்டு வருந்திய தலைவன் பாகனொடு கூறியது.

### கட்டளைக் கலித்துறை

201. மிக்கார் முகத்தருள் கூடல் பிரான்விட நாண்துவக்காக்
கைக்கார் முகத்தன்ன தேர்வல வாகை பரந்துசெலும்
இக்கார் முகக்க வெழுந்தகொல் லாமெம தாவியென்னத்
தக்கார் முகத்தடங் கண்ணீர் உகாந்த சலதியையே. (98)

### தெளிவுரை

பெரியோர்க்கு அருள் செய்கின்றமதுரைச் சொக்கநாதரின் கையில் உள்ள நஞ்சு பொருந்திய பாம்பாகிய நாணினால் கட்டப் பட்ட வில்லாகிய பொன் மலையை ஒத்த தேரைச் செலுத்துவதில் வல்ல தேர்ப்பாகனே! வானில் பரவிச் செல்லும் இம் மேகங்கள் என் உயிர் என்று கூறத்தக்க தலைவியது முகத்தில் உள்ள பெரிய கண்ணினின்றும் வடியும் கண்ணீராகிய யுக முடிவில் எழும் கடலை மொண்டு கொள்ள எழுந்தன போலும்!

### விளக்கம்

கார் காலத்தில் திரும்பி வருதாகக் கூறிச் சென்ற தலைவன் தான் மேற்கொண்ட வினை முற்றி மீண்டு வரும்போது தனக்கு முன்னர் மேகங்கள் செல்வதைக் கண்டு இவை சென்றால் தலைவி வருந்துவாளே என்று எண்ணிக் கூறியது.

மிக்கார் முகத்து - அறிவின் மிக்கார் திறத்தில். விட நாண்டு வக்கா - விடம் + நாண் + துவக்கா; நஞ்சையுடைய பாம்பாகிய நாணால் கட்டப்படாத. கைக் கார்முகம் - கையில் உள்ள வில். மேருமலை. வலவா - பாகனே. கை பரந்து - பக்கத்தில் பரவி. இக்கார் - இந்த மேகங்கள். இது எழுவாய். எமது ஆவி எனத் தக்கார் என்பது தலைவியை. முகத்தில் பெருகிய கண்களிலிருந்து வரும் நீரான ஊழிக்காலத்துக் கடலைச் சலதியை முகக்க எழுந்த கொல்லாம். எழுந்த கொல்லாம் - எழுந்தன போலும். மேகம் முன்னே சென்றால் கார் காலத்தில் திரும்பி வருவதாகக் கூறிப் பிரிந்த நான் வரவில்லையே என்று தலைவி வருந்துவாள். ஆதலால் நீ தேரை விரைவாகச் செலுத்துவாய் என்பது எச்சம். (98)

## சொக்க நாதர்க்குச் சொல்வார் இலர்!

(தலைவி கூற்று. எவரேனும் தலைவரிடம் தூது போதல் வேண்டும் என்று புலப்படுத்துகிறாள்.)

### எழுசீர்ச் சந்தவிருத்தம்

202. சலராசி தங்கு கணையேவு மொய்ம்பர் சரணார விந்த மிசையே
மலராகி டந்த நயனார விந்தர் மதுரேசர் முன்பு புகலார்
சிலராவி யின்றி யுடலேசு மந்து திரிவார்கள் வெந்து விழவே
புலராத கங்கு லிடையேயொ ரங்கி புகையாது நின்றெ ரிவதே. (99)

**தெளிவுரை**

உயிரே இல்லாமல் வெற்றுடம்பையே சிலர் சுமந்து திரிவர். ஆருயிர்க் காதலரைப் பிரிந்த தலைவியர் உடல் எரிந்து அழியும் படி விடியாத இராத்திரியில் ஒரு நெருப்பாகிய சந்திரன் புகையாமல் நிலை நின்று எரிவதைப் பாற்கடலில் வீற்றிருக்கின்ற திருமாலான அம்பைத் திரிபுரங்கள் மீது செலுத்திய திருத் தோள்களை உடையவரும் தம் திருவடித் தாமரைகளின் மீது அருச்சித்த மலரான அத்திருமாலின் கண்மலரை உடையவரு மாகிய மதுரைச் சொக்கநாதர் திருமுன் எவரேனும் போய்ச் சொல்கின்றார் இலர். சொன்னால் அவர் வந்து என்னைச் சேர்வர்.

**விளக்கம்**

சலராசி தங்கு கணை - பாற்கடலில் தங்கும் திருமாலாகிய அம்பு. மொய்ம்பர் - வலியை உடையவர். சரணார விந்த மிசையே மலராகிடு அந்த நயனாரவிந்தர் - திருவடியில் மலராகப் பொருந்திய அந்தத் திருமாலின் விழியை யுடையவர். ஓர் அங்கி - சந்திரன். மதுரேசர் - மதுரையில் வீற்றிருக்கின்ற சோமசுந்தரர். (99)

## கூடலார் இவள் செய்கையை நாடலார்

### பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*தோழி கூற்று; செவிலி கூற்றுமாம்*

203. தேன்வ ழங்குக டுக்கை யார்கரு
மான்வ ழங்குமு டுக்கையார்
திருவி ருந்தவி டத்தி னாரருள்
கருவி ருந்தந டத்தினார்

மான டங்கிய அங்கை யார்சடைக்
கான டங்கிய கங்கையார்
வைகை யொன்றிய கூட லாரிவள்
செய்கை யொன்றையு நாடலார்
கான வேயிசை கொல்லு மாலுற
வான வாய்வசை சொல்லுமால்
கன்றி யன்றிலி ரங்கு மாலுயிர்
தின்று தென்றல்நெ ருங்குமால்
தீநி லாவனல் சிந்து மால்கொல
வேனி லான்மெல முந்துமால்
தினமி டைந்திடை நொந்த போன்மகள்
மனமு டைந்தது ணர்ந்துமே. (100)

**தெளிவுரை**

காட்டில் உள்ள மூங்கிலால் ஆன புல்லாங்குழலின் இசைப் பாடல் இவளை மிகவும் வருத்தும். உறவினரான மக்கள் இவள் மீது வாயால் பழி கூறுவர். அன்றிற் பறவை மனம் வருந்தக் கத்தும், தென்றற் காற்று உயிரை உண்ண அருகில் வரும். கொடிய சந்திரன் நிலவு என்ற நெருப்புப் பொறியைச் சிதறும். வசந்த காலத்துக்கு உரியவனான மன்மதன் இவளைக் கொல்வதற்காக மெல்லப் புறப்பட்டு வருவான். இவள் இடை நாள்தோறும் சிறிது சிறிதாக இளைத்து வாடுதல் போல் மனம் மெலிந்ததை அறிந்தும், தேனைச் சொரியும் கொன்றைப் பூமாலையை உடையவரும் கரிய யானை தந்த தோலாகிய உடையை அணிந்தவரும் உமையை இடப் பாகத்தில் கொண்டவரும் அருள் குடி கொண்ட கூத்தை உடையவரும், மான் பொருந்தியுள்ள இடக்கையை உடையவரும், சடையில் தங்கிய கங்கையாற்றை உடையவரும், வையை ஆறு தங்கப் பெற்ற மதுரையை உடையவரும் ஆன சோமசுந்தரர் இவளது தொழில் ஒன்றையும் ஆராய்ந்து வந்து அணைவதில்லை.

**விளக்கம்**

தேன் வழங்கு கடுக்கையார் - தேன் சிந்தும் கொன்றை மாலையையுடையவர். மான் வழங்கு உடுக்கையார் - கரிய

யானையின் தோலை உடுத்தியவர். திரு இருந்த - உமை யம்மையார் தங்கிய. இடத்தினார் - இடத்தை உடையவர். நடத்தினார் - கூத்தை யுடையவர். மான் அடங்கிய - மான் பொருந்திய. அங்கையார் - அழகிய கையை உடையவர்.

சடைக்கான் - சடையாகிய காடு. கங்கையார் - கங்கை யாற்றை யுடையவர். வையை ஒன்றிய - வைகையாறு பொருந்திய. நாடலார் - ஆராயார். கான வேயிசை - காட்டில் தோன்றும் மூங்கிலால் ஆன குழலால் இசைக்கப்படும் இசை. உறவான வாய் - உறவினரின் வாய். வசை - பழி. அன்றில் இரங்கும் - அன்றில் பறவை குரல் எழுப்பும். உயிர் தின்று - உயிரைத்தின்ன. தீநிலா - கொடிய சந்திரன். அனல் சிந்தும் - தீப்பொறியைச் சிந்தும். வேனிலான் - வேனில் பருவத்துக்குரிய காமன். தினம் இடைந்து இடை நொந்தபோல் - நாள் தோறும் மெலிந்து இடையானது நொந்ததைப் போல். மனம் உடைந்தது - உள்ளம் உருகியது.

இது, தலைவியின் நிலை கண்டு செவிலி இரங்குதல் அல்லது பாங்கி இரங்குதல் எனலாம்.

மாலையில் அன்றில் பெடையைக் கூவும் ஒலி, குழல் ஓசை முதலியன பிரிந்தார்க்கு வருத்தம் செய்யும். (100)

## சோமசுந்தரரின் இருப்பிடம்

### ஊர்

### அறுசீர்ச் சந்தவிருத்தம்

204. உடையதொர் பெண்கொடி திருமுக மண்டலம்
ஒழுகுபெ ருங்கருணைக்
கடலுத வுஞ்சில கயல்பொரு மொய்ம்புள
கடவுள்நெ டும்பதியாம்

புடைகொள் கருங்கலை புனைபவள் வெண்கலை
புனையுமொர் பெண்கொடியா
வடகலை தென்கலை பலகலை யும்பொதி
மதுரைவ ளம்பதியே. (101)

**தெளிவுரை**

பக்கங்களில் எல்லாம் சூழ்ந்துள்ள கரிய கடல் ஆகிய ஆடையை அணிந்தவளான பூமி என்ற பெண் வெண்மையான ஆடையை உடுத்த பெண் கொடியான நாமகள் ஆகுமாறு, வடமொழி தென்மொழி மற்றும் பல மொழிகளும் விளங்கும் பல வளங்கள் பொருந்திய மதுரை என்னும் திருப்பதியானது தமக்கு உரிமையுடைய பெண்கொடியான உமையம்மையினுடைய அழகிய முகவட்டத்தில் வழியும் பெரிய திருவருளான கடலை உலகத்துக்கு உதவும் இரண்டு கயல் மீன்கள் போர் செய்கின்ற தோள்களை யுடைய சோமசுந்தரப் பெருமானின் இருப்பிட மாகும்.

**விளக்கம்**

பெண்கொடி - மீனாட்சியம்மை. கருணைக் கடலை உதவும் கயல் - மிக்க கருணை அளிக்கின்ற கயல். சில கயல் என்பதில் 'சில' இரண்டு என்ற பொருளில் வந்தது. மொய்ம்பு - தோள். புடை கொள் - பக்கத்தில் பொருந்திய. கருங்கலை - கரிய ஆடை; அதாவது கடல். வெண்கலை புனையும் ஓர் பெண் கொடியா- - வெண்ணிற ஆடையை அணியும் கலைமகள் ஆகுமாறு. (101)

## குழந்தையிடம் ஆசை பொருந்திய விதம் யாது?

பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

205. வள்ளைவாய் கிழித்துக் குமிழ்மறிந் தமர்த்த
மதரரிக் கண்ணியும் நீயும்
மழலைநாறு அமுதக் குமுதவாய்க் குழவி
மடித்தலத் திருத்திமுத் தாடி

யானையின் தோலை உடுத்தியவர். திரு இருந்த - உமை யம்மையார் தங்கிய. இடத்தினார் - இடத்தை உடையவர். நடத்தினார் - கூத்தை யுடையவர். மான் அடங்கிய - மான் பொருந்திய. அங்கையார் - அழகிய கையை உடையவர்.

சடைக்கான் - சடையாகிய காடு. கங்கையார் - கங்கை யாற்றை யுடையவர். வையை ஒன்றிய - வைகையாறு பொருந்திய. நாடலார் - ஆராயார். கான வேயிசை - காட்டில் தோன்றும் மூங்கிலால் ஆன குழலால் இசைக்கப்படும் இசை. உறவான வாய் - உறவினரின் வாய். வசை - பழி. அன்றில் இரங்கும் - அன்றில் பறவை குரல் எழுப்பும். உயிர் தின்று - உயிரைத்தின்ன. தீநிலா - கொடிய சந்திரன். அனல் சிந்தும் - தீப்பொறியைச் சிந்தும். வேனிலான் - வேனில் பருவத்துக்குரிய காமன். தினம் இடைந்து இடை நொந்தபோல் - நாள் தோறும் மெலிந்து இடையானது நொந்ததைப் போல். மனம் உடைந்தது - உள்ளம் உருகியது.

இது, தலைவியின் நிலை கண்டு செவிலி இரங்குதல் அல்லது பாங்கி இரங்குதல் எனலாம்.

மாலையில் அன்றில் பெடையைக் கூவும் ஒலி, குழல் ஓசை முதலியன பிரிந்தார்க்கு வருத்தம் செய்யும். (100)

## சோமசுந்தரரின் இருப்பிடம்

### ஊர்

அறுசீர்ச் சந்தவிருத்தம்

204. உடையதொர் பெண்கொடி திருமுக மண்டலம்
ஒழுகுபெ ருங்கருணைக்
கடலுத வுஞ்சில கயல்பொரு மொய்ம்புள
கடவுள்நெ டும்பதியாம்

புடைகொள் கருங்கலை புனைபவள் வெண்கலை
புனையுமொர் பெண்கொடியா
வடகலை தென்கலை பலகலை யும்பொதி
மதுரைவ ளம்பதியே. (101)

**தெளிவுரை**

பக்கங்களில் எல்லாம் சூழ்ந்துள்ள கரிய கடல் ஆகிய ஆடையை அணிந்தவளான பூமி என்ற பெண் வெண்மையான ஆடையை உடுத்த பெண் கொடியான நாமகள் ஆகுமாறு, வடமொழி தென்மொழி மற்றும் பல மொழிகளும் விளங்கும் பல வளங்கள் பொருந்திய மதுரை என்னும் திருப்பதியானது தமக்கு உரிமையுடைய பெண்கொடியான உமையம்மையினுடைய அழகிய முகவட்டத்தில் வழியும் பெரிய திருவருளான கடலை உலகத்துக்கு உதவும் இரண்டு கயல் மீன்கள் போர் செய்கின்ற தோள்களை யுடைய சோமசுந்தரப் பெருமானின் இருப்பிட மாகும்.

**விளக்கம்**

பெண்கொடி - மீனாட்சியம்மை. கருணைக் கடலை உதவும் கயல் - மிக்க கருணை அளிக்கின்ற கயல். சில கயல் என்பதில் 'சில' இரண்டு என்ற பொருளில் வந்தது. மொய்ம்பு - தோள். புடை கொள் - பக்கத்தில் பொருந்திய. கருங்கலை - கரிய ஆடை; அதாவது கடல். வெண்கலை புனையும் ஓர் பெண் கொடியா- - வெண்ணிற ஆடையை அணியும் கலைமகள் ஆகுமாறு. (101)

## குழந்தையிடம் ஆசை பொருந்திய விதம் யாது?

பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

205. வள்ளைவாய் கிழித்துக் குமிழ்மறிந் தமர்த்த
மதரரிக் கண்ணியும் நீயும்
மழலைநாறு அமுதக் குமுதவாய்க் குழவி
மடித்தலத் திருத்திமுத் தாடி

உள்ளநெக் குருக உவந்துமோந் தணைத்தாங்கு
உகந்தனி ரிருத்திரா லுலகம்
ஒருங்குவாய்த் தீருக் கொருதலைக் காமம்
உற்றவா வென்கொலோ உரையாய்
வெள்ளிவெண் ணிலவு விரிந்தகோ டீரம்
வெஞ்சுடர்க் கடவுளும் கிடைத்து
வீற்றிருந் தனைய விடுசுடர் மகுட
மீக்கொளுஉத் தாக்கணங்கு அனையார்
கள்ளவாள் கருங்கண் ஏறுகாத் திட்ட
காப்பென வேப்பலர் மிலைச்சும்
கைதவக் களிறே செய்தவக் கூடல்
கண்ணுதல் கடவுண்மா மணியே. (102)

**தெளிவுரை**

வெள்ளியைப் போல் வெண்மையான நிலவு ஒளி விரியப் பெற்றுள்ள சடை முடியை வெப்பமான கதிர்களையுடைய கதிரவனும், தனக்குக் கிடைக்கப் பெற்று அம்முடியின் மீது சிறப்புறப் பொருந்தி இருந்தாற் போன்ற ஒளிவிடும் முடியை அணிந்து, திருமகளைப் போன்ற மகளிர் வஞ்சமுடைய வாள் போன்ற கரிய பார்வைக் குளத்தைக் கண்ணேறுபடுதலினின்று காக்க வைத்த காப்புப் போல வேப்பம் பூமாலையைச் சூடிய சுந்தர பாண்டியனான ஆண் யானையே! நீ வந்து அரசு புரிவதற்குத் தக்க தவத்தைச் செய்த மதுரையில் வீற்றிருக்கின்ற தெய்வங்களுள் சிறந்த மணி போன்றவனே! வள்ளையின் இலை போலும் காதினது வாயைக் கிழித்துக் (காதுடன் அளாவி) குமிழ மலர் போன்ற மூக்கின் மேல் பக்கத்தினை அடுத்துப் போர் செய்கின்ற களித்த செவ்வரி படர்ந்த விழிகளை யுடையவளான உமையம்மையும் நீயும் மழலைச் சொல் தோன்றுகின்ற அமுதத்தை யுடைய செவ்வாம்பல் மலர் போன்ற சிவந்த வாயை உடைய குழந்தையான முருகப் பெருமானை மடியில் வைத்துக் கொண்டு, முத்தம் தந்து, உள்ளம் நெகிழ்ந்து கரையுமாறு மகிழ்ந்து, உச்சி மோந்து தழுவிக் கொண்டு, அங்குக் களிப்புடன் இருக்கின்றீர்கள்.

உலகம் முழுவதையும் பெற்ற உங்களுக்கு ஒரு குழந்தையிடத்தில் ஆசை பொருந்திய விதம் யாதோ? கூறுவீராக!

**விளக்கம்**

வள்ளை - வள்ளை மலர் போன்ற காது. குமிழ் - குமிழம்பூ நாசி. அரிக்கண்ணி - செவ்வரிகளையுடைய உமையும் மழலை நாறு - மழலைச் சொல் தோன்றும். குமுதவாய் - செவ்வல்லி மலர் போன்ற சிவந்த வாய். முத்தாடி - முத்தம் தந்து. இருத்திரால் - இருத்திர் + ஆல்; இருக்கின்றீர். உலகம் ஒருங்கு வாய்த்தீருக்கு - உலகம் முழுவதையும் உடைய உமக்கு. கோடீரம் - முடி. வெஞ்சுடர்க் கடவுள் - கதிரவன். மகுடம் மீக் கொளுஉ - முடியை அணிந்து. மகுடத்துக்குக் கதிரவன் உவமை. கண்ணேறு - கண் திருஷ்டி. காத்திட - உண்டாகாமல் காக்க. வேப்ப மலர் அணிந்தது கண்ணேறு படாமல் காத்தற்கு. மிலைச்சும் - சூடும். கைதவக் களிறு - பாண்டியருள் ஆண் யானை போன்றவன். கைதவன் - பாண்டியன். கண்ணுதற்கடவுள் மாமணியே நெற்றிக் கண்ணை யுடைய இறைவர் ஆன சிறந்த மணியே!

## நின் தன்மை எம்மனோரால் நினையவும் சொல்லவும் இயலாது

### நேரிசை யாசிரியப்பா

206. கட்புலம் கதுவாது செவிப்புலம் புக்கு
மனனிடைத் துஞ்சி வாயிடைப் போந்து
செந்நா முற்றத்து நன்னடம் புரியும்
பல்வேறு வன்னத் தொருபரி யுகைத்தோய்
5 புட்கொடி யெடுத்தொரு பூங்கொடி தன்னொடு

மட்கொடி தாழ்ந்த வான்கொடி உயர்த்தோய்
ஓரேழ் ஆழி சீர்பெறப் பூண்டு

முடவுப் படத்த கடிகையுள் கிடந்து
நெடுநிலை பெயரா நிலைத்தேர் ஊர்ந்தோய்
10 மீனவர் பெருமான் மானவேல் பிழைத்தாங்கு

எழுபெருங் கடலு மொருவழிக் கிடந்தென
விண்ணின்று இறங்குபு விரிதிரை மேய்ந்த
கொண்மூக் குழும்பு கொலைமதக் களிற்றொடும்
வேற்றுமை தெரியாது மின்னுக்கொடி வளைத்தாங்கு
15 ஆற்றல்கொ டுற்றபா கலைத்தனர் பற்றத்

திரியமற் றெம்மைத் தீச்சிறை படுக்கெனப்
பருதிவேல் உழவன் பணித்தனன் கொல்லென
மெய்விதிர்த் தலறுபு வெரீஇப்பெயர்ந் தம்ம
பெய்முறை வாரிப் பெரும்பெயல் அல்ல
20 நெய்பால் தயிர்முதல் பல்பெயல் தலைஇப்

பெருவளஞ் சுரந்த விரிதமிழ்க் கூடல்
இருநில மடந்தைக் கொருமுடி கவித்தாங்கு
இந்திர னமைத்த சுந்தர விமானத்து
அருள்சூல் கொண்ட வரியிளங் கயற்கண்
25 மின்னுழை மருங்குல் பொன்னொடும் பொலிந்தோய்

துரியங் கடந்த துவாத சாந்தப்
பெருவெளி வளாகத் தொருபெருங் கோயிலுள்
முளையின்று முளைத்த மூல லிங்கத்து
அளவையி னளவா வானந்த மாக்கடல்
30 நின்பெருந் தன்மையை நிகழ்த்துதும் யாமென

மன்பெருஞ் சிறப்பின் மதிநலம் கொளினே
பேதைமைப் பாலரே பெரிது மாதோ
வேத புருடனும் விராட்புரு டனுமே
இனையநின் றன்மைமற் றெம்ம னோரும்
35 நினையவும் சிலசொற் புனையவும் புரிதலின்

வாழிய பெருமநின் தகவே
வாழியெம் மனனு மணிநா வும்மே. (103)

**தெளிவுரை**

(அடி1-4) கண் அறிவுக்கு எட்டாது காதாகிய உறுப்பில் புகுந்து உள்ளத்துக்குள் தங்கி வாய் வழி வந்து சிவந்த நாக்கு ஆகிய முன்னிடத்தில் நல்ல ஆட்டம் புரியும் பலவகைப்பட்ட வெவ்வேறு சந்தங்களையுடைய ஒப்பில்லாத வேதம் ஆகிய குதிரையைச் செலுத்துபவனே!

(அடி4) கருடப்பறவையாகிய கொடியை உயர்த்திப் பூங்கொடி போன்ற திருமகள் நிலமகள் இருவரும் மார்பிலும் தொடையிலும் தங்கியிருக்கப் பெற்ற திருமால் என்னும் பெரிய காளைக் கொடியை உடையவனே!

(அடி7-9) ஒப்பில்லாத ஏழு கடல்களால் சிறப்புப் பொருந்தச் சூழப்பட்டு வளைந்த படத்தையுடைய ஆதிசேடன் உச்சியிலே பொருந்திய நீண்ட தன்னிலையினின்று மாறுபடாத் தன்மை கொண்ட பூமி என்ற தேரைச் செலுத்துபவனே!

(அடி10-21) பாண்டியருள் சிறந்தவனான உக்கிர பாண்டியனின் பெருமை பொருந்திய வேற்படைக்கு இரையாகாத படி அஞ்சிப் பிழைத்து அம்மதுரையில் ஏழு பெரிய கடல்களும் ஓரிடத்தே வந்து சேர்ந்தன என்று எண்ணி வானத்தினின்று இழிந்து ஏழுகடல் என்ற குளத்தில் பரவிய அலைகளையுடைய நீரைப் பருகிய மேகங்கைளத் திரளாகக் கூடிய கொல்கின்ற இயல்புடைய மத யானைகளுடன் வேறுபாடு உணராமல் வந்த பாகர்கள் மின்னற் கொடிகளான கொடிகளால் சுற்றிக் கட்டி அங்குத் தன் வன்மையால் வருத்திப் பிடிக்க மேகங்கள் இங்குத் திரிகின்ற நம்மைக் கொடிய சிறையில் வைக்க எண்ணிக் கதிரவன் போன்று வேலையுடைய பாண்டிய மன்னன் ஆணையிட்டான் போலும் என்று, உடல் நடுங்கி அலறி ஒலித்து அஞ்சி விலகிப் போய் வியப்புக் கொள்ளும்படி பெய்ய வேண்டிய முறைப்படி நீர் மழை

பெய்யாது நெய்யும் பாலும் தயிரும் முதலான பலவகை மழை பெய்தது. அதனால் மிகுந்த வளமை நாள்தோறும் மேலும் மேலும் செழித்துப் பரவிய தமிழ் வழங்கும் மதுரையில்

(அடி22-25) பெரிய நில மடந்தைக்கு ஒரு முடியைக் கவித்தாற் போல் இந்திரன் அமையச் செய்த அழகிய விமானத்தில் அருளைக் கருக் கொண்ட சிவந்த வரிகளை யுடைய இளமையான கயல் மீன் போன்ற கண்களையும் மின்னலைப் போன்ற இடையையும் உடைய பொன் போன்ற உமை யம்மையுடன் எழுந்தருளியிருக்கின்ற சோமசுந்தரக் கடவுளே!

(அடி26 - 29) துரிய நிலைக்கு அப்பாற்பட்ட துவாத சாந்தம் என்னும் வெளியிடத்தில் ஒரு பெருங் கோயிலுள், முளையில்லாது முளைத்த மூலலிங்க வடிவான அளவுக் கருவியால் அளக்கப் படாத இன்பம் நிரம்பிய கடல் போன்றவனே!

(அடி30-33) நினது பெருமையை எடுத்துக் கூறுவோம். நாம் என்று வேதபுருடனும் விராட்புருடனும் ஆகிய இவர்களே மிகவும் மிக்க சிறப்புடைய தம் அறிவில் எண்ணினாலும், மிக்க அறியாமைத் தன்மையுடையது அது. இத்தகைய நின் தன்மை எம் போன்ற எளியவரும் நினைக்கவும் சில சொற்களைத் தொகுத்துப் போற்றவும் நீ செய்தலால், எம் தலைவ! நின் அருள் குணம் வாழ்க! நின்னை நினைத்தலும் போற்றுதலும் செய்யும் என் உள்ளமும் அழகிய நாவும் வாழ்க!

**விளக்கம்**

(1-4) கட்புலம் கதுவாது - கண்ணால் பார்த்தற்கும் இயலாது. செவிப்புலம் புக்கு - செவியில் புகுந்து; கேள்வி அளவாக நின்று. மனன் - மனம். துஞ்சி - தங்கி; நிலைபெற்று. வன்னம் - எழுத்து; நிறம். செந்நா முற்றத்து - சிவந்த நாவாகிய முன்பக்கத்தில். ஒருபரி - வேதம் என்ற குதிரை.

(5-6) புட்கொடி - புள் + கொடி; கருடன் பொருந்திய கொடி. பூங்கொடி - நிலமகள். மட்கொடி - நிலமகள். வான்கொடி - திருமாலான கொடி. தாழ்ந்த - தன்னிடம் தாங்கிய.

(7-9) ஓர் ஏழ் ஆழி - ஒரு ஏழு கடல்; சக்கரம் எனவும் உரைக்கலாம். முடவுப்படத்த - வளைந்த படத்தையுடைய. சுடிகை - முடி; ஆதிசேடனின் முடி. நிலைத் தேர் - பூமியாகிய ஓடாத தேர். ஏழு சக்கரங்கள் இருந்தும் ஓடாத நிலைத் தேரை ஊர்ந்தவனே என்பது ஒருநயம்.

(10-21) மீனவர் பெருமான் - பாண்டிய மன்னருள் சிறந்தவன்; உக்கிர குமார பாண்டியன். வேல் பிழைத்து - வேலுக்குத் தப்பி. ஒருவழி - ஓரிடத்தில். கிடந்தென - இருந்தாற் போன்று. இறங்குபு - இழிந்து. விரிதிரை - விரிந்த அலையை யுடைய அகழி. கொண்மூக் குழம்பு - மேகக் கூட்டம். மேகக் கூட்டம் நீரைக் குடிக்க அகழியில் படிய. அவற்றை யானைக் கூட்டம் என்று பாகர் எண்ணினர். மின்னுக் கொடியாத்து - மின்னலைக் கொண்டு கட்டி. பாகு - பாகர். அலைத்தனர் பற்ற - வருத்திப் பிடிக்க. தீச்சிறை - மிக்க துன்பத்தைத் தரும் சிறை. பருதிவேல் உழவன் - கதிரவனைப் போல் ஒளிவீசும் வேலை யுடைய உக்கிர குமார பாண்டியன். பணித்தனன் - கட்டளை இட்டான் என. மெய் விதிர்த்து - உடல் நடுக்கம் அடைந்து. அலறுபு - அலறி; செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வெரீஇ - அஞ்சி.

தம்மைப் பாகர் பிடித்த போது முன்பு தம்மைச் சிறைப் படுத்திய பாண்டியன் மீண்டும் இவர்களை விட்டுச் சிறை செய்வித்தான் போலும் என்று அச்சம் கொண்டு அவனது கோபமானது மாற வேண்டும் என்று எண்ணி நீரைச் சொரிதலுடன் நெய் பால் முதலியவற்றையும் பெய்தன. வாரி - இங்கு நீரை யுணர்த்தியது. பல் பெயல் தலை. - பல மழையைப் பெய்து.

(22-25) இரு நில மடந்தைக்கு - பூமிதேவிக்கு. ஒரு முடி கவித்தாங்கு - ஒரு முடியைக் கவித்தாற் போல் இந்திர விமானம் நிலமகளுக்கு முடியைப் போல் விளங்குகின்றது. கயற்கண் - கயலைப் போன்ற கண். நுழை மருங்குல் - நுட்பமான இடை.

(26-29) வளாகம் - பரப்பு. துவாத சாந்தம் - துவா + தச + அந்தம்; பன்னிரண்டின் முடிவு. பிரமரந்திரத்துக்குப் பன்னிரண்டு

அங்குல அளவில் உள்ள இடம். மூலலிங்கம் - எத்தலத்துக்கும் முன்பு தோன்றிய இலிங்கம். ஆனந்த மாக்கடல் - இன்பக்கடல்.

(30-37) நிகழ்த்துதும் - கூறுவோம். வேதபுருடனும் விராட் புருடனும் பேதைமையர். அவர்களால் நின் தன்மை நிகழ்த்துதற்கு அரிது. வேதபுருடன் - வேதமான தெய்வம். விராட்புருடன் - பிரபஞ்ச வடிவமான பரப்பிரமம். புரிதலின் - விரும்பி அருள் செய்தலால். தகவு - தகுதி; சிறப்பு. வேத புருடன் முதலியோர்க்கும் கூறுதற்கு அரிய நின் பெருமையை எம்மனோர் பாடுவது எமது ஆற்றலால் அன்று. நின் தகுதியால் அமைந்தது அது! எனவே நின் தகவு வாழ்க! நினது பெருமையை நினைப் பதற்குக் கருவியான மனமும் பாடுவதற்குக் கருவியான நாவும் வாழ்க. நாவும்மே - 'நாவுமே' என்பதன் விரித்தல் விகாரம்.

(103)

*மதுரைக்கலம்பகத்தின் மூலமும், உரையும் முற்றுப் பெற்றது*

# 4. குமரகுருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கம்

## 1. கடவுள் வாழ்த்து

நீரில் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாதது எம்பிரான் மன்று.

**தெளிவுரை**

மானிடரின் இளமைப் பருவமானது நீரிடை தோன்றும் குமிழியாகும்; மக்கள் அரிதில் தேடி ஈட்டும் செல்வம் காற்றினால் நீரில் சுருட்டப்படும் பெரிய அலைகளாகும். உடலானது நீரிலே எழுதப்படும் எழுத்தாகும். இவை இவ்வாறு விளங்க, நம்மவர் களே! நம் தில்லைப் பொன்னம்பலத்துள் உள்ள இறைவனான சிவபெருமானை வணங்காமல் காலத்தைக் கழிப்பது ஏன்?

**கருத்து**

இளமை, செல்வம், உடல் நிலையற்றவை. எனவே இவை உள்ள போது இறைவனை வழிபட்டு உய்தி பெற வேண்டும்.

**விளக்கம்**

இந்நூல் குமரகுருபரர் தில்லையில் இருந்தபோது பாடியது என்பர். (மதுரையில் பாடியது என்பாரும் உண்டு) முகிழ் என்பது குமிழி என்று ஆயிற்று. நிலையாமையை உணர்த்த நீரிலே

உண்டாகும் குமிழி, அலை, எழுதப்படும் எழுத்து என்பவையாய் உருவகம் செய்யப்பட்டன. நீரில் தோன்றும் குமிழி, அலை, எழுதும் எழுத்து நீரோட்டத்தில் எழுவன. எனவே வாழ்வு நீரோட்டமாயிற்று.

இளமை உண்டாகி அழகுடன் விளங்கும். அதனால் அது, குமிழி ஆயிற்று. செல்வம் மிகும்; குறையும்; மறையும்; நீண்ட காலம் இருக்கும். குறுகிய காலம் இருக்கும். இவ்வாற்றால் நீர் அலையாய் உரைக்கப்பட்டது. நன்கு கண்ணுக்குப் புலப்படும் நீரில் எழுதிய எழுத்து அழிவது, விரைந்து மறைந்தொழியும் உடலுக்கு உருவகமாக்கப்பட்டது. என்-'எவன்' என்ற வினா 'என்'என ஆயிற்று. என்பிரான் மன்று-எம்பிரான்-எம் இறைவன்; நடராசப் பெருமான். மன்று-அம்பலம்; தில்லைப் பொன்னம் பலத்தைக் குறிப்பாய்க் குறித்தது. குமரகுருபரர் தில்லையில் இருந்தபோது இந்நூலைப் பாடினார். ஆதலால் மன்று என்பது பொன்னம்பலத்தையே குறிக்கும்.

இந்த வாழ்த்தில் ஒரு சிறப்பு! அறிவுரையுடன் கூடிய வாழ்த்து இது.

## 2. கல்வியின் பெருமை

இது முதல் எட்டுச் செய்யுட்களில் கல்வியின் இயல்பு கூறப்படும்.

207. அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்-உறுங்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

**தெளிவுரை**

கல்வியானது அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றை ஒருவனுக்கு அளிக்கும்; உலகத்தில் குற்றம் இல்லாத புகழையும் உண்டாக்கும்; துன்பம் ஒன்று உண்டானால் அதைப் போக்குதற்கு

உதவும். எனவே, சிறிய உயிர்களான மக்களுக்கு அக்கல்வியைப் போலச் சிறந்த துணை வேறில்லை.

**கருத்து**

மக்களுக்குக் கல்வியே சிறந்த துணையாகும். ஆதலால் அதனை மக்கள் கற்க வேண்டும்.

**விளக்கம்**

புறங்கடை - இதற்குப் புலவன் இல்லாத இடத்தில் என்று பொருள் கொள்ளலாம். அதாவது 'கற்றோர்க்குச் சென்ற விட மெல்லாம் சிறப்பு' என்றாற் போலக் கூறப்பட்டது. புறம்-வெளி; கடை-ஏழாம் வேற்றுமையுருபு. கவல்-கவலை அளிக்கும் நிகழ்ச்சி. ஊங்கு-'விட' என்ற பொருளில் வந்தது. உறழ் பொருள் என்பர் இதனை! சிற்றுயிர்-மக்கள்; சிறுமையுடைய உயிரை உடைய மக்கள். மக்கள் உயிர் அறிவாலும் ஆற்றலாலும் சிறுமை யுடையது. உற்றுழி-துன்பம் உண்டான இடத்து, உற்ற துணை-தகுந்த துணை; அது 'கேடில் விழுச் செல்வம்; எழுமைக்கும் ஏமாப்புடைத்து.' ஆதலால் 'உற்றதுணை' என்றார்.

## 3. கல்வியால் இன்பம்

208. தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்
மடங்கொன்று அறிவகற்றும் கல்வி-நெடுங்காமம்
முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

**தெளிவுரை**

அணிகளை அணிந்த பெண்ணே! கல்வி தொடங்கும் போது துன்பம் அளிப்பதாய்ப் பின் இன்பத்தைத் தரும். ஆனால் மிக்க காமமோ தொடக்கத்தில் சிறிது நேரம் இன்பத்தைத் தரக் கூடியதாய்ப் பின் மிகுதியான துன்பத்தை அளிக்கும்.

**கருத்து**

காமத்தால் உண்டாகும் இன்பத்தைவிடக் கல்வியால் உண்டாகும் இன்பமே சிறந்தது.

**விளக்கம்**

பயக்கும் - தரும்; பயன் தரும் என்ற பொருள்பட நின்றது. தொடக்கத்தில் துன்பமாய் இருப்பது கல்வி; தொடக்கத்தில் இன்பமாய் இருப்பது காமம். கற்றபின் இன்பத்தைத் தருவது கல்வி; இன்பத்துக்குப் பின் துன்பம் தருவது காமம். மடம்-அறியாமை, அறிவு அகற்றும் - அறிவைப் பெருகச் செய்யும், நெடுங்காமம் - மிக்க காமம், ஆண் பெண்ணிடை உண்டாகும் ஆசை காமம் எனப்பட்டது. சின்னீர - சில+நீர; நீர-தன்மையுடையவை; சிறிது பொழுதே உண்டாகக் கூடிய இன்பம். பீழை - துன்பம்.

## 4. அவையில் அழகு தரும்

209. கல்வியே கற்புடைப் பெண்டிராப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே தீங்கவியாச்-சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமு முண்டு சிலர்க்கு.

**தெளிவுரை**

கல்வியைக் கற்றவர்க்கு அவர் கற்ற கல்வியே கற்புடைய மனைவி; அப்பெண்டிர்க்கு இனிய பாடலே மகன்; அப்பாடலின் மொழிச் சிறப்பே நிறைவான செல்வம்; இங்ஙனம் அமைய மாட்சிமைப்பட்ட அறிஞர் அவையை அழகு செய்யும் செல்வாக்குக் கற்றவர் சிலரிடம் அமைந்து விளங்கும்.

**கருத்து**

கல்வியானது கவி இயற்றவும் அவையில் தான் கற்றதை எடுத்துரைக்கவும் வல்லதாக விளங்க வேண்டும்.

**விளக்கம்**

இப்பாடலில் ஒன்றற்கொன்று தொடர்புபட்ட பொருளை இயைபுபடுத்திக் கூறியிருப்பதால் இயைபுருவகம், கல்வியை மனைவியாய் உருவகம் செய்தவர், அம்மனைவிக்கு நன்கலம் நன்மக்கட் பேறு என்பதுபோல் கவியியற்றும் ஆற்றல் கல்விக்குச் சிறப்பாய் அமையும், என்று கொண்டு அக்கவியியற்றலை 'புதல்வன்' என்றார். இல்வாழ்வுக்கு இன்றியமையாதது செல்வம். அத்தகைய செல்வமாய்ச் சொல்வளத்தைக் குறித்தார். குழந்தையைப் பெறாதவள் மலடி என இகழப்படுவாள். அவளால் வாழ்க்கை சிறக்காது. அதுபோல் கல்வி கற்றவன் கவி இயற்றாது போனால் வாழ்வின் பயன் இல்லாது போய்விடும் என்பது ஆசிரியர் உள்ளக் கிடக்கை. கற்றவர் மற்றவர்க்குத் தாம் கற்றதை எடுத்துக் கூறுவது சிறப்பை அளிக்கும். ஆதலால் அத்தகைய ஆற்றலை 'மாணவை மண்ணுறுத்தும்' என்ற தொடரால் குறித்தார். மாணவை-மாண்+அவை; மாட்சிமையுடைய அவை; அதாவது கற்றவர் கூடியிருக்கும் அவை. மண்ணுறுத்தல்-இதன் நேர்பொருள் கழுவுதல் என்பதாகும். அதாவது பிறரது அறியாமையான அழுக்கைப் போக்குதல். எனவே, கற்றார் அவையில் மற்றவர்க்கு அறிவுறுத்துமாறு உயர்ந்த நுண்பொருளை எடுத்துக் கூறுதல் என்றாயிற்று. ஒருவன் கற்ற கல்வி மற்றவரின் அறியாமையைப் போக்க உதவ வேண்டும் என்றும் இத்தகைய ஆற்றல் எல்லார்க்கும் வாய்ப்பதரிது என்பதையும் உணர்த்த 'செல்வமும் உண்டு' என்று உம்மை தந்து பேசினார். தீங்கவியா, வெறுக்கையா-தீங்கவியாக வெறுக்கையாக என்பவை ஈறு குறைந்தன. தீங்கவி-தீம்+கவி; தீம்-இனிய.

## 5. உய்த்துணர்வு, சொல்வன்மை வேண்டும்

210. எத்துணைய ஆயினும் கல்வி இடமறிந்து
உய்த்துணர்வு இல்லெனின் இல்லாகும்-உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை இன்றெனின் என்னாம் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து.

**தெளிவுரை**

ஒருவர் கற்ற கல்வி எவ்வளவு பெரிதாயினும் நூலின் இடம் அறிந்து ஆராய்ந்து அறிதல் வேண்டும். அத்தகைய ஆராய்ந்து அறியும் அறிவு இல்லையானால் பயனில்லை. அத்தகைய அறிவு வாய்க்கப் பெற்றும் தாம் கற்றதை எடுத்துச் சொல்லும் ஆற்றல் இல்லையானால் அக் கல்வியால் என்ன பயன் உண்டு? அத்தகைய சொல்வன்மை வாய்த்தால், அது, பொன்னால் ஆன அழகிய மலர் நறுமணம் உடையது போலாகும்.

**கருத்து**

நூலின் உட்பொருளை ஆராய்ந்து அறிதல், சொல்வன்மை இரண்டும் தேவை. இவை இரண்டும் இல்லையானால் கல்வியால் பயன் இல்லை.

**விளக்கம்**

'பொன் மலர் நாற்றமுடைத்து, என்பது இல்பொருள் உவமையணியாகும். உய்த்து உணர்வு - நூலாசிரியர் இன்ன இடத்து இதனை உரைத்தார் என்று அந்த இடத்தை ஆராய்ந்து அறிதல். பொன்மலர் கற்ற கல்வி. அது நறுமணத்தை அடைதல் சொல்வன்மை உடையதாதல் எனக்கொள்க. எத்துணைய-எ+ துணைய.

இவ்வாசிரியர் கல்வியைப் பன்மையில் உரைப்பார்.

## 6. அஞ்சாமை வேண்டும்

211. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும்-நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலின் பூவாமை நன்று.

**தெளிவுரை**

கற்றவர் கூடியிருக்கும் அவைக்கு அஞ்சி உடல் நடுக்கம் கொள்பவரின் கல்வியறிவும், கல்லாதவரின் அவைக்கு அஞ்சாத ஆரவாரமான சொல்லும், குற்றத்துக்கு அஞ்சிப் பிறர்க்குக் கொடுத்து உண்ணாதவரின் செல்வமும், வறியவரின் இனிய பண்புகளும் தோன்றுவதை விடத் தோன்றாது இருப்பது நல்லது.

**கருத்து**

கற்றவர் கூடியுள்ள சபைக்கு அஞ்சும் கல்வி பயன் அற்றது.

**விளக்கம்**

கல்லாதவர் அவைக்கு அஞ்சாது ஆரவாரமாகப் பேசுவர். ஆதலால் 'ஆகுலச் சொல்' என்றார். ஆகுலம்-ஆரவாரம், விதிர்த்தல்-நடுங்குதல், உதறுதல், கற்றவர் அவைக்கு அஞ்சாது தாம் கற்றதை விரித்துச் சொல்லுதல் சிறந்தது. ஈத் துண்பர்-ஈந்து+உண்பார். பிறர்க்கு அளித்து எஞ்சியதை உண்ணுதல்.

## 7. புகழ் உடல்

212. கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான்-மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு.

**தெளிவுரை**

கலைமகளின் வாழ்க்கை நாவில் இருப்பதே ஆயினும் நான்முகன் புலவர்க்கு நிகராக மாட்டான். ஏனென்றால் அந்த நான்முகன் படைக்கின்ற புகழ் இல்லாத வெற்று ஊன் உடம்புகள் அழியும். புலவர்கள் செய்கின்ற நூல்களான உடல்கள் புகழைப் பெற்று அழியாமல் உள்ளனவாகும்.

**கருத்து**

எக்காலத்தும் அழிவற்றது கல்வியே ஆகும்.

**விளக்கம்**

கலைக்குரிய தெய்வமான கலைமகள் நான்முகனின் நாவில் வாழ்பவளாகக் கூறப்படுவாள். அங்ஙனமே புலவர் நாவிலும் அவள் வாழ்பவள். இவ்வகையினால் புலவரும் நான்முகனும் ஒப்பாவர், நான்முகன் படைக்கும் ஊனால் ஆன உடல் அழியும். அங்ஙனம் புலவர் படைக்கும் நூல்கள் என்னும் படியான உடல்கள் அழியா. எனவே நான்முகனைவிடப் புலவர் உயர்ந்தவர் என்று வேற்றுமை தோன்ற உரைத்தார். ஆதலால் இச்செய்யுள் வேற்றுமையணியாகும். முகத்தது-முகத்தில் உள்ள நாவில் உள்ளது. வாழ்க்கை-தங்குதல் என்றபொருளில் வந்தது. வண்டமிழோர்-வண்மை+தமிழோர்; வளமான தமிழைக் கற்றவர்; புலவர். மலரவன்-தாமரை மலரில் வாழும் நான்முகன், நான் முகன் தாமரை மலரில் வாழ்பவன் எனக் கூறப்படுதல் மரபு. மலர்-இங்குத் தாமரை மலர்; 'பூவெனப்படுவது பொறி வாழ்பூவே' என்பது ஆன்றோர் வாக்கு. பொதுவாகப் பூ என்றால் அது தாமரையைக் குறிக்கும். இச்செய்யுள் 'கேடில் விழுச்செல்வம்' என்ற வள்ளுவர் கருத்தை வலியுறுத்துகின்றது. வெற்றுடம்பு-வெறுமை+உடம்பு; புகழ் இல்லாத ஊன் உடல்கள்.

## 8. அவையில் உதவாக் கல்வி

213. நெடும்பகல் கற்ற அவையத் துதவாது
உடைந்துளா ருட்குவரும் கல்வி-கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட இல்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

**தெளிவுரை**

பல காலம் முயன்று கற்றுக் கொண்ட கல்வி கற்றவர் கூடிய அவையில் எடுத்துக் கூற இயலாது தோற்றவரின் அச்சப்படத்தக்க கல்வியானது, நண்பகலில் அயலவன் வயப்பட்டிருக்கக் கண்ட

கண்ட மனைவியைவிடத் தீயதாகும். ஏனென்றால் அவளைத் தீயவள் என்று நீக்குவதைப் போன்று தான் கற்ற கல்வியை நீக்குவது அரிதாகும்.

### கருத்து

அவைக்கு அஞ்சும் கல்வி பயனற்றது.

### விளக்கம்

கடும் பகல்-நண்பகல்; உச்சிப்போது; பொதுவாகப் பகற் போது எனவும் கொள்ளலாம். மனைவி தன்னை மணந்து கொண்ட கணவனைப் பேணுதல் முதலியவை செய்யாதவளாயின், தீயவள் என விலக்கி விடுதல் கூடும். ஆனால் கல்வியை அவ்வாறு நீக்க இயலாது என்று சொல்ல வந்தவர், 'இல்லினும் பொல்லாதே' என்றார். இதற்கு 'அயலான் மனைவியைப் பார்த்து ஒருவன், அவள் மீது ஆசை கொண்டு, பின் தன் தவற்றை உணர்ந்து, அவள் மீது ஆசை கொண்டது தவறு என்று விலக்கி விடவும் கூடும்' என்றும் பொருள் கொள்ளலாம். எனினும் இப்பொருள் சிறப்புடையதாகாது. 'ஏதிலான் பாற்கண்ட இல்லினும்' என்றதால் இவ்வாறு பொருள் கொள்ளப்பட்டது. ஏதிலான்-அயலான். இல்-இல்லாள்; மனைவி, நீப்பு-நீக்குவது; விலக்குவது, உட்கு வரும் கல்வி-மற்றவர் கண்டு அச்சம் கொள்ளக் கூடிய மிக்க கல்வி.

## 9. பாதுகாத்தல் வேண்டும்

214. வருந்தித்தாம் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்து சில கற்பான் தொடங்கல்-கருந்தனம்
கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்கு
எய்த்துப் பொருள்செய் திடல்.

### தெளிவுரை

மக்கள் தாம் முயன்று வருந்திக் கற்ற நூல் பொருள்களை பாதுகாவாமல், மேலும் நூற் பொருள் சிலவற்றைக் கற்கத்

தொடங்குதல், கையில் உள்ள பொருள்களை வீசி எறிந்து விட்டு, பின்னர் அங்ஙனம் வீசி எறிந்த இடத்திலேயே அப்பொருள்களைத் தேடிச் சல்லடையால் சலித்து (அரித்து) எடுத்தலைப் போன்ற தாகும்.

**கருத்து**

கற்றவற்றை மறக்கக்கூடாது. அவற்றைப் போற்றிக் கொண்ட பின்பே மேலும் சிலவற்றைக் கற்றல் வேண்டும்.

**விளக்கம்**

'வருந்தித் தாம் கற்றன'-இத் தொடர் கற்றலில் உள்ள அருமையை உணர்த்தியது. கற்கும் போது துன்பம் உண்டாகும். இதனை இவ்வாசிரியரே 'தொடங்குங்கால் துன்பமாய்' என்று உரைத்தார். (செய்யுள் 3). ஓம்பாது - பாதுகாவாமல்; பாது காத்தலாவது கற்றவற்றை மறவாது மனத்துள் இருத்துதல். கற்பான்-கற்க. உய்த்து-கொண்டு போய் வீசி. அரிப்பரித்தல்-சலித்தெடுத்தல்; மண்ணுள் கலந்த பொருள்களைப் பிரித்தெடுக்கச் சல்லடையால் சலித்தெடுப்பது உலக வழக்கம். இதனைச் சல்லடையால் சலித்தல் என்பர். வீடு கட்டுதற்கும் பாண்டம் செய்வதற்கும் மண்ணைத் தூயதாய் அரித்து எடுத்தலை இது குறித்ததாகவும் கொள்ளலாம். பொன் முதலியவை மண்ணில் கலந்து கிடக்குமானால் அவற்றை அரித்தெடுத்தல் இன்றும் வழக்கமாக உள்ளது. 'தொடங்கல்' என்பது செய்தல் என்ற பொருளில் வந்தது. கைத்தலத்த-கையில் உள்ள பொருள்களை; எய்த்து-வருந்தி; முயன்று

## 10. வறிஞனின் கல்வி

215. எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையும் சீர்ப்பா டிலவாம்-மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்.

**தெளிவுரை**

மனைவியிடம் நற்குண நற்செய்கை இல்லையானால், அவளுடைய கணவன் நடத்தும் இல்லற வாழ்வு சிறப்பு அடையாது. அது போல், வறியவரின் கல்வி எவ்வளவு திட்ப நுட்பம் உடையது என்றாலும் தினையளவு கூடச் சிறப்புடையதாய் விளங்காது.

**கருத்து**

கல்வி சிறக்கச் செல்வமும் வேண்டும்.

**விளக்கம்**

இலம்பாடு-இல்லாமை; வறுமை, இலம் பாட்டார்-வறியவர். எனைத்துணைய-எவ்வளவு ஆயினும்; அதாவது எவ்வளவு திட்பமும் நுட்பமும் உடையதாயினும்; சீர்ப் பாடு-சீர்படுதல்; சிறப்பு அடைதல். (சீர்-சிறப்பு; பாடு-படுதல்; உண்டாதல்) 'மனைத்தக்க மாண்புடையள் ஆகி' என்ற குறளில் உள்ள தொடரை இங்குக் காண்க. நல்லறம்-இல்வாழ்வு. 'இல்லற மல்லது நல்லமறமன்று' என்ற ஔவையின் வாக்கு இங்குக் குறிக்கத் தக்கது. மணமகன்-இது இங்குக் கணவனை உணர்த்திற்று. புலப்படா போல் சிறப்பாக விளங்காததைப் போல். இதனால் வறியவரின் கல்வி சிறப்படையாது என்றார்.

## 11. செல்வத்தின் சிறப்பு

216. இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினுமொன் றில்லானேல்
வன்சொல்லின் அல்லது வாய்திறவா-என்சொலினும்
கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்
பித்துடைய அல்ல பிற.

**தெளிவுரை**

ஒருவன் இனிய சொல் பேசுபவனாயும் அடக்கமுடைய வனாயும் இருந்தாலும் அவன் கையில் பொருள் இல்லாது

வறியவனானால் உலகம், கடுஞ் சொற்களைச் சொல்லுதற்கு வாயைத் திறப்பதே அல்லாது இனிய சொல்லைப் பேச வாயைத் திறவாது. ஆனால் செல்வம் உடையவன் என்ன சொன்னாலும் உலகம் அவனுக்கு அடங்கி நடக்கும். இத்தகைய இவ்வுலக நிலைகள் அறியாமை உடையவையே; அறிவுடையவை அல்ல.

**கருத்து**

செல்வர் எத்தகைய குணமுடையவராயினும் அவர்க்கு உலகத்தார் அடங்குவர்.

**விளக்கம்**

இன் சொல்-இனிய சொல்; நன்மையை அளிக்கும் தீங்கு பயவாத சொல்; கைத்து-கையில் உள்ள பொருள். செல்வன் எத்தகைய தாழ்ந்த சொல்லைச் சொன்னாலும் அவனுக்கு அடங்கி உலகம் ஒழுகும். இதனால் பொருளினிடம் உலகத்தார்க்கு உள்ள மதிப்புக் கூறப்பட்டது.

## 12. தவத்தவர் பெருமை

217. இவறன்மை கண்டும் உடையாரை யாரும்
குறையிரந்தும் குற்றேவல் செய்ப-பெரிதும்தாம்
முற்பகல் நோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை அன்று.

**தெளிவுரை**

கொடைத் தன்மை இல்லாததைக் கண்டும், செல்வம் உடையவரை வேண்டி எல்லாரும் சிறிய பணிகளைச் செய்வர். முன்பிறவியில் மிகவும் தவம் செய்யாதவர் தவம் செய்தவரைப் பின் தொடர்ந்து செல்லுதல் அறிவுடைமையே ஆகும்; அறியாமை அன்று.

**கருத்து**

செல்வம் உடையவரை விடத் தவம் உடையவர் உலகத் தவரால் பின்பற்றத் தக்கவர்.

**விளக்கம்**

செல்வரை இரப்பதைவிடத் தவமுடையவரை வேண்டுதல் கல்விக்கு அழகு என்பது பொருள். இதனால் செல்வம் உடையவரை வேண்டுதல் சிறந்ததாகாது என்ற பொருளை இசை யெச்சமாய் வருவித்து உரைத்துக் கொள்க. இவறன்மை-உலோபத் தன்மை; வேண்டியபோது வேண்டியதைத் தராமை. குறை யிரத்தல்-நின்று வேண்டுதல். குற்றேவல்-சிறிய ஏவல்களைச் செய்தல். எடுபிடி வேலை செய்தல். கற்பு-கல்+பு; கல்வி என்பது பொருள்.

இதற்கு வேறு பொருள் உண்டு. அது முற்பிறவியில் தவம் செய்து இப்பிறவியில் செல்வம் உடையவராய் உள்ளவரை, முற் பிறவியில் தவம் செய்யாததால் இப் பிறவியில் வறியவராய் உள்ளவர் இரத்தல் அறியாமையாகாது; அறிவுடைமையே ஆகும் என்பதாம்.

இப்பொருள் அத்துணைச் சிறப்புடையதாய் இல்லை.

முற்பகல்-முன் பிறவி. நோலாதார்-தவம் செய்யாதவர்; நோற்றார்-தவம் செய்தவர்.

இதனால் உலோபியராயினும் செல்வரை உலகம் பாராட்டும் என்பது கூறப்பட்டது.

## 13. கல்வி அழகே சிறந்த அழகு

218. கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம்-முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்.

**தெளிவுரை**

எக்காலத்திலும் மணிகளால் ஆன நகைக்கு வேறு ஓர் அணியானது தேவையற்றது. ஏனென்றால் யார் அழகுக்கு அழகைச் செய்வார்? அது போல், கற்க வேண்டியவற்றைக் கற்றவர்க்குக் கல்வியின் அழகே அழகாகும். அவர்க்கு வேறோர் நகையின் அழகு வேண்டியதில்லை.

**கருத்து**

கல்வியே சிறந்த அழகைத் தரும்.

**விளக்கம்**

முற்ற-இது 'எப்போதும்' என்ற பொருளில் வந்தது. முழு மணிப் பூண்-முழுமையான மணிகளால் ஆன அணி; அதாவது மணியை உடைத்து அறுத்து அதனைக் கொண்டு அமைக்கப் படாமல் முழுமையான மணியால் ஆன நகை, கல்வி நலன்-'நலம்' என்பது 'நலன்' ஆயிற்று. கலன், நலன்-இவை போலிகள். கல்வியால் உண்டான சிறப்புக்கு நகையைக் கூறினார். உடை முதலியவற்றையும் கொள்க. செல்வத்தால் உண்டாகும் சிறப்பை விட, அழகைவிடக் கல்வியால் உண்டாகும் சிறப்பே சிறப்பாகும். கல்வியின் சிறப்பு இதனால் கூறப்பட்டது.

## 14. செருக்குக் கூடாது

219. முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க-சிற்றுளியால்
கல்லும் தகரும் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்.

**தெளிவுரை**

கனமான காதணிகளை அணிந்த பெண்ணே! இவ்வுலகத்தில் எல்லாவற்றையும் அறிந்தவர் எவரும் இல்லை. ஆகவே எல்லா

வற்றையும் கற்று விட்டோம் என்று ஒருவர் செருக்கு அடைய வேண்டியதில்லை. ஏனென்றால் சிறிய உளியினால் மலையில் உள்ள பெரிய பாறைகளும் உடைபடும். சம்மட்டியால் அப்பாறைகள் உடைபடா.

**கருத்து**

கற்றவர் செருக்குக் கொள்ளல் தவறு.

**விளக்கம்**

முழுவதூஉம்-இன்னிசை அளபெடை. 'கற்றனம்' என்ற பன்மை 'களியற்க' என்ற ஒருமையைக் கொண்டு முடிந்தது. ஒருமை பன்மை மயக்கம்; சிறப்பினால் அவ்வாறு வந்தது. கல்-பெரும்பாறை; மலை. கொல்-கொல்லன் கல் தச்சன் என்பர். கொல் உலைக் கூடம்-கொல்லனின் உலைக் களத்தில் உள்ள சம்மட்டி; உலை-உலைக்களம்; கூடம்-சம்மட்டி. சிறிது கற்றவராய் இருப்பினும் அன்னவரை அத்தகையர் என்று ஒருவர் அவ மதித்தலும் தம்மைப் பெரிதாய் மதித்தலும் கூடாது என்பதாம். இச்செய்யுட் கருத்தை அறநெறிச் சாரத்திலும் காணலாம்.

'பலகற்றோம் யாம்என்று தற்புகழ வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்கு
அச்சாணி அன்னதோர் சொல்'.

*(அறநெறிச்சாரம்-79)*

## 15. மகிழ வேண்டும் இடமும், செருக்கழிய வேண்டும் இடமும்

220. தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென்று அகமகிழ்க-தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று.

**தெளிவுரை**

தம்மைவிடச் செல்வத்தில் குறைந்தவர்களைப் பார்த்துத் தமக்குள்ள செல்வம், 'ஆ! மிகவும் பெரியது' என்று ஒருவர் மனம் மகிழவேண்டும். ஆனால் தம்மைவிடக் கற்றவரைப் பார்த்து, இவர் கற்ற கல்விக்கு நம் கல்வி எவ்வளவு! என்று எண்ணிச் செருக்குக் கொள்ளாது இருக்க வேண்டும்.

**கருத்து**

செருக்குக் கொள்ளாது மேலும் மேலும் கற்க வேண்டும்.

**விளக்கம்**

அகம் மகிழ்க-உள்ளத்தில் மகிழ்ச்சி அடைய வேண்டும். ஆனால் அது புறத்தே புலப்படக் கூடாது என்பதாம். உடைமை-செல்வம். அதனை உடையவர் உடையார். 'திருக்குறளில்' உடையார் முன் இல்லார் எனச் செல்வரை உடையார் எனக் குறித்தலைக் காண்க. அம்மா-இடைச்சொல்; வியப்புப் பொருளில் வந்தது.

## 16. கற்றவரும் செல்வரும் அடக்கமுடையராதல் வேண்டும்

221. கல்வி யுடைமை பொருளுடைமை என்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்-இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின்.

**தெளிவுரை**

கல்வியும் செல்வமும் இல்லாதவர், அவ்விரண்டையும் வேண்டி, அவ்விரண்டையும் உடையர் தமக்கு முன்னர் நிற்பதைப் போன்று தாமும் தலையினால் வணங்கித் தாழ்ந்து நின்றால்,

கல்வியுடைமை, செல்வம் உடைமை என்னும் இரண்டும் உண்மைச் செல்வம் என்று உயர்ந்தவரால் பாராட்டப்படும்.

**கருத்து**

கல்வியும் செல்வமும் உடையவர்க்கு அழகு அவ்விரண்டும் இல்லாதவரிடத்துத் தாழ்ந்து நிற்பதாகும்.

**விளக்கம்**

உடைமை-செல்வம், கல்வியால் செல்வமும் செல்வத்தால் கல்வியும் ஒன்றுக்கு ஒன்று துணையாய் நிற்பவையாகும். ஆகையால் அவ்விரண்டும் மற்றவரால் வேண்டும் தன்மை யுடையன. பொருளுடைமையினும் கல்வியுடைமை சிறந்தது ஆதலால் அதை முன்கூறினார். செல்வம் உடைமையால் உண்டாகும் செருக்கைக் கல்வியுடைமை தாழச் செய்யும் இயல் புடையது.

கல்வியும் செல்வமும் இல்லாதவர் தம்மைத் தாழ்ந்து நிற்கும் போது தாமும் அவரைத் தாழ்தல் வேண்டும் என்பதை இதனால் குறித்தார். தம்மைத் தாழ்வாரைக் கண்டு செருக்குக் கூடாது என்பதாம். ‘பணியுமாம் என்றும் பெருமை’ என்ற கருத்து இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

## 17. வணங்காதவரையும் வணங்குதல்

222. ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப - தூக்கின்
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழும் துலைக்கு.

**தெளிவுரை**

உயர்த்திப் பிடிக்கின்ற துலாக்கோலில் இலேசான பொருள் உள்ள தட்டானது மேல்மேல் செல்லும்போது கனமான பொருள்

வைக்கப்பட்ட தட்டுத் தாழும். (அதுபோல்) கல்வியிலும் செல்வத்திலும் மிக்க பெரியவர் அவ்விரண்டிலும் குறைந்த சிறியவரிடத்தில் உண்டான எல்லை இல்லாத நடத்தையைக் கண்டால் அவர்களுக்குத் தாழ்ந்து நடப்பர்.

**கருத்து**

தமக்குத் தாழ்ந்து நடக்காதவரிடத்தும் தாழ்ந்து நடப்பது சான்றோர்க்கு இயல்பு.

**விளக்கம்**

ஆக்கம் பெரியார் - கல்வியிலும் செல்வத்திலும் பெரியவர். மெலியது - இலேசான பொருள் வைக்கப்பட்ட தட்டு. வலிது - கனமான பொருள் வைக்கப்பட்ட தட்டு, துலைக்கு - துலையில்; உருபு மயக்கம்; ஏழாம் வேற்றுமை உருபுக்கு நான்காம் வேற்றுமை உருபு வந்தது. துலை-தராசு.

சென்ற செய்யுளில் பெரியோர் தம்மைத் தாழ்ந்தவரிடம் தாழ்தலை உணர்த்தினார். இச்செய்யுளில் தாழாதவரையும் தாழ்தலைக் கூறுகிறார். மீச்செலவு - வரம்பு கடந்த செயல். மீ+செலவு - மீச்செலவு.

## 18. தற்புகழ்ச்சி கூடாது

223. விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையும் தீதே-புலப்பகையை
வென்றனம் நல்லொழுக்கில் நின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மில் கொளின்.

**தெளிவுரை**

'ஐந்து புலன்களாகிய பகையை வென்று விட்டோம். நல்ல ஒழுக்கத்தில் நிலைத்து நின்றோம்' என்று ஒருவர் தமக்குத் தாமே தம் பெருமையை எண்ணிக் கொள்வாரானால் விலக்கப்பட்ட

செயல்களைச் செய்யாமல் விலக்கி, விதித்த செயல்களை மட்டும் செய்யும் சான்றோரின் நல்ல செயலும் பயன் அற்றதே ஆகும்.

**கருத்து**

ஐம்புலன்களையும் வென்று நல்ல ஒழுக்கத்தை மேற் கொண்டவரும் தற்புகழ்ச்சி கொள்ளக் கூடாது.

**விளக்கம்**

புலப்பகை-ஐந்து புலன்களான பகை; ஐம்புலன்கள்; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், அவை. ஒருவன் முத்தி நெறிக்குச் செல்லாதபடி தடுத்து நிறுத்தலால் பகை என்றார் ஆதலால் அவற்றை வெல்லுதல் நல்லொழுக்கத்தில் நிற்பதற்கு வழி தம் பாடு-தம் பெருமை. தம்மில் கொளின்-தமக்குள்ளே எண்ணிக் கொள்வாரானால். ஒழுக்கு-ஒழுக்கம்

## 19. தற்புகழ்ச்சியின் இழிவு

224. தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்-தன்னை
வியவாமை அன்றே வியப்பாவது இன்பம்
நயவாமை அன்றே நலம்.

**தெளிவுரை**

ஒருவன் தன்னைத் தானேபுகழ்ந்து கொள்ளுதல் தீ விளக்கை நல்ல நீரை வார்த்து வளர்த்ததைப் போலவாகும் (தீயை அவித்த தாகும்). ஆகவே, தன்னை ஒருவன் புகழ்ந்து கொள்ளாமையே புகழ்ச்சியை-மதிப்பை அளிப்பதாகும். இன்பத்தை விரும்பா திருப்பதே இன்பத்தை அளிப்பதாகும்.

**கருத்து**

தற்புகழ்ச்சியினால் இகழ்ச்சியே விளையும்.

**விளக்கம்**

தன்னை வியப்பிப்பான்-மற்றவர் தன்னைப் பாராட்டு தற்காக; வியப்பிக்க. 'பான்' என்ற விகுதியையுடைய பிறவினை யெச்சம்.

தீ விளக்கில் நீர் வார்த்தால் தீ வளராது; முன்னிருந்த தீயும் அவிந்து போகும். அதுபோல ஒருவன் தனக்கு மதிப்பு மிகும் என்று தன்னைத் தான் பாராட்டிக் கொண்டால் முன்னிருந்த மதிப்பும் கெடும் என்பதாகும். நல்நீர்-குளிர்ந்த நீர்; தண்ணீர், மணிச்சுடர் முதலியனவும் உண்டு ஆதலால் அவற்றினின்று வேறுபடுத்த 'தீச்சுடர்' என்றார். வளர்த்தற்றால்- வளர்த்த+அற்று+ ஆல். ஆல்-அசை. வியவாமை, நயவாமை- எதிர் மறைத் தொழிற் பெயர்கள்.

## 20. பெரும்புகழ் வேண்டுவான் செய்ய வேண்டியவை

225. பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு-பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறம்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்.

**தெளிவுரை**

பிறரால் நன்கு மதிக்கப்படுதலான பெருமதிப்பைப் பெற விரும்புபவன், எப்போதும் மறக்காமல் செய்யக் கூடியது ஒன்று உண்டு. அஃது எதுவென்றால், அது மற்றவரின் பெருமைகளை எல்லாம் எல்லாரும் அறிய எடுத்துக் கூறி, அவர் தம் தீயொழுக் கத்தை வெளியே பரப்பாது பாதுகாத்து எல்லாரிடமும் வணக்கமான சொற்களைச் சொல்வதாகும்.

**கருத்து**

பிறரது பெருமையை உரைத்தால் ஒருவனுக்குப் புகழ் உண்டாகும்.

**விளக்கம்**

பெருஞ்சுட்டு-பெருமதிப்பு. சுட்டு-ஒருவனின் நன்மை களைச் சுட்டிக் கூறும் மதிப்புக்கு வந்தது. வேண்டுவான்- விரும்பு பவன். தாழ்ச்சி-தாழ்மையான சொற்கள். நோற்பது- நோன்பு போல் தவறாமல் செய்யக் கூடியது என்ற பொருளில் வந்தது. பிறரது பெருமையைப் பரப்பிச் சிறுமையைப் பரப்பாது காத்தல் நோன்பு நோற்றலுடன் ஒத்ததாகும்.

தூற்றுதல்-பொதுவாக இச் சொல் கெட்டவற்றைப் பலரும் அறியக் கூறுவதற்குப் பயன்படுத்தும் சொல்லாகும். இங்கு அதனைப் பிறர் சீரைப் பரப்புதற்குக் கூறியதன் காரணம், தீய செய்தியை விரைவோடும் விருப்போடும் பரப்புவது போல நல்லனவற்றையும் பரப்ப வேண்டும் என்பதாம். பிறர் புகழை மட்டும் சொல்லி இகழ்வைச் சொல்லாமல் காத்தல் வேண்டும் என்பதை இச் செய்யுளால் வற்புறுத்தினார். மக்கள் எல்லாருக்கும் உரைத்த அறிவுரை இதுவாகும்.

## 21. கற்றதற்கேற்ப நிற்றல்

226. கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக்கு உண்டோர் வலியுடைமை-சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

**தெளிவுரை**

நூல்களைக் கற்று அதன்படி ஒழுகவேண்டும் என்று அக் கருத்தை மற்றவர்க்கு மட்டும் எடுத்துச் சொல்லி அதன்படி தாம் நில்லாதவரின் வாயினின்று உண்டாகும் சொல்லுக்கு ஒரு வலிமை உண்டு. அது, 'நாங்கள் கற்றவாறு ஒழுகவேண்டும் எனக் கூறி அதன்படி நீங்கள் நில்லாத காரணம் யாது?' என்று வெட்கம் ஏற்பட எதிர்த்து ஒருவன் இகழ்ந்து கூறாதபடி பிறர்க்கு அறிவுரை கூறும் போது எண்ணிப் பார்த்துக் கூறுதலாம்.

**கருத்து**

கற்றபடி நிற்க வேண்டும்.

**விளக்கம்**

சூழ்ந்து சொலல்-ஆராய்ந்து கூறுதல், ஆராய்ந்து கூறுதலாவது, 'நீங்கள் கற்றதன்படி ஒழுக வேண்டும்' என்று கூறாமல் 'நாம் கற்றதன் வண்ணம் நடப்போம்' என்பது போல் கூறுபவை. இவ்வாறு கூறினார் இகழ்வாக! வஞ்சமான ஒழுக்கத்தைப் புகழ்வது போல் இகழ்ந்து கூறினார். அதாவது 'கற்றதன்படி நிற்கவேண்டும்' என்பவன் தானும் அவ்வாறு நிற்க வேண்டும். பிறர்க்கு உரைப்பதோடு நின்றுவிடக் கூடாது. அங்ஙனம் அவன் கற்றபடி நில்லாது போனால்தான் அந்த இகழ்ச்சியினின்று தப்பும் ஓர் உபாயம் உண்டு. அது என்ன வென்றால் 'நாம் கற்றதன்படி நடக்க வேண்டும்' என்று கூறுவதன் மூலமாகத் தப்பி விடலாம் எனக் கூறி இகழ்ந்து உரைத்துள்ளார். அவ்வாறின்றி 'நாம் கற்றதன்படி நடக்க வேண்டும்' என்பது கற்றபடி நில்லாததற்கு உபாயமாகாதன்றோ! வெற்றுரை-வெறுமை+உரை; வெறுமையான சொல்; பயன் இல்லாத சொல். 'பயனில் சொல்' என்பார் வள்ளுவர். வாய்ப்படூஉம்- படூஉம்-இன்னிசையளபெடை.

## 22. நரகத்தை அடைபவர்

227. பிறர்க்குப் பயன்படத் தாம்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்-திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்.

**தெளிவுரை**

மற்றவர்க்குப் பயன் உண்டாகத் தாம் வருந்திக் கற்றவற்றைப் பொருளுக்காக விற்கும் புலவர் தங்களுக்கு வேறு ஒரு பயனை

உடையவர் ஆவார். அது என்னவென்றால், பலவகையான தீ வினைக்கு அஞ்சாத ஆற்றலை உடைய கூற்றுவனைத் தம்மை நரகத்தில் இட்டுத் தண்டிக்குமாறு ஏவல் கொள்வதாகும். (அவர்கள், நரகத்தை அடைந்து துன்பம் அடைவர்.)

**கருத்து**

பொருளுக்காகக் கல்வியைக் கற்பிக்காது தக்கார்க்குக் கல்வியைப் புகட்ட வேண்டும்.

**விளக்கம்**

பிறர்க்கு - நல்லொழுக்கம். நல்ல அறிவு இல்லாதவரைப் 'பிறர்' என்றார். கற்ற-கற்ற நூற் பொருள்கள். கற்றவற்றை விற்றலாவது-நல்லவர் அல்லாத செல்வரைப் புகழ்ந்து பாடுதல் முதலியவை. புலவர் செல்வரைப் புகழ்தல் ஒரு தீவினை. அதனுடன் பணம் பெறுதல் மற்றொரு தீவினை. இத் தீவினை களால் அவர்கள் நரகினை அடைந்து கூற்றுவனால் தண்டிக்கப் படுவர் என்பார் 'தென்புலத்தார் கோவினை வேலை கொளல்' என்றார். தென்புலத்தார்-உயிர் நீத்தவர், அவர்க்குக் கோ(அரசன்) கூற்றுவன்.

'கற்றவிற்பார்' என்ற இதற்குப் பொருளை முன்னிட்டு அதைத் தரும் தகுதியில்லாத மாணவர்க்கு அதைத் தருதல் எனவும் பொருள் கொள்ளலாம். திறப்படூஉம்-திறம்+படூஉம்; திறம்-பலவகை. படூஉம்-உடைய; பொருந்திய. படூஉம்- இன்னிசை யளபெடை. வேலை கொளல்-ஏவல் கொள்ளுதல்; 'வேலை வாங்குதல்' என்பது உலக வழக்கு.

## 23. கல்லாதவரின் அஞ்சாமை

228. கற்பன ஊழற்றார் கல்விக் கழகத்தாங்கு
ஒற்கமின் றூத்தைவாய் அங்காத்தல்-மற்றுத்தம்
வல்லுரு அஞ்சன்மின் என்பனவே மாபறவை
புல்லுரு அஞ்சுவ போல்.

**தெளிவுரை**

கற்கின்ற நல்வினை இல்லாதவர், புலவர் கூடிய அவையில் அடக்கம் சிறிதும் இல்லாது அழுக்குடைய வாயைத் திறந்து கூறுதல் முதலியவை, விலங்குகளும் பறவைகளும் புல்லால் ஆன ஆள் போன்ற பொய்யான உருவத்துக்கு அஞ்சுவதைப் போல், தம் வலிய உருவத்துக்கு அஞ்சாதிருங்கள் எனக் கூறுவதைப் போன்ற வையே யாகும்.

**கருத்து**

கல்லாதவர் கற்றவர் முன் தாமும் கற்றவர் போல் பேசுதல் தவறு.

**விளக்கம்**

கற்பன-கற்கப்படும் நூல் கருத்துகள். கல்லார் பேசுதலின் இழிவு தோன்ற, ஒற்கம் இல் ஊத்தை வாய் அங்காத்தல் என்றார். ஒற்கம்-அடக்கம், ஊத்தை-அழுக்கு; நல்ல நூற்பொருளைப் பேசாத வாய் ஆதலால் 'ஊத்தைவாய்' என்றார். புல்லுரு-பயிரினை மேய வரும் விலங்கு பறவை போன்றவை அஞ்சுவதற் காக மனிதனைப் போல் புல்லால் அல்லது வைக்கோலால் செய்து வைத்த வடிவு. அதைக் கண்ட விலங்கும் பறவையும் இங்கு மனிதன் உள்ளான் என எண்ணி அஞ்சி நீங்கும். விலங்கும் பறவையும் அவ்வடிவை மனிதனல்லன் என்று உணர்ந்து கொண்டால் அதற்கு அஞ்சாது. அதுபோன்று கல்லாதார் தம் வாய் திறந்து பேசுவதால் தாம் கற்றவர் அல்லர் என்பதை உணர்த்திக் கொள்வர். ஆதலால் பிறர் அவரைக் கண்டு அஞ்சமாட்டார். எனவே, கல்லார் பேசுவது 'எம்மிடம் கல்வியில்லை; எனவே, எம்மைக் கண்டு அஞ்ச வேண்டா' எனக் கூறுவது போல் விளங்குகிறது என்பதாம். என்ப - பன்மையாகக் கூறினார். அதாவது பேசுதல், கற்றவர் போல் காட்டிக் கொள்ளல், கோலம் கொள்ளல் முதலியவை. ஊழற்றார்-ஊழ்+அற்றார்; ஊழ்-நல்வினை; வல்லுரு-வன்மை+உரு, மாபறவை, மாவும் பறவையும்; உம்மைத் தொகை. புல்லுரு-புல்லால் ஆன உரு; மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை

## 24. கல்வி சேராத மக்கள்

229. போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொள் நகையினார் வாய்ச்சேரா-தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்

### தெளிவுரை

தாக்கி வருத்தும் ஆடவர் விரும்பும் பெண் தன்மை உடையது என்றாலும் பெண் இன்பம் பேடுகளால் அனுபவிக்கப் படுவதில்லை. அதுபோன்று குற்றம் இல்லாத கல்வி, நகைத்து வீண்பொழுது போக்கும் விளையாட்டுத் தன்மையை மிகுதியாய்க் கொண்டவரிடத்தில் சேராது.

### கருத்து

விளையாட்டுத் தன்மை உடையவரிடம் கல்வி சேராது.

### விளக்கம்

போக்கு-குற்றம்; நீக்கக்கூடியது என்பது பொருள். விளையாட்டுத் தன்மை கொண்டவரிடத்தில் கல்வி சேராது, ஊன்றி ஆழ்ந்து கற்பவரிடத்தில்தான் அது சேரும் இயல்புடையது.

தாக்கு அணங்கும் ஆணவாம் பெண்மை-தாக்கு அணங்கும் பெண்மை; ஆண் அவாம் பெண்மை எனக் கூட்டுதல்வேண்டும். ஆண்களை வருத்தும் பெண்மைத் தன்மை; ஆடவரால் விரும்பப் படும் பெண்மைத் தன்மை. பெண்களின் அழகு ஆண்களின் அறிவு ஆற்றல் முதலியவற்றைத் தாக்குதலால் தாக்கு அணங்கு என்றார். மீக்கொள்-மீ+கொள்; மிகுதியாய்க் கொண்ட. பேடு-ஆணும் பெண்ணும் அல்லாது. ஆண்மையை இழந்த பேடு பெண் இன்பத்தை நுகர இயலாது. ‘பெண்ணலம் பேடு கொளப் படுவது இல்’ என்றார். பெண்ணலம்-பெண் நலம்; பெண் இன்பம்.

## 25. நூற்பொருளை ஏற்பவர்க்குக் கற்பிக்க வேண்டும்

230. கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉம்
குற்றம் தமதே பிறிதன்று-முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன்

### தெளிவுரை

கற்றவர் கல்லாதவரின் செவியில் தாம் கற்ற நூற்பொருளைப் புகுத்துவதால் உண்டாகும் அவமானம் தம்முடையதே ஆகும். அது வேறொருவருடையதன்று. எல்லாவற்றையும் அறிந்திருந்தும் அந்த மூடரின் மூடத்தன்மையை உணராதவர் தம்மை அறிந்து கொள்ளாத மூடரை நொந்து கொள்வது ஏனோ?

### கருத்து

கூறும் நூற்பொருளை ஏற்றுக் கொள்பவர்க்கே கற்பித்தல் வேண்டும்.

### விளக்கம்

படிக்காத மூடரின் செவியில் கற்றவர் தாம் கற்றவற்றைச் சொல்லப் புகுந்தால் அவமானம் நேரும். அது அவர் குற்றமே அல்லாது மூடரின் குற்றம் ஆகாது. எனவே அத்தகைய அவமானத்தைக் 'கையுறூஉம் குற்றம்' என்றார். கையுறூஉம்-இன்னிசையளபெடை. கையுறுதல்-அகப்படுதல். பிறிதன்று-'ஏற்படும் குற்றம் மூடருடையதன்று' என்ற பொருளில் வந்தது. ஏதிலர்-அயலார்; பிறர்.

'பேதைக்கு உரைத்தாலும் தோன்றாது உணர்வு. என்பது பழமொழி நானூறு (93).

## 26. நல்லார் இயல்பு

231. வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்-மாத்தகைய
அந்தப் புரத்ததுபூனை புறம்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு.

### தெளிவுரை

பெருமையுடைய வீட்டுள் இருப்பது பூனை; கட்டுத்தறியை முறிக்கும் வலிமையுடைய ஆண் யானை வீட்டின் வெளியே உள்ளது. அதனால் பூனைக்குப் பெருமையும் யானைக்குச் சிறுமையும் உண்டாவதில்லை. எனவே மேன்மக்கள் அரசவையில் இருந்தால்தான் பெருமை என எண்ணி அதைக் காத்த வண்ணம் அங்கு இருக்க மாட்டார். அதனால் அவர்க்கு வருத்தம் இல்லை. மேன்மக்கள் அல்லாத கீழ்மக்கள் தாம் அரசவையைக் காப்பதால் மகிழ்ச்சி அடைய மாட்டார்கள்.

### கருத்து

அறிஞர் எங்கிருந்தாலும் அவர்கட்குப் பெருமையுண்டு.

### விளக்கம்

வேத்தவை-வேந்து+அவை; 'வேந்து' என்பது 'வேத்து' என்று விகாரப்பட்டது. 'காவார்' அரசனிடத்தில் அலுவல் பெறாததையும், 'காத்து' என்பது அரசனிடத்தில் அலுவல் பெற்றதையும் உணர்த்தும். பூட்கை-வலிமை. மாத்தகைய-மா+தகைய. புறங்கடைய-புறம்+கடைய. மிகன் மக்கள்-மிகல்+மக்கள்; மிக்க பண்புடைய மக்கள். உவப்பு-மகிழ்ச்சி. அந்தப்புரம்-அரண்மனையின் உட்புறம். இங்கு வீட்டின் உட்புறம்.

## 27. தெய்வமாவார்

232. குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்-அறவோர்க்கு
அடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை.

### தெளிவுரை

கற்புடைய பெண்ணுக்கு அவளுடைய கணவனே தெய்வமாவான். மைந்தர்க்கு அவர் தம் தாய் தந்தையரே தெய்வம் ஆவார்; மாணவர்க்கு அவருடைய ஆசிரியரே தெய்வம் ஆவார். எல்லாருக்கும் தெய்வம் மன்னனே ஆவான்.

### கருத்து

மனைவி கணவனையும் மைந்தர் தாய் தந்தையரையும் மாணவர் ஆசிரியரையும் குடிகள் மன்னனையும் கடவுள் போல் போற்ற வேண்டும்.

### விளக்கம்

குலமகள்-கற்புடைய பெண். நல்ல குலத்தில் தோன்றியவள் கற்பொழுக்கத்தினின்று தவறமாட்டாள். ஆதலால் 'குலமகள்' எனப்பட்டது. தெய்வம்-கடவுளைப் போல் வணங்கிப் போற்றக் கூடியவர் என்பது பொருள். அறவோர்-மாணவர். அறவோர் என்பது துறவியரைக் குறிக்கும். துறவோர் மற்றவற்றில் பற்று இல்லாது தவத்தில் மனத்தைச் செலுத்துவது போல் மாணவர் கல்வியில் மட்டும் கருத்து ஊன்றுபவர். ஆதலால் 'அறவோர்' எனப்பட்டனர். (அறவோர்-துறவாமல் விரதம் காப்போர் என்பது சிலம்பு- உரை) இலை முகம் பைம் பூண்-வெற்றிலையின் முனை போல் செய்யப்பட்ட பசிய பொன் நகை. பைம்பூண்-பைம் பொன் பூண் என்பதன் விகாரம். கடவுள் உயிர்க்கு உதவுதல் போல் கணவன், தந்தை, தாய், ஆசிரியர், மன்னர். என்பவர் உதவுதலால் அவர்கள் 'தெய்வம்' எனப்பட்டார். இதில் எடுத்துக் காட்டுவமையணி அமைந்துள்ளது.

## 28. அருளுடன் குடிகளைப் பாதுகாக்க வேண்டும்

233. கண்ணின் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினுந்-தண்ணளியான்
மன்பதை ஓம்பாதார்க் கென்னாம் வயப்படைமற்று
என்பயக்கும் ஆணல் லவர்க்கு.

### தெளிவுரை

கண்ணால் தன் கருத்தைக் குறிப்பால் அறிவித்து. நாட்டில் நடப்பனவற்றை நேரில் பார்ப்பதைப் போல் செவியால் செய்திகளைக் கேட்டறியும் மன்னனின் பெருமையுடைய செயல், முன் செய்த வினையின் பயனால் உண்டானதே. ஆயினும், குளிர்ந்த அருளால் குடி மக்களைப் பாதுகாவாது போனால், அம் மன்னர்க்கு என்ன பயன் உண்டாகும்? பேடியர்க்கு உண்மையான படைகள் என்ன பயன் அளிக்கக் கூடும்?

### கருத்து

மன்னன் அருளுடன் குடி மக்களைக் காத்தல் வேண்டும்.

### விளக்கம்

கண்ணில் சொலி-தன்னிடம் ஏவல் செய்யும் மக்களுக்கும் மற்றவர்களுக்கும் காரியங்களை வாயால் சொல்லாமல் தன் கண்பார்வையால் அவர்க்குக் குறிப்பால் அறிவித்தல். 'சொல்லி' என்பது 'சொலி' என ஆயிற்று. வாயின் செயல் சொல்லுதல். அதனைக் கண் செய்தலின் 'கண் சொலி' என்றார். செவியின் நோக்கி - ஒரு செயலை நேரில் கண்டாற் போன்று ஒற்றர்அறிந்து வந்து கூறுவதைக் கேட்டல், இங்கும் கண்ணின் செயலைச் செவிக்கு ஏற்றிக் கூறினார். புண்ணியத்தின் பாலதே ஆயினும்-முன் பிறவியில் செய்த அறத்தின் பயனால் உண்டான தாயினும். 'பால்தர வந்த பழவிறல் தாயம்' என்பது புறநானூறு

(75-2). பால் ஊழ்; முன் வினை. மன்பதை-மக்கள் கூட்டம்; பிற வுயிர்களையும் குறிக்கும். வயப்படை-வயம்+படை; வன்மை யுள்ள ஆயுதம் ஆண் அல்லவர்-ஆண்மை இல்லாத பேடி. படைக் கலம் சிறந்ததாக இருந்தாலும் பேடியின் குற்றத்தால் அப் படைக் கலம் பயன் படாதவாறு போல், நாடு நல்லதாய் அமையினும் ஆளும் மன்னனின் குற்றத்தால் அவனது ஆட்சி சிறப்பு அடையாது என்பதாம்.

> "தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
> வாளாண்மை போலக் கெடும்" *(குறள்-614)*

> "பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
> அஞ்சுமவன் கற்ற நூல்" *(குறள்-727)*

என்னும் குறட்பாக்கள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கவை.

ஆணல்லவர்க்கு வயப்படை பயன் தராமை உவமை. தண்ணளியால் குடி மக்களை ஓம்பாதார்க்கு நாட்டால் பயன் இன்மை என்பது பொருள். பயன் படாமை பொதுத் தன்மை.

## 29. நெறியறிந்து வரி வாங்குவதன் பயன்

234. குடிகொன் றிறைகொள்ளும் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலும் மாண்பே-குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

### தெளிவுரை

குடி மக்களை வருத்தி வரியை வாங்கும் மன்னனுக்குக் கன்றையுடைய பசுவின் மடியை அறுத்துப் பாலைக் கறக்கும் செயலும் சிறந்ததே ஆகும். (இங்ஙனம் வரி வாங்குவதால் அம் மன்னனுக்குப் பொருள் சேருமோ என்றால் சேராது. ஆனால்) குடி மக்களைப் பாதுகாத்து வரி வாங்கும் முறையில், வாங்கும்

மன்னர்க்குப் பெருமையுடைய செல்வம் வெள்ளம் என்ற எண்ணைவிடப் பலவாய்ப் பெருகக் காணலாம்.

**கருத்து**

மன்னன் குடி மக்களை வருத்தாது அளவறிந்து வரி வாங்க வேண்டும்.

**விளக்கம்**

குடி கொன்று-'கொன்று' என்பது 'வருத்தி' என்ற பொருளில் வந்தது. கொலை செய்தாற் போன்று அவ்வளவு வருத்தத்தைத் தரத்தக்கது என்னும் பொருளில் கூறப்பட்டது. மடி கொன்று-பசுவின் பால் மடியை வருத்தி, 'கொன்று' இங்கும் 'வருத்தி' என்பதே பொருள். 'கொன்று' என்பதற்கு அறுத்து எனவும் பொருள் உரைப்பர் உ.வே.சா. மடியை வருத்துதலாவது அதைக் கசக்கித் துன்புறுத்தல். முலைக்காம்புகளை இழுத்து அழுத்திக் கறத்தல், கற்றா-கன்று+ஆ; 'கற்றா' என வலித்தது. 'கன்றை யுடைய பசு' என்றதன் கருத்து,' 'அக் கன்றுக்குப் பால் விடாமல் கறப்பது' என்ற குறிப்பில் கூறப்பட்டது.

கொள்ளுமா-கொள்ளும் வழியினால். கொள்ளும் வழியாவது வருவாயில் ஆறில் ஒரு பங்கைக் கொள்ளும் முறை. பால் கறப்பதை மன்னன் வரி வாங்குதலுக்கு உவமையாக்கினார். மக்கள் வருந்த வரி வாங்கும் மன்னனுக்குப் பசுவின் மடியை வருத்திப் பால் கறக்கும் செயலும் சிறந்ததாகத் தோன்றும் என்றார். எத்தகைய கொடிய செயலையும் அவன் செய்வான் என அவனது கொடுமையைப் புலப்படுத்தினார். மக்களை வருத்தி வரி வாங்குபவனுக்குப் பொருள் சேராது என்பது குறிப்பால் கொள்ளல் வேண்டும். இதனைக் குறிப்பெச்சம் என இலக்கணம் கூறும். வெள்ளம்-ஒரு பேரெண்.

'முறையறிந்து வரி வாங்கினால் அது பெருமையுடையது. அதனுடன் பொருள் பெருகும்' என்று இவ்வாறு கூறியதால், முறையறிந்து வாங்காது போனால் அது 'சிறுமையுடையது' அதனுடன் 'பொருள் குறைந்து போகும்' எனக் கொள்க.

## 30. மன்னனாகாதவன் இயல்பு

235. இன்று கொளல்பால நாளைக் கொளப்பொறான்
நின்று குறையிரப்ப நேர்படான்-சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்தும் அலன்.

### தெளிவுரை

இன்று கொள்ள வேண்டிய பொருள்களை மறுநாளில் பெற்றுக்கொள்ள (ஒரு நாள் தாமதமாவதால் அதைப்) பொறுத்துக் கொள்ள மாட்டான். சிறிது நேரம் நின்று குறைகளைக் கூறி வேண்டிக் கொள்ள நேரில் அகப்பட மாட்டான். ஒருவன் அவனிடம் சென்று தனக்கு வேண்டியவற்றை எடுத்துச் சொன்னால் பல்லைக் கடித்துப் பயமுறுத்துவான். இத்தகையவன் வழிச் செல்வாரை வருத்திப் பொருளைக் கவரும் வேடனும் அல்லன்; மன்னனும் அல்லன்.

### கருத்து

மன்னன் காட்சிக்கு எளியனாய் விளங்க வேண்டும்.

### விளக்கம்

கொளல் பால-கொள்ளும் அளவான வரிகளை, குடிகள் குறைகளைச் சொல்லிக் கொள்ளும்படி மன்னன் காட்சிக் கெளியனாய் இருக்கவேண்டும். அத்தகைய இயல்பற்றவன் என்பார் 'குறையிரப்ப நேர்படான்' என்றார். நேர்படான்-உடன்படான் என்பதும் பொருள். ஒரு வேளை அவன் நேர் பட்டாலும் தன் குறைகளைச் சொல்பவர் சொல்லும் போது அவர்களைப் பயமுறுத்துவதற்காகப் பற்களைக் கடிப்பான் என்பார். 'எயிறு அலைப்பான்' என்றார். பல் கடித்தலை 'எயிறு அலைத்தல்' என்றார். எயிறு-பல்; அலைத்தல்-கடித்தல். ஆறு அலைக்கும்-வழிச் செல்பவரை வருத்திப் பொருளைக் கவர்ந்து கொள்ளும். ஆறு-வழி. வேடு-வேடன். வேடும் அலன்-வேடனும்

அல்லன்; அதாவது வேடனைவிடக் கொடியவன் என்றவாறு. வேந்தும் அலன்-வேடன் அல்லாதவன் வேந்தனாவது எங்ஙனம்? வேந்தனாகான். அங்ஙனமிருக்க 'வேந்தும் அலன்' என்று ஒன்றை வேண்டாது கூறக் காரணம் யாது? அவன் வேந்தன் என்ற பதவியில் உள்ளமையே!

ஆவன கூறின்-இது 'மன்னனுக்கு ஆக வேண்டியவை' என்றும், 'மக்கட்கு ஆக வேண்டியவை' என்றும், நியாயத்துக்கு உரியவை என்றும், இனி நாட்டிலும் ஆட்சியிலும் நிகழக் கூடியவை என்றும் பல பொருள்பட நின்றது.

கொள-'கொள்ள' என்பதன் தொகுத்தல் விகாரம்.

## 31. பிணம் போன்ற மன்னன்

236. முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப உடுத்துண்ப உண்ணா-இடித்துஇடித்துக்
கட்டுரை கூறின் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போடு உற்ற பிணம்.

### தெளிவுரை

சூடத்தக்க மலர் முதலியவற்றைச் சூடி, பின் பூசக் கூடிய கலவைச் சாந்து முதலியவற்றைப் பூசி, உடுத்துக் கொள்ளக் கூடிய பட்டாடை முதலானவற்றை உடுத்தி, உண்ணக் கூடிய நல்ல உணவு வகைகளை உண்டு, உயிருடன் இருப்பதைப் போல் புலப்படுத்திக் காட்டிப் பல முறை நெருக்கி நெருக்கி அறிவுரை கூறினாலும் காதால் வாங்கிக் கொள்ளாமலும் கண்களை விழித்துப் பாராமலும் உள்ள மன்னர்கள் மூச்சுடன் கூடிய பிணங்கள் ஆவார்கள்.

### கருத்து

இரக்கம் இல்லாதவர் மன்னர் அல்லர்.

**விளக்கம்**

சூடுவது, பூசுவது, உடுப்பது, உண்பது என்ற செயல்களால் உயிர் உள்ளது போல் தோன்றும். ஆயினும் கேளாமையாலும் கண் விழிக்காமையாலும் அவர் பிணம் போல் ஆவர் என்றார். முடிப்ப-சூடத்தக்க மலர் முதலியவை. உண்ணா-உண்டு; 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இடித்து இடித்து-பலமுறை கூறியதை உணர்த்தியது. கட்டுரை-உறுதி தரும் சொற்கள். செவிக் கொளா-'கொள்ளாத' என்பது ஈறும் இடையும் கெட்டு 'கொளா' என வந்தது. விழியா-'விழியாத' என்பதன் விகாரம். நெட்டுயிர்ப்பு-நெடுமை+உயிர்ப்பு; பண்புத் தொகை. பெருமூச்சு என்பதாம். போகும்காலத்து உண்டாகும் உயிர்ப்பு எனவும் கூறலாம். நெட்டுயிர்ப்போடு உற்ற பிணம் என்றதால் மற்றப் பிணங்களுக்கும் இப்பிணங்களுக்கும் உள்ள வேற்று மையை விளக்கினார். 'உண்ணா நின்று' என்பது 'உண்ணா' என்று குறைந்து நின்றது என்பாரும் உளர்.

## 32. செங்கோல் மன்னன் குற்றத்தை அறியும் வழி

237. ஒற்றின்தெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோள் துணையாத் தெரிதந்தும்-குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினும் கேளாமை அன்று.

**தெளிவுரை**

ஒற்றராலும் அறிந்து கொள்ள முடியாத உண்மைகளை மறைவாய் இருந்து அறிந்து கொள்வோம் என்று தம் தோள்களையே துணையாகக் கொண்டு சென்று குடி மக்களிடம் உள்ள குற்றங்களை அறிந்து கொள்வதற்கு அரிது என அஞ்சுவதே செங்கோல் ஆட்சியாகும். அங்ஙனமின்றிக் குடி மக்களே வந்து முறையிட்டுக் கொண்டாலும் அதைக் கேளாது இருப்பதன்று.

**கருத்து**

குடி மக்களுக்கு நன்மை உண்டாவதில் மன்னனுக்கு நாட்டம் வேண்டும்.

**விளக்கம்**

ஒற்றின் தெரியா-ஒற்றரால் அறியப்படாத-சிறைப் புறம்-மறைவான இடம். ஒற்றரால் அறிந்து கொள்ளப் படாதவற்றை மன்னன் தானே நேரில் போய் அறிந்து கொள்ளவேண்டும். அங்ஙனம் சென்று அறியுமிடத்தும் தன்னால் அறிந்து கொள்ளப் படாதவையும் இருக்கலாமோ என்று அஞ்சுவதே செங்கோலாட்சி என்றார். அங்ஙனம் இல்லாமல் குடிமக்களே வந்து குறைகளைக் கூறியபோது கேளாமல் இருப்பது முறையாகாது என மேல் கூறியதை வற்புறுத்திக் கூறினார்.

பொன் தோள் துணையா-மன்னன் தனியாகச் செல்வதால் அவனுக்குத் துணை அவனுடைய தோள்களேயாகும் என்பதாம். அதாவது, போகுமிடத்து இடையூறு உண்டாயின் தன்தோள் கொண்டு வெல்லும் வல்லமை இருக்க வேண்டும் என்பதாம். ஓர்தும்-அறிவோம். தெரிதந்தும்-அறிந்தும்.

## 33. உண்மையை மன்னன் காண வேண்டும்

238. ஏதிலார் யாதும் புகல இறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு-நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரும் உண்டு.

**தெளிவுரை**

காக்கையின் எதிரே இருந்து அதனை வெண்ணிறம் உடையது என உண்மைக்கு மாறானவற்றைக் கூறுபவர் வேறு எதைத்தான் சொல்ல மாட்டார்? 'பெற்ற தாயைக்கொலை செய்வதும் பொருத்தமானதே' எனக் கூறுபவரும் உலகத்தில்

உண்டு. ஆதலால். அயலார் தமக்குத் தோன்றியபடி எதைச் சொன்னாலும் அதில் உள்ள குற்றங்களை விலக்கி நல்லனவற்றைக் கொள்வதே மன்னனின் பேரறிவுடைமை யாகும்.

**கருத்து**

குற்றம் களைந்து குணத்தைக் கொள்ள வேண்டும்.

**விளக்கம்**

உலகத்தில் உள்ளவர் பல வகையாய்ப் பேசுதல் இயல்பு. காக்கை வெண்மையானது என்பாரும், தாயினைக் கொல்வதில் தவறில்லை என்பாரும் உண்டு. ஆதலால் கூறுபவர் எதைச் சொன்னாலும் அதில் உள்ள உண்மையை ஆராய்ந்து அறிதல் அரசனுக்குரிய அறிவுடைமையாகும் என்க.

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்னும் குறள் இங்கு ஒப்பிடத் தக்கது. இறைமகன்-மன்னன். ஏதிலார்-அயலார். கோது ஒரீஇ கோது-குற்றம். ஒரீஇ-நீக்கி; சொல்லிசை அளபெடை. முதுக் குறைவு-பேரறிவு. வெளிது-வெண்ணிறமானது.

## 34. கீழ் மக்கள் கேடு அறிய மாட்டார்

239. கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ உணர்ச்சிமற் றில்லாகும்-மண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணம் கண்துயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

**தெளிவுரை**

பெரிய பாம்புகள் தம்மைச் சுற்றிச் சூழ்ந்து தீயெரிந்தாலும் பெருமுச்சு விட்டபடி உறங்கும்; அந்த இடத்தினின்று அசையாது.

அது போல் தமக்கு உண்டாகும் கேடுகளைக் கண் கூடாகக் கண்டாயினும் கீழ் மக்களுக்கு அந்தக் கேட்டினின்று தப்பிப் பிழைக்க அறிவு உண்டாகுமோ? உண்டாவதில்லை.

**கருத்து**

கீழ்மக்கள் எவ்வளவு கெடுதி உண்டானாலும் திரும்பத் திரும்பச் செய்தவற்றையே செய்வர்.

**விளக்கம்**

கண்கூடா-பிரத்தியட்சமாக. கீழ் மக்களுக்கு உணர்ச்சி உண்டோ-உணர்ச்சியாவது கேடு வருவதும், அதை நீக்கும் வழியும் ஆகியவற்றை அறியும் அறிவு. மண்டு எரி-மிக்க நெருப்பு. வாய் மடுப்பினும்-சூழ்ந்து எரித்தாலும்; மாசுணம்-பெரிய பாம்புகள், பேரா-இருந்த இடத்தினின்று அசையா.

இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி. தீயில் வாடினாலும் அதினின்று பெரும்பாம்பு தப்பிப் பிழைப்பதில்லை என்பது உவமை. கேடு வரின் அதினின்று கீழ் மக்கள் தப்பிப் பிழைக்காமை பொருள். உவம உருபு இல்லாததால் இஃது எடுத்துக் காட்டுவமையணியாயிற்று.

## 35. மன்னனுக்குக் கேடுகளை உண்டாக்குபவை

240. நட்புப் பிரித்தல் பகை நட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையும் ஐயுறுதல்-தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டும் குறி.

**தெளிவுரை**

பழைமையான நட்பினரைப் பிரியும்படி செய்தல். (பகை வராக்கிக் கொள்ளுதல்), நெடுங்காலம் பகைவராய் உள்ளவரை நண்பராக்கிக் கொள்ளல், ஒற்றரை இகழ்தல், பக்கத்தே உள்ள

எல்லாரையும் சந்தேகப்படுதல், பெரியோரின் அறிவுரைகளை இகழ்தல், இயல்பான குணம் மாறுபடுதல் என்ற இந்த ஆறும் பின்னாலே வர இருக்கும் கேடுகளை முன்னால் அறிவிக்கின்ற அடையாளங்களாகும்.

**கருத்து**

கெடுதி வருவதைக் காட்டும் குறிகள் நட்புப் பிரித்தல் முதலியவை. அவற்றை அறிந்து அதற்கேற்ப ஒழுக வேண்டும்.

**விளக்கம்**

ஒற்று-ஒற்றர். ஐயுறுதல்-சந்தேகப்படுதல். நெடுமொழி-நீண்ட காலத்துக்குப் பயன்படும் அறிவுரை, பெருமையுடைய மொழி எனவும் கூறலாம். பிறிதாதல்-மாறுபடுதல். கெடுவது காட்டும் குறி-பின்னால் உண்டாக இருக்கும் கெடுதிகளை முன்னே தெரிவிக்கின்ற அடையாளங்கள்.

## 36. பெரியார்க்குப் பிழைத்தல் கூடாது

241. பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினால் தாழ்வார்க்கு-அணியது
இளையாள் முயக்கெனினும் சேய்த்தன்றே மூத்தாள்
தொலையாத போகம் கொளல்.

**தெளிவுரை**

தம்மால் வணங்கத் தக்க சான்றோர் தமது தலைவாயில் வந்து நிற்க, தமக்குள்ள அடக்க முடியாத செல்வச் செருக்கால் எதிர் சென்று வரவேற்காது அவர் தம்மிடம் வரும்வரை காத்திருப் பவர்க்கு, திருமகளின் சேர்க்கை உள்ளதாயினும் மூதேவியின் சேர்க்கையை அடைதல் தொலைவில் உள்ளதன்று.

**கருத்து**

பெரியோர்க்குப் பிழைத்தால் செல்வம் அழியும்

**விளக்கம்**

பணியப்படுவார் - வணங்கத்தக்கவர். புறங்கடை-தலை வாயில், களிப்பு-செல்வச் செருக்கு. வணங்கத்தக்க சான்றோர் தம்மிடம் வாயிலில் வர, அவரை எதிர் போய் வரவேற்காமல் இருப்பவர்க்கு அரசசெல்வம் விரைவில் கெடும். இளையாள்-திருமகள், மூத்தாள்-மூதேவி, சேய்த்தன்று-சேய்த்து+அன்று; தொலைவில் இல்லை.

## 37. பண்புடையார் சலியாத கற்பக மரம்!

242. கண்ணோக்கு அரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா-வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே
சலியாத கற்ப தரு.

**தெளிவுரை**

தொலைவில் இரவலரைப் பார்த்த போது இனிமையாய் அவரைப் பார்த்தலே அரும்பாகவும், அவர் நெருங்கி வந்தபோது மகிழ்வு கூடிய முகமே அன்று பூத்த மலராகவும், உண்மையுடைய இனிய சொல்லே இனிய காயாகவும், ஈகையே பழமாகவும் கொண்ட நன்மையுடைய இயல்புடையவர் சலியாது கொடுக்கும் கற்பக மரம் ஆவார்.

**கருத்து**

விரும்பிப் பார்த்து முகம் மலர்ந்து கொடுப்பவர் கற்பகமரம் ஆவார்.

**விளக்கம்**

கண் நோக்கு அரும்பா-தொலைவில் இரவலரைப் பார்த்தபோது இனிதாகப் பார்த்தல் அரும்பு. அரும்பு மலர்ந்தால் மலராகும். இங்கு இரவலர் நெருங்கி வந்தபோது முகம் மகிழ்தல்

மலராம். இனிய சொல்லைச் சொல்லுதல் காய்; கொடுக்கும் ஈகை பழம்; கொடுப்பவர் கற்பக மரம், என்று இச் செய்யுள் முழுதும் உருவகம் செய்யப்பட்டுள்ளது. எனவே இஃது உருவகஅணி.

நாள்+மலர்-நாண்மலர்; அன்று மலர்ந்த மலர் அரும்பா, மலரா, காயா என்பவை முறையே அரும்பாக, மலராக, காயாக என்பனவற்றின் ஈறுதொக்கன. கற்பதரு-கற்பக மரம்; அம்மரம் தேவர் உலகத்தில் உள்ளது. அது கேட்டதையெல்லாம் கேட்டார்க்கு அளிக்கும்.

## 38. ஈகையின் பயன்

243. வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயருறா-ஆங்கதுகொண்டு
ஊரும் எறும்பிங் கொருகோடி உய்யுமால்
ஆருங் கிளையோடு அயின்று.

### தெளிவுரை

யானைகள் தான் பெற்று உண்ணும் உணவினின்று சிறிது தவறிக் கீழே சிந்தினால் அது பற்றி அவை கவலை கொள்வதில்லை. ஆனால் அவை சிந்திய சிறிய உணவைக் கொண்டு ஊரும் இயல்புடைய எறும்புகள் தம் சுற்றத்துடன் உண்டு உயிர் வாழும்.

### கருத்து

கொடுத்து வாழவேண்டும்.

### விளக்கம்

கவளம்-யானையின் ஒரு வாய் உணவு. பாகன் கொடுக்க யானை பெற்று உண்ணும் ஒரு வாய் உணவு. ஒரு சிறிது-மிகச் சிறிய பாகம். வாய் தப்பின்-வாயினின்று தவறிக் கீழே விழுமானால். ஆங்கு-அசை. ஆரும் கிளை-நிறைந்த சுற்றம்.

இச் செய்யுளில் உவமையை மட்டும் சொல்லிப் பொருளை உணர்ந்து கொள்ளும்படி அமைத்துள்ளார்.

யானை உணவில் சிறிது சிந்தினால் எறும்புகள் கோடி உய்யும் என்பது உவமை. அரசனின் வருவாயில் சிறிது குறைந் தாலும் அதனால் பல பேர் பிழைப்பர் என்பது பொருள் (உவமேயம்). இந்த உவமேயத்தைச் சொல்லாமல் விடுத்ததால் இச்செய்யுள் ஒட்டணியாகும். இதனைப் பிறிது மொழிதல் அணி எனவும் கூறுப. உய்யுமால்-உய்யும்+ஆல், ஆல்-ஆசை.

## 39. மன்னனால் நன்கு மதிக்கப்படுதல் நன்று.

244. மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் ஏக்கழுத்தம் மிக்குடைய-மாகொல்
பகைமுகத்த வென்வேலான் பார்வையில் தீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

**தெளிவுரை**

பகைவரிடத்துள்ள பகைவரான விலங்குகளையெல்லாம் கொல்லும் ஆற்றலையுடைய வேலையுடைய மன்னன் தன் முகத்தில் காணும் பார்வையில் உள்ள நன்மதிப்பு, வானமும் சிறிது என்னும்படி மிக்க செல்வத்தைக் குவித்து அவை அனைத்தையும் அவரவர் தகுதிக்கு ஏற்ற வண்ணம் அளிப்பதைவிடச் சிறப்புடைய தாகும்.

**கருத்து**

மன்னனின் பெரும் பொருளைப் பெறுவதை விட அவனால் நன்கு மதிக்கப்படும் பேறு சிறந்ததாகும்.

**விளக்கம்**

மாகம்-வானம், ஈகையின்-ஈவதைவிட மா-யானை, வென்வேல்-வெற்றியையுடைய வேல். பார்வையில் தீட்டும்-

பார்வையினால் எழுதும், மன்னன் பொருள் ஈதலைவிட நன்மதிப்போடு கூடிய பார்வையே சிறந்தது என்பதாகும்.

ஏக்கழுத்தம்-தலையெடுப்பு; செம்மாப்பு-அரசனின் கண்ணோட்டம் இருப்பதால் இனி நமக்கு எவ்விதக் குறைவும் இல்லை என்று எண்ணும் செம்மாந்த எண்ணம். அரசனிடம் பொருளைப் பெற்று ஒருவன் சென்றுவிட்டால் அவனை அப்போதே மன்னன் மறந்து விடுவான். ஏனென்றால் அவனிடம் பொருள் பெற்ற பலருள் அவனும் ஒருவன். ஆனால் மன்னனின் கண்ணோட்டம் இருந்தால் அவன் எப்போதும் அஞ்ச வேண்டிய தில்லை என்பதாம். பகைமுகத்த-பகைவரிடம் உள்ள.

## 40. புகழுடம்பைப் பெற உயிரையும் தருவர்

245. களைகணாத் தம்மடைந்தார்க்கு உற்றுழியும் மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்-தளர்நடையது
ஊனுடம் பென்று புகழுடம்பு ஓம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம்.

### தெளிவுரை

'இந்த ஊன் உடம்பு தளரும் தன்மை உடையது' என்று அதை வெறுத்து நிலையழியாத புகழ் உடம்பை ஓம்ப முடிவு செய்தவர்கள், தம்மை அடைக்கலமாக அடைந்தவர்க்குச் சிறிய துன்பம் உண்டானாலும், உடலால் அடையும் காம இன்பம் போன்ற வேறொரு பயனைக் கருதித் தம் பயன் இல்லாத உடலைச் சுமந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

### கருத்து

புகழுடம்பைப் பெற எண்ணுபவர் தம் உயிரைத் தந்தேனும் தம்மை அடைந்தவர்க்கு உதவுவர்.

**விளக்கம்**

புகழ் உடலை விரும்புபவர் ஊன் உடலைச் சுமக்க மாட்டார் என்பதற்கு, சிபி மன்னன் ஒரு புறாவுக்காகத் தன்னை அளித்ததும், தேவரின் துன்பம் நீங்கத் ததீசி முனிவர் தம் முதுகெலும்பைத் தந்ததும் சிறந்த சான்றுகளாகும். களைகண்-பற்றுக்கோடு. 'களைகணாக' என்பது 'களைகணா' என ஈறு தொக்கது. உற்றுழி-துன்பம் உண்டான இடத்து. மற்றோர் விளைவு உன்னி - உடலால் காம இன்பம் பெறக் கூடும் என்பதைப் போன்ற வேறு விளைவை எண்ணி, பயன் படாமை எண்ணி 'வெற்றுடம்பு' என்றார். 'தளர் நடையது ஊன் உடம்பு' என்பதை 'ஊனுடம்பு தளர் நடையது' என்று மாற்றுக. 'புகழுடம்பு ஓம்புதற்கு உடம் பட்டார் வெற்றுடம்பு தாங்கார்' என்று முடிக்க. தளர் நடையது-அழியும் நிலை உடையது.

## 41. மானம் காக்க வேண்டும்

246. தம்முடை யாற்றலும் மானமும் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக-பின்னர்ச்
சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்கு
இறுவரை யில்லை யெனின்.

**தெளிவுரை**

பின்பு சிறிது காலமேனும் தமக்கு இறக்கும் காலம் இல்லை யானால். தம் வலிமையையும் மானத்தையும் இழந்து தம் இனிய உயிரைப் பாதுகாத்தாலும் பாதுகாக்க.

**கருத்து**

உடல் அழிவது, ஆதலால் இந்த அழிவுக்கு அஞ்சாது மானத்தைக் காத்தல் வேண்டும்.

**விளக்கம்**

இறப்பு வருதல் நிச்சயம். அது தவறாது. ஆதலால் நீங்கும் இயல்புடைய உயிர்க்காக மானத்தை இழக்க வேண்டா என்பது ஆசிரியர் உள்ளக் கிடக்கை. வலிமையிழத்தல்-போரில் பகைவரிடம் தோற்றுப் புறம் கொடுத்தல். இழிந்த செயலை மேற்கொண்டு பிறரால் அவமதிப்படைதல் மானம் இழத்தல், மானம் குலையவரின் உயிர் விடுதல் தமிழ் மரபு.

''மயிர்நீப்பின் வாழா கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்''

''மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.''

என்னும் குறள்கள் இங்கு ஒப்பிடத் தக்கவை.

'மானமழிந்தபின் வாழாமை முன் இனிதே' என்பது இனியவை நாற்பது. (14)

ஆங்கு-அசைநிலை. இறுவரை-இறக்கும் காலம்.

## 42. இறப்புக்கு அஞ்சாதவர்

247. கலனழிந்த கற்புடைப் பெண்டிரும் ஐந்து
புலனொருங்கப் பொய்யொழிந்த தாரும் - கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரும் அஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்.

**தெளிவுரை**

தம் மங்கல நாணான தாலியை இழந்து விட்ட கற்புடைய மங்கையரும், ஐம்புலன்களும் தம், வயப்பட, பொய்யினின்று நீங்கிய துறவியரும், கொலைத் தொழில் மிக்க போரில் வல்லமையுடைய வீரரும், வலிமையுடைய கூற்றுவன் உயிர் கவர்வதற்கு எதிர்த்து வந்தானானாலும் அஞ்சமாட்டார்.

**கருத்து**

கற்புடைய கைம்பெண்டிரும், துறவியரும், வீரரும் இறத்தற்கு அஞ்சாது மானத்தை நிலை நாட்டுவர்.

**விளக்கம்**

கலன் அழிந்த-கலன்-மங்கல நாண்; தாலி என்ப, புலன் ஒருங்க-ஐந்து புலன்கள் ஒருவழிப்பட. பொய் ஒழிந்தார்-பொய்யை நீக்கிய துறவியர். ஞாட்பு-போர். தும்பை முடி சூடல்-போர் செய்ய ஆயத்தமாக எதிர்த்து நிற்பதைக் குறிக்கும். 'அதிரப் பொருதல் தும்பை' என்பது தொல்காப்பியம். தும்பை-தும்பைப்பூ. இருமடியாகு பெயர்; அதாவது தும்பை என்பது பூவைக் குறிக்கும்போது முதலாகு பெயர் ஆகிறது. பின்பு அது மலரால் ஆன மாலைக்கு ஆகின்றது. ஆதலால் இருமடியாகு பெயர். மறலி-மறத்தொழில் உடைய கூற்றுவன்.

கைம் பெண்டிர் உலகப் பற்றைத் துறந்து இறப்பை எதிர்பார்ப்பவர். துறவியர் உலகை வெறுத்து உயிர்நீக்கும் காலத்தை நோக்குவர். வீரர் இறக்கும் வரை போரைச் செய்பவர்; உயிர்விட அஞ்சாதவர். எனவே இவர்கள் கூற்றுவனுக்கு அஞ்ச மாட்டார் என்றார். வீரரின் அஞ்சாமையை வள்ளுவர்.

"கூற்று உடன்று மேல்வரினும் கூடிஎதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை"

என்று விளக்குவர். இச் செய்யுள் புகழ் ஒப்புமைக் கூட்டவணி.

## 43. உடலின் பயனை அடைந்தவர் இறப்புக்கு அஞ்சார்

248. புழுநெளிந்து புண்அழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும்-விழல
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு.

### தெளிவுரை

உண்மை உணராத அறிவற்ற வீணர், இந்தவுடல் புழு நெளிந்து விளங்கும் புண்ணாய் அழுகி யோசனை தொலைவு தீய நாற்றம் வீசும் தன்மை கொண்டது என்றாலும் இறப்பை எண்ணி அச்சத்தால் பெருமூச்சு விடுவர். ஆனால் உடலின் பயனை அடைந்தவர் இந்த உடல் என்ற சுமையை இறக்குதற்கு அஞ்ச மாட்டார்.

### கருத்து

வீணர் இறப்புக்கு அஞ்சுவர், உடலின் பயனை அடைந்தவர் இறப்புக்கு அஞ்ச மாட்டார்.

### விளக்கம்

சுமையை உடையவன் அச்சுமையை இறக்கும் இடம் வருகின்றவரை சுமந்து தக்க இடம் வாய்த்தபோது அதை இறக்கி மகிழ்ச்சி அடைவான். அதைப் போன்று உடல் எடுத்ததன் பயனை அறிந்த அறிஞர் அந்தவுடலின் பயனை அடைந்த பின் அதை விடுக்கும் காலம்வரின் மகிழ்வர். அதற்கு மாறாக வெறுப்புக் கொள்ளமாட்டார் என்க. சுளியார்-வெறுப்புக் கொள்ள மாட்டார்.

கழிமுடை நாற்றத்தவேனும்-மிக்க புலால் நாற்றத்தை உடையது என்றாலும், விழலர்-வீணர். விளிவுன்னி-விளிவு+ உன்னி. சுமை-சுமையான உடல். நாலடியார் இப்பாடலின் கருத்தை நன்கு விளக்கும். அது வருமாறு.

''கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்கால் துயர்ஆண் டுழவார்
வருந்தி உடம்பின் பயன் கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்''

## 44. மன்னன் வழி மன்னுயிர்

249. இகழின் இகழ்ந்தாங் கிறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப-இகல்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செயும்
நீர்வழிப் பட்ட புணை.

**தெளிவுரை**

தெப்பமானது நீர் ஓடும் ஓட்டத்தின் வழியே செல்லும் தன்மை கொண்டது. (அது போன்று) மக்கள் மன்னனின் ஆணைப் படி செல்லக்கூடியவர். அவர்கள் அவ்வாறு செல்லர்மல் வேறு என்ன செய்வர்? (அங்ஙனமாயின்) மன்னன் ஒன்றை இகழ்ந்து சொன்னால் மக்களும் இகழ்ந்து கூறுவர். அவன் ஒன்றைப் புகழ்ந்து சொன்னால் தாமும் புகழ்ந்து கூறுவர்.

**கருத்து**

அரசன் சென்ற வழியே மக்கள் செல்வர்.

**விளக்கம்**

இறைமகன்-மன்னன், புகழ்ப-புகழ்வார். 'மன்பதை புகழ்ப' எனக்கூட்டல் வேண்டும் புணை-தெப்பம். மற்று-அசைநிலை.

மன்னன் செல்லும் வழியில் மக்களும் செல்வதால் அவன் நல்லவழியில் நடக்கவேண்டும் என்பது குறிப்பு.

இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி. நீர் வழிப் பட்டது புணை என்பது உவமை. மன்பதை மன்னன் சீர் வழிப்பட்டது என்பது உவமேயம். இதில் உவம உருபு இல்லை. ஆதலால் இஃது எடுத்துக்காட்டுவமையணி.

## 45. அமைச்சரின் கடமை

250. செவிசுடச் சென்றாங்கு இடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா-கவிழ்மதத்த
கைம்மா வயத்ததோ பாகுமற்று எத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு.

### தெளிவுரை

யானைப்பாகன் எவ்வகையினாலும் வடியும் மதத்தை உடைய யானையின் வயத்தவன் ஆவானோ? ஆகான். அது போன்று அமைச்சர்கள் எவ் வகையினாலும் அத்தகைய தன்மையை உடையவர் ஆவார்கள். ஆகையால் அவர்கள் மன்னன் நீதி தவறினால் அவனிடம் சென்று செவிகள் கேட்டு வருந்தும்படி அவனுடைய குற்றங்களை எடுத்துக் காட்டி இடித்துச் சொல்லி அறிவு உண்டாக்குவர். அவன் சினந்தாலும் அஞ்சி அவனை விட்டு நீங்க மாட்டார்.

### கருத்து

அரசன் தவறி நடந்தால் அமைச்சர் அவனுக்கு அறிவுரை கூறித் திருத்துவர்.

### விளக்கம்

செவி சுட-செவி வருந்த, அதாவது கேட்கப் பொறாதபடி, வாய் வெரீஇ-கூற அஞ்சி, வெரீஇ-சொல்லிசை அளபெடை.

யானையைத் தம் வயப்படுத்தி நடத்தும் பாகன், அது மதம் கொண்டபோதும், தம் வயம் அடங்காமல் ஓடுகின்ற போதும் அதனை அங்குசம் இட்டு அடக்கித் தம் வயப்படுத்துவான். அது போல் அமைச்சர் அரசன் தன்னிலை தவறும் போது அவனுக்கு அறிவுரைகளை எடுத்துரைத்து அறிவு புகட்டி நன்னிலைப் படுத்துவர்.

அரசனை யானையாகவும் அமைச்சனைப் பாகனாகவும் கூறுதல் மரபாகும். இதனை, 'மதச் செருக்கால் பாகன் தோட்டியை நீவுமாறு போலக் காமக் களிப்பால் தன் அமைச்சர் கூற்றைக் கடத்தல் நோக்கிக் களிறனான் என்றார்' என நச்சினார்க்கினியரின் சீவக சிந்தாமணி உரையால் அறியலாம்.

"அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்"

என்ற குறளும்,

அரைசர் சீறுவரேனும் அடியவர்
உரைசெயா தொழியார்கள் உறுதியே"

என்ற கலிங்கத்துப்பரணி பாடலும் இங்கு ஒப்பிடத் தக்கவை.

பாகு-பாகன். கைம்மா-கை+மா; கையை உடைய விலங்கு. பாகு, அமைச்சு-உயர்திணைப் பொருளில் வந்த அஃறிணைச் சொற்கள்.

## 46. மன்னரைச் சேர்ந்தொழுகும் முறை

251. கைவரும் வேந்தன் நமக்கென்று காதலித்த
செவ்வி தெரியாது உரையற்க-ஒவ்வொருகால்
எண்மைய னேனும் அரியன் பெரிதம்மா
கண்ணிலன் உள்வெயர்ப்பி னான்.

### தெளிவுரை

மன்னன் நமக்கு உடன்பட்டு வருவான் என்று எண்ணி விரும்பியவற்றை அவனிடம் சொல்லக் கூடிய காலத்தை அறியாது சொல்வதைக் கைவிடுக. அவன் ஒவ்வொரு காலத்தில் காண்பதற்கு எளியவன் ஆனாலும்பெரிதும் காண்பதற்கும் பேசுதற்கும் அரியவன்; கண்ணோட்டம் இல்லாதவன்; உள்ளத்தில் சினம் கொண்டவன்.

**கருத்து**

தக்க சமயத்தை அறிந்தே மன்னனிடம் எதனையும் கூறவேண்டும்.

**விளக்கம்**

வேந்தன் நமக்குக் கைவரும்-அரசன் நம் வசப்படுவான். எண்மையன் - எளிமையானவன். மன்னனைக் கண்டு தம் குறைகளை எடுத்துக் கூறப் பலரும் காத்திருப்பர். ஆதலால் அவன் நெருங்கிய நட்புடையவனாயினும் சமயம் அறிந்தே சொல்ல வேண்டும் என்பதாம். உள் வெயர்ப்பினான்-உள்ளே அடக்கப் பட்ட சினத்தை உடையவன்.

'கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்''

என்ற குறள் (699) இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

## 47. மன்னர் கொள்ளும் சினம்

252. பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றும் கொள்ளார்-வெகுளின்மன்
காதன்மை உண்டே இறைமாண்டார்க்கு ஏதிலரும்
ஆர்வலரும் இல்லை அவர்க்கு.

**தெளிவுரை**

மன்னர் மிகுதியாய்ச் சினம் கொண்டால், இவர் தொன்று தொட்டுப் பணியாற்றுபவர் என்பதையும் எண்ணிப் பார்க்க மாட்டார். இவர் நமக்கு நண்பர் என்பதையும் கவனிக்க மாட்டார். அவையே அல்லாமல் இவர் நமக்கு உரியவர் என்பதையும் நினையார். எனவே அரசியலில் மேம்பட்டவர்க்கு அன்புடை மையும் உண்டோ? அவர்க்கு அயலார் எனவும் அன்புடையவர் எனவும் ஒருவர் இல்லை.

**கருத்து**

யாரும் அரசரிடம் உரிமை கொள்ள இயலாது.

**விளக்கம்**

வெகுளின்-சினம் கொண்டால். இறைமாண்டார்-அரசியலில் மேம்பட்டவர். காதன்மை-அன்பு. ஏதிலர்-அயலார். மன்னன் சினம் கொண்டால் அன்புடையார் எனவும் அயலார் எனவும் பாரார். அவர்க்கு உற்றார் உறவினர் என்பதும் இல்லை எனவே மன்னனிடம் தொடர்புடையார் விழிப்புடன் இருத்தல் வேண்டும்.

## 48. தளர்வின்றிப் பணியாற்ற வேண்டும்

253. மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
எந்நலம் காண்டுமென் றெள்ளற்க-பன்னெடுநாள்
காத்தவை எல்லாம் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செய்யும்.

**தெளிவுரை**

'நாம் மன்னரின் தலைவாயிலைக் காத்தலால் என்ன பயனைக் கண்டோம்?' என்று எண்ணிக் காவல் காத்தலைக் கைவிடாது ஒழிக. பல நாட்கள் காத்தவையெல்லாம் முடிவில் உதவி, மன்னர் சபையில்மிக்க நன்மையைப்பெறச் செய்யும்.

**கருத்து**

தளர்ச்சியின்றிப் பணியாற்றினால் நன்மை உண்டாவது உறுதி.

**விளக்கம்**

'புறங்கடையை வறிதே காத்து' என்று கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும். வறிதே-யாதொரு பயனும் இல்லாது.

காண்டும்-கண்டோம்; தன்மைப் பன்மை வினைமுற்று. அரசனுக்குப் பணி செய்பவன் இதனால் நமக்கு என்ன பயன் என்று தளர்ந்து காத்தல் தொழிலைக் கைவிடக் கூடாது. பொறுமையாய்ச் செய்து வந்தால் அவனுக்கு மன்னனால் நன்மை உண்டாவது உறுதி.

## 49. இறுதிவரை முயல வேண்டும்

254. உறுதி பயப்பக் கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப-இறும் உயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால் அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில.

### தெளிவுரை

இறக்கும் தருவாயிலே இருக்கின்ற உயிர்களுக்கும் வாழ்நாளைப் பெருகச் செய்யும் மருந்துகளை ஊற்றுதல் தீதாகாது, சில செயல்கள் ஆகாதவை போல் விளங்கி நன்றாக முடிவனவும் உண்டு. ஆதலால் நன்மை அளிக்கக் கூடிய செயல்களை முற்றுப் பெறாதன போல் தோன்றினும் அவை முடிவுபெறும் வரைக்கும் அறிஞர் முயன்று வருவர்.

### கருத்து

எதையும் இறுதிவரை முயன்று செய்ய வேண்டும்.

### விளக்கம்

உறுதி-நன்மை. பயப்ப-தரக்கூடிய. கடை போகா வேனும்-முடிவு பெறா என்றாலும். முயல்ப-முயல்வர். ஒழுக்கல்-வார்த்தல்; ஊற்றல். தீதன்றால்-தீது+அன்று+ஆல்; ஆல்-அசை.

சில செயல்கள் முடியாதன போல் தோன்றி முடிவதும் உண்டு. ஆதலால் இடையில் ஒரு செயலை இது முடியாது என்று கைவிடலாகாது என்பது இதனால் உணர்த்தப்படுகின்றது.

## 50. முயற்சியின் சிறப்பு

255. முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா ஊழ்த்திறத்த என்னார்-மயலாயும்
ஊற்றமில் தூவிளக்கம் ஊழுண்மை காண்டுமென்று
ஏற்றார் எறிகால் முகத்து.

### தெளிவுரை

தளர்ச்சியின்றி நிற்கும் வன்மையில்லாத விளக்கினை 'ஊழின் உண்மையைக் காண்போம்' என்று மயக்கியும் வீசும் காற்றுக்கு எதிரில் ஒருவரும் ஏற்ற மாட்டார். தக்கபடி ஏற்றிப் பாதுகாத்துச் சிறிது நேரம் பயன் அடைவர். (அது போன்று) அறிவுடையவர் நல்ல பயன் தரும் செயல்களைச் செய்யாமலேயே இருந்து, ஊழால் வரும் நன்மைகள் முயற்சி செய்யாததால் வருவது தப்பமாட்டா (வந்தே தீரும்) என்று எண்ணி முயற்சி செய்யாமல் இருக்க மாட்டார்.

### கருத்து

ஊழின்படி யாவும் நிகழும் என்று யாரும் வாளா இரார்.

### விளக்கம்

வன்மையற்ற விளக்கானது அவிந்து விடுவதுதானே என எண்ணிக் காற்றடிக்கும் இடத்தில் அதை ஏற்றார். அது சிறிது நேரம் எரியும் எனினும், அதை ஏற்றிப் பாதுகாத்து அதன் பயனை அடைவர். அது போன்று ஊழின் வன்மை கருதி வாளா இராமல் தங்களால் இயன்ற முயற்சியைச் செய்து அம்முயற்சிக்கேற்ற பயனை அடைய முயல்வார் என்பதாம்.

"தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"

என்பது குறள் (619).

ஊற்றம் இல் விளக்கு-வன்மை அற்ற விளக்கு. ஊற்றம்-நிலைத்து நிற்கும் வன்மை. அவ்வன்மை எண்ணெய், திரி முதலியவற்றால் உண்டாவது.

முயலாது வைத்து-முயலாமல் இருந்து. முயற்று-முயற்சி.

'முயற்றின்மை இன்மை புகுத்தி விடும்'

என்பது குறள் (616).

'ஊழால் வருவன வந்தே தீரும். எனவே முயற்சி செய்ய வேண்டா' என்பவர்க்கு இது மறுப்புரை. மயல்-மயக்கம்; அறிவு இழத்தல்.

ஊழ் உண்மை காண்கும் என்று-ஊழ் இருப்பது என்பதைச் சோதித்து அறிவோம் என்று.

காண்டும்-காண்போம்.

## 51. முயற்சியால் ஊழை வெல்லலாம்

256. உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே-உலகறியப்
பால்முளை தின்று மறலி உயிர்குடித்த
கால்முளையே போலும் கரி.

**தெளிவுரை**

முயற்சியையே பற்றுக் கோடாகக் கொண்டு ஊழின் வன்மையை அழிக்கின்ற வன்மையும் உண்டு. இதற்கு இந்த உலகம் அறிய ஊழின் முளையை உண்டு இயமனின் உயிரையும் குடித்த மார்க்கண்டன் என்ற சிறுவனே தக்க சான்றாவான்.

**கருத்து**

தக்க முயற்சியால் ஊழையும் வெற்றி காணலாம்.

**விளக்கம்**

உலையா முயற்சி-இடுக்கண்களுக்கு மனம் தளராத முயற்சி. களைகணா-பற்றுக்கோடாக. பால்-ஊழ். தின்று-அழித்து. கால் முளை-வழித் தோன்றல் மார்க்கண்டேயன்.

''ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்''

''கூற்றம் குமைத்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு''

என்னும் குறட்பாக்கள் இங்கு ஒப்பிடத் தக்கவை.

ஊழை முளையாய் உருவகம் செய்து, உயிரை நீராக உருவகம் செய்யாமையால் இச்செய்யுள் ஏகதேச உருவக அணியாகும்.

## 52. ஆராய்ந்து முயற்சி செய்ய வேண்டும்

257. காலம் அறிந்தாங்கு இடமறிந்து செய்வினையின்
மூலம் அறிந்து விளைவறிந்து-மேலும்தாம்
சூழ்வன சூழாது துணைமை வலிதெரிந்து
ஆள்வினை ஆளப் படும்.

**தெளிவுரை**

ஒரு செயலைச் செய்வதற்கேற்ற காலத்தை அறிந்து, ஏற்ற இடத்தை அறிந்து, செய்யப்படும் செயலின் காரணத்தை அறிந்து, அச்செயல் செய்து முடிப்பதால் உண்டாகும் பயனை அறிந்து, மேலும் ஆராய்ச்சி செய்ய வேண்டியவற்றையெல்லாம் ஆராய்ந்து, துணையாய் உள்ளவரின் வலிமையையும் அறிந்து கொண்டு முயற்சியை மேற்கொள்ளல் வேண்டும்.

**கருத்து**

காலம் முதலியவற்றை ஆராய்ந்து செயலைச் செய்ய வேண்டும்.

**விளக்கம்**

காலம் அறிந்து-தமக்கு நன்மை தரும் காலத்தையும், பகைவர்க்கு ஆகாத காலத்தையும் அறிந்து. இடம் அறிதல்-தமக்கு ஏற்ற இடமும் பகைவர்க்கு ஆகாத இடமும் ஆகியவற்றை அறிந்து கொள்ளல். வினையின் மூலம் அறிதல்-செயலின் காரணம்-செய்யும் செயல் நல்லதோ தீயதோ என்று அறிதல். விளைவு-பயன். மேலும் சூழ்வன-செயலைச் செய்யும் போது உண்டாகும் இடுக்கண்களையும் அவற்றைப் போக்கும் முறைகளையும் ஆராய்தல். துணைவலி அறிதல் தனக்கும் மாற்றானுக்கும் துணையாய் உள்ளவரின் வலிமையை அறிதல்.

இவை பற்றித் திருக்குறளில் காலம் அறிதல், இடனறிதல் வலியறிதல் முதலியவற்றில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

## 53. இடையூறுகளைப் பொருட்படுத்தக் கூடாது

258. மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்-செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

**தெளிவுரை**

எடுத்த செயலை முடிப்பதில் கருத்தாய் உள்ளவர், தம் உடலுக்கு உண்டாகும் வருத்தத்தைப் பொருட்படுத்த மாட்டார்; பசியைப் பொருட்படுத்த மாட்டார்; உறங்க மாட்டார்; பிறர் செய்யும் தீமைகளைப் பொருட்படுத்த மாட்டார்; காலத்தின் அருமையையும் எண்ணார்; பிறரால் ஏற்படும் அவமதிப்பையும் கருத மாட்டார்.

**கருத்து**

செயல் செய்து முடிப்பதில் கருத்துடையவர் தமக்கு உண்டாகும் எந்தவகை இடையூற்றையும் பொருட்படுத்த மாட்டார்.

**விளக்கம்**

மெய்வருத்தம்-உடல் வருத்தம், எவ்வெவர்-எவர்+எவர்; அடுக்குத் தொடர். செவ்வி-காலம்.

## 54. சிறிய பகையையும் அலட்சியப்படுத்தக் கூடாது

259. சிறிய பகைஎனினும் ஓம்புதல் தேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர்-நிறைகயத்து
ஆழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை நிழல்காண்பு அரிது.

**தெளிவுரை**

சிறிய பகை என்றாலும் அதனின்று தம்மைக் காத்துக் கொள்ளல் வேண்டும். அங்ஙனம் தம்மைக் காத்துக் கொள்ளாதவர் பெரும் பிழை உடையவர் ஆவர். ஏனென்றால் ஆழமான நீர் நிறைந்த மடுவில் காணப்பட்ட பெரிய யானையின் நிழல் சிறிய தவளை குதித்தாலும் காண இயலாததாகிவிடும்.

**கருத்து**

சிறிய பகையாயினும் அதைப் பொருட் படுத்தாது விட்டால் பெருந்தீங்கு உண்டாகும்.

**விளக்கம்**

ஓம்புதல் தேற்றார்-பாதுகாத்துக் கொள்வதை உணராதவர். பிழைபாடு-குற்றம். நீர்நிலைக்கரை ஓரத்தில் நிற்கும் யானையின்

நிழல் நீரில் தோன்றும். மிகப் பெரிய அந்த நிழலை மிகச் சிறிய தவளை அந்த நீரில் குதிப்பதால் காண இயலாது போய்விடும். அது போலச் சிறிய பகை இருந்தாலும் அவராலும் பெருந்தீங்கு உண்டாகும் என்பது குறிப்பு. எடுத்துக்காட்டுவமையணி இதில் அமைந்துள்ளது. சிறிய தவளையால் பெரிய யானையின் நிழல் காண முடியாமல் போகும் என்பது உவமை, சிறிய பகைவராலும் பெருவன்மை உடையவர்க்குத் தீங்கு உண்டாகும் என்பது உவமேயம். உவம உருபு இதில் இல்லை. ஆதலால் இஃது எடுத்துக் காட்டுவமையணி.

கயம்-குளம்; நீர்நிலை; காண்பு-காணுதல்; தொழிற் பெயர்.

## 55. உட்பகைக்கு அஞ்ச வேண்டும்

260. புறப்பகை கோடியின் மிக்குறினும் அஞ்சார்
அகப்பகை ஒன்றஞ்சிக் காப்ப-அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலும் காமப் பகை.

### தெளிவுரை

தம் சொல் ஒன்றினால் உலகம் முழுவதையும் வயப்படுத்தக் கூடிய முனிவர், பல முறையும், காமமான பகையை மிகவும் வருந்திக் காவல் செய்வார். அதைப் போன்று அறிவுடையார் வெளிப்பகை கோடிக்கு மேல் இருந்தாலும் அதற்கு அஞ்சாமல், உட்பகை ஒன்றேயானாலும், அதனால் உண்டாகும் துன்பம் பெரியது. ஆதலால் அதை அஞ்சித் தம்மிடம் இல்லாமல் காத்துக் கொள்வர்.

### கருத்து

அகப் பகைவர்க்கு அஞ்ச வேண்டும்.

**விளக்கம்**

புறப்பகை - பகைமையை வெளியே புலப்படுத்துபவர். அகப் பகை - உட்பகை. காப்ப - காத்துக்கொள்வர். யாப்பர் - கட்டுவர்; தம் வயப்படுத்துவர். இச் செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி. உலகு அனைத்தும் தம் ஒரு சொல்லால் வயப்படுத்தக் கூடிய முனிவர் உட்பகையான காமத்தைத் தம்மிடம் உண்டாகாதவாறு காப்பர் என்பது உவமை. மன்னன் உட்பகைக்கு அஞ்சி அதைக் காப்பான் என்பது பொருள். இடையில் உவம உருபு இல்லை. ஆதலின் எடுத்துக் காட்டுவமையணியாகும்.

## 56. கொடிய பகையை விலக்க வேண்டும்

261. புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறாதல் வேண்டும் - கழிபெருங்
கண்ணோட்டம் செய்யார் கருவியிட்டு ஆற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

**தெளிவுரை**

உடலில் ஏற்பட்ட புண்ணைக் கருவியால் அறுத்து ஆற்றுவார். அதைமூடி வைத்திட மாட்டார். அதுபோல வெளியில் நட்புடையார் போல் உறவை வெளிப்படுத்தி உள்ளே பகைமை கொள்பவரின் நச்சுப் போன்ற கொடிய பகையை வெளிப்படுத்தி நீக்க வேண்டும். அந்த வஞ்சகரிடம் மிக்க அன்பைக் காட்ட மாட்டார்.

**கருத்து**

உட்பகையுடையவரை விட்டு விலக வேண்டும்.

**விளக்கம்**

புறம் நட்டு - வெளியே நட்பு உடையவர் போல் உறவு கொண்டு. வெளியிட்டு - வெளிப்படையாய் எடுத்துச் சொல்லி. வேண்டும் - தேற்ற வினை.

புண்ணை மறைத்து வைத்தால்அது புரையோடிப் பெருந் துன்பத்தை உண்டாக்கும். அதனால் அதை மூடி வைப்பதில்லை. அங்ஙனமே வெளியில் நட்பும் உள்ளே பகைமையும் உடையவரின் பகைமையை வெளிப்படையாய் எடுத்துக் கூறி விலக்கிட வேண்டும். அதைமூடி வைத்தல் தவறு ஆகும். நஞ்சு - நச்சு என்று விகாரப்பட்டது. இச் செய்யுளும் எடுத்துக்காட்டுவமையணியாகும். கண்ணோட்டம் - தாட்சணியம்; அதாவது நம்முடன் பழகியவரைக் கண்டால் அவர் கூறுவனவற்றை மறுக்காமை.

## 57. தீய நட்பு

262. நட்பிடைக் குய்யம் வைத்து எய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத் - திட்பமாம்
நாளுலந்த தன்றே நடுவன் நடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

### தெளிவுரை

நட்பில் வஞ்சனை செய்து தீய செயல்களைச் செய்ய எண்ணித் தக்க காலத்தைப் பார்த்துப் பகைவருடன் சேர்ந்து கொண்டு நிற்பவர்க்கு வலிய ஆயுட்காலம் முடியவில்லை. இயமன் நடுநிலைமை உடையவனாதலால் நடுவு நிலைமையல்லாத செயல்களை மறந்து உயிரைக் கவராமல் வாளா இருப்பான். (அதனால் அந்தத் தீயர் இறக்கவில்லை)

### கருத்து

கூற்றுவனின் நினைவுக்கு வரும்வரை வஞ்சகர் உயிர் வாழ்வர்.

### விளக்கம்

தம் தலைவர்க்கு வஞ்சகம் எண்ணுபவரின் உயிரை இயமன் கொண்டு செல்லவில்லை. ஏனென்றால் அவனுக்கு நடுநிலைமை

இல்லை. இல்லாததால் வஞ்சகரின் உயிரைக் கவரவில்லை என்று அவனைப் பழித்துக் கூறுகின்றார் ஆசிரியர். வஞ்சகர் உயிருடன் இருப்பாராயினும் அவர்கள் இறந்தவருடன் ஒப்பர் என்பது குறிப்பு.

நட்பிடைக் குய்யம் வைத்தல் - நட்பில் வஞ்சனை செய்தல். வட்கார் - பகைவர். நடுவன் - நடுவுநிலைமையுடையவரான இயமன்.

'நட்பில் வஞ்சனை செய்பவர் வாழ்கின்றாரே' என எண்ணுபவர்க்கு, 'இயமன் நடுவு நிலைமை உடையவனாகக் கருதப்படினும் அத்தகைய நடுவுநிலைமை அவனிடம் இல்லை. ஆதலால் வஞ்சகரை விட்டு வைத்துள்ளான் உயிருடன், என்பது விடையாய் அமைகிறது. மற்று - அசைநிலை. வாளா - சும்மா; செயல் செய்யாது.

## 58. குற்ற மனத்தினர்க்கு யாவும் தீயவையாய்த் தெரியும்

263. மனத்த கறுப்பெனின் நல்ல செயினும்
அனைத்தெவையும் தீயவே யாகும் - எனைத்துணையும்
தீயவே செய்யினும் நல்லவாக் காண்பவே
மாசில் மனத்தி னவர்.

### தெளிவுரை

ஒருவர் மனத்தில் சினம் முதலான குற்றங்கள் உள்ளன என்றால் ஒருவன் அவர்க்கு நல்லவை செய்தாலும் அவை அனைத்தும் தீய செயல்களாகவே தோற்றும். அத்தகைய குற்றம் இல்லாத மனத்தை உடையவர்க்கு, எவ்வளவு தாம் தீயவற்றைச் செய்தாலும் அவர் அவற்றை நல்லவையாகவே நினைப்பர்.

**கருத்து**

குற்றமுடைய மனத்தை உடையவர்க்கு எவ்வளவு நன்மை செய்தாலும் தீயனவாய் முடியும்.

**விளக்கம்**

மனத்த கறுப்பு எனின் - இதனைக் 'கறுப்பு மனத்த' என மாற்றுக. கறுப்பு மனம் என்பது சினம் முதலான குற்றமுடைய மனம். 'மை பொதி விளக்கே என்ன மனத்தினுள் கறுப்பு வைத்து' என்பது மெய்ப்பொருள் நாயனார் புராணம். அனைத்து எவையும் - அவை யாவும். குற்றமற்ற மனத்தையுடையவர் தீயவற்றைச் செய்தாலும் அவற்றை நல்லனவாய் எண்ணுவர். காண்ப - அறிவார்.

> ''வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
> தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்''

என்பது சிந்தாமணி.

## 59. சொற்களைப் பயன் நோக்கிக் கொள்ள வேண்டும்

264. இனியவர் என்சொலினும் இன்சொல்லே இன்னார்
 கனியும் மொழியும் கடுவே - அனல்கொளுந்தும்
 வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்பச்
 சிங்கி குளிர்ந்தும் கொலும்.

**தெளிவுரை**

தீயைப் போன்று சுடுகின்ற வெங்காரம் என்ற மருந்து கொடியதாய்க் காணப்பட்டாலும், நோயைப் போக்கி உடல் நலத்தை உண்டாக்கும். விடமானது உடல் புளகம் உண்டாகும்படி

குளிர்ச்சியைத் தரும் என்றாலும், பின்னால் கொன்று விடும். அது போன்று நல்லவர் எத்தகைய கடிய சொற்களைக் கூறினாலும் முடிவில் நன்மையைத் தருவதால் இனிய சொற்களே ஆகும். தீயவரின் இனிமையான சொல்லும் பின்னால் தீமை விளைத்தலால் அது நஞ்சே ஆகும்.

**கருத்து**

பயன் நோக்கிச் சொல்லின் பொருளைக் காண வேண்டும்.

**விளக்கம்**

இனியவர் - நல்லவர். என் சொலினும் - எத்தகைய கடுஞ் சொற்களைச் சொன்னாலும். 'சொலினும்' - 'சொல்லினும்' என்பதன் தொகுத்தல் விகாரம். இன்னார் - பகைவர். கனியும் மொழியும் - மனம் கனிந்து கூறும் சொற்களும், வெங்காரம் - ஒருவகை மருந்து.

இச் செய்யுளும் எடுத்துக்காட்டுவமையணி.

## 60. மனம், மொழி, உடல் தூய்மை

265. பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து - மெய்யில்
புலமைந்தும் காத்து மனமாசு அகற்றும்
நலமன்றே நல்லாறு எனல்.

**தெளிவுரை**

பொய்யும் புறங்கூறலும் கடுஞ் சொல்லும் பயனற்ற சொல் சொல்லுதலும் என்ற இந்த நான்கு குற்றங்களும் வாராமல் சொல்லைக் காத்து, உடலில் ஐந்து புலன்களையும் அடக்கியாண்டு மனக் குற்றங்களைப் போக்கும் நல்ல செயல் அன்றோ நன்னெறி எனக் கூறத் தகும்.

**கருத்து**

பொய், குறளை முதலானவற்றை நீக்கிப் புலத்தை அடக்கிக் காத்து மனக் குற்றங்களை நீக்க வேண்டும்.

**விளக்கம்**

குறளை - புறம் சொல்லுதல். அதாவது ஒருவரைக் காணாத இடத்து இகழ்ந்து கூறுதல். பயனில் - தமக்கும் மற்றவர்க்கும் அறப் பயன் தராத சொற்கள். புலம் - ஐந்து பொறிகள். அவற்றைக் காத்தலாவது உடலில் நிகழும் கொலை, களவு, காமம் என்பவை நிகழாத வண்ணம் காத்தல், மனமாசு - மனத்தில் உண்டாகும் வெஃகல், வெகுளல், மயக்கம் என்ற குற்றங்கள்.

> "கொலையே களவே காமத் தீவிழைவு
> உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்
> பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
> சொல்லெனச் சொல்லில் தோன்றுவ நான்கும்
> வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சிஎன்று
> உள்ளந் தன்னில் உடுப்பன மூன்றும்எனப்
> பத்து வகையால் பயன்தெரி புலவர்"

என்ற மணிமேகலை அடிகளை (24-125-132) இங்கு ஒப்பு நோக்குக.

## 61. வறுமையிலும் செம்மையுடையார்

266. நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்கு ஒருப்படார் - பல்பொறிய
செங்கண் புலிஏறு அறப்பசித்தும் தின்னாவாம்
பைங்கண் புனத்தபைங் கூழ்.

**தெளிவுரை**

பல புள்ளிகளையும் சிவந்த கண்களையும் உடைய ஆண் புலியானது மிகவும் பசித்திருந்தாலும் பசுமையான கொல்லை

நிலத்தில் உள்ள பயிரைத்தின்னாது. (அதைப் போன்று) நல்ல அற நெறியில் நிலைத்து நின்றவர் வறுமை அடைந்தாலும் பாவச் செயல்களைச் செய்வதற்கு உடன்பட மாட்டார்.

**கருத்து**

சான்றோர் வறுமையடைந்தாலும் பாவச் செயல்களைச் செய்ய எண்ண மாட்டார்.

**விளக்கம்**

நல்லாறு - நல்ல ஒழுக்கம்; அது முந்தைய பாட்டில் சொல்லப்பட்டது. ஒழுக்கு - ஒழுக்கம். நல் கூர்ந்தும் - வறுமை அடைந்தும். அல்லன - அறம் அல்லாதவை; பாவங்கள் ஒருப்படார் - நினைக்க மாட்டார்; மனம் சம்மதிக்க மாட்டார்.

'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' என்ற பழமொழி இச்செய்யுள் கருத்தில் அமைந்துள்ளதைக் காணலாம்.

"உடுக்கை உலறி உடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தம் கொள்கையில் குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புல் கறிக்குமோ மற்று"

என்பது நாலடியார். (141)

## 62. பொருள் சேர்க்கும் போது விலக்க வேண்டியவை

267. குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளும் திருவும் - தவம்விற்றாங்கு
ஊனோம்பும் வாழ்வும் உரிமைவிற்று உண்பதூஉம்
தானோம்பிக் காத்தல் தலை.

**தெளிவுரை**

ஒருவன் தன் குல ஒழுக்கத்தை விற்றுத் தேடிக் கொள்ளும் பொருளும், வாய்மையான நன்மையை விற்றுப் (பொய்சொல்லி) பெற்றுக் கொள்ளும் செல்வமும், தவத்தை அழித்து உடலைப் பாதுகாக்கும் வாழ்வும், மனைவியை விற்று உண்பதும் (என்ற இவையெல்லாம்) தன்னிடம் வாராது காத்துக் கொள்வது எல்லா அறங்களுள்ளும் சிறந்தவையாகும்.

**கருத்து**

பொருள் காரணமாகக் குலம், வாய்மை, தவம், உரிமை முதலியவற்றைக் கைவிடக் கூடாது.

**விளக்கம்**

குலம் விற்றல் - குல ஒழுக்கத்தைக் கைவிடல். வாய்மை நலம் விற்றல் - பொய் கூறுதல்; பொய்ச் சாட்சி சொல்லுதல், தவம் விற்று - தவத்தை அழித்து; அதாவது கைவிட்டு; தீயஒழுக்கத்தை மேற்கொண்டு. உரிமை விற்று - மனைவியை விற்று; உரிமை யானவற்றை விற்று; சுதந்தரத்தைக் கைவிட்டு. ஊன் - உடம்பு; ஆகு பெயர்.

ஓம்பிக் காத்தல் - தன்னிடம் வாராதபடி தன்னைக் காத்துக் கொள்ளல். வறுமை வந்தாலும் குலம் முதலியவற்றைப் பாதுகாத்தல் வேண்டும்.

## 63. வஞ்சனையால் தேடும் பொருள் அழியும்

268. இடைதெரிந்து அச்சுறுத்து வஞ்சித்து எளியார்
உடைமைகொண்டு ஏமாப்பார் செல்வம் – மடநல்லார்
பொம்மன் முலைபோல் பருத்திடினும் மற்றவர்
நுண்ணிடைபோல் தேய்ந்து விடும்.

**தெளிவுரை**

மற்றவர் சோர்ந்திருக்கும் சமயத்தை அறிந்து அச்சப்படுத்தி ஏமாற்றி எளியவரின் உடமையைக் கவர்ந்து கொண்டவரின் செல்வம், பெண்களின் கொங்கைகளைப் போல் பெருகுவதாய் விளங்கினாலும், அப்பெண்களின் சிறிய இடையைப் போல் குறைந்து விடும்.

**கருத்து**

பிறரை ஏமாற்றிச் சேர்க்கும் செல்வம் அழிந்துவிடும்.

**விளக்கம்**

வஞ்சித்துப் பெறும் செல்வம் பெருகுவது போல் தோன்றி னாலும் பின்பு அழிந்து விடும் என்பது குறிப்பு, இடை - சமயம், ஏமாப்பார் - இன்பம் அடைவர். இன்பம் அடைவது, பிறரை ஏமாற்றியதாலும், பொருளால் அப்போதைக்கு உண்டாகும் இன்பத்தாலும் ஏற்படுவதாகும். பொம்மல் - பெருத்தல். கொங்கை பெருக்கப் பெருக்க அதைத் தாங்கமாட்டாது இடை வருந்தும். வஞ்சனையால் வரும் பொருள் மேலும் மேலும் பெருகுவது போல் காணப்படினும் அதற்கு ஆதாரமான புண்ணியத் திரு தேயும் என்பதாம்.

## 64. பேராசையின் குற்றம்

269. பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க்கு ஆக்கம் அரிதம்மா - முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயாது இரா.

**தெளிவுரை**

கிடைக்கக் கிடைக்க உண்டு முழுவதும் எரிந்து அழிய எரிகின்ற தீயும் அழியாது இருப்பதில்லை. (அதுபோன்று) தான்

பெற்ற பொருள் சிறிதாய்த் தோன்றத் தமக்குக் கிடைக்காத பொருள்களைப் பெரிதாய் எண்ணும் சிறிய உயிர்களுக்குச் செல்வ வளர்ச்சியும் அதனால் உண்டாகும் நன்மைகளும் ஏற்படமாட்டா.

**கருத்து**

பேராசை கொள்பவனுக்குச் செல்வம் உண்டாகாது. பெற்றதையும் இழந்து விடுவான்.

**விளக்கம்**

இது பேராசை கூடாது என்று தெரிவிக்கின்றது. தீயானது மற்றவற்றை அழித்துத் தானும் அழியும். அதுபோல் பேராசை உடையவன், தான் பெற்றதைக் கொண்டு அமைதியுறாது மேலும் பொருளை விரும்பினால், பெற்றதை இழப்பதோடு; தானும் அழிவான். பெற்றதைப் பெரிதாய் எண்ணி அமைதி அடைய வேண்டும். அம்மா - வியப்பிடைச் சொல். பெறாத - தெரிநிலை வினையாலணையும் பெயர். பெறாதவை என்பது பொருள். சிற்றுயிர் - சில வாழ் நாட்களை உடைய உயிர்கள்; மக்கள்.

## 65. அறவழியில் பொருள் ஈட்ட வேண்டும்

270. தத்தம் நிலைக்கும் குடிமைக்கும் தப்பாமே
ஒத்த கடப்பாட்டில் தாளூன்றி - எய்த்தும்
அறங்கடையில் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

**தெளிவுரை**

தங்கள் தங்கள் நிலைமைக்கும் குடிக்கும் ஏற்றமுறையில் முயற்சி செய்து, மறந்தும் பாவ வழியில் செல்லாது, மற்றவர் பொருளையும் விரும்பாது இருப்பவரின் தலைவாயிலிலே செல்வம் வந்து சேரும்.

**கருத்து**

பாவ வழியை மேற்கொள்ளாது தம் நிலைமைக்கும் குடிமைக்கும் ஏற்றவாறு பொருள் தேட முயன்றால் எளிதில் பொருள் சேரும்.

**விளக்கம்**

தத்தம் நிலைமைக்கும் குடிக்கும் தப்பாமே - ஆசிரியர் ஒருவர் தம் பொருள்நிலை, குலம் முதலிய தகுதியினின்று தவறலாகாது எனக் குறித்தார். ஒத்த கடப்பாடு - தமக்கு ஏற்ற கடமையில் பிறன் பொருள் வெஃகாமையால் பொருள் சேரும். வெஃகின் தன் பொருளும் கெடும். அறங்கடை -அறம் + கடை; அறத்தின் எல்லை; பாவம், ஒருவன் தன் நிலைமைக்கும் குடிக்கும் ஏற்பப் பிறன் பொருளை விரும்பாமல் பொருளைத் தேடினால் அறக் கடவுள் அவனிடம் மகிழ்ந்து பொருளைக் கொணர்ந்து தரும் என்பார். 'புறங்கடைய தாகும் பொருள்' என்றார்.

**''ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
**ஊக்கம் உடையா னுழை''**

என்னும் குறள் (594) இங்கு ஒப்பிடத் தக்கது.

புறங்கடை - தலைவாயில்.

## 66. மூன்று வகைச் செல்வங்கள்

271. **பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்**
**குலமகளே ஏனையோர் செல்வம் - கலனழிந்த**
**கைம்மையார் பெண்மை நலம்போல் கடையாயார்**
**செல்வம் பயன்படுவ தில்.**

**தெளிவுரை**

தலையாயவரின் பொருள்கள் பொது மகளிரைப் போல் எல்லாருக்கும் பயன்படும். இடைப்பட்டவரின் பொருள்கள்

கற்புடை மகளிரைப் போல் தன்னை உடையவருக்கே பயன்படும் - கடைப்பட்டவரின் பொருள்கள் தாலியை இழந்த கைம் பெண்ணின் பெண்மையழகைப் போல் எவர்க்கும் பயன்படா.

**கருத்து**

செல்வம் எல்லாருக்கும் பயன்படும்.

**விளக்கம்**

தலையாயார் செல்வம் அனைவருக்கும் பயன்படுவதால் எல்லாருக்கும் இன்பத்தை அளிக்கும் பொது மகளிரை உவமை கூறினார். இடையாயார் தம் செல்வத்தைத் தாம் மட்டுமே அனுபவிக்க எண்ணுவர். ஆதலால் குலமகளிரை உவமை கூறினார்.

கடையாயார் தம் செல்வத்தை எவர்க்கும் தர மாட்டார். ஆகவே எவர்க்கும் பயன்படாத கைம்பெண் பெண்மையை உவமை கூறினார். கலன் - மங்கல நாண்; தாலி கைம்மையார் - விதவையார்.

## 67. ஈயாதவரின் இழிவு

272. வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலும் நனிநல்ல - கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான்.

**தெளிவுரை**

ஈகைக் குணம் இல்லாதவனின் பொருளைவிட ஈகைத் தன்மையுடையவனின் வறுமையே மிகவும் நல்லவை போலும்! ஏனென்றால், அந்த வறியவன் 'உயிர்களிடம் அருள் இல்லாதவன்! அன்பு இல்லாதவன்; தாட்சணியம் இல்லாதவன்' என்று பலரால் வீணாக இகழ்ந்து பேசப்படுவதில்லை.

**கருத்து**

ஈயாதவன் உலகத்தவரால் இகழப்படுவான்.

**விளக்கம்**

வள்ளன்மை - வள்ளல் + மை - வரையறையில்லாது அளிக்கும் தன்மை. செல்வத்தின் - செல்வத்தைவிட. மற்றை யோன் - ஈகைத் தன்மையுடையவன். கண்ணறையன் - கண் + அறையன்; கண் - கண்ணோட்டம். அறையன் - இல்லாதவன்; தாட்சணியம் இல்லாதவன். அறை - அறுதல். நல்குரவு - வறுமை.

வள்ளன்மை இல்லாதவன் 'அருள் இல்லாதவன்', 'அன்பு இல்லாதவன்', 'கண்ணோட்டம் இல்லாதவன்' என்று இகழப் படுவான் என்பதை எதிர்மறையால் கூறினார்.

## 68. இன் சொல்லேனும் வேண்டும்

273. ஈகை அரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
ஓஓ கொடிது கொடிதம்மா - நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்மற்று
ஆவா இவரென்செய் வார்.

**தெளிவுரை**

ஒருவர் மற்றவர்க்குப் பொருளைக் கொடுக்க இயலாது என்றாலும், இனிய சொல் சொல்வதிலும் வறுமை அடைதல் ஐயோ, மிகவும் கொடியது! பாவம் என்ற கொல்லனால் நாவைப் பேச முடியாத வண்ணம் சிதைத்து வாய்ப்பூட்டு இடப்பட்டால் இவர்கள், ஆ! என்ன செய்வார்கள்?

**கருத்து**

ஒருவர், கொடுக்கும் தன்மை இல்லாது போனாலும், இன் சொல்லையேனும் கூற வேண்டும்.

**விளக்கம்**

இச்செய்யுள் புகழ்வது போல இகழ்வதாக அமைந்துள்ளது. 'பாவம் காரணமாக இவர்களின் வாய் பூட்டப்பட்டுவிட்டது. அதனால் இவர்கள் வாய் திறந்து இனிய சொல்லைச் சொல்ல வில்லை. ஐயோ பாவம்! இவர்கள் மேல் குற்றமில்லை, என்று புகழ்வது போல் இகழ்ந்து கூறினார்.

நல்கூர்தல் - வறுமை அடைதல். ஓ ஓ, ஆ ஆ - இரக்கப் பொருளில் வந்தன. ஓ ஓ - சிறப்புப் பொருளில் வந்தது என உ.வே.சா அவர்கள் கூறியுள்ளார். கொடிது கொடிது - அடுக்குத் தொடர்; மிகுதி காரணமாய் அடுக்கி வந்தது. கம்மியன் - கொல்லன்.

## 69. சொல் வன்மையுடையவர் செய்ய வேண்டியது

274. சொல்வன்மை உண்டெனின் கொன்னே விடுத்தொழில்
நல்வினை கோறலின் வேறல்ல - வல்லைத்தம்
ஆக்கம் கெடுவ துளதெனினும் அஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

**தெளிவுரை**

ஒருவர்க்குச் சொல் வன்மை இருக்குமானால் அதை வீணே பயன்படுத்தாது கைவிடுதல் நல்ல செயலை அழிப்பதே அல்லாது வேறு இல்லை. சொல் வன்மையால் உண்டாகும் பயனை அறிந்தவர் விரைந்து தம் செல்வம் கெடுவதானாலும் அதற்கு அச்சம் கொள்வாரோ? கொள்ள மாட்டார்.

**கருத்து**

சொல் வன்மையைப் பயன்படுத்தாது விடுதல் தவறு.

**விளக்கம்**

சொல் வன்மையை யுடையவன் அதைப் பயன்படுத்த வேண்டும். அங்ஙனம் பயன்படுத்தாது விடுவது தவறாகும் என்று இதில் வலியுறுத்துகிறார். நல்வினையை அழித்தலுக்குச் சமமானது சொல் வன்மையைப் பயன்படுத்தாமை என்று வலியுறுத்திக் கூறியுள்ளார். வல்லை - விரைவில். கோறல் - அழித்தல். வாக்கு - வாக்கின் ஆற்றல்; சொல் வன்மை, தம் சொல் வன்மையினால் சமாதானம் செய்வித்தல் முதலியவற்றைச் செய்தல் வேண்டும் என்க.

## 70. சிறு முயற்சி பெரும் பயன் கொள்க

275. சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனில் தாழ்வரோ தாழார் - அறனல்ல
எண்மைய ஆயினும் கைவிட் டரிதெனினும்
ஒண்மையில் தீர்ந்தொழுக லார்.

**தெளிவுரை**

செய்வதற்கு எளியவையாய் இருந்தாலும் அறத்துக்குப் பொருந்தாதவற்றைச் செய்யாது கைவிட்டுச் செய்வதற்கு அரியதாயினும், அறநெறியினின்று விலகாது ஒழுகி அதன் பயனை அடையும் அறிஞர், சிறிய முயற்சியைச் செய்து அதனால் பெரும்பயன் அடைவதானால், அதனைச் செய்யப் பின்வாங்குவாரோ! பின் வாங்க மாட்டார்.

**கருத்து**

செய்வதற்கரியவற்றைச் செய்யும் ஆற்றல் வாய்ந்தவர், சிறு முயற்சியால் பெரும்பயன் அடையக் கூடுமானால் அதைச் செய்யப் பின்வாங்க மாட்டார்.

**விளக்கம்**

சிறு முயற்சி - சொல் வன்மையால் உண்டாகும் பயன் போன்றவை. அவை எளியவை; ஆதலால் சிறு முயற்சி என்றார். உறுபயன் - மிக்க பயன். அறன் அல்ல - அறம் அல்லாதவை. பாவச் செயல்கள் எளியவை; எனவே, அறச் செயல்கள் அரியவை யாம். ஒண்மை - அறம்; ஒழுகலார் - ஒழுகாதவர். ஆங்கு - அசை நிலை.

## 71. நாகரிகம் அற்றவர்

276. செயக்கடவ அல்லனவும் செய்துமன் என்பார்
நயத்தகு நாகரிகம் என்னாம் - செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோம் என்று தலைதுமிப்பான் தண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

**தெளிவுரை**

'தாம் செய்யக் கூடாதவற்றையும் செய்து முடிப்போம்' எனச் சொல்பவரின் நாகரிகம் என்ன பயனை அளிக்கும்? அத்தகைய செயல், 'சினந்து சொன்னால் மனம் வருந்தும்' என்று தலையையே வெட்டி விடுகின்ற கருணையைப் போன்றது என்று கூசாமல் எடுத்துக் கூறும் தன்மை கொண்டதாகும்.

**கருத்து**

தன்னால் செய்வதற்குரிய செயல்களைச் செய்யக் கூடும் என்று சொல்லால் கூறி, செயலால் அவ்வாறு செய்யாது விடுவது நாகரிகம் அன்று.

**விளக்கம்**

ஒருவன் தன்னிடம் வந்து சேர்ந்தபோது அவனிடம் தான் அரிய செயல்கள் பல செய்யக் கூடும் எனக் கூறி, அவன் மற்றவரிடம் போய்ப் பயன் அடைவதையும் தடுத்தல், சினந்து

கூறினால் மனம் நோகும் என எண்ணி அவர் வருத்தப்படாது இருத்தற் பொருட்டுத் தலையையே வெட்டும் கொடுஞ் செயலைப் போன்றது என்பதாகும். நோம் - நோகும்; வருந்தும். துமித்தல் - துண்டித்தல். நாகரிகம் - கண்ணோட்டம். செயிர்த்து - சினந்து. செய்தும் மன் - செய்வோம். மன் - மிகுதிப் பொருளில் வந்தது. எடுத்துரைக்கற்பாற்று - பலரும் அறிய எடுத்துக் கூறும் இயல்புடையது.

## 72. அற்பர் ஆரவாரம் இடுவர்; வல்லார் அமைதியாய் இருப்பர்.

277. அல்லன செய்யினும் ஆகுலம் கூழாக்கொண்டு
ஒல்லாதார் வாய்விட் டுலம்புப - வல்லார்
பிறர்பிறர் செய்பபோல செய்தக்க செய்தாங்கு
அறிமடம் பூண்டுநிற் பார்.

### தெளிவுரை

வன்மை அற்றவர் மற்றவர்க்குப் பயன்படாதவற்றைச் செய்தாலும் தாம் பயன்படும் செயல்களைச் செய்தாற் போன்ற ஆரவாரத்தையே பயனாகக் கொண்டு முழக்கமிடுவர். அறிய செயலைச் செய்யும் ஆற்றல் உடையவர் மற்றவரால் செய்யப் படுவன போல் செய்யத் தக்கவற்றைச் செய்து அங்குத் தாம் செய்தவை பயன்படுபவையாய் இருக்க அவற்றை உணராதது போன்ற அறியாமையை உடையவர் போல் இருப்பர்.

### கருத்து

வன்மையற்றவர் பயன்படாதவற்றைச் செய்தாலும் ஆரவாரம் செய்வர். வன்மை யுடையவர் பிறர்க்குப் பயன்படுவன வற்றைச் செய்தாலும் அமைதியாய் இருப்பர்.

**விளக்கம்**

அல்ல - பயன்படாதவை. ஆகுலம் - ஆரவாரம். கூழாக் கொண்டு - பயனாகக் கொண்டு. ஒல்லாதார் - வன்மை இல்லா தார். அறிமடம் - அறிந்தும் அறியாதது போல இருக்கின்றமை. பிறர் பிறர் - அடுக்குத் தொடர்.

## 73. பிறர்பழி கூறுபவனின் இழிவு

278. **பகையின்று பல்லார் பழியெடுத் தோதி**
**நகையொன்றே நன்பயனாக் கொள்வான் - பயமின்று**
**மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்து கொல்வான்போல்**
**கைவிதிர்த் தஞ்சப் படும்.**

**தெளிவுரை**

தனக்கு யாதொரு பகையும் இல்லாது இருக்கப் பலருடைய பழிகளையும் எடுத்துச் சொல்லி அதனால்தான் அடையும் மகிழ்ச்சி ஒன்றையே பயனாய் நினைக்கும் மூடன், வேறு பயன் ஒன்றும் இல்லாது உடலில் ஏற்படும் நடுக்கம் ஒன்றையே காண எண்ணி, மற்றவரின் கன்னத்தை அடித்து வருத்தும் இயல்புடையவனைப் போல் மற்றவரால் அஞ்சப்படுவான்.

**கருத்து**

பிறர் பழியையே எடுத்துக் கூறுபவனுக்கு யாவரும் அஞ்சுவர்.

**விளக்கம்**

பகையின்று - இன்று - 'இன்றி' என்பது 'இன்று' எனத் திரிந்தது. பயம் இன்று - பயன் இல்லாது. கொடிறு - கன்னம். கை விதிர்த்தல் - அச்சத்தால் கைகள் நடுங்குதல். அஞ்சப்படும் - அஞ்சப்படுவான். அனைவரும் அவனைக் கண்டு அஞ்சுவர். பிறர்பழி கூறுபவன் என்பவன் பிறர் கன்னத்தை இடிக்கும் வேடனைப் போன்றவன் என்பதாகும்.

## 74. இறைவன் உண்டு என்பவரைத் தண்டித்தலுக்குக் காரணம்

279. தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும் - தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்தம் இன்புதல்வர்க் கன்றே
பலகாலம் சொல்வார் பயன்.

**தெளிவுரை**

தெய்வம் இருக்கின்றது என்பார் தீய செயல்களைச் செய்யப் புகுந்தால், அவர்கள் வணங்கும் தெய்வமே தாட்சணியம் இல்லாமல் அவர்களின் முன்பு நின்று தண்டிக்கும். தெய்வம் இல்லை என்பார்க்கு முன்பு அவ்வாறு எதிரில் தோன்றுவதும் இல்லை; தண்டிப்பதும் இல்லை. அது எதைப் போன்றது என்றால், பெற்றோர் தம் அன்புக்குரிய மக்களுக்கே பல முறையும் நீதியை எடுத்துச் சொல்வதைப் போன்றதாகும்.

**கருத்து**

இறைவன் உள்ளான் என்று நம்புபவரை அவன் தண்டிப் பதற்குக் காரணம், அவர்களை நன்னெறியில் நடத்துவதற்கே ஆகும்.

**விளக்கம்**

பெற்றோர் தம் மைந்தர்க்கு அவர்கள் வழி தவறும் போது அறிவுரை கூறித் திருத்துவர். அதைப் போன்றே இறைவனும் தம்மிடம் அன்பு செலுத்துபவரைத் தண்டிப்பான் என்பதாம். செயப்புகின் - செய்யத் தொடங்கினால். புகின் என்றதால் அவர்கள் தீமை செய்யாமையே இயல்பு. கண் இன்று - கண்ணோட்டம் இன்றி. இன்புதல்வர் - இனிய மக்கள். பயன் சொல்வார் - பயன்படும் அறிவுரைகளைக் கூறுவார். இவ்வாறு கூறுதல் மறக் கருணையின் பாற்படும்.

## 75. தீயவற்றால் செல்வம் பெருகாது

280. தீய செயல்செய்வார் ஆக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல - தீயன
நல்லன ஆகாவாம் நாவின் புறநக்கிக்
கொல்லும் கவயமாப் போல்.

**தெளிவுரை**

தீயவை செய்பவரின் செல்வங்கள் ஒரு கால் பெருகி வளர்ந்தாலும், அவையெல்லாம் நாக்கினால் இன்பம் ஏற்பட நக்கிப் பின் கொல்லும் காட்டுப் பசுவைப் போன்று தீமையை அளிப்பனவே அல்லாமல் அவை நல்லவை எனப்படுவன அல்ல.

**கருத்து**

தீய செயல்களால் ஈட்டப்பட்டவை நல்லவை ஆகா; தீயவற்றையே தரும்.

**விளக்கம்**

கவயமா - காட்டுப்பசு. அது தான் எதனைக் கொல்ல விரும்புகிறதோ அதனைத் தன் நாவால் அதனுக்கு இன்பம் உண்டாகுமாறு நக்கும். அந்த இன்பத்தில் ஈடுபட்ட உயிர் தன்னை மறந்து நிற்கும் போது அதனைக் கொன்று விடும். இந்த உவமை தீய வழியில் ஈட்டப்பட்ட பொருள் தீமையை அளிக்கும் என்பதை விளக்க வந்தது.

பெருகினும் - இதில் உள்ள உம்மை பெருகாது என்பதை விளக்கும்.

தீயவை செய்வார்க்குச் செல்வம் பெருகாது. ஒருவேளை பெருகினால் அது முற்பிறவியில் செய்தமையால் விளைந்ததாகும்.

"அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்."

என்னும் குறள் (169) இங்கு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய ஒன்று.

## 76. மேன் மக்கள் தவறினும் கீழ் மக்களாகார்

281. நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரின் கீழல்லர் - முன்னைத்தம்
ஊழ்வலி உன்னிப் பழிநாணி உள்ளுடைவார்
தீய செயினும் சில.

### தெளிவுரை

முன்னைய ஊழ்வினையின் வலிமைக்கு அஞ்சி உண்டாகின்ற பழிக்கு நாணுகின்றவர் ஏதேனும் ஒரு காரணத்தால் அறிவு மயங்கித் தீயவற்றைச் செய்தாலும் அவர்கள் நல்லவர்களே ஆவார்கள். நல்லவர் நாவில் தழும்பு உண்டாகுமாறு நாள்தோறும் தம் நன்மையை எடுத்துச் சொல்லினும் செந்நெறியில் செல்பவரை விடத் தாழ்ந்தவர் ஆகார்; ஒப்பானவரே ஆவார்.

### கருத்து

மேன் மக்கள் ஓரொரு சமயம் ஊழ் வலியால் தவறினும் அவர்கள் கீழ்மக்கள் ஆகார்.

### விளக்கம்

முன்வினையின் பயனால் நல்லவர் தீமை செய்தாராயினும் அவர் தொடர்ந்து தீயவற்றைச் செய்யார். ஆதலால் அவர் நல்லவரே என்றார். மேலும் பழிக்கு நாணுவர் என்றதால் திரும்பப் பழி தரும் செயலைச் செய்யார் என்பது வெளிப்படை.

நாத்தழும்பிருக்க - புகழ்வதால் நாவில் தழும்பு உண்டாக. 'நாத்தழும் பிருக்கப் பாடாதாயினும்' என்பது புறம் (200) நாள் வாயும் - 'வாய்' என்பது 'தோறும்' என்ற பொருளில் வந்தது. கீழ் - பண்பாகு பெயர். உள் - இடவாகு பெயர். ஊழ் வலி உன்னி - தாம் தீமை செய்வதற்குக் காரணமாக இருந்த ஊழின் வன்மையை நினைத்து. உடைவார் - உள்ளம் வருந்துபவர்.

பழி வரும் என்று அஞ்சுபவர் சில தீயவற்றைச் செய்தாலும் செந்நெறி செல்பவரைவிடக் கீழானவர் அல்லர் என்று முடிக்க.

## 77. பிறன் மனைவியை விரும்புவதால் இன்பம் உண்டாகாது

282. பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறன் அன்றே ஆயினுமாக - சிறுவரையும்
நன்னலத்த தாயினும் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க உள்நடுங்கு நோய்.

### தெளிவுரை

அயலவனின் மனைவியின் வீட்டு வாயிலிடத்தில் அவளை விரும்பிச் செல்வது என்பது அறமாகாது. அவ்வாறு ஆயினும் ஆகுக. அச்செயலில் நொடிப் பொழுதேனும் இன்பம் உடையதாய் அது விளங்குமேல் அதைக் கொள்க. அச்செயலால் வருவது இன்பம் அன்று. அதனால் உண்டாவது என்னவென்றால் உடல் நடுங்க மனமும் நடுங்குவதற்குக் காரணமான துன்பமே ஆகும்.

### கருத்து

அயலவன் மனைவியை விரும்புதல் அறமன்று; இன்பமும் அன்று; துன்பமே.

### விளக்கம்

பிறன் வரை நின்றாள் - அயலவனின் மனைவி. பிறன்மனை கடைத்தலைச் சேறல் - அயலான் மனைவியின் இன்பத்தை விரும்பி அவளது வீட்டு வாயிலில் போய் நிற்றல்; சிறுவரை - சிறு பொழுது.

அயலான் மனைவியை விரும்பிச் செல்லுபவன் மெய் நடுங்கி உள் நடுங்கிச் செல்வான். ஆதலால் அது இன்பமாகாது என்றார்.

'புக்க விடத்தச்சம் போதரும் போதச்சம்
துய்க்கு மிடத்தச்சம் தோன்றாமல் காப்பச்சம்
எக்காலும் அச்சம் தருமால் எவன்கொலோ
உட்கான் பிறன்இல் புகல்''

என்ற நாலடியார் செய்யுள் (83) பிறன்மனை விரும்புவதால் உண்டாகும் விளைவை விளக்கும்.

நன்னலத்தது - நல்ல இன்பத்தைத் தருவது. நலம் - இன்பம்.

## 78. நல்ல இன்பம் துய்க்க

283. கருமம் சிதையாமே கல்வி கெடாமே
தருமமும் தாழ்வு படாமே - பெரிதும்தம்
இன்னலமும் குன்றாமே ஏரிளங் கொம்பன்னார்
நன்னலம் துய்த்தல் நலம்.

**தெளிவுரை**

தாம் செய்ய வேண்டிய செயல்கள் முட்டுப் படாமலும், மேலும் கற்க வேண்டிய கல்வி கெடாமலும், அறச் செயல்களுக்குக் குறைவு உண்டாகாமலும், தமது இல்லற நன்மையும் குறையாது, அழகான இளங் கொம்பைப் போன்ற மனைவியின் நல்ல இன்பத்தை அனுபவித்தல் யாவருக்கும் நன்மையாகும்.

**கருத்து**

நம் கடமைகளுக்குக் குறைவு ஏற்படாது இன்பத்தை அனுபவிக்க வேண்டும்.

**விளக்கம்**

கருமம் - இல்லறத்திற்கு வேண்டிய செயல்கள். கல்வி - அறிஞர் நூல்களினைக் கற்றல், கற்பித்தல் முதலியன. தருமம் - தத்தம் நிலைக்குரிய அற ஒழுக்கம். தாழ்வு படாமே - குறைவு படாமல். துய்த்தல் - அனுபவித்தல். இன்னலம் - இனிமை + நலம்; இனிய இன்பம். அஃது அற வழியில் வருதலால் இனிய நிறைவான இன்பம்.

## 79. காமத்தின் தீமை

284. கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமும் ஓம்பார்
களவொன்றோ ஏனையவும் செய்வார் - பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமம் கதுவப்பட் டார்.

### தெளிவுரை

காமம் கொண்டவர் கொலை செய்வார்; பொய் பேச நாண மாட்டார்; தம் பெருமையை நிலை நிறுத்தமாட்டார்; களவு ஒன்று மட்டுமா செய்வார்? மற்றுமுள்ள எல்லாச் செயல்களையும் செய்வார். இக் காமச் செயலானது பழியுடன் பாவமும் உடையது என்று எண்ண மாட்டார். அங்ஙனமானால், அவர் வேறு என்ன தான் செய்ய மாட்டார்?

### கருத்து

காமம் மிக்கவர் எல்லாத் தீய செயல்களையும் செய்வார்.

### விளக்கம்

மானமும் ஓம்பார் - தம் பெருமையை நிலைநிறுத்த மாட்டார். பெருமைக்குத் தகாதவற்றைச் செய்வார். மானமும் என்பதில் உள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளில் வந்தது. களவு ஒன்றோ - களவு ஒன்று மட்டுமா செய்வார் என்பதாம். ஒன்றோ - எண்ணிடைச் சொல். காமம் கதுவப்பட்டார் - காமம் பற்றப்பட்டவர்; காமத்துக்கு அடிமையானார். அதாவது மிக்க காமம் உடையவர்.

"பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்சிறப்பான் கண்"

என்பது குறள் (146). இது இச்செய்யுளின் கருத்தை நன்கு விளக்கும்.

## 80. சில தீயர் செயல்

285. திருவினு நல்லாள் மனைக்கிழத்தி யேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பார் - நறுவிய
வாயின வேனும் உமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கின் சிலர்.

**தெளிவுரை**

கொடிய விலங்குகள் இனிய பொருள்கள் தம் வாயில் உள்ளனவேனும் அவற்றை உமிழ்ந்து விட்டுக் கசப்புள்ள பொருள் களைத் தின்னும். அவற்றைப் போல் தீயர் சிலர் தம் மனைவி திருமகளைப் போல் அழகுடையவளாய் இருப்பினும் அவளை விடுத்து அயலவர் மனைவியரின் இன்பத்துக்கே தம்பெருமை கெட்டு நிற்பர்.

**கருத்து**

சில பேதையர், திருமகளைப் போன்ற தம் மனைவியரை விடுத்துப் பிறர் மனைவியரை விரும்புவர்.

**விளக்கம்**

தீய விலங்கு - ஒட்டகம் முதலியவை. அவை இனிய பொருள்களைத் தின்னாமல் கசப்பான பொருள்களை உண்ணும். மனைக்கிழத்தி - இல்லத்துக்கு உரியவள்; மனைவி. நறுவிய - நல்ல இன் சுவையையுடைய. கடு - கடுக்காயைப் போன்ற கசப்பான பொருள். விலங்கின் - விலங்குகளைப் போல. பீடு - பெருமை.

## 81. மக்கட் செல்வம்

286. கற்புத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பேறு
என்பதோ ராக்கமும் உண்டாயின் இல்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.

**தெளிவுரை**

கற்பு என்ற ஆடையை உடுத்தி அன்பு என்ற மலரைச் சூடி, உடலிலே நாணம் என்ற நறுமணக் கலவையைப் பூசி, இல்லறத்துக் கேற்ற நற்குணம், நற்செய்கை என்ற அணிகளை அணிந்த மனையாளுக்கு மக்கட்பேறு என்ற செல்வமும் உள்ளதானால், அவளை மனைவியாய்க் கொண்ட கணவனுக்குச் செய்ய வேண்டிய தவம் வேறு இல்லை.

**கருத்து**

கற்பு முதலியவற்றையும் நன் மக்களையும் உடைய மனைவியை உடையவனின் வாழ்க்கை தவ வாழ்க்கையைப் போன்றதாகும்.

**விளக்கம்**

மக்கட் பேறின் சிறப்பை இப்பாடல் உணர்த்துகிறது. கற்புக் குணத்தை ஆடையாகவும், அன்பை மலராகவும், நாணத்தை நறுமணக் கலவையாகவும், நற்குணம் நற்செய்கை அணிகளாகவும் உருவகம் செய்யப்பட்டுள்ளது. 'உடுத்து' என்பதால் ஆடை எனவும், 'முடித்து' என்பதால் மலர் எனவும், 'பூசி' என்பதால் நறுமணக் கலவை எனவும், பூண்டாட்கு என்பதால் அணி எனவும் பொருள் கொள்ளப்பட்டது. நற்குணம் - நன்மை + குணம்; நற்செய்கை - நன்மை + செய்கை.

## 82. பிற ஆடவரை விரும்புபவள்

287. ஏந்தெழில் மிக்கான் இளையான் இசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - வாய்ந்த
நயனுடை இன்சொல்லான் கேளெனினும் மாதர்க்கு
அயலார்மேல் ஆகும் மனம்.

### தெளிவுரை

தன் கணவன் மிக்க அழகு உடையவனாயினும், இளமை யுடையவனாயினும், இசைப் பாடலில் வல்லவனாயினும், பெண்களின் கண்களைக் கவர்கின்ற பார்வை உடையவனாயினும், பொருந்திய இனிய சொல்லைப் பேசுபவனாயினும், கற்புக் குணம் இல்லாத பெண்களுக்கு மற்ற ஆடவர் மீது மனமானது செல்லும்.

### கருத்து

கற்புக் குணமற்ற மாதருக்குத் தன் கணவன் அழகு முதலியவை உடையவனாயினும் மற்ற ஆடவர் மீதே மனம் செல்லும்.

### விளக்கம்

'திருவினும் நல்லாள்' என்ற முந்தைய பாடலில் (80) மனைவி அழகுடையவளாயினும் மற்ற மங்கையர் மீது ஆடவர்க்கு மனம் செல்லும் என்றவர், இப்பாடலில் தன் கணவன் அழகு முதலியவை உடையவனாயினும் மற்ற ஆடவர் பால் மங்கையர்க்கு மனம் செல்லும் என்றார். இவ்விரண்டு பாடல் களாலும் முறையே கற்புக் குணம் இல்லாத ஆடவனையும் கற்புக் குணம் இல்லாத மங்கையையும் பற்றியுரைத்தார். எழில் - வளரும் அழகு; வளர்ந்தமைந்த பருவத்தும் வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளரும் என்பது போல் விளங்கும் அழகு எனத் தொல் காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது. காந்தையர் - மகளிர் என்ற பொதுப் பொருளில் வந்தது. நயன் - நன்மை; அன்பு கேள் - கணவன்; இதுவே இச் செய்யுளுக்கு எழுவாய்.

## 83. கற்புக் குணமற்ற காரிகை

**288.** **கற்பில் மகளின் நலம்விற் றுணவுகொள்ளும்**
**பொற்றொடி நல்லார் நனிநல்லார் - மற்றுத்தம்**
**கேள்வற்கும் ஏதிலர்க்கும் தங்கட்கும் தம்கிளைஞர்**
**யாவர்க்கும் கேடு சூழார்.**

### தெளிவுரை

தமது இன்பத்தை மற்றவர்க்கு விற்று அதனால் வரும் வருவாயைக் கொண்டு உண்கின்ற பொது மகளிர், கற்பில்லாத பெண்களைவிட மிகவும் நல்லவர் ஆவார். ஏனென்றால் அந்தப் பொது மகளிர் தம் கணவனுக்கும், மற்றவருக்கும், தங்களுக்கும், தம் உறவினர்க்கும் கேடு செய்ய எண்ணுவதில்லை.

### கருத்து

கற்பில்லாத குல மகளிர் பொது மகளிரைவிடக் கொடியவர்.

### விளக்கம்

இல்லறத்திலிருந்து கற்புடன் ஒழுக வேண்டிய மகளிர் தவறாக ஒழுகும் ஒழுக்கத்தின் இழிவை இச் செய்யுள் விளக்கு கிறது. பொது மகளிர் கேடு சூழார் என்றதால் குலமகளிர் கேடு சூழ்வர் என்பதாம். கற்பில் மகளின் - கற்புக் குணம் இல்லாத குல மகளைக் காட்டிலும். இன் - ஐந்தாம் வேற்றுமை உருபு. பொற்றொடி நல்லார் - விலைமகளிர். கேள்வன் - கணவன். கிளைஞர் - சுற்றத்தார். கேடு - பழி பாவம் முதலியவை.

## 84. கற்பில்லாத மகளிர் பிறப்புப் பாவம்!

289. முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார்
நிறையும் நெடுநாணும் பேணார் - பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக்கு உண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு.

### தெளிவுரை

தமக்கும் மற்றவர்க்கும் உள்ள உறவும், குடிப்பிறப்பும் தகுதியும் எண்ணிப் பார்க்க மாட்டார்; உள்ளம் தீய வழியில் செல்லாமல் தடுத்து நிறுத்தும் நிறையும் மிக்க நாணமும் பாதுகாக்க மாட்டார்; பேதைமையுடைய பெண்களுக்கு இவையே அல்லாது வேறு ஒரு குணமும் உண்டோ! இல்லை. ஆதலால் கற்பில்லாத மகளிரின் பிறப்பானது பெரும் பாவமாகும்.

**கருத்து**

கற்பில்லாத மகளிர் பிறப்புப் பெரும் பாவம் உடையதாகும்.

**விளக்கம்**

குடிமை - நல்ல குடிப் பிறப்பு. பான்மை - தகுதி; 'வருணத்தின் தன்மை' என்பார் உ.வே.சா. நிறை உள்ளத்தைக் கற்பு நெறியில் நிறுத்துதல். நெடுநாண் - பிறந்த காலம் தொட்டு வரும் நாணம். கற்பின் மகளிர் - கற்பு + இல் + மகளிர்.

## 85. காம நோக்கு நோக்காதவர் துறவியர்

290. பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணோடு நெஞ்சுறைப்ப நோக்குறார் - பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

**தெளிவுரை**

ஐந்து புலன்களுக்கும் பகைவரான துறவியர் பெண்மையை வியந்து பேசார்; 'பெண்' என்ற பெயரையும் கூற மாட்டார்; மனத்தில் பெண்களின் உருவம் பதியும்படி தம் கண்களால் அவர்களைப் பார்க்க மாட்டார். மகளிர் இசையுடன் பாடும் பாடலைக் கேட்கமாட்டார்; நல்ல பண்பு இல்லாத பெண்களின் மற்றச் செயல்களையும் பாராட்ட மாட்டார்.

**கருத்து**

துறவியர் சிற்றின்பத்துக்குக் காரணமானவற்றைச் செய்யார்.

**விளக்கம்**

வீடில் - வீடு + இல்; விடுதல் இல்லாத; விடுவதற்கு அரிய, ஐம்புலன்கள் விட அரிது ஆதலால் 'வீடில் புலம்' எனப்பட்டது.

பண்ணும் பாட்டும் காமத்தைப் பெருகச் செய்யும். ஆதலால் ‘பண்ணொடு பாடல் செவிமடார்’ என்றார். செவி மடார் - கேட்க மாட்டார். நெஞ்சுறைப்ப - நெஞ்சில் பதிய.

## 86. துறவியர் உண்ணும் உணவு

291. துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம்
அயில் சுவையின் ஆகுவவென் றெண்ணி - அயிற்சுவையும்
பித்துணாக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துணா மொய்ம்பி னவர்.

### தெளிவுரை

மற்றச் சிலரைப் போன்று தவவன்மை உடையவர் உறக்கத்தின் இன்பமும், பெண்களின் தோள்களைத் தழுவும் இன்பமும் மற்றவை எல்லாமும் உண்ணும் உணவால் வருபவை என எண்ணி, அந்த உணவு உண்பதைப் பித்தன் உணவு உண்பதைப் போல் உண்பர்.

### கருத்து

துறவியர் உணவைச் சிறிதாகவே உண்பர்.

### விளக்கம்

உணவினால் சிற்றின்பவுணர்ச்சி பெருகும். ஆதலால் துறவியர் உணவைச் சிறிதே உண்பர். அவ்வாறு அவர்கள் உண்பது பித்தன் உண்பது போல் என்றார். பித்தன் பசியெடுக்கும் போது சுவையறியாது சிறிதே உண்பன். துயிற்சுவை - உறக்கத்தால் உண்டாகும் இன்பம். தூநல்லார் - அழகிய பெண். மொத்துணா - புலன்களால் துன்பப்படாத, மொய்ம்பினவர் - தவத்தையுடையவர்.

## 87. உடலைப் பாதுகாவாமை

292. அன்பொ டருளுடைய உயிர்நிலைமற்று
என்பியக்கம் கண்டும் புறந்தரார் - புன்புலால்
பொய்க்குடில் ஓம்புவரோ போதத்தால் தாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

**தெளிவுரை**

ஞானத்தினால் தாம் அமைத்துக் கொண்ட பேரின்ப வீட்டில் புக இருப்பவர் புலால் நாற்றம் வீசும் பொய்க் குடிலான தம் உடலைப் பாதுகாப்பரோ? காவார் அன்பும் அருளும் உடைய வராயினும், உயிருக்கு நிலைக் களமான உடலானது உணவு இல்லாததால் மெலிந்து எலும்புகள் எழுந்து தோன்றுவதைக் கண்டும் அந்த ஊன் உடலைப் பாதுகாக்க மாட்டார்.

**விளக்கம்**

உயிர் நிலை - உடம்பு; உயிர் நிற்பதற்குரியது. ஆதலால் உடம்பு 'உயிர்நிலை' எனப்பட்டது. புன்புலால் - புலாலை உண்பவரும் விரும்பாத கீழ்மையுடைய ஊன். பொய்க்குடில் - உடல். போதத்தால் வேய்ந்த புக்கில் - ஞானத்தால் அமைந்த வீடு; முத்தி. போதம் - ஞானம். குடில் புகுதுவார் - வீட்டுக்குள் புகுபவர்.

## 88. பேரின்பம் விரும்புபவர் சிற்றின்பத்தை விரும்பார்

293. சிற்றின்பம் சின்னீர தாயினும் அஃதுற்றார்
மற்றின்பம் யாவையும் கைவிடுப - முற்றும்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில்.

**தெளிவுரை**

சிற்றின்பமானது சிறிய நேரமே நிற்கும் இயல்புடைய தாயினும், அந்த இன்பத்துக்கு ஆட்பட்டவர் மற்ற எல்லா இன்பத் தையும் கைவிடுவர். பேரின்பம் என்ற பெரியகடலில் எக் காலத்தும் மூழ்குபவர், உலக இன்பம் என்ற நரகக் குழியில் வீழ்வாரோ? வீழார்.

**கருத்து**

சிற்றின்பம் விரும்பியவர் மற்ற இன்பங்களையெல்லாம் விரும்பார். பேரின்பத்தை விரும்புபவர் சிற்றின்பத்தை விரும்பார்.

**விளக்கம்**

சின்னீரது - சிறிது நேரமே இருக்கும் தன்மை உடையது; சில + நீர்மை + அது; கும்பி - நரகம்; சேறு. பேரின்பம் கடலாகவும் சிற்றின்பம் நரகமாகவும் (சேற்றையுடைய சிறிய நீர் நிலையாகவும்) உருவகம் செய்யப்பட்டுள்ளது. உருவக அணி. வீழ்பவோ - வீழ்வாரோ?

## 89. காம இன்பத்தை அகற்றல்

294. எவ்வினைய ரேனும் இணைவிழைச்சொன் றில்லெனில்
தெவ்வும் திசைநோக்கிக் கைதொழூஉம் - அவ்வினை
காத்த லிலரேல் எனைத்துணைய ராயினும்
தூர்த்தரும் தூர்ப்பார் அலர்.

**தெளிவுரை**

துறவியர் எத்தகைய தீவினைகளையுடையவராய் இருந் தாலும் பெண் இன்பம் என்ற ஒன்று இல்லையானால், அவர்களின் பகைவரும் அவர்கள் இருக்கும் திசை நோக்கிக் கை கூப்பி வணங்குவர். எத்தகைய அறச் செயலை உடையவ ராயினும் காமம் என்ற அந்தத் தீய தொழிலைக் காவாதவர் ஆயின், நாளும்

காம இன்பத்தில் முழுகியிருக்கும் காமுகரும், அவர்களைப் பழித்துப் பேசுவர்.

**கருத்து**

காம இன்பத்தின் விருப்பம் இல்லாது இருப்பவரை எல்லாரும் தொழுவர். அங்ஙனம் இல்லாது போனால் அனைவரும் அவர்களைப் பழிப்பர்.

**விளக்கம்**

இணை விழைச்சு - பெண்களைக் கூடி இன்பம் அடைதல். இணை - இரண்டு. விழைச்சு - விரும்புதல். ஆணும் பெண்ணும் விரும்பிக் கூடும் கூட்டத்தைக் குறித்தது. தெவ்வும் - பகைவரும். அவ்வினை - அந்தக் காம இன்பம். தூர்த்தர் - தீயவர். அதாவது காம இன்பத்தில் நாள்தோறும் முழுகியவர். அவர் தூர்ப்பார் - பழி மொழிகளைப் பரப்புவர். தொழூஉம் - இன்னிசை அளபெடை.

## 90. வீணாகக் காலத்தைக் கழிப்பவர்

295. பரபரப்பி னோடே பலபல செய்தாங்கு
இரவுபகல் பாழுக் கிறைப்ப - ஒருவாற்றான்
நல்லாற்றில் நூக்கிற் பதறிக் குலைகுலைப
எவ்வாற்றான் உய்வார் இவர்.

**தெளிவுரை**

பற்பல செயல்களை விரைவாகச் செய்து இரவையும் பகலையும் (பலர்) வீணாகக் கழிப்பர். ஒரு வகையால் நல்லொழுக்க முறையில் அறிவுடையவர் அவர்களைச் செலுத்தினால், பதைத்து நடுங்குவர். இத் தகையவர் பிறவிக் கடலினின்று எந்த வழியாய்த் தப்புவர்?

**கருத்து**

உலகத்தினர் வீணாக வாழ்வைக் கழிப்பர்.

**விளக்கம்**

இரவு பகலாக வீணாய் நாளைக் கழிப்பவரைச் சான்றோர் திருத்த எண்ணி முயன்றால் அவர்கள் 'பதறித் துடிப்பர்'. ஆதலால் 'பதறிக் குலை குலைப' என்றார். பரபரப்பு - மிக்க விரைவு. பாழுக்கு இறைப்ப - பாழான நிலத்துக்கு நீர் இறைப்பர் என்பது நேர் பொருள். ஊக்கின் - ஊக்கத்தை உண்டாக்கினால்.

## 91. காலம் தாழ்க்காமல் தவம் செய்க!

296. இளையம் முதுதவம் ஆற்றுதும் நோற்றென்று
உளைவின்று கண்பாடும் ஊழே - விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம்.

**தெளிவுரை**

இளமைப் பருவத்தில் இறத்தல் இல்லாமல் தம் வாழ்நாளின் நீண்ட எல்லையை அறிவாராயின், யாம் இப்போது இளமை உடையவராய் இருக்கின்றோம். முதுமையில் வருந்தித் தவத்தைச் செய்வோம் என வருத்தம் இல்லாது உறங்கியிருப்பதும் ஒரு வகை ஊழே ஆகலாம். தம் ஆயுள் முடிவைக் காண்கின்ற துறவியரும் ஓர் இமைப் பொழுதும் தாமதம் செய்யாமல் தவத்தைச் செய்வார்.

**கருத்து**

இறக்கும் காலம் எப்போது என எவரும் அறியார். ஆதலால் உடனே தவத்தைச் செய்ய வேண்டும்.

## 92. தீயூழ் செய்யும் செயல்

297. நல்லவை செய்யத் தொடங்கினும் நோனாமே
அல்லன அல்லவற்றில் கொண்டுய்க்கும் - எல்லி
வியனெறிச் செல்வாரை ஆறலைத்து உண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல்.

**தெளிவுரை**

இரவில் வழியில் செல்பவரின் பொருளைப் பறித்து உண்ணும் திருடர்கள், பெருவழியில் செல்பவரைத் தப்பச் செய்து தனி வழியில் செலுத்துவதைப் போல் நல்லவற்றைச் செய்யத் தொடங்கினாலும், தீயூழ்கள் அதைப் பொறாமல்தீயவற்றில் கொண்டு செலுத்தி விடும்.

**கருத்து**

தீயவர் நல்லவற்றைச் செய்ய முயன்றாலும் நல்லூழ் இல்லாது போனால் அது அவர்களைத் தீய நெறியில் புகுத்தி விடும்.

**விளக்கம்**

அல்லன - பாவங்கள். நோனாமே - பொறாமல். கொண்டு உய்க்கும் - கொண்டு செலுத்தும். எல்லி - இரவு. ஊழ் வலி பெரிது. ஆதலால், ஒருவன் நல்லதைச் செய்யப் புகுந்தாலும் தீயூழ் இருந்தால் அவனைத் தீய நெறியிலேயே மீண்டும் புகுத்திவிடும். இதனைத் திருக்குறள்

"ஊழின் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்"

என்று விளக்கும்.

'தவமும் தவமுடையார்க்கே ஆகும்' என்பதையும் இங்கு நினைவு கூர்க.

## 93. தீயொழுக்கம்

298. நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே - கஞ்சு
எப்புலமும் காவாமே மெய்ப்புலம் காக்குமற்ற
இப்புலமும் காவா திது.

**தெளிவுரை**

தம் உள்ளம் கட்டுப்படாமல் வெளியே செல்லத் துறவியரின் தவமாகிய போர்வை சட்டையைப் போன்றதுமாகாது; ஏனென்றால் பிற சட்டைகள் எல்லாம் புலன்களைக் காவாமல் போனாலும் உடல் என்ற புலனையாவது பனி முதலியவற்றினின்று காப்பாற்றும். ஆனால் இந்தப் பொய்யா தவப் போர்வை இந்த உடலையும் பனி முதலியவற்றிடமிருந்து காக்காது. ஆதலால் இந்தப் பொய்யான தவக்கோலம் வேறு ஒன்றே.

**கருத்து**

உள்ளத்தைக் கட்டுப்படுத்தாத துறவால் ஒரு பயனும் உண்டாகாது.

**விளக்கம்**

உள்ளம் பிறவற்றில் பற்றுக் கொண்டு வெளியே செல்லத் தவத்தை மேற்கொள்வதால் பயன் ஏதும் இல்லை என்பதை இச் செய்யுள் உணர்த்துகிறது. உடலில் அணியும் சட்டை குளிர் முதலியவற்றினின்று காக்கும். துறவியர் மேற்கொண்ட தவம் என்ற போர்வை உள்ளத்தை வெளியே செல்லாமல் காப்பதில்லை. ஆதலால் அதனைச் சட்டையாகவும் கூற இயலாது. 'ஆதலால் கஞ்சுகம் அன்று; பிறிதொன்றே' என்றார். நெஞ்சு புறம்பா - உள்ளம் தம் வயப்படாது அயலாய் இருக்க. தவத்தவரை மற்றவர் ஐயப்படாதிருக்கக் கொண்டதாதலால் அதனைத் தவப் போர்வை என்றார். கஞ்சுகம் - சட்டை. மெய்ப்புலம் - உடல் என்ற புலம். ஐந்து பொறிகளுள் ஒன்று உடல்.

> ''நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
> வாழ்வாரின் வன்கணார் இல்''

என்ற குறள் (276) இங்கு ஒப்பிடத்தக்கது.

## 94. வஞ்சித்தொழுகும் செயலை இறைவன் காண்கின்றான்

299. வஞ்சித்தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோம் என்று மகிழன்மின் - வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கொல் என்றஞ்சி
அங்கம் குலைவது அறிவு.

### தெளிவுரை

தவத்தை மேற்கொண்டவரைப் போன்று பொய்யாகக் கோலம் கொண்டு எல்லாரையும் வஞ்சித்து ஒழுகும் அறிவிலிகளே! எல்லாரையும் வஞ்சித்து விட்டோம் என்று மகிழ்ச்சி அடைய வேண்டா. நீங்கள் செய்த வஞ்சனையை எங்கும் உள்ள இறைவன் காண்கின்றான் என்னும் அச்சம் கொண்டு உடல் நடுங்குவது அறிவாகும்.

### கருத்து

மற்றவரை வஞ்சித்து விட்டோம் என்று ஒருவர் எண்ணக் கூடாது. ஏனென்றால் இறைவன் அதைக் காண்கின்றான்.

### விளக்கம்

வஞ்சித்து - வஞ்சனை செய்து. வஞ்சித்த - மற்றவரை வஞ்சித்த செயல்களை. அங்கம் - உடல். கொல் - அசை நிலை.

## 95. தீமை எங்கும் பரவும்!

300. சென்மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் புரக்கும் - கழிமுடைப்
புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினும்
தைக்கும் சேயார் முகத்து.

### தெளிவுரை

இழிந்த ஊனின் தீய நாற்றமானது ஒன்றில் இட்டு மூடி வைத்தாலும் தொலைவில் உள்ளவரின் முகத்தில் போய்த் தாக்கும். அதைப் போன்று மறைவான இடத்தில் நடந்த செயலால் ஏற்பட்ட பழிச் சொற்கள் இறைவனே பறையை அறைந்து யாவர்க்கும் அறிவித்ததைப் போன்று எங்கும் போய்ப் பரவும்.

### கருத்து

ஒருவரும் அறியாமல் தீயவற்றைச் செய்தாலும் அஃது எங்கும் பரவாமல் இராது.

### விளக்கம்

இச்செய்யுளில் எடுத்துக்காட்டுவமையணி அமைந்துள்ளது. புலாலை மூடி மறைத்து வைத்தாலும், அதன் தீய மணம் தொலைவில் உள்ளவரின் முகத்தில் போய்த் தாக்கும் என்பது உவமை. மறைவான இடத்தில் நிகழ்ந்த பழிச் செயல்கள் இறைவன் பறையறைந்து தெரிவிப்பதைப் போல் எங்கும் பரவுதல் என்பது பொருள். இடையில் உவம உருபு இல்லாததால் எடுத்துக்காட்டு உவம அணியாம். மறைவழிப்பட்ட பழிமொழி - பிறர் அறியாத மறைவான இடத்தில் நடந்த பழிச் செயல்கள் பற்றிய சொற்கள்; கழி முடை நாற்றம் - மிகக் கெட்ட நாற்றம். மறை - தொழிலாகு பெயர். மறை என்ற தொழிற் பெயர் மறைவான இடத்துக்கு ஆகியது. சேயார் முகத்து - தொலைவில் உள்ளவரின் முகத்தில்.

## 96. சான்றோர் தவறுதல் தவறு

301. மெலியார் விழினும் ஒருவாற்றான் உய்ப
வலியார் மற்றொன்றானும் உய்யார் - நிலைதப்பி
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமால் உய்யா பிற.

**தெளிவுரை**

கனம் இல்லாத பொருள்கள் விரைவில் நிலை குலைந்து வீழமாட்டா; ஒருவேளை விழுந்தாலும் சிதைவில்லாது பிழைத்து விடும். கனமான பொருள்களோ நிலை தவறி விழுந்தால் பிழைப்பதில்லை. அதுபோன்று சிறியவர் தம் நிலை தவறினாலும் ஒருவழியாய்ப் பிழைத்துக் கொள்வர். ஆனால் சான்றோர் தம் நிலையினின்று தவறினால் வேறு எந்த வகையினாலும் பிழைக்க மாட்டார்.

**கருத்து**

மேலானவர் தம் நிலையினின்று தவறக்கூடாது.

**விளக்கம்**

மெலியார் - அறிவால் மெலிந்தவர்; சிறியவர்; இல்லறத்தார். ஒன்றானும் - ஒரு வழியானும். வலியார் - அறிவால் வன்மை யுடைய சான்றோர்; துறவியர்.

சிறியார் தம் நிலையினின்று தவறி நடந்தால் அதை உலகம் நன்கு அறியாது. பெரியோர் நிலை தவறினால் உலகம் முழுதும் பரவும். அதினின்று அவர்கள் உய்வது அரிதாகும்.

## 97. மேலோர் செயல்கள் யாவும் மேலானவையே!

302. இசையாத போலினும் மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லால் - பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கம் காண்பாரை ஒப்பவோ
ஊனோம்பி ஊன்றின் பவர்.

### தெளிவுரை

பெரியோரின் செயலானது ஒரு சில வேளைகளில் பொருந்த மற்றவை போல் விளங்கினும், சிறியவர்க்கு அல்லால் மற்ற வர்க்குக் குற்றம் ஆகாது. உலக நலத்தை எண்ணிப் பசுவைப் படைத்து வேள்வித் தீயை வளர்த்து மழை பெய்வதைச் செய்விக்கும் வேள்வி செய்பவரை, தம் உடலைப் பாதுகாக்க ஊனைத் தின்பவர் நிகர் ஆவாரோ? ஆகமாட்டார்.

### கருத்து

பெரியோர் சில வேளைகளில் தீமை செய்வதும் உலக நன்மையின் பொருட்டே ஆகும்.

### விளக்கம்

இசையாத - பொருத்தமற்றவை. போலினும் - போல் தோன்றினாலும். பசு - யாகப் பசு. தீ - முத்தி; யாகத்தில் வளர்க்கப் படும் தீ மூன்று. அவை ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக் கினியம். வான் வழக்கம் காண்பார் - மழை பெய்வித்தலைச் செய்பவர்; வேள்வி செய்யும் ஆசிரியர். சான்றோர் தீமை செய்தாலும் அது நன்மை உண்டாதற் பொருட்டாக விளங்கும். வேள்வி செய்பவர் ஊனை உண்பர். அங்ஙனம் உண்டாலும் அது செய்பவரின் தகுதியைப் பொருத்தும், மழை பெய்விக்கும் காரணம் பற்றியும் இழிவானது அன்று என்பதாம்.

## 98. சான்றோர் இயல்பு

303. எவரெவர் எத்திறத்தார் அத்திறத்த ராய்நின்று
அவரவர்க் காவன கூறி - எவரெவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தெனை.

**தெளிவுரை**

இறைவன் எல்லாவற்றிலும் சேர்ந்தும் சேராமலும் நிற்பவன். அதுபோல், எம்மை ஆளும் சான்றோர், யார் யார் எத்தன்மை உடையவராக விளங்குகின்றாரோ அவரவர் தன்மைக்கு ஏற்ற வாறு தாமும் நின்று, அவர்கள் செய்ய வேண்டிய நல்ல செயல் களை அவரவர்க்கு எடுத்துக் கூறித் தாம் எதிலும் பற்றில்லாது விளங்குவர்.

**கருத்து**

துறவியர் மற்றவர்க்கு ஆவன கூறித் தாம் பற்றின்றி ஒழுகுவர்.

**விளக்கம்**

உப்பாலாய் - மேம்பட்டவராய். தம்முடையான் - தம்மை உடைய இறைவன். எப்பாலும் நிற்பது என - தான் எல்லா வற்றிலும் மேம்பட்டவனாயினும் எங்கும் நிறைந்து கலந்து நிற்பதைப் போல். எம்முடையார் - எம்மையுடைய ஆசிரியர். திறம் - வகை.

## 99. மெய்ஞ்ஞானியர் செயல்

304. மெய்யுணர்ந்தார் பொய்ம்மேல் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணாப் புலம்காப்பார் - மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாணல் நீள்கதவாச்
சேப்பார் நிறைத்தாழ் செறித்து.

**தெளிவுரை**

மெய்ப் பொருளை உணர்ந்த ஞானியர் நிலைக்காத பொருள்களின் மேல் தம் புலன்களைப் போகவிடார். தமக்கு உண்மை ஞானம் உண்டாக வேண்டும் என்ற கருத்தாய் ஐம்புலன்களையும் காப்பர். அவர்கள் ஐம்புலன்களையும்

காப்பதையே நிலையாகவும், பழிச் சொற்களுக்கு நாணுவதையே பெருங்கதவுகளாகவும் கொண்டு, நிறையான தாழ்ப்பாளை இறுக்கிச் சாத்துவர்.

**கருத்து**

ஞானியர் ஐம்புலன்களையும் அடக்கி ஞானம் உண்டாகும் வழியில் நிற்பர்.

**விளக்கம்**

மெய்யுணர்ந்தார் - ஞானியர். பொய்ம் மேல் - நிலையற்ற பொருள் மேல். கண்ணா - கருத்தாக. புலம் காப்பார் - ஐந்து புலன் களையும் ஐந்து பொறிகள் மீது செல்லாமல் காப்பவர். காப்பே - ஐந்து பொறிகளையும் காப்பதையே. தாழ் - தாழ்க்கோல். தாழ்ப்பாள் நிறை - மனம் அதன் வழியில் செல்லவிடாது நிறுத்துதல். இச் செய்யுளின் பின் இரண்டடியில் உருவக அணி அமைந்துள்ளது. சேப்பார் - இறுக்கிச் சேர்ப்பர்.

## 100. மெய்யுணர்வில் உண்டாகும் இன்பம்

305. கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல் - மற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
இறந்தவெலாம் துன்பமலாது இல்.

**தெளிவுரை**

கற்க வேண்டியவற்றைக் கற்று அதற்கேற்ப ஒழுகும் கணவனுக்கு மனைவியானவள் பெற்றுத் தந்த முதல் மகனைப் போல், முழுவதும் துறந்த முனிவர்க்கு மெய்ஞ்ஞானத்தில் உண்டாகும் இன்பமே பேரின்பம். அவையல்லாத மற்றவை அவர்களுக்கு இன்பமாகா; அவை துன்பங்களே.

**கருத்து**

மெய்ஞ்ஞானத்தில் உண்டாவதே துறவியர்க்குச் சிறந்த இன்பம்.

**விளக்கம்**

கற்பினாள் - கற்புடைய மனைவி. காதலன் - கணவன். தலைமகன் - முதல்மகன்; மெய்யுணர்வு - மெய்ஞ்ஞானம். இறந்த எல்லாம் - அவையல்லாத மற்றவை எல்லாம்.

## 101. வீட்டு நெறியில் செல்பவர்

306. கற்றாங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனம்திருத்திப் - பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார்.

**தெளிவுரை**

நூல்களைக் கற்றபடி உணர்ந்து அவற்றிற்கு ஏற்ப அடங்கி, தீயவற்றை விலக்கி, நல்லனவற்றைச் செய்து கிடைத்ததைக் கொண்டு மனத்தை ஒருமைப்படுத்தி, வீட்டு நெறியையும் அதற் குரிய முறையையும் உணர்ந்து மனத்துள் இறைவனை அறிந்து நிற்கும் ஞானியரே வீட்டு நெறியில் செல்பவர் ஆவர்.

**கருத்து**

அறிவு நூல்களைக் கற்று அடங்கி மனத்தை ஒருமைப்படுத்தி இறைவனை உணர்ந்து நடப்பவர் வீடுபேற்றை அடைவர்.

**விளக்கம்**

கற்றாங்கு - படித்தபடியே. தீது ஒரீஇ - தீயவற்றை விலக்கி; தீயவை: காமம், குரோதம், சினம் முதலாயின. ஒரீஇ - சொல்லிசை யளபெடை. நன்றாற்றுதல் - கொல்லாமை, வாய்மை முதலான வற்றைப் பின்பற்றுதல். பணியற நிற்றல் - எல்லாச் செயலும் அடங்குமாறு நிற்றல். இறைவனும் தானும் வேறாகாதவாறு நிற்றல். ஒன்று - பரம்பொருள்.

## 102. தீர்ந்த பொருள்

307. ஐயம் திரிபின் றளந்து உத்தியில்தெ ளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார் - தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள்.

### தெளிவுரை

காட்சி முதலியவற்றால் அளந்து, ஐயமும் திரிபும் இல்லாது அறிவால் தெளிந்து, சத்திய ஞானமான கண் விழித்து, ஞான உறக்கம் கொள்பவர், தம் உள்ளத்தில் காண்பதே காட்சியாகும். அந்த ஞான உறக்கத்தில் காணும் கனவினை விழிப்பு நிலையாக அடைவதே முடிந்த பொருளாகும்.

### கருத்து

மெய்ஞ்ஞானத்தை அடைந்து இறைவனுடன் கலந்து நிற்பவரே வீடுபேறு அடைந்தவர்.

### விளக்கம்

ஐயம் - அதுவோ இதுவோ என்று ஒன்றிலும் துணிவு பெறாமை. திரிபு - ஒன்றை மற்றொன்றாக எண்ணுதல். அளந்து - காட்சி முதலியவற்றால் அளந்து. உத்தி - யுக்தி; அறிவு. மெய் யுணர்ச்சிக் கண் - ஞானக் கண். இன்று - 'இன்றி' என்பது திரிந்தது. தூங்குவர் - உறங்குவார்; உலக நுகர்ச்சியை உணராமல் இருப்பவர். தீர்ந்த பொருள் - முடிவான பொருள் சித்தாந்தம்.

*நீதிநெறி மூலமும் தெளிவுரையும் விளக்கமும்*
*முற்றுப் பெற்றன*

## 5. திருவாரூர் நான்மணிமாலை

திருவாரூர் + நான்கு + மணிமாலை. திருவாரூரில் வீற்றிருக்கின்ற தியாகராசர் மீது பாடப்பெற்ற நான்மணிமாலை எனப் பொருள்படும்.

நான்மணிமாலை என்பது தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களுள் ஒன்று. முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் என்ற நான்கு வகைப்பட்ட மணிகளால் ஆன மாலையைப் போன்று வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்ற நான்கு வகைப்பட்ட பாக்களை அந்தாதித் தொடையால் கொண்ட நாற்பது செய்யுட்களைக் கொண்டது.

''வெண்பா கலித்துறை விருத்தம் அகவல்
பின் பேசும் அந்தாதி யினான்பது பெறின்
நான்மணி மாலை யாம்என நவில்வர்''
*(இலக்கண விளக்கப்பாட்டியல் 61)*

''வெண்பா கலித்துறை அகவல் விருத்தம்
நண்பாய் வருவது நான்மணி மாலை''
*(பன்னிரு பாட்டியல் 257)*

''வெள்ளை கலித்துறை அகவல் விருத்தம்
கொள்வது நான்மணி கோத்தஅந் தாதி''
*(பன்னிரு பாட்டியல் 259)*

என்னும் இவை நான்மணி பாடப்பட வேண்டிய முறைபற்றிக் கூறும்.

இந்நூல் வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்ற பாக்களைக் கொண்டு அந்தாதி அமைப்பில் உள்ளது.

## விநாயகரை வணங்குகிறேன்

## காப்பு

### வெண்பா

308. நாடும் கமலேசர் நான்மணிமா லைக்குமிகப்
பாடும் கவிதைநலம் பாலிக்கும் - வீடுஒன்ற
முப்போ தகத்தின் முயல்வோர்க்கு முன்நிற்கும்
கைப்போ தகத்தின் கழல். 1

**தெளிவுரை**

வீடுபேற்றை அடையும் பொருட்டு மூன்று காலங்களிலும் உள்ளத்தில் தியானிப்பவர்க்கு விநாயகப் பெருமானின் கழல் அணிந்த திருவடிகள், உலகம் யாவும் விரும்பும் திருவாரூரில் வீற்றிருக்கும் தியாகராசப் பெருமானின் மீது யான் பாடும் இந் நான்மணிமாலை, சொல் இனிமை, பொருள் இனிமை ஆகியவை பெற்று விளங்க அருள் செய்யும். அதனால் அவற்றை வணங்கு கிறேன்.

**விளக்கம்**

தியாகராசப் பெருமான் மீது யான் பாடும் நான்மணி மாலை என்ற இந்நூல் சொல்லினிமை பொருள்இனிமை பொருந்தி இனிது முற்றுப் பெற விநாயகப் பெருமானின் திருவடிகள் அருள் செய்யும். அத்திருவடிகளை வணங்குகிறேன்.

நாடும் - விரும்பும்; பக்தி செய்யும். கமலேசர் - திருவாரூர்த் தலத்தில் வீற்றிருக்கின்ற இறைவர்; திருநாமம் தியாகராசர். கமலா லயம் - திருவாரூர். கமலை - திருமகள். அவள் இங்குத் தவம்

புரிந்ததால் இப்பெயர். கவிதை - செய்யுள். நலம் - சொல் இனிமை, பொருள் இனிமை.

பாலிக்கும் - நூல் இனிது முடிய அருள் செய்யும். வீடு - முத்தி. ஒன்ற - அடையும் பொருட்டு. முன் நிற்கும் - அருள் செய்யும். கைப் போதகம் - துதிக்கையையுடைய யானை; விநாயகப் பெருமான். அகத்தின் முயல்வோர்க்கு - உள்ளத்தில் நினைப்பவர்க்கு, தியானிப்பவர்க்கு.

முப்போது - மூன்று காலங்களிலும். கழல் - கழல் என்ற அணியை அணிந்த திருவடிகள். (1)

## மதியினின்று என்னைக் காக்க!

### நூல்

### நேரிசை வெண்பா

*(தலைவி கூற்று; தோழி கூற்றுமாம்)*

309. நீர் ஊர்ந்த முந்நீர் நிலவலயம் நீள்கொடிஞ்சித்
தேர் ஊர்ந்த செல்வத் தியாகனே - ஆரூர
வீதிவிடங் காஅடங்கா வேலைவிடம் போலும்மதிப்
பாதிவிடம் காகடைக்கண் பார்த்து. 2

**தெளிவுரை**

நீர் நிறைந்த கடல் சூழ்ந்த பூமியாகிய வட்டம் என்ற பெரிய கொடிஞ்சி என்ற உறுப்பையுடைய தேரில் அமர்ந்து ஊரும் செல்வம் உடைய தியாகப் பெருமானே! வீதி விடங்கப் பெரு மானே! தன் கொடுந்தன்மை குறையப் பெறாத கடலில் தோன்றிய நஞ்சைப் போன்ற அரைச் சந்திரனிடமிருந்து என்னைக் கடைக் கண் பார்த்துக் காத்தருள்வாயாக! என்று தலைவி இறைவனைப் பார்த்து வேண்டினாள். தோழி கூற்றாகவும் கொள்ளலாம்.

**விளக்கம்**

தலைவி கூற்று:- காதல் கொண்ட ஒருத்தி தலைவன் கூடப் பெறாமையால் வருந்துகிறாள். அந்நிலையில் அவளுக்கு நிலவு ஒளி பெருந்துன்பத்தைச் செய்யும். ஆதலால் விடம் போன்ற மதி ஒளியினின்று தன்னைக் காக்க வேண்டும் என்று தலைவி இதில் வீதி விடங்கனை வேண்டுகிறாள்.

தோழி கூற்று:- இதனைத் தோழி கூற்றாகக் கொள்ளின் தலைவியைச் சந்திர ஒளியினின்றும் காக்க வேண்டும் என வீதிவிடங்கனை வேண்டியதாகக் கொள்ள வேண்டும்.

திருவாரூர் தேர், தேர்களுள் சிறந்தது என்பர். 'ஆழித்தேர் வித்தகனை யான் கண்டது ஆரூரே!' என்பது தேவாரம். தேருக்கு இத்தலம் சிறந்ததால் முதலில் 'தேர் ஊர்ந்த செல்வத் தியாகனே' என்றாள் தலைவி.

திருவாரூரில் இறைவன் தேரில் எழுந்தருளும் போது ஓர் அடிக்கு ஆயிரம் பொன் இறைக்கப்படும் என்பது மரபு. ஆதலால் 'செல்வத் தியாகனே' என்றார்.

வீதி விடங்கர் - 'விடங்கர்' என்ற சொல்லுக்கு உளியால் செதுக்கப்படாதவர் என்பது பொருள். இயற்கையாய் அமைந் தவர்; சுயம்பு என்க. திருவாரூர்ப் பதியில் உள்ள உற்சவ மூர்த்தி.

விடங்கர் எழுவர். அவர்கள் பின்வருமாறு:-

1. திருக்காறாயிலில் உள்ள இறைவர் ஆதிவிடங்கர்.

2. திருக்கோளிலியில் வீற்றிருக்கும் இறைவர் அவனி விடங்கர்.

3. திருமறைக் காட்டில் வீற்றிருக்கும் இறைவர் புவனி விடங்கர்.

4. திருவாய்மூர் இறைவர் நீல விடங்கர்.

5. திருநள்ளாற்று இறைவர் நகர விடங்கர்.

6. திருவாரூர் இறைவர் வீதிவிடங்கர்.

7. திருநாகைக் காரோணத்து இறைவர் அழக விடங்கர்.

அடங்கா வேலை விடம் - தன் கொடுமைத் தன்மை குறையப் பெறாத கடலில் தோன்றிய நஞ்சு. மதிப்பாதி - அரைச்சந்திரன். வேலை - கடல்.

காகடைக்கண் பார்த்து - கடைக்கண் பார்த்துக் கா எனக் கூட்டுக. கடைக்கண் பார்த்துக் காப்பாற்ற வேண்டும்.

மதியின் கொடுமையைப் பின் வரும் பாடல் தெளிவு படுத்தும்.

> 'ஊரைச் சுடுமோ உலகந்தனைச் சுடுமோ
> ஆரைச் சுடுமோ அறியேனே - நேரே
> பொருப்பு வட்டமான முலை பூவையரே இந்த
> நெருப்பு வட்டமான நிலா! (2)

## மேருமலை வளைந்ததற்குக் காரணம்

### கட்டளைக் கலித்துறை

310. பார்பெற்ற வல்லிக்கும் பாகீ ரதிக்குமெய்ப் பாதியும்அத்
தார்பெற்ற வேணியும் தந்தார் தியாகர் தடம்புயத்தின்
சீர்பெற்றி லேம்என்று நாணால் வணங்கிச் சிலைஎனவும்
பேர்பெற்ற தால்பொன் மலைகுனித் தார்எம் பிரான் என்பாரே. 3

**தெளிவுரை**

உலகங்களை ஈன்றெடுத்த உமையம்மையாருக்கும் கங்கைக்கும் முறையே மெய்யில் பாதியையும் மாலை சூடப் பெற்ற முடியையும் தியாகப் பெருமான் அளித்தார். எம்பெருமான் மேருமலையை வில்லாக வளைத்தார் என்று கூறுவர். அஃதன்று உண்மை. அப்பெருமானின் பெருந்தோள் அழகைத் தான் பெறவில்லையே என்ற நாணத்தால் வளைந்து பொன் மலை என்ற பெயர் நீங்கிக் கல் (வில்) மலை என்ற பெயரைப் பெற்றது.

**விளக்கம்**

மேருமலை சிவபெருமான் பிணைத்த நாண் கயிற்றால் வளைந்து வில்லாயிற்று. இச் செய்தியைச் சிவபெருமானின் தோள் அழகைத் தான் பெறாததால் நாணம் கொண்டு தலை வளைந்து பொன் என்னும் பெயர் மாறிக் கல் என்னும் பெயரைப் பெற்றது என இப்பாடலில் கூறப்படுகின்றது.

பார் பெற்ற வல்லி - உலகங்களை எல்லாம் பெற்றெடுத்த உமையம்மையார். பாகீரதி - கங்கை. உமையம்மையாருக்குத் தம் உடலில் ஒரு பாதியையும் கங்கைக்குச் சடையையும் தந்தார் சிவபெருமான்.

தார் - முடிமாலை; அது கண்ணி என்ப. வேணி - சடை. தடம் புயத்தின் சீர் - பெருந்தோளின் அழகை. சீர் - அழகு. பெற்றிலேம் - நான் பெறவில்லை. நாணால் - நாணத்தால். வளைந்து - தலை குனிந்து. சிலை - வில்; கல். பொன்மலை - மேருமலை. குனித்தார் - வளைத்தார். சிவபெருமான் திரிபுராதியை வெல்ல மேரு மலையை வில்லாகக் கொண்டார். வாசுகியை நாண் கயிறாகக் கொண்டார் என்பது வரலாறு.

எம் பிரான் - எம் சிவபெருமான். (3)

## நின்பாகம் இது என அறிய இயலாது

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

311. என்பாக நகுதலையோடு எழில்ஆக அணிந்தகம
லேச மற்றுஉன்
தன்பாகம் இடப்பாகத் தலைவிகரு விழிதோய்ந்தும்
தலைவி பாகத்
தன்பாக நின்திரு நோக் கவைதோய்ந்தும் திருநிறம்வேறு
ஆகை யால்அப்
பொன்பாகம் இது எனவும் நின்பாகம் இது எனவும்
புகலொ ணாதே. 4

### தெளிவுரை

எலும்பையும், ஆகத்தையும் (கங்காளத்தையும்) நகு தலையையும், ஓட்டையும் அணிந்த தியாகராசப் பெருமானே! உன் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமையம்மையாரின் கரிய விழியின் பார்வை தோய்ந்ததனாலும், உமையம்மையாரின் பாகத்தை நின் அழகிய நோக்கு தோய்ந்ததனாலும் அழகிய இருவர் நிறமும் வேறுபடுகின்றன. ஆதலால் அந்த உமை யம்மையாரின் பாகம் இது எனவும், நின் பாகம் இது எனவும் கூற இயலாததாக உள்ளது.

### விளக்கம்

உமையம்மையாரின் கருவிழிப் பார்வையின் கரு நிறத்தால் சிவபெருமானின் மேனி கரிய நிறம் உடையதாய் விளங்கியது. சிவபெருமானின் செந்நிறக் கண் பார்வையால் உமையாரின் மேனி செந்நிறமாக விளங்கியது, எனவே எவரது மேனி இது என்று அறிய இயலாத நிலைமை உண்டாயிற்று என இப்பாடல் உணர்த்துகிறது.

இதில், இருவரும் ஒருவரை ஒருவர் நோக்கி இன்பம் அடைந்தனர் என்பதைக் குறித்தார்.

என்பாக நகுதலை யோடு - என்பு + ஆகம் + நகுதலை + ஓடு. என்பு - எலும்பு; சிவபெருமான் எலும்பை அணிந்துள்ளார். ஆகம் - முழு உடல் எலும்பாகிய கங்காளம். நகுதலை - சிரிக்கும் தலை; என்றது தலை ஓடு. ஓடு - பிச்சைப் பாத்திரமான மண்டை ஓடு.

தலைவி - உமையம்மையார். எழிலாக - அழகு பெற. கமலேசர் - தியாகராசர். கமலை + ஈசர் = கமலேசர். கமலை - திருவாரூர்.

இடப்பாகத் தலைவி - இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமை யம்மையார். தலை பாகத்து - தலைவியின் மேனியில். திருநிறம் - மேனியின் அழகிய நிறம்.

அப் பொன் பாகம் - அந்த உமையம்மையாரின் திருமேனிப் பகுதி.

நின் பாகம் என்றது இறைவரின் திருமேனிப்பகுதி. புகல் ஒணாதே - கூற இயலாது. (4)

## அருள் பெற அமைந்த அற்புதம்

### நேரிசையாசிரியப்பா

312. ஒண்கதிர் பரப்பும் செங்கதிர் கடவுள்
வெயில்கண்டு அறியா வீங்கிருள் பிழம்பின்
புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பில்
காவலர்ப் பயந்து பாதபத்து ஒதுங்கிய
5 இருவேறு உருவின் கருவிரல் மந்தி
பொன்நிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை
முன்உறக் காண்டலும் முளைஎயிறு இலங்க
மடித்தலத்து இருத்தி வகிர்ந்து வள் உகிரால்
தொடுத்தபொன் சுளைபல எடுத்துவாய் மடுப்பது
10 மானிட மடங்கல் தூணிடைத் தோன்றி
ஆடகப் பெயரின் அவுணன்மார் பிடந்து
நீடுபைங் குடரின் நிணம்கவர்ந்து உண்டென
இறும்பூது மயக்கும் நறும்பணை மருதத்து
அந்தணர் ஆரூர் எந்தைஎம் பெரும.
15 சிங்கம் சுமந்த செழுமணித் தவிசில்
கங்குலும் பகலும் கலந்து இனிது இருந்தாங்கு
இடம் வலம் பொலிந்த இறைவியும் நீயும்
நடுவண் வைகும் நாகு இளங் குழவியை
ஒருவிரின் ஒருவிர் உள்ளம்நெக்கு உருக
20 இருவிருர் தனித்தனி ஏந்தினிர் தழீஇ
முச்சுடர் குளிர்ப்ப முறைமுறை நோக்கி
உச்சி மோந்துமப் பச்சிளங் குழவி
நாறுசெங் குமுதத் தேற லோடு ஒழுகும்
எழுதாக் கிளவியின் ஏழிசை பழுத்த

25 இழுமென் குரல மழலைத் தீஞ்சொல்
சுவைஅமுது உண்ணும் செவிகளுக்கு ஐயஎன்
பொருளில் புன்மொழி போக்கி
அருள்பெற அமைந்தது ஓர் அற்புதம் உடைத்தே. (5)

**தெளிவுரை**

ஒளியுடைய கதிர்களைப் பரப்பும் செந்நிற ஒளியுடைய கதிரவனின் வெயிலைப் பார்த்து அறியாத மிக்க இருளின் திரட்சி யுடைய மேகம் உறங்குவதற்குக் காரணமான அழகிய குளிர்ச்சி யுடைய சோலை. அந்தச் சோலையில் காவலர்க்கு அஞ்சி மரத்தில் ஒதுங்கிய இரு வேறுபட்ட இயல்புடைய கரிய விரல் பொருந்திய குரங்கானது பொன் போன்ற நிறம் உடைய அழகிய சுளைகளை யுடைய பலாப்பழத்தைத் தன் முன் கண்டது. காணவும் முளை போன்ற பற்கள் விளங்க, அப்பழத்தைப் பறித்துத் தன் மடியில் வைத்துக் கொண்டு கரிய நகத்தால் பிளந்து, பொருந்தியுள்ள பொன்னிறமான சுளைகளை எடுத்து வாயில் இட்டு உண்டது. அத்தோற்றம் நரசிம்மம் தூணிலே தோன்றி இரணியன் என்ற பெயரையுடைய அசுரனின் மார்பைப் பிளந்து நீண்ட பசிய குடரின் நிணத்தைக் கவர்ந்து உண்டாற்போல் வியப்பை உண்டாக்கும். அத்தகைய உண்ணும் இயல்புடைய நல்ல வயல்கள் பொருந்திய மருத நிலம். அங்கு வீற்றிருக்கும் அந்தணரான ஆரூரரான எம் தந்தையான பெரும!

சிங்கம் பொருந்திய செழுமையான மணிகளால் அமைக்கப் பட்ட ஆசனத்தில் இரவும் பகலும் ஒன்றாக இருந்தாற் போல இடப்பக்கத்தும் வலப்பக்கத்தும் வீற்றிருக்கின்ற உமையம்மையும் நீயும்,

உங்களுக்கு இடையே உள்ள மிக்க இளமையுடைய குழந்தையான முருகப் பெருமானை ஒருவரை விட ஒருவர் உள்ளம் மகிழ்ந்து உருகி இருவரும் தனித்தனியாக எடுத்துத் தழுவுவீர். மூன்று கண்களும் குளிர்ச்சி யடையும்படி முறை முறை யாய்ப் பார்த்து, உச்சி மோந்து அப்பச்சிளங்குழந்தையினது நறுமணம் கமழும் முழுமலரின் தேனோடு (வாய் நீருடன்)

வெளிப்படும் எழுதாக்கிளவி''யான வேதம் என்ற ஏழிசை பொருந்திய மென்மையான குரலையுடைய மழலையான இனிய சொல்லின் சுவை அமுதத்தை உண்கின்றீர். இத்தகைய உம் செவிகளுக்கு, ஐயனே, என் சிறந்த பொருள் இல்லாத அற்பச் சொற்களை உள்ளத்தில் ஏற்று அருள் பெறும்படி அமைந்த இந்த உம் நிலை அற்புதம் உடையதாகும்.

**விளக்கம்**

(1-14) குரங்கு பலாப்பழத்தைப் பிளந்து அதன் சுளைகளை உண்பது நரசிம்மமூர்த்தி இரணியன் மார்பைப் பிளந்து சுளைகளை உண்பதைப் போல் விளங்குகிறது. இத்தகைய மருத நிலத்தை உடையது ஆரூர்.

ஒண்கதிர் - ஒளியுடைய கிரணம். செங்கதிர்க் கடவுள் - சிவந்த ஒளிக்கதிரையுடைய கதிரவன். வெயில் கண்டறியா - கதிரவனின் வெயில் உள்ளே நுழைய முடியாத அடர்ந்த மரச்செறிவு என்க. வீங்கிருள் பிழம்பு - மிக்க இருளையுடைய திரட்சி.

புயல் - மேகம். கண்படுக்கும் - உறங்கும். பூந்தண் பொதும்பு - அழகிய குளிர்ந்த சோலை. கதிரவன் ஒளி நுழைய முடியாத பொதும்பு, படுக்கும் பொதும்பு என இயைக்க வேண்டும். பொதும்பு - மரச்செறிவு; சோலை. 'வெயில் நுழைபு அறியாக் குயினுழை பொதும்பர்' என்பது பெரும் பாணாற்றுப் படை. (அடி374)

காவலர்ப் பயந்து - சோலையைக் காவலர் காப்பார் அல்லரோ! அவர்க்குக் குரங்கு அஞ்சி.

இருவேறு உருவின் - குரங்கு மனித இயல்பையும் விலங்கு இயல்பையும் உடையது. ஆதலால் 'இருவேறு உருவின்' என்றார். உரு - இயல்பு. கருவிரல் - கரியவிரல். மந்தி - குரங்கு. பெண் குரங்கு என்ற உரை தவறு. பொன்னிறம் பழுத்த - பொன்நிறம் பொருந்தக் கனிந்த. பூஞ்சுளை வருக்கை - அழகிய சுளைகளை யுடைய பலா.

காண்டலும் - காணவும். முளை - நாணலின் முளை. எயிறு - பல். இலங்க - வெளிப்பட்டுத் தோன்ற. மடித்தலத்து - மடியில். வகிர்ந்து - பிளந்து. வள்உகிர் - கூர்மையான நகம். வாய்மடுப்பது - தின்பது.

மானிட மடங்கல் - நரசிம்ம மூர்த்தி. தூணிடைத் தோன்றி - தூணினின்று வெளிப்பட்டுத் தோன்றி. பிரகலாதன் 'நாராயணன் தூணில் இருப்பான்' என்று தன் தந்தைக்குச் சொல்ல, அதைக் கேட்ட அவனுடைய தந்தை இரணியன் தூணை உதைத்தான். அப்போது தூணினின்று நரசிம்மமூர்த்தி தோன்றினார்.

ஆடகப் பெயரினன் - பொன்னின் பெயரை யுடையவன். 'இரணிய கசிபு' என்ற அசுரன். ஆடகம் - பொன். இரணியம் - பொன். அவுணன் - அசுரன். இடந்து - பிளந்து. நீடுபைங்குடர் - நீண்ட பசிய குடல். இரணியனின் குடல்.

திருமால் இரணியனைத் தன் மடியில் கிடத்திக் கைந் நகத்தால் அவனது உடலைப் பிளந்து உயிரைக் குடித்தார். இச் செய்கை போல் குரங்கு பழத்தினை உண்ணும் செய்கை விளங்கியது.

குரங்குக்கு நரசிம்ம மூர்த்தியும் பலாப்பழத்துக்கு இரணியனும் அதன் உள்ளே இருக்கும் சக்கைக்கு இரணியனின் குடரும் சுளைக்கு நிணமும் உவமைகள்.

உண்டென - உண்டதைப் போல். இறும்பூது மயக்கும் - வியப்பை உண்டாக்கும். நறும்பணை - நல்ல வயல். மருதம் - மருதநிலம். வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம்.

அந்தணர் - தியாகராசர்.

சிங்கம் சுமந்த - சிங்க வடிவம் பொருந்திய. செழுமணித் தவிசு - செழுமையான மணியை உடைய இருக்கை; அரியணை.

கருநிறம் உடைய உமையம்மையும் செந்நிறம் உடைய சிவபெருமானும் ஒன்றாக இருந்த தோற்றம் இரவும் பகலும் இருந்தது போல் விளங்கியது. கலந்தினிது இருத்தல் - இனிதாகச்

சேர்ந்து இருத்தல். இடம் வலம் பொலிந்த - இடப்பக்கத்தில் உமையம்மை உருவும் வலப்பக்கத்தில் இறைவர் உருவும் விளங்குதல்.

நடுவண் - நடுவில்.

நாகிளங்குழவி - மிக்க இளமையுடைய குழந்தையான முருகப்பெருமான்.

ஒருவிரின் - ஒருவரைக் காட்டிலும். இருவிரும் - இறைவனும் இறைவியும் ஆகிய இருவரும். நெக்கு உருக - நெகிழ்ந்து உருக.

ஏந்தினிர் தழீஇ - எடுத்துத் தழுவி.

முச்சுடர் குளிர்ப்ப - மூன்று கண்களும் கண்டு மகிழ்ச்சி அடைய. மூன்று கண்கள் என்பவை சந்திரன், கதிரவன், அக்கினி. இம்மூன்றும் இறைவர்க்குக் கண்கள்.

அப்பச்சிளங்குழவி - முருகப்பெருமான்; மிக இளைய குழந்தை முருகன்.

செங்குமுதத் தேறல் - வாய் நீர்; சிவந்த குமுத மலர் போன்ற. வாயினின்று வடியும் சொள்ளு நீர். தேறல் - தேன்; தேன் போன்ற நீர். எழுதாக் கிளவியின் - வேதத்தைப் போல்; வேதம் எழுதப் படாததாய்ச் செவி வழியாய் வழங்குதலின் எழுதாக் கிளவி எனப் பட்டது. ஏழிசை பழுத்த - ஏழ் இசையும் பொருந்திய. தீஞ்சொல் - குழந்தை முருகனின் இனிய மழலைச் சொல்.

சிவபெருமானும் உமையம்மையும் தனித்தனியே முருகனைக் கையில் எடுத்து உச்சி மோந்து மொழி கேட்டு இன்பம் அடைந்து பாராட்டினர்.

இமும் - ஒலிக் குறிப்பு.

பொருள் இல் புன்மொழி - பொருள் அற்ற புன்மையான சொல். போக்கி - செலுத்தி; கேட்டு. அருள் பெற அமைந்ததோர் அற்புதம் - அருள் பெறும்படி அமைந்த அற்புதம்.

காசிக்கலம்பகத்தில் இக் கருத்தினைக் காணலாம். (செய்.2)

உலகு சூல் கொண்ட தலைவியும் நீயும்
மலைபக எறிந்த மழஇளங் குழவியை
அமுதம் ஊற்றிருக்கும் குமுதவாய்த் தேறல்
வண்துகில் நனைப்ப மடித்தலத் திருத்திக்
கண்களில் பருகிஅக் காமரு குழவி
எழுதாக் கிளவி யின்சுவை பழுத்த
மழலைநா றமிர்தம் வாய்மடுத்து உண்ணச்
செஞ்செவி நிறைத்ததும் அஞ்செவிக்கு அடிகள்என்
புன்மொழிக் கடுக்கொளப் புகட்டினன்
இன்னருள் விழைகுவாய் இறும்பூது உடைத்தே. (5)

## இறைவனுக்கு ஆடைகள் பல

## பகல் இரவு மாலைப் போதுகள்

### நேரிசை வெண்பா

313. தேங்குபுகழ் ஆரூர்த் தியாகர்க்குஎண் திக்கும்ஒளி
வீங்கு பகற்போது வெண்படமாம் - தூங்குஇருள் சூழ்
கங்குல் பொழுது கரும்படமாம் செம்படமாம்
பொங்குற்ற புன்மாலைப் போது. (6)

**தெளிவுரை**

மிகுந்த புகழை உடைய ஆரூரில் கோயில் கொண்டிருக்கும் தியாகப் பெருமானுக்கு எட்டுத் திக்கும் ஒளி மிக்க பகற் பொழுது வெண்மையான ஆடையாகும். மிக்க இருள் உடைய இரவுப் பொழுது கருமையான ஆடையாகும். சிவந்த நிறத்தையுடைய மாலைப் போது செந்நிற ஆடையாகும்.

**விளக்கம்**

சிவபெருமானுக்குத் திசைகள் ஆடைகளாகும். அத்திசைகள் பகலில் வெண்நிறம் அடைந்து வெள்ளைநிற ஆடையாகவும்

இரவில் கருநிறம் அடைந்து கரிய ஆடையாகவும், அந்திப்போதில் செந்நிறம் பெற்றுச் சிவந்த ஆடையாகவும் அமைகின்றன.

வெண்படம் - வெண்மையான ஆடை. புன்மாலை - சிவந்த நிறம் கொண்ட மாலைப் போது. புன்மை - சிவப்பு. இது ஒளியிழந்த மாலை எனவும் பொருள் கொள்ளலாம்.

கங்குல் பொழுது - இரவுப் போது. (6)

## சிவபெருமான் மார்புச் சுவடுகள்

### கட்டளைக் கலித்துறை

314. போது ஒன்றியதண் பொழில்கம லேசர்பொன் மார்பில்எந்தாய்
சூதுஒன்று கொங்கைச் சுவடுஎன்ப ரால்தொல் களிற்று உரிவை
மீதுஒன்று வகண்டு வெங்கோப மாமுகன் வெண்மருப்பால்
ஈதுஒன்று அடுகளிறு என்றுஎதிர் பாய்ந்த இணைச்சுவடே. (7)

#### தெளிவுரை

மலர்கள் பொருந்தியுள்ள குளிர்ந்த சோலையை உடைய கமலேசரது அழகிய மார்பில், எம் தாய் உமையம்மையின் சூதாடு கருவியை ஒத்த கொங்கைகளால் ஏற்பட்ட சுவடுகள் என்று கூறுவர். எம்பெருமான் மேனிமேல் போர்த்தப்பட்டுள்ள யானைத் தோலைக் கண்டு, மிக்க சினத்தை யுடைய யானை முகத்தை யுடைய விநாயகர், 'இது ஓர் யானை' என்று எண்ணி வெண்மை யான கொம்பினால் பாய்ந்து குத்தியதால் ஏற்பட்ட இரண்டு சுவடுகளே ஆகும்.

#### விளக்கம்

சிவபெருமான் மார்பில் உள்ள சுவடுகள் உமையம்மை யாரின் கொங்கைகளால் ஏற்பட்டவை என்று உரைப்பர். உண்மை அதுவன்று. அவர் மீதுள்ள யானைத் தோலைப் பார்த்த விநாயகர், அஃது ஓர் யானை என எண்ணிப் பாய்ந்து தன் கொம்பினால்

குத்தினார். அதனால் ஏற்பட்ட வடுவே அது என்பது இப்பாடலில் கூறப்படுகின்றது.

போது ஒன்றிய - மலர்கள் மலர்ந்துள்ள. தண் பொழில் - குளிர்ந்த சோலை. கமலேசர் - தியாகராயப் பெருமான். பொன் மார்பு - அழகிய மார்பு. எந்தாய் - எம் + தாய்; எம் தாயான உமை யம்மை. சூது ஒன்று கொங்கை - சூதாடு கருவியைப் போன்ற கொங்கை.

தொல்களிற்று உரிவை - பழைய யானையின் தோல். உரிவை - உரிக்கப்பட்ட தோல். ஒன்றுவ கண்டு - பொருந்தி யிருப்பதைப் பார்த்து. வெங்கோப மாமுகன் - கொடிய சினத்தை யுடைய யானை விலங்கின் முகம் உடைய விநாயகர். வெண் மருப்பு - வெண்மையான தந்தம்.

ஈதொன்று அடுகளிறு - இது கொல்லும் இயல்புடைய யானை. இணைச்சுவடு - இரு சுவடுகள்.

தாருகா வனத்து முனிவர் சிவபெருமானை அழித்தற்கு யானையை அனுப்பினர். அதனை இறைவன் கொன்று தோலை உரித்து அணிந்து கொண்டார். அதைப் போன்ற ஒரு யானை வந்து விட்டது என்று விநாயகர் எண்ணிப் பாய்ந்து தன் வெண் கொம்பினால் குத்தினார் என்பதாம். (7)

## கமலாலயம் என்ற பெயர்க் காரணம்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

315. இணங்குகம லாலயமால் இதயத்தில் பொலிந்ததியா
கேசர் அம் பொன்
கணங்குழைமண் மகள் இதய கமலத்தும் பொலிதலின் அக்
கமலம் மான
மணங்கமழ்பங் கயத்தடம் சூழ் கமலைகம லாலயப் பேர்
வாய்த்த தால்மற்று
அணங்கனையார் இதயமும்தம் அருட்கொழுநர் இதயமும் ஒன்று
ஆகும் தானே. (8)

### தெளிவுரை

பொருந்திய நீரை இருப்பிடமாக உடைய திருமால் இதயத்தில் வீற்றிருக்கும் தியாகராசப் பெருமான் தொகுதியான அழகிய பொன்னால் திரண்ட குழை என்ற காதணியையுடைய பூமிதேவியின் உள்ளத் தாமரையிலும் விளங்குதலால் நறுமணம் வீசும் தாமரை நீர் நிலைகள் சூழ்ந்த 'கமலாலயம்' என்ற பெயரை உடையதாய் விளங்கியது. அணங்கு போன்றவர் இதயமும் அன்புடைய கணவர் இதயமும் ஒன்றாய் விளங்குவது இயல்பு அன்றோ!

### விளக்கம்

கமலாலயம் - திருவாரூர். கமலம் + ஆலயம். இப்பெயர் அத்தலத்துக்கு எங்ஙனம் வந்தது? கமலா என்பது திருமகளைக் குறிக்கும். கமலத்தில் வீற்றிருப்பவள் என்பது காரணம். திருமகள் அத்தலத்தில் தவம் செய்தாள். ஆகையால் அத்தலத்துக்குக் கமலாலயம் என்று பெயராயிற்று. இங்ஙனம் இயல்பாய் அமைந்த பெயர்க்கு ஒரு காரணம் இச்செய்யுளில் கூறப்படுகின்றது. திருமாலின் உள்ளக் கமலத்திலும் பூமிதேவியின் உள்ளக் கமலத்திலும் சிவபெருமான் கோயில் கொண்டிருப்பதால் கமலாலயம் எனப் பெயர் வந்தது எனக் கவிஞர் ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறுகிறார்.

கமலம் ஆலயம் மால் - நீரை இருப்பிடமாகக் கொண்ட திருமால். நீர் - பாற்கடல்; ஆகுபெயர்.

அம்பொன் கணங்குழை - அழகிய பொன்னையும் திரண்ட குழை என்ற காதணியையும் (உடைய பூமகள்.) இதற்குத் தன்னுள் பொன்னையும் வெளியில் குழை என்றதற்குத் தளிர் என்று பொருள் கொண்டு மரம் செடி முதலியவற்றையும் உடைய மண்மகள் எனவும் பொருள் கொள்ளலாம்.

மண்மகள் - நிலமகள்; பூமிதேவி. திருமாலுக்கு மனையாளாம் பூமிதேவி.

மண்மகள் இதயக் கமலம் - திருவாரூர்.

அக்கமலம் மான - அந்தத் தாமரையைப் போல.

கற்புடைய மகளிரின் உள்ளக் கருத்தும் அவர்தம் கணவரின் உள்ளக் கருத்தும் ஒத்து விளங்குதலால் திருமாலும் பூமிதேவியும் தங்கள் இதயத்தில் தியாகப் பெருமானை வைத்துள்ளதாகக் கூறினார்.

அணங்கு அனையார் - தெய்வ மகளிரைப் போன்ற கற்புடை மங்கையர்.

பொலிதலின் - விளங்குதலால்; இருப்பதால்.

பங்கயத் தடம் - தாமரைப் பொய்கை.

கமலை - திருவாரூர்.

வாய்த்தலால் - ஆல் - அசை.

கமலம் மான - மான - உவமை உருபு.

கொழுநர் - கணவர்.

தானே - தான், ஏ - அசைகள். (8)

## வடிவம் வாழ்க!

### நேரிசை ஆசிரியப்பா

316. தானமால் களிறு மாநிதிக் குவையும்
ஏனைய பிறவும் ஈகுநர் ஈக
நலம்பாடு இன்றி நாண்துறந்து ஒரீஇ
இலம்பாடு அலைப்ப ஏற்குநர் ஏக
புரவலர் புரத்தலும் இரவலர் இரத்தலும்
இருவேறு இயற்கையும் இவ்வுலகு உடைத்தே
அதாஅன்று
ஒருகா லத்தில் உருவமற்று ஒன்றே
இடப்பால் முப்பத்து இரண்டறம் வளர்ப்ப
வலப்பால் இரத்தல் மாநிலத் தின்றே
விண்தொட நிவந்த வியன்துகில் கொடிகள்

மண்தலம் போழ்ந்து மதியகடு உடைப்ப
வாணிலா அமுதம் வழங்கி அக்கொடிகள்
வேனிலில் பயின்ற வெப்பமது ஆற்றுபு
கொடியார் எத்துணைக் கொடுமை செய்யினும்
மதியார் செய்திடும் உதவியை உணர்த்தும்
பன்மணி மாடப் பொன்மதில் கமலைக்
கடிநகர் வைப்பினில் கண்டேம்
வடிவ மற்றிது வாழிய பெரிதே. (9)

### தெளிவுரை

சிலர், மதம் பொருந்திய பெரிய யானையும் பெருஞ்செல்வக் குவியலும் மற்றச் செல்வங்களும் ஆகியவற்றைக் கொடையாளர் இரவலர்க்கு ஈக, அங்ஙனம் கொடுத்துப் பெறும் நன்மை உண்டாவது இன்றிச் சிலர் நாணத்தைக் கைவிட்டு வறுமை துன்புறுத்தப் பிறரிடம் போய் ஏற்பர். கொடையாளர் வறியவரைக் காத்தலும் வறியவர் இரத்தலும் ஆகியவை உடையது இவ்வுலகம். எனவே இவ்வுலகம் இருவேறு இயல்பைக் கொண்டுள்ளது.

அதுவே அல்லாது,

ஒரே வடிவம் ஒரே காலத்தில் அறம் வளர்ப்பதும் இரப்பதும் இன்று. இடப்பக்கத்தில் வீற்றிருக்கும் உமையம்மை பாகம் முப்பத்திரண்டு அறம் வளர்க்க, வலப்பாகமான இறைவன் பாகம் இரத்தல் இந்தப் பெரியவுலகத்தில் இல்லை.

திருவாரூர் மாளிகைகளின் உச்சியில் கட்டப்பட்ட கொடிகள் வட்ட வடிவமான சந்திரனின் வயிற்றைப் பிளந்து அதன் நடுவிடத்தை உடைக்கவும், அச்சந்திரன் ஒளியுடைய நிலவை அளிக்கின்றது. அளித்து அக்கொடிகள் வெயிலால் அடைந்த வெப்பத்தைப் போக்குகின்றது. இச்செய்கை, கொடியவர் எவ்வளவு தீமையைச் செய்தாலும் அறிவுடையவர் அத்தீயவர்க்கு நன்மை செய்யும் உதவியைப் போல் விளங்குகிறது. பல வகை யான மணிகள் பதித்த மாடத்தையும் பொன் மதிலையும் உடைய திருவாரூர் (காவல் மிக்க) நகரை இவ்வுலகத்தில் யாம் கண்டோம். இத்தகைய வடிவு வாழ்க.

**விளக்கம்**

(1-6) தானமால் களிறு - மதம் பொருந்திய பெரிய யானை. தானம் - மதம். மாநிதி - பெருஞ்செல்வம். ஈகுநர் - தருபவர்; கொடுப்பவர். நலம் பாடு - நன்மை உண்டாதல். நாண் துறந்து - நாண் + துறந்து; நாணத்தைக் கைவிட்டு. ஒரீஇ - நீங்கி. இலம்பாடு - வறுமை. அலைப்ப - வருத்த. ஏற்குநர் - ஏற்றுக் கொள்பவர்; இரப்பவர்.

புரவலர் - காப்பவர்; கொடையாளர்.

இருவேறு - இரண்டு வேறு வகையான.

அதாஅன்று - அங்ஙனம் அல்லாது.

(7-9) உருவம் ஒன்றே ஒரே காலத்தில் அறம் வளர்ப்பதும் இரத்தலும் இன்று. அதாவது உலகத்தில் இல்லை. மற்று - அசை நிலை.

இடப்பால் - உமையம்மையின் பாகம். வலப்பால் - இறைவனின் பாகம்.

இறைவரின் அர்த்த நாரீசுவர வடிவு பற்றி இங்குக் குறிப்பிடப்படுகின்றது. இறைவனின் இடப்பாகம் உமையம்மை யினது; வலப்பாகம் இறைவரது.

மாநிலம் - பெரிய உலகம்.

(10-18) விண்தொட நிவந்த வியன்துகில் கொடிகள் - வானைத் தொடும்படியாய் மிகவும் உயர்ந்த பெரிய துகில் கொடிகள். மண்டலம் - வட்டம். போழ்ந்து - பிளந்து. மதி அகடு உடைப்ப - சந்திரனின் நடுவிடத்தை உடைக்க.

வாள் நிலா அமுதம் - சந்திரனின் ஒளியாகிய அமுதம்.

வேனிலில் பயின்ற - வெயிலால் அல்லது வெப்பத்தால் வருந்திய. வெப்பம் ஆற்றுபு - வெப்பத்தைத் தணித்து. ஆற்றுபு - ஆற்றி; 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கொடியார் - தீயவர். மதியார் - அறிவு உடையவர். உணர்த்தும் - புலப் படுத்தும்.

இவ்விடம்

'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு'

என்ற குறள் ஒப்பு நோக்கத் தக்கது.

பன்மணி - பலவகையான மணிகள். மாடம் - மாளிகை. பொன் மதில் - பொன்னால் ஆன மதில்.

கமலைக் கடிநகர் - திருவாரூர். மணி மாடத்தையும் பொன் மதிலையும் உடைய திருவாரூர் என இயைகின்றது.

கண்டேம் - ஒரே வடிவத்தில் ஒரு பக்கம் அறம் வளர்க்க மற்றொரு பக்கம் இரப்பதைப் பார்த்தோம்.

மற்று - அசைநிலை. இது - இந்த வியக்கத் தக்க இருவேறு இயல்புடைய வடிவம்.

தன் வயிற்றைக் கிழித்து வருத்திய கொடிகளின் கொடுமையை எண்ணாது அமுதம் பொழிந்து அக்கொடிகளின் வெப்பத்தை ஆற்றிய சந்திரனின் செயல் அறிஞர் செயலை ஒத்தது.

வைப்பு - ஊரில், இடத்தில். (9)

## அகத்தில் அடங்காது அவா!

### நேரிசை வெண்பா

### *தலைவி கூற்று*

317. பெருமான் தமிழ்க்கமலைப் பெம்மான்கைம் மானும்
கருமான் உரியதளும் கச்சும் - ஒருமானும்
சங்கத்து அடங்காதும் தார்மார்பும் கண்டக்கால்
அங்கத்து அடங்காது அவா. (10)

**தெளிவுரை**

பெருமையுடைய தமிழ் வழங்கும் திருவாரூரில் வீற்றிருக்கும் தியாகப் பெருமானின் கையில் உள்ள மானும், அவர் அணிந்துள்ள கருமையான யானையின் உரிவையான தோலும் கச்சும், அவரிடம் உள்ள உமையம்மையாரும், குழை என்ற அணியை அணிந்த பெரிய காதும், மாலை அணிந்த மார்பும் ஆகியவற்றைப் பார்த்தால் என் மனத்துள் அடங்காது காதல் எழுகின்றது.

**விளக்கம்**

சிவபெருமானைத் தரிசித்த தலைவியின் கூற்று இது.

தமிழ்க் கமலை - தமிழ் வழங்கும் திருவாரூர். கருமான் - கரிய நிறம் உடைய யானை. உரி அதள் - யானையை உரித்த தோல்.

கைம்மான் - சிவபெருமானின் கையில் உள்ள மான். ஒரு மான் - உமையம்மையார். சங்கம் - குழை; காதணி. தார் - மார்பில் சூடும் மாலை. அவா அங்கத்தில் அடங்காது - உள்ளத்து எழும் காதல் அடங்காது.

பல 'மான்கள்' இச்செய்யுளில் வந்துள்ளன. (10)

## இறைவன் திருப்பெயரை ஓதுக!

### நெஞ்சம் ஓர்க!

#### கட்டளைக் கலித்துறை

318. வாவிஅம் போருகம் சூழ்கம லேசர்புள் வாய்கிழித்த
தூவிஅம் போர்உகந் தோறுநின் றோர்துணைத் தாள் அடைந்த
ஆவிஅம் போர்உகந்து ஆயிரம் கூற்று டன்றாலுமஞ்சேல்
நாஇயம்பு ஒருக நன்நெஞ்ச மேஅவர் நாமங்களே. (11)

**தெளிவுரை**

தாமரை மலர்கள் மலர்ந்துள்ள நீர்நிலைகள் சூழ்ந்துள்ள திருவாரூர்த் தியாகப் பெருமானும் பகாசூரனாகிய பறவையின் வாயைக் கிழித்த திருமாலான மென்மையான சிறகையுடைய அம்பை உடையவரும் ஊழி தோறும் அழிவில்லாது நிற்பவரும் ஆகிய சிவபெருமானின் இரண்டு அடிகளை அடைக்கலமாக அடைந்த உயிரே, இயமன் ஆயிரம் அழகிய போர் பலவற்றை விரும்பிச் செய்தாலும் நீ அஞ்ச வேண்டியதில்லை. நா, அப்பெரு மானின் திருப்பெயரை ஓதுக. நல்ல நெஞ்சம், அவரது திருப் பெயரைத் தியானம் செய்க.

**விளக்கம்**

திருமாலை அம்பாகக் கொண்ட தியாகப் பெருமானின் அடிகளை அடைந்த நெஞ்சே, ஆயிரம் கூற்றுவர் போரிட வந்தாலும் அஞ்சவேண்டா! அவர் திருப்பெயர் நா ஓதுக, உள்ளம் அப்பெயரைத் தியானிக்க.

வாவியம் போருகம் - வாவி + அம் போருகம்; நீர்நிலையில் மலர்ந்துள்ள தாமரை. வாவி - பொய்கை. அம்போருகம் - தாமரை. கமலேசர் - திருவாரூரில் எழுந்தருளியுள்ள தியாகப் பெருமான்.

புள் - பகா சூரன் ஆன பறவை. பகாசூரன் பறவை வடிவு் கொண்டு வந்து கண்ணனான திருமாலை அழிக்க முற்பட்டான். அதன் வாயைக் கிழித்தார் திருமால். தூவி - இறகு. அம்போர் - அம்பை உடையவர். அம்பில் இறகு கட்டப்படும்; அது விரைந்து செல்ல வேண்டும் என்பதற்காக!

தூவியம் பொருகந் தோறும் - தூவி + அம்போர் + உகம் + தோறும் எனப் பிரிக்க.

உகந்தோறும் நின்றோர் - எல்லா ஊழியிலும் அழிவின்றி நின்றவர்; தியாகப் பெருமான்.

துணைத்தாள் - இரு திருவடிகள்.

ஆவி - உயிரே; விளி.

ஆவியம் போருகந் தாயிரம் கூற்று உடன்றாலும் - ஆவி + அம் + போர் + உகந்து + ஆயிரம் + கூற்று + உடன்றாலும்; ஆவியே, அழகிய போரை விரும்பி ஆயிரம் கூற்றுவர் போரிட வந்தாலும் என்பது பொருள். அஞ்சேல் - அஞ்ச வேண்டிய தில்லை. நாவியம் போருக - நா + இயம்பு + ஒருக; நாவானது இறைவர் திருப் பெயரைக் கூறுக. ஒருக - ஓர்க - தியானிக்க. நாமம் - திருப்பெயர். (11)

## வலப்பாகத்தினைக் கங்கை கொண்டாள்!

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

319. நாம வேல்படைக் கடவுளைப் பயந்தருள்
 நங்கைதென் கமலேசர்
வாம பாகத்தைக் கொளவலப்பாக, நீர்
 மங்கைகொண் டனள் போலாம்
தாமநீற்றுஒளி தன்நிறம் காட்டவெண்
 தலை நிரை நுரைகாட்டக்
காமர் பூங்கொடி மடந்தையர் மதர் விழிக்
 கயல்உலா வரலாலே. (12)

### தெளிவுரை

அச்சத்தைத் தரும் வேலாயுதத்தை உடைய முருகப் பெருமானை ஈன்றெடுத்த உமையம்மையார் தெற்கில் உள்ள தியாகேசரின் மேனியில் இடப்பாகத்தைக் கைக் கொள்ள, நீர் மங்கையான கங்கையானவள் வலப்பக்கம் கொண்டது போல், விளங்கும். எதனால் எனின் விளக்கத்தை உடைய விபூதியின் ஒளி கங்கையின் வெண்நிறத்தைக் காட்ட இறைவன் அணிந்துள்ள தசையை இழந்த தலைகளின் வரிசை நுரையாக விளங்கிட, அழகிய பூங்கொடி போன்ற மங்கையரின் மதர்த்த விழியான கயல் மீன் உலா வரலால் என்க.

**விளக்கம்**

உமையம்மையார் சிவபெருமானின் இடப்பாகத்தைக் கைக் கொண்டார். அங்ஙனமாக வலப்பக்கத்தைக் கங்கை கொண்டாள் எனலாம். யாங்ஙனம் எனின் இறைவர் திருநீறு அணிந்துள்ளார். அது கங்கையின் வெண்ணிறம் உடையதாய் விளங்குகிறது. இறைவர் அணிந்துள்ள தலைகள் வெண்ணிறமாய் விளங்கு கின்றன. மங்கையர் கண்களும் அப்பாகத்தை மொய்க்கின்றன. ஆதலால் கங்கை வலப்பாகத்தைக் கொண்டது போல் இறைவன் திருமேனி விளங்குகிறது.

கங்கை வெண்ணிறம் உடையவள். தன் நிறம் - கங்கையின் வெண்ணிறம்.

நாமவேற்படை - அச்சத்தைத் தரும் வேலாகிய படை. கடவுள் - முருகப் பெருமான். நங்கை - உமையம்மையார். பயந் தருள் - ஈன்றெடுத்த. கமலேசர் - தியாகப் பெருமான். வாம பாகம் - இடப்பாகம். நீர் மங்கை - கங்கை. தாமம் - விளக்கம். நீற்றொளி - திருநீற்றின் ஒளி. தன்னிறம் - கங்கையின் வெண்ணிறம். வெண்தலை நிரை - இறைவர் உடலில் அணிந்த வெண்மையான தலைகளின் வரிசை. நுரை - நீரில் தோன்றும் நுரை.

நீரில் தோன்றும் நுரை போல் தலைகள் விளங்கின. காமர் பூங்கொடி மடந்தையர் - அழகிய பூங்கொடி போன்ற மங்கையர். மதர் விழி - செருக்குடைய கண்கள். விழிக்கயல் - கண்ணாகிய கயல்மீன். உலா வரலால் - உலாவுதலால்; பார்த்தலால். மங்கையர் எப்போதும் சிவபெருமானின் மேனியையே உற்று நோக்குதல் 'விழி உலாவரல்' என்றார். விபூதியும் வெண் மகளிர் பார்வையும் இறைவரின் பாகமாகிய வலப்பக்கத்துக்கு உரியன. ஆதலால் அப்பாகத்தை மட்டும் கங்கை கைக் கொண்டது போல் விளங்குவதாக உரைத்தார். (12)

## கடைக்கண்ணால் கண்டருளுக!

### நேரிசை ஆசிரியப்பா

320. வருமுலை சுமந்து வாங்கிய நுசுப்பில்
புரிகுழல் மடந்தையர் பொன்நெடு மாடத்து
ஒண்கதிர் வயிரமும் தண்கதிர் நீலமும்
சேயொளி பரப்பும் செம்மணிக் குழாமும்
5 மாயிருள் துரந்து மழகதிர் எறிப்பச்
சுரநதி முதல வரநதி மூன்றும்
திருவ நிண் மறுகில் செல்வது கடுப்ப
ஒள்ஒளி ததும்பும் ஒண்தமிழ்க் கமலைத்
தெள்அமுது உறைக்கும் திங்கள்அம் கண்ணித்
10 தீநிறக் கடவுள்நின் கால்முறை வணங்குதும்
கூற்றுஎனப் பெயரிய கொடுந்தொழில் உளையன்
ஊற்றம் இல் யாக்கை உவர்நீர்க் கேணிப்
புலத்தலை உயிர்மீன் அலைத்தனன் பிடிப்ப
ஐவளி பித்தென அமைத்துவைத் திருந்த
15 முத்தலைத் தூண்டில் தூண்டி அத்தலை
வாழ்நாள் மிதப்பு நோக்கித் தாழாது
அயிறலைத் தொடங்கி எயிறு அலைத் திருத்தலின்
தள்ளா முயற்சி தவறு பட்டு ஒழிந்தென
வெள்குறீஇ மற்றவன் விம்மிதன் ஆக
20 அருட் பெருங் கடலின் அவ் வாருயிர் மீனம்
கருக்குழி கழியப் பாய்ந்து தெரிப்பரும்
பரமா னந்தத் திரையொடும் உலாவி
எய்தரும் பெருமிதம் எய்த
ஐயநின் கடைக்கண் அருளுதி எனவே.

**தெளிவுரை**

திருவாரூரில், வளர்ந்து வரும் கொங்கைகளையும் உள் வாங்கிய இடையையும் சுருண்ட கூந்தலையும் உடைய மங்கையர் பொன் மாளிகைகளில் பதித்த ஒளிக் கதிரையுடைய வயிரமும்,

குளிர்ந்த கதிர்களை உடைய நீல மணியும் சிவந்த ஒளியையுடைய மாணிக்கங்களும் மிக்க இருளைப் போக்க இளங்கதிர்களை வீச, வெண்ணிறம் உடைய தேவ கங்கையாறும், நீல நிறம் உடைய யமுனை ஆறும், செந்நிறம் உடைய வாணியாறும் ஆகிய மூன்றும் செல்வத்தையுடைய நீண்ட தெருக்களில் திரிவேணி சங்கமம் செல்வது போல மிக்க ஒளியுடையதாய் விளங்கும். இத்தகைய ஒண்தமிழ் வழங்கும் திருவாரூர். அப்பதியில் வீற்றிருக்கும் தெள்ளிய அமுதத்தை வழங்கும் பிறைச் சந்திரனைச் சூடிய தீயின் நிறம் உடைய இறைவ, நின் திருவடிகளை முறைப்படி வணங்குவோம்.

கூற்றுவன் என்ற பெயரையுடைய கொடிய செயல் உடைய வலைஞன் வன்மையில்லாத உடலாகிய உப்புத்தன்மையுடைய உப்புநீர்ப் பொய்கையில் புலமாகிய தலையையுடைய உயிர் என்ற மீனை வருத்திப் பிடிக்கும் பொருட்டு, சிலேட்டுமம், வாயு, பித்தம் ஆகிய மூன்று முட்களையுடைய தூண்டிலை இட்ட போது, வாழ்நாள் என்ற தூண்டிலின் கண் கட்டப்பட்ட மிதப்பைப் பார்த்துக் காலம் தாழ்க்காமல் உண்ணத் தொடங்கப் பல்லைக் கடித்துக் கொண்டு ஆயத்தனாக இருத்தலால், தள்ளாத முயற்சி தவறிவிட்டது என்று வெட்கம் கொண்டு (அவ்வலைஞன்) இதைப் போன்று எல்லா மீன்களும் இல்லையே என்று வியப்படைய, நின் அருளாகிய நல்ல நீரையுடைய பெரிய கடலில் அந்த அரிய உயிராகிய மீன் கருப்பக்குழி அழிய இனி ஏற்படாமல் நீங்க தெரிவதற்கு அரிய நின் பரமானந்தக் கடல் அலையில் உலாவி அடைவதற்கு அருமையான வீரத்தை அடைந்து மகிழ, ஐய, நின் கடைக்கண் பார்வையால் பார்த்தருளுவாயாக!

**விளக்கம்**

(1-10) வருமுலை - தோன்றி வளரும் முலை. வாங்கிய நுசும்பு - உள் அடங்கிய இடை. புரிகுழல் மடந்தையர் - சுருண்ட கூந்தலை யுடைய மங்கையர்.

மடந்தையர் வாழும் மாளிகைகள் அவற்றில் வயிரம், நீலம், மாணிக்கம் ஆகியவை பதிக்கப் பெற்றுள்ளன. அவற்றினின்று

வெண்மை, நீலம், செந்நிறம் ஆகிய ஒளிகள் வெளிப்படுகின்றன. அவ்வொளிகள் தெருவில் உள்ள இருளைப் போக்குகின்றன. அம் மூன்று ஒளிகளும் பாய்வது வெண்மை நிறமுடைய கங்கை, நீலநிறம் கொண்ட யமுனை, செம்மை நிறமுடைய வாணி என்ற மூன்று ஆறுகளும் கலந்து ஓடுவது போல் விளங்குகிறது என்பதாம்.

பொன்நெடுமாடம் - பொன்னால் ஆன உயர்ந்த மாளிகை. ஒண்கதிர் வயிரம் - ஒள்ளிய வெண்மையான கதிரை உடைய வயிரம். தண்கதிர் நீலம் - குளிர்ந்த கதிரையுடைய நீலமணி. சேயொளி - சிவந்த ஒளி. செம்மணிக்குழாம் - சிவந்த மாணிக் கங்கள். மாயிருள் - மிகக் கரிய இருள். துரந்து - விலக்கிய. மழகதிர் - இளங்கதிர். சுரநதி - கங்கை. வருநதி - மேலான ஆறு. அவை யமுனை, வாணி.

கங்கை, யமுனை, வாணி என்ற மூன்றும் கலக்கும் இடம் திரிவேணிசங்கமம். அது போல கங்கை முதலிய ஆறுகள் விளங்கின.

இவ்வாசிரியர் அத்திரிவேணி சங்கமத்தில் பல முறை நீராடியவர் என்பது இங்குக் குறிக்கத் தக்கது.

திருவநீண் மறுகு - திருவம் + நீள் + மறுகு; செல்வம் பொருந்திய நீண்ட தெரு.

கடுப்ப - போல.

ஒள்ளொளி - மிக்க ஒளி. ததும்பும் - மிக்கு விளங்கும். ஒண்டமிழ்க்கலை - ஒள்ளிய தமிழ் வழங்கும் திருவாரூர்.

தெள்ளமுது - தெளிவான அமுதம். உறைக்கும் - துளிக்கும். திங்களங் கண்ணி - இளம் பிறைச் சந்திரனான முடி மாலை. கண்ணி - தலையில் அணியும் மாலை.

'மாதர்ப் பிறைக்கண்ணியானை' என்பது அப்பர் தேவாரம்.

தீநிறக் கடவுள் - தீயைப் போல் செந்நிறத்தையுடைய சிவ பெருமான். கான் முறை வணங்குதும் - கால்களை முறைப்படி வணங்குவோம்

(11-24) கூற்று எனப் பெயரிய - கூற்றுவன் என்ற பெயரை யுடைய. கொடுந்தொழில் நுளையன் - கொடிய தொழிலையுடைய வலைஞன். கொடுந்தொழிலாவது உயிரை உடலினின்று நீக்கும் செயல்; மீனைப் பிடிக்கும் கொடிய செயல். நுளையன் - வலைஞன்.

ஊற்றம் இல் யாக்கை - வன்மை இல்லாத உடல். யாக்கை உவர்நீர்க் கேணி - உடலாகிய உப்புத் தன்மையுடைய நீரையுடைய கேணி. கேணி - நீர் நிலை. யாக்கை பிறர்க்குப் பயன்படாது. ஆதலால் உவர்க்கேணி யாக்கினர்.

புலத்தலை உயிர்மீன் - புலம் + தலை + உயிர் + மீன் அறிவாகிய தலையையுடைய உயிராகிய மீன்.

அலைத்தனன் - வருத்தி; முற்றெச்சம். பிடிப்ப - பிடித்தற் பொருட்டு.

ஐவளி பித்து - ஐ - சிலேட்டுமம். வளி - வாயு; பித்து - பித்தம். இந்த மூன்றும் உயிராகிய மீனைப் பிடிக்க உதவும் தூண்டிலில் உள்ள மூன்று முட்கள். இம்மூன்றும் நிலை மாறின் உயிர் நீங்கும் என மருத்துவ நூல் கூறும்.

> 'மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
> வளிமுதலா எண்ணிய மூன்று.' *(திருக்குறள் - 941)*

அத்தலை - அவ்விடத்தில். வாழ்நாளாகிய மிதப்பு. மிதப்பு - தூண்டில் கயிற்றில் கட்டப்படும் நெட்டியான தக்கை. மீன், தூண்டில் முள்ளைப் பற்றும் போது இத்தக்கை அசைந்து கொடுக்கும். அதனால் வலைஞர் தூண்டிலை இழுத்து மீனைப் பிடித்துக் கொள்வர். அயிறலை - உண்பதை. தொடங்கி - தொடக்கம் செய்வது. எயிறு அலைத்து இருத்தலின் - பல்லைக் கடித்துக் கொண்டு இருத்தலால்.

மீனைப் பற்றும் முயற்சி தவறிப் போனது என்பதைத் 'தள்ளா முயற்சி தவறுபட்டு ஒழிந்தென' என்ற தொடர் விளக்குகிறது. ஒழிந்தென - 'ஒழிந்தது என' என்பதன் விகாரம். வெள்குறீஇ -

வெள்கு + உறீஇ; தான் மீனைப் பற்ற இயலாது போனதால் வலைஞன் வெட்கப்பட்டு. விம்மிதன் - வியப்படைந்தவனாய். வியப்பு. இம்மீன் மற்ற மீன்களைப் போல இல்லையே என்று வியத்தல்.

அருட்பெருங்கடலின் - இறைவன் அருளாகிய பெரிய கடல். உயிர் மீனம் - உயிர் என்ற மீன். கருக் குழி - கருப்பக் குழி ஒழிய; பிறவி நீங்க; பரமானந்தத் திரையொடு - பரமானந்தமாகிய அலையில்; பேரின்பமாகிய கடல் அலையில்.

எய்தரும் - எய்த + அரும். அடைவதற்கு அரிய. பெருமிதம் - வீரம்; பெருமை. கடைக்கண் அருளாதி - கடைக்கண்ணால் பார்த்தருள்வாய். கடைக்கண்ணால் பார்த்து அருள்க எனத் தியாகரின் திருவடியை வணங்குவோம் என இயைகிறது.

கூற்றுவனான எமன் தன் தூண்டில் கொண்டு பிடிக்க வரும் போது அவன் முயற்சி தவறி ஆச்சரியப்படும்படி, யான் பேரின்பக் கடலில் திளைக்குமாறு கடைக்கண் பார்த்தருள்வாய் என்க.

இயமன் வலைஞனாக - மீன் பிடிப்பவனாக உருவகம் செய்யப்பட்டுள்ளான். (13)

## இறைவர் மண் சுமந்ததற்கு இரங்கல்

### நேரிசை வெண்பா

321. என்பணிந்த தென்கமலை ஈசனார் பூங்கோயில்
முன்பணிந்த தெய்வ முனிவோர்கள் - அன்பு என்னாம்
புண்சுமந்தோம் நந்தி புடைத்தென்னார் புண்ணியனார்
மண்சுமந்தார் என்றுஉருகு வார். (14)

**தெளிவுரை**

எலும்பை மாலையாக அணிந்து தெற்குத் திக்கில் உள்ள திருவாரூர்த் தியாகரின் பூங்கோயில் முன் வணங்கிய தெய்வத் தன்மையுடைய முனிவர்கள் தாம் நந்தியால் அடிக்கப்பட்டதற்காக

வருந்தாது, இறைவர் 'வந்தி' என்ற கிழவிக்காக மண் சுமந்து பாண்டியனிடம் அடிபட்டார் என்பதை நினைத்து மனம் உருகுவர். அவர்களின் அன்பு இருந்தவாறு என்னே!

**விளக்கம்**

என்பணிந்த - என்பு + அணிந்த. என்பு - எலும்பு. தென் கமலை - தெற்கில் உள்ள திருவாரூர். பூங்கோயில் - திருவாரூர்க் கோயிலின் பெயர்.

இறைவனைப் பார்க்க முனிவர் நெருங்கி உள்ளே செல்ல முற்பட்ட போது நந்தி தேவர் பிரம்பால் அடித்தார். அவ்வடியை அவர்கள் பொருட்படுத்தவில்லை தாம் பட்ட பிரம்படி அவர்களுக்கு முன்னம் இறைவன் பட்ட பிரம்படியையும் அதற்குக் காரணமான மண் சுமந்த அருள் விளையாட்டையும் எண்ணி உருகும்படி செய்தது.

'புண் சுமந்தோ நந்தி புடைத்து' என்பதை 'நந்தி புடைத்துப் புண் சுமந்தோம்' என மாற்றுக.

புண்ணியனார் - இறைவர்.

மண் சுமந்தார் - வந்தி என்ற கிழவியின் தரப்பட்ட கரை அடைக்கும் பங்கை அடைக்கும் பொருட்டு இறைவர் மண் சுமந்தார்.

உருகுவார் - வருந்துவார். (14)

## தியாகர் என்ற பெயர்க் காரணம்

### கட்டளைக் கலித்துறை

322. வரந்தந் தருள வரதம்வைத் தால்என் வரதம்இடக்
கரம்தந்த தால்இவர் கைஅதுஅன் றேபலி காதலித்துச்
சிரம்தந்த செங்கைக் கமலேசர் நாமம் தியாகர்என்பது
அரம் தந்த வாள்விழி யாள்தந்த தாங்கொல் அறம் வளர்த்தே. (15)

### தெளிவுரை

வரத்தை அளிக்க வரதம் வைத்தால் என்ன? இவருக்கு அதில் என்ன பெருமை? இவர் கை இதுவன்றே? இறைவர் பிச்சையை ஏற்க விரும்பித் தலையோட்டையுடைய சிவந்த கையையுடைய கமலேசர் தியாகர் என்ற பெயர் அமைந்தது, அரத்தால் அராவிக் கூர்மை செய்யப்பட்ட ஒளியுடைய விழி யுடைய உமையம்மையார் அறம் வளர்த்தமையால் அப்பெயர் ஏற்பட்டதாகும்.

### விளக்கம்

வரதம் வைத்தால் என் - வரதம் வைத்தால் இவருக்கு என்ன பெருமை. இவர் கை அது அன்று என்க. வரதம் - வரம் அளிப் பதற்காக அமைந்துள்ள கையமைப்பு. பலி - பிச்சை. இவரது கை பலிக்காகக் கபாலத்தையுடைய கைதான்.

அரம் தந்த வாள் விழியாள் - அரத்தால் அராவிக் கூர்மை செய்யப்பட்ட ஒளியுடைய வாள் போன்ற கண்ணையுடைய உமையம்மை. கொல் - அசைநிலை. உமையம்மையார் அறம் வளர்த்தார். அச்சார்பு பற்றி இறைவர்க்குத் தியாகர் என்ற பெயர் ஏற்பட்டது என்பது கருத்து. (15)

## கொள்ளுவதும் தள்ளுவதும்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

323. வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிர
மாலை யாகக்
கொள்ளுவதும் மலர்மடந்தை கொழுநர்தலை கிண்கிணியாக்
கோத்துச் சாத்த
உள்ளுவதும் ஒழிவதுமற் றொழியாயேல் அடிமுடிகள்
உணர்ந்தேம் என்றே
கள்ளம் மொழிவான்புகின்தென் கமலேசர் அவர்க்கு அவையே
கரியும் ஆமே. (16)

**தெளிவுரை**

தியாக! கிண்ணத்தைப் போன்ற கொங்கையையுடைய கலைமகளின் கணவனான பிரமனின் தலையை தலை மாலையாகக் கொள்வதும், திருமகளின் கணவரான திருமாலின் தலையை கிண்கிணியாகக் கோத்து அணிந்து கொள்ள எண்ணுவதும் தள்ளத்தக்கனவாகும். அங்ஙனம் நீ அவற்றைக் கைவிடாயானால், நின் திருமுடியையும், திருவடியையும் யாங்கள் கண்டோம் என்று அவர்கள் கூறப் புகுந்தால் அவை சான்றாக அமைந்து விடும் அன்றோ!

**விளக்கம்**

தியாகர் நான்முகனின் சிரங்களை மாலையாய்க் கோத்துத் திருமுடியில் தலை மாலையாகவும், திருமாலின் தலைகளைத் திருவடியில் கிண்கிணி என்ற அணியாகவும் அணிந்திருப்பதைக் கைவிட வேண்டும். இல்லையானால் அம்முடியை முன் காணாத அவர்கள் முடியையும் அடியையும் கண்டதாகக் கூறுவதற்கு இடமாகி விடும். அங்ஙனம் கூற முடிமாலையாகவும் கிண்கிணி யாகவும் அணிந்தவையே சான்றாய் அமைந்து விடும் என்பதாம். வள்ளம் - கிண்ணம். கலைமடந்தை - நாமகள்; அவளது மகிழ்நர் நான்முகன். சிரமாலை - தலைமாலை. மலர்மடந்தை - செந்தாமரையில் வீற்றிருக்கின்ற திருமகள் அவளது கொழுநர் - திருமால். மகிழ்நர், கொழுநர் - கணவர். கிண்கிணி - காலில் அணியும் அணி. ஒழிவது - ஒழியக்கடவது; நீக்க வேண்டும்; வியங்கோள் வினைமுற்று. உணர்ந்தேம் - கண்டு அறிந்து கொண்டோம்.

இறைவர் சிவபெருமான் தீத்தூணாக உயர்ந்து நின்ற போது நான்முகன் முடியையும் திருமால் திருவடியையும் காண முற்பட்டுத் தோல்வி கண்டனர் என்பது வரலாற்றுக் குறிப்பு. கள்ள மொழி வான் புகின் - பொய் சொல்லப் புகுந்தார். திருவாரூர்த் தியாகர் கிண்கிணிக் காலழகர். மொழிவான் - கூற; வான் ஈற்று வினையெச்சம். தென் கமலேச - தெற்குத் திக்கில் வீற்றிருக்கும் திருவாரூர்த் தியாகப் பெருமானே, விளி.

கரியுமாம் - சான்றாகவும் ஆகும்.

அவை - தலை மாலையாக அணிவதும் கிண்கிணியாக அணிவதும் ஆகிய அவை இரண்டு. (16)

## அருள் செய்யாததற்குக் காரணம்

### நேரிசை ஆசிரியப்பா

324. கருந்தாது கடுத்த பெரும்பணை தாங்கும்
படர்மருப்பு எருமைபைங் குவளை குதட்டி
மடிமடை திறந்து வழிந்தபால் அருவி
கரைபொருது அலைப்பப் பெருகு பூந் தடத்து
5 வெண்தோடு அவிழ்ந்த முண்டகத் தவிசில்
பால் நீர் பிரித்துண் தூவெள் எகினம்
நூல் பெருங் கடலுள் உண்பொருள் தெரித்து
நாற்பயன் கொள்ளும் நாமகள் பொருவும்
மென்பால் மருதத் தண் புனல் கமலைத்
10 தென்பால் மேருவில் திகழ்பூங் கோயில்
மூவர் அகண்ட மூர்த்திஎன்று ஏத்தும்
தேவர் அகண்ட தெய்வ நாயக,
நின்அடித் தொழும்பின் நிலைமையின் றேனும்நின்
தன்னடித் தழும்பர் சார்புபெற்று உய்தலின்
15 சிறியஎன் விழுமம் தீர்ப்பது கடன்என
அறியாய் அல்லை அறிந்துவைத் திருந்தும்
தீரா வஞ்சத் தீப்பிறப்பு அலைப்பச்
சோரா நின்றஎன் துயர்ஒழித்து அருள்கிலை
புறக்கணித் திருந்ததை அன்றே குறித்திடின்
20 கோள்வாய் முனிவர் சாபம்நீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந்து உழலும்அக் கடவுளர்க்கு அல்லதை
பிறவியின் துயர் நினக்கு அறிவு அரிது ஆகலின்
அருளாது ஒழிந்தனை போலும்
கருணையில் பொலிந்த கண்ணுத லோயே. (17)

### தெளிவுரை

இரும்பைப் போன்ற பெரிய பருத்த படர்ந்த கொம்பை யுடைய எருமையானது பசுமையான குவளையைத் தின்று மெல்ல, மடியாகிய மடை திறந்து வழிந்தபால் அருவியால் கரையை மோதி வருத்தும் நீர் பெருகும் பூம் பொய்கை; அதில் உள்ள தாமரையின் வெண்மையான இதழ் மலர்ந்த தாமரையான இருக்கையில் நீரினின்று பாலைப் பிரித்து உண்ணும் தூய்மையான வெண்மை யான அன்னப்பறவை, நூல் ஆகிய கடலில் உள்ள நுட்பமான பொருளை அறிந்து அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு வகையான பயனைக் கொள்ளும் கலைமகளைப் போல் விளங்கும் இத்தகைய இயல்புவாய்ந்த மென்மைத் தன்மையுடைய குளிர்ந்த நீர்ப் பொய்கைகளையுடைய திருவாரூரில் தெற்குப் பக்கத்தில் உள்ள மேருமலையைப் போல் விளங்கும் பூங்கோயில். நான்முகன் முதலிய மூவரும் எங்கும் நிறைந்த திருமேனியை யுடையவர் என்று கூறித் துதிக்கும் தேவர கண்டரே! தெய்வங்களுக்குத் தலைவரே!

நின் திருவடித் தொண்டு செய்வதில் நிலை பெறுவது எனக்கு இல்லை என்றாலும், நின் அடியவரின் சார்பைப் பெற்று நான் உயர்ந்தேன். ஆதலால் என் சிறிய துன்பத்தைத் தீர்ப்பது நின் கடன் என்று நீ அறியாமல் இல்லை. அங்ஙனம் அறிந்திருந்தும் எப்போதும் நீங்காத வஞ்சமான தீய பிறப்பு வருத்த வருந்துகின்ற என் துயரத்தை நீ ஒழித்தருளவில்லை. புறக்கணித்தனை. இதைச் சொல்லப் புகுந்தால், கொள்கையை யுடைய முனிவர் சாபமான கடலில் தோன்றிய பாவத்தின் பயனைக் கொள்ளும் பொருட்டு உடலைச் சுமந்து வருந்தும் அந்த நான்முகன் முதலியோர்க்கு அல்லாது (பிறவி) எடுப்பதன் துயரத்தை உனக்கு எடுத்துக் கூறுதல் அரிது. ஆதலால், கருணையால் சிறந்து விளங்கும் நெற்றிக் கண்ணை உடையவரே அருள் செய்யாது கைவிட்டனை போலும். (இயல்பாகவே கருணையுடன் விளங்கும் கண்களை யுடைய நீ அருளாததற்கு அத்துன்பம் இன்னது என நீ அறியாததே காரணம் போலும்!)

**விளக்கம்**

கருந்தாது - இரும்பு. கடுத்த - ஒத்த. பெரும்பணை - பெரிய பருத்த கொம்பு. படர் மருப்பு - பக்கங்களில் பரவிய கொம்பு.

குவளை குதட்டி - குவளையை மென்று. மடிமடை திறந்து வழிந்தபால் அருவி - மடியாகிய மடை திறந்து பெருகி ஓடும் பாலருவி. பால் நீர்நிலையில் பாய, நீரில் அலை தோன்றிக் கரையை மோதுகின்றது எனப் பாலின் மிகுதியைக் கூறியவாறு. தடம் - நீர்நிலை. வெண்டோடு அவிழ்த்த - வெண்மையான இதழ் மலர்த்திய. முண்டகத் தவிசு - தாமரை இருக்கை. பானீர் பிரித்து - அன்னம் பாலையும் நீரையும் கலந்து வைப்பின் நீரை நீக்கிப் பாலை மட்டும் உண்ணும் இயல்புடையது. ஆதலால் 'பானீர் பிரித்து' என்றார். பானீர் - பால் + நீர். தூவெள் எகினம் - தூய்மை + வெண்மை + எகினம்; தூய வெண்ணிறம் வாய்ந்த அன்னம்.

நூற் பெருங்கடல் - நூலாகிய பெரிய் கடல். நுண் பொருள் தெரித்து - நுட்பமான பொருளை அறிவித்து.

நாற்பயன் - அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பயன்கள்.

நாமகள் - கலைமகள். பொருவும் - ஒக்கும். வெண்டா மரையில் வீற்றிருக்கும் நாமகளைப் போல் தாமரையில் உள்ள அன்னப் பறவை விளங்கும் என்பது கருத்து.

மென்பால் மருதம் - மென்மைத் தன்மையுடையது மருத நிலம். மருதமாவது வயலும் வயல் சார்ந்த இடமும். கமலை - திருவாரூர். தென்பால் மேருவின் திகழ் பூங்கோயில் - தென் திசையில் விளங்கும் மேருமலை போல் விளங்கும் பூங்கோயில். திருவாரூர்க் கோயிலின் பெயர் பூங்கோயில். அகண்ட மூர்த்தி - எங்கும் நிறைந்த திருமேனியை உடைய சிவபெருமான். ஏத்தும் - துதிக்கும்.

தேவரகண்ட - இறைவர் பெயர். தெய்வநாயக - தெய்வங் களின் தலைவ.

அடித்தொழும்பு - அடித்தொண்டு. தொழும்பர் - அடியவர். விழுமம் - துன்பம். கடன் - கடமை. அறிந்து வைத்திருந்தும் - அறிந்திருந்தும்.

தீப்பிறப்பு - கொடிய பிறவி; துன்பம் தரும் பிறவி. அலைப்ப - வருத்த.

சோராநின்ற - தளர்கின்ற.

துயர் ஒழித்து அருள்கிலை - துன்பத்தைப் போக்கினாயில்லை.

குறித்திடின் - குறித்துச் சொல்லப் போனால்; கோள்வாய் - கொள்கை வாய்க்கப் பெற்ற; கொள்கையை உடைய. முனிவர் சாபம் நீர்ப் பிறந்த - முனிவர் இட்ட சாபமாகிய கடலில் தோன்றிய. தீ வாய் வல் வினை - கொடிய தீவினை. தீப்பயன் கொண்டார் - தீய பயனை அனுபவிக்கும் பொருட்டு. உடல் சுமந்து உழலும் - பல பிறவி எடுத்து வருந்தும். அக்கடவுளர் - அந்த நான்முகன் முதலியவர். முனிவர் இட்ட சாபத்தால் நான்முகன் முதலியோர் பலவகையான பிறவிகளை எடுத்து வருந்துகின்றனர் என்பது வரலாறு. பிறவி எடுத்து வருந்தும் அக்கடவுளரே அத்துன்பத்தை அறிவர். நீ அதை அறியாய். அறியாமையால், இயல்பாகவே கருணையுடைய நீ அருளாததற்கு இதுவே காரணம் போலும்! என்றார்.

அறிவரிது - தெரிவித்தற்கு அரியது. கருணையின் பொலிந்த - இயல்பாகவே கருணையுடன் கூடிய. கண்நுதலோய் - நெற்றிக் கண்ணை உடையவரே. (17)

## இருந்தாடுவதன் காரணம்

### நேரிசை வெண்பா

325. கண்ணனார் பொய்ச்சூள் கடைப்பிடித்தோ தென்புலத்தார்
அண்ணலார் அஞ்சுவர் என்று அஞ்சியோ - விண்ணோர்
விருந்தாடும் ஆரூரா! மென்மலர்த்தாள் தூக்காது
இருந்தாடு கின்றவா என். (18)

**தெளிவுரை**

திருமால் கூறிய பொய்ச்சூளை நினைத்தோ அல்லது தென் புலத்தாரின் தலைவனான இயமன் அஞ்சுவர் என்று நினைத்தோ, தேவர் புதுமையை விரும்பும் ஆரூரா, நீ நின் மென்மையான திருவடியைத் தூக்காது (மாற்றாது) இருந்தபடியே ஆடுகின்றாய்! இதன் காரணம் யாது?

**விளக்கம்**

இருந்தாடழகர் என்பது தியாகப் பெருமானின் திருப்பெயர்களுள் ஒன்று.

திருவடி புலப்பட நின்று ஆடின் முன்பு காணாது கண்டேன் எனப் பொய் சொன்ன திருமால் இப்போது கண்டேன் எனக் கூறுவர் என எண்ணியோ, முன்னொரு கால் இயமன் திருவடியால் உதைபட்டவனாதலால் இப்போது தூக்கிய திருவடி கண்டு மீண்டும் உதைக்கும் என்று அஞ்சுவன் என்பது கருதியோ இறைவர் இருந்தாடுகின்றார் என்றார்.

கண்ணனார் - திருமால்; கடைப்பிடித்தோ -. உறுதியாய் எண்ணியோ. தென்புலத்தார் அண்ணலார் - இயமன்.

விண்ணோர் விருந்து ஆடும் - தேவர் புதுமையை அனுபவிக்கும். ஆடுகின்றவா - ஆடுகின்றவாறு என்பதன் கடை குறைந்தது. (18)

## எம்பிரான் ஆடை பீதாம்பரம்

### கட்டளைக் கலித்துறை

326. என் உயிர்க்கு ஒக்கும் இளஞ்சேயோடு
ஏழ்உலகு ஈன்றஅன்னை
மன்உயிர்க்கு ஒக்கும் கமலைப்
பிரான்மணி கண்டம்கண்டு

மின்உயிர்க் கும்புயல் என்றுமென்
கொன்றைபைந் தாதுயிர்க்கப்
பொன்உயிர்க் கொண்கன் பொலன்துகி
லாம்எந்தை பூந்துகிலே. (19)

## தெளிவுரை

என் உயிரைப் போன்ற இளைய முருகப் பெருமானுடன் ஏழு உலகங்களையும் ஈன்ற தாயான உமையம்மையின் உயிரை ஒத்த திருவாரூரின் கண் கோயில் கொண்ட இறைவரின் நீல மணியைப் போன்ற கழுத்தைப் பார்த்து மின்னலை வெளிப் படுத்தும் மேகம் என்று எண்ணிய கொன்றை மரம் பசிய மலர்த் தாதினை உதிர்த்தது. அதனால் சிவபெருமான் ஆடை திருமகளின் கணவனான திருமாலின் பீதாம்பர ஆடை போல் விளங்கியது.

## விளக்கம்

என் உயிர்க்கு ஒத்த இளஞ்சேய் - எனது உயிர் போன்ற இளங்குழந்தையான முருகப் பெருமான். இவ்வாசிரியர் வழிபடுகடவுள் முருகன் ஆதலின் இங்ஙனம் கூறினார்.

ஏழுலகு ஈன்ற அன்னை உமையம்மையார். அன்னை மன் உயிர்க்கு ஒக்கும் - தாயான உமையம்மையாரின் பொருந்திய உயிரைப் போன்ற. கமலைப் பிரான் - திருவாரூர் தியாகராயர்.

மணிகண்டம் - நீல மணி போன்ற கரிய கழுத்து.

'நீல மணி மிடற்று ஒருவன்' என்பது புறம். சிவபெருமானின் கழுத்து கருமையுடையது அதைக் கண்ட கொன்றை மரம் கார் காலம் வந்தது என்று மலர்ந்து தாதை உதிர்த்தது. அத்தாது சிவபெருமான் ஆடை மீது உதிர்ந்து பொன்னிற ஆடையாக்கியது.

உயிர்த்தல் - வெளிப்படுத்தல். பொன் - திருமகள். அவளுடைய உயிர்க் கொண்கன் திருமால். பொன்துகில் - பீதாம்பரம். பொலன் - பொன். எந்தை - எம் தந்தையான சிவ பெருமான். பூந்துகில் - அழகிய ஆடை.

இப்பாடல் திரிபதிசய அணி. (19)

## கிண்கிணிக் காலழகனார்

### எண் சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

327. பூமாதின் இதயகம லத்து வைகும்
 பொலிவானும் அரியணைமேல் புணரி ஈன்ற
மாமாது வழிபடவீற் றிருத்த லானும்
 மறைமுதலும் நடுமுதலும் முடிவின் நின்ற
தாமாதல் தெளிவிப்பார் போலும் நீலத்
 தரங்கநெடுங் கடல் ஞாலம் ஒருங்கு வாய்த்த
கோமாது மனங்குழையக் குழைந்த ஆரூர்க்
 குழகனார் கிண்கிணிக்கால் அழக னாரே. (20)

**தெளிவுரை**

மண்மகளின் உள்ளத் தாமரையான திருவாரூரில் கோயில் கொண்டிருக்கும் இறைவனும் அரியணை மேல் வீற்றிருக்கும் பாற்கடல் ஈன்ற திருமகள் வழிபட வீற்றிருக்கின்றதாலும் வேத முதல்வனான நான்முகனும் மும்மூர்த்திகளில் நடுவில் வைத்துப் போற்றப்படும் திருமாலும் தாமே ஆகும் என்பதைப் புலப் படுத்துவார் போல் கரிய அலைகள் பொருந்திய பெருங்கடல் சூழ்ந்த உலகங்களை எல்லாம் ஒருங்கே பெற்ற உமையம்மையார் மனம் குழையும்படி தாம் குழைந்த திருவாரூர்த் தியாகப் பெருமான் கிண்கிணிக் கால் அழகனார் ஆவர்.

**விளக்கம்**

பூமாது - பூமிதேவி. இதய கமலம் - உள்ளத் தாமரை. அரியணை - சிங்காதனம். புணரி - பாற்கடல். மாமாது - திருமகள். வீற்றிருப்பவன் என்றது திருமாலை.

மறை முதல் - வேத முதல்வனான நான்முகன். நடுமுதல் - மும்மூர்த்திகளில் நடுவில் வைத்து எண்ணப்படும் திருமால். நான்முகனும் திருமாலும் தாமே ஆகும் சிவபெருமான். ஒருங்கு வாய்த்த - ஒருங்கே கருவில் பொருந்தப் பெற்ற. கோமாது - உமை யம்மையார். குழகனார் - இளமையுடையவர். கிண்கிணிக் கால் அழகனார் என்பது தியாகப் பெருமானின் திருப் பெயர். (20)

## மறை எனச் செப்பினர்

### நேரிசை ஆசிரியப்பா

328. அழல்அவிர் சோதி முழுவெயில் எறிப்ப
இளநிலவு எறிக்கும் குளிர்மதிக் குழவியும்
வெஞ்சினம் பொதிந்த நஞ்சுஉமிழ் பகுவாய்
வெள்ளைமுள் எயிற்றுப் பிள்ளைவாய் அரவும்
5 தெண்திரை கொழிக்கும் தீம்புனல் கங்கைத்
தண்துறை மருங்கின் தனிவிளை யாட
உடன்வைத்து ஆற்றிய படர்சடைக் கடவுள்
எறுழ்வலித் தறுகண் தெறுசினக் கேழல்
முளைஎயிறு இலங்க முருகுகொப் புளித்துத்
10 தளைஅவிழ் இதழித் தண்தார் மார்ப,
திருவிழி இரண்டிலும் இருசுடர் வழங்கலின்
இரவும்நன் பகலும் ஒருபுடை கிடந்தெனக்
கடம்கலுழ் கரடத் தடங்களிற்று உரிவையும்
மடங்கல்ஈர் உரியும் உடன்கிடந்து அலமர
15 விண்பட நிவந்த திண்பு யாசல
நெட்டிலைக் கமுகின் நெடுங்கயிறு ஆர்த்துக்
கட்டுபொன் ஊசல் கன்னியர் ஆடஅப்
பைங்குலைக் கமுகு பழுக்காய் சிந்த
வெண்கதிர் நித்திலம் வெடித்துகு தோற்றம்
20 கந்தரத்து அழகு கவர்ந்தன இவைஎன
அந்தில் ஆங்கவர் ஆர்த்தனர் அலைப்ப
ஒண் மிடறு உடைந்தாங்கு உதிரம் சிந்தக்
கண்முத்து உகுத்துக் கலுழ்வது கடுக்கும்
தண்டலை உடுத்த ஒண்டமிழ்க் கமலைப்
25 பொற்பதி புரக்கும் அற்புதக் கூத்தநின்
சேவடிக்கு ஒன்றுஇது செப்புவன், கேண்மதி
விலங்கினுள் மிக்கது விண்ணவர் தருஎன
ஒருங்குவைத்து எண்ணுவது ஓர்வழக்கு அன்மையின்
ஒத்த சாதியின் உயர்புமற்று இழிபும்

30 வைத்தனர் அல்லதை வகுத்தனர் யாரே
ஆருயிர்க்கு அமைத்த ஓர் எழு பிறப்பினுள்
முற்படு தேவருள் முதல்வன் என்றெடுத்துக்
கற்பனை கடந்த கடவுள்நின் பழிச்சும்
தொன்முறைக் குலங்கள் முன்னியது யாதுஎனப்
35 பன்முறை தெரிப்பினும் பயன்கொள அரிதால்
தேவரின் ஒருவன்என்று யாவரும் மருளுற
நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்
கூறிய தாகும் ஆகலின்
தேறினர் மறைஎனச் செப்பினர் நன்கே. (21)

**தெளிவுரை**

தீ வண்ணனான சிவபெருமானின் திருமேனி ஒளி முழுமையான வெயிலானது வீசிட, இளைய நிலவு ஒளி வீசும் குளிர்ந்த பிறைச் சந்திரனும் கொடிய சினம் பொருந்திய நஞ்சை வெளிப்படுத்தும் கொடிய பாம்பும் தெளிவான அலைகளை வீசும் இனிய நீரையுடைய கங்கையின் குளிர்ந்த துறையில் விளையாடு மாறு அவற்றை உடன்வைத்த படர்ந்த சடையை யுடைய சிவபெரு மான், மிக்க வன்மையையுடைய பன்றியின் முளைக்கும் பல்லைப் போன்று விளங்கத் தேனை வெளிப்படுத்திக் கட்டவிழுந்து மலரும் கொன்றை மாலையைச் சூடிய மார்பை உடையவனே!

நின் இரண்டு விழிகளிலும் சந்திர சூரியரை வழங்குவதால் இரவும் பகலும் ஓரிடத்தில் இருந்தாற் போல், மதத்தைச் சொரியும் கன்னத்தை யுடைய பெரிய யானையின் தோலும் சிங்கங்களின் பச்சைத் தோலும் ஒன்றாய்க் கிடந்து அலமர, வானம் அளாவ உயர்ந்த வலிய தோள்களை உடையவனே!

நீண்ட இலையையுடைய கமுக மரததின்கண் நீண்ட கயிற்றைக் கட்டிப் பொன் ஊசலை மகளிர் ஆடினர். அப்போது அவர்கள் ஆடியதால் அப்பாக்கு மரத்தினின்று பசுமையான குலை பாக்குக்களை உதிர்த்தன. அவை வெண்மையான ஒளியையுடைய நித்திலம் வெடித்துச் சிந்துவது போன்ற தோற்றம் தந்தன. இவை தம் கழுத்தின் அழகைக் கவர்ந்தன என்று அவர்கள் ஆரவாரம்

செய்தனர். ஒளியுடைய கழுத்து உடைந்து உதிரம் பாய, கண்ணான முத்தை உதிர்த்துக் கண்ணீர் சிந்தி அழுவதைப் போல் விளங்கும். இத்தகைய இயல்புடைய சோலைகள் சூழ்ந்த ஒளியுடைய தமிழ் வழங்கும் திருவாரூர் என்ற அழகிய பதியைக் காக்கும் அற்புதக் கூத்து நிகழ்த்துபவனே!

நின் சிவந்த திருவடிகளுக்கு இஃது ஒன்றைக் கூறுவேன். கேட்டருளுக.

விலங்குகளுள் சிறந்தது தேவரின் கற்பக மரம் என்று ஒன்றாக வைத்து எண்ணுவது ஓர் மரபு ஆகாது. ஆதலால் ஒத்துள்ள சாதியின் உயர்வும் தாழ்வும் கொள்வதே அல்லாது வேறு வகையாய் வைத்து எண்ணுபவர் யார்? அரிய உயிர்களுக்குப் பொருந்திய ஓர் ஏழு பிறவிகளிலும் முதலில் வைத்து எண்ணப் படும் தேவர்களுள் முதல்வன் என்று எடுத்துக் கூறப்படும் கற்பனையைக் கடந்த இறைவ! உன்னைப் புகழ்ந்து பேசும் வேதத் தொகுதிகள் உரைத்தது யாது என்றால் பலமுறை பலவகையாய் எடுத்துச் சொன்னாலும் அதன் பொருளை அறிதல் அரிதாகும். தேவருள் ஒருவன் என்று யாவரும் மயக்கம் கொள்ள நீயே நின் இயல்பை வெளிப்படப் புலப்படுத்தாமல் மறைத்துக் கூறியுள்ளதால் மறை என்று வேதத்தைக் கூறினர்.

**விளக்கம்**

(1-10) அழல் அவிர் சோதி - சிவபெருமானின் திருமேனியின் ஒளி. சடையின் ஒளி எனவும் உரைப்ப.

முழுவெயில் எறிப்ப - முழுமையான ஒளியை வீசிட. மதிக் குழவி - பிறைச் சந்திரன். வெஞ்சினம் - கொடிய கோபம். பொதிந்த - உடைய. நஞ்சு உமிழ் பகுவாய் - விடத்தைக் கக்கும் பிளவுபட்ட வாய். முள் எயிறு - முள் போன்ற பற்கள். பிள்ளை வாள் அரவு - இளைய கொடிய பாம்பு. தெண்டிரை - தெளிவான அலை. தீம்புனல் - இனிய நீர். தண்டுறை - தண்மை + துறை; குளிர்ந்த நீர்த்துறை. மருங்கின் - கரையில் ஒன்றுடன் ஒன்று பகையுடைய சந்திரனையும் பாம்பையும் உடன் வைத்தார் என்க.

மதிக்குழவி 'பிள்ளைவாள் அரவு!' என்றதற்கு ஏற்ப 'விளையாட' என்றார்.

ஆற்றிய - சந்திரனையும், அரவையும் சுமந்த என்க.

படர்சடை - பக்கங்களில் பரவும் சடை. கடவுள் - சிவபெருமான்.

எறுழ்வலி - மிக்க வன்மை. தறுகண் - அஞ்சாமை. தெறுசினம் - பிற உயிரை அழிக்கும் சினம். கேழல் - பன்றி. கேழல் முளை எயிறு இலங்க - பன்றியின் மூங்கில் முளை போன்ற கொம்பு விளங்க. முருகு கொப்புளித்து - தேனைச்சிந்தி. தளை அவிழ் இதழி - முறுக்கு அவிழ்ந்து மலர்ந்த கொன்றை மலர். இதழி - ஆகுபெயராக இதழையுடைய மலரைக் குறித்து நின்றது. தண்தார் மார்ப - குளிர்ந்த மாலையை அணிந்த மார்பை யுடையவனே.

கொன்றை மாலை சிவபெருமானுக்குரியது. தார் - மார்பில் சூடும் மாலை.

இருசுடர் - சூரியன், சந்திரன். சிவபெருமானின் வலப்பக்க இடப்பக்கக் கண்கள் சூரியனும் சந்திரனுமாகும்.

இரவும் நன்பகலும் ஒருபுடை கிடந்தென - இரவும் பகலும் ஓரிடத்தே இருந்தாற் போல; இல்பொருள் உவமை. கிடந்தென - கிடந்தாற் போல. கடம் கலுழ் கரடம் - மதம் பாயும் சுவட்டை உடைய. தடங்களிற்று உரிவை - பெரிய யானையின் உரிக்கப் பட்ட தோல்.

மடங்கல் ஈர் உரியும் - சிங்கத்தின் பச்சைத் தோலும். அலமர - அசைய. இறைவர் யானைத் தோலையும் சிங்கத் தோலையும் போர்த்தவர் என்பதை அறிக.

தேவாரத்தில் 'சிங்கத்துவரி மூடுகதிர்' என வருவது இங்கு ஒப்பிடத் தக்கது.

யானைத் தோலுக்கு இருளும் சிங்கத் தோலுக்குப் பகலும் உவமைகள். விண்பட நிவந்த - வானைத் தொடும்படி உயர்ந்த.

திண் புயாசல - திண்மையான தோள்களாகிய மலையை உடைய வனே. திண்மை + புய + அசல; திண்புயாசல.

நெட்டிலை - நீண்ட இலை. கமுகு - பாக்கு மரம். நெடுங்கயிறு ஆர்த்து - நீண்ட கயிற்றைக் கட்டி. பொன் ஊசல் - அழகிய ஊசல். கன்னியர் - மங்கையர்.

பைங்குலைக் கமுகு - பசிய குலையை யுடைய பாக்கு மரம். பழுக்காய் - பாக்கு.

பாக்கு மரத்தில் நீண்ட கயிற்றைக் கட்டி ஊசல் ஆடுதலால் அப்பாக்கு மரத்தினின்று முத்துக்கள் உதிர்ந்தன. முத்து பிறக்கும் இடங்களுள் ஒன்று பாக்கு மரம். பாக்கு மரம் ஊஞ்சல் ஆடலால் அசைந்து பாக்குகளை உதிர்ப்பது வெண்மையான ஒளியை யுடைய முத்துக்கள் உதிர்வது போல் விளங்கியது என்றார்.

கந்தரத்தழகு - கழுத்தின் அழகு. மகளிர் தம் அழகை பாக்கு மரம் கவர்ந்தன என்று ஆரவாரம் செய்தனர். தற்குறிப் பேற்றம். அந்தில், ஆங்கு - அசைகள். அலைப்ப - வருத்த. பாக்குக் காய்க்கு இரத்தமும் முத்துக்குக் கண்ணீரும் உவமைகள். மகளிர் கழுத்துக்குக் கமுகை உவமையாக்குவர் புலவர். ஒண்மிடறு - ஒளியுடைய கழுத்து. உடைந்து - புண்பட்டு. உதிரம் சிந்த- இரத்தம் ஒழுக. கண்முத்து - கண்ணீராகிய முத்து. கலுழ்வது - வருந்துவது. கடுக்கும் - ஒக்கும்.

பாக்குக் காய்கள் உதிர்வது இரத்தம் சிந்துவது போலவும் நித்திலம் சிந்துவது கண்ணீர் சிந்துவது போலவும் விளங்கும்.

தண்டலை - குளிர்ந்த சோலை. உடுத்த - சூழ்ந்த. ஒண்டமிழ்க்கமலை - ஒளியுடைய தமிழ் வழங்கும் திருவாரூர்.

பொன்பதி - அழகிய நகரை. புரக்கும் - காக்கும்.

அற்புதக் கூத்த - வியப்பைத் தரும் கூத்தினை ஆடுபவனே.

நின் சேவடிக்கு - நின் சிவந்த திருவடிகட்கு. ஒன்றிது - இது ஒன்று என மாறுக.

செப்புவன் - உரைப்பேன். கேண்மதி - கேட்பாயாக.

விண்ணவர் தரு - தேவரின் கற்பக மரம். விலங்கையும் மரத்தையும் ஒன்றாக வைத்துக் கூறுவது வழக்கமன்று. விலங்குக்குப் பிறிதோர் விலங்கையும் மரத்துக்குப் பிறிதோர் மரத்தையுமே உவமையாகக் கூறுதல் மரபு. அங்ஙனமாக விலங்கு களுள் சிறந்தது விண்ணவர் மரம் என ஒப்புக் கூறுவது தகாது என்க.

வழக்கு - மரபு. அன்மையின் - இல்லாமையின்.

ஒத்த சாதியின் உயர்பு மற்றிழிபும், வைத்தனர் அல்லதை வகுத்தனர் யாரே- ஒத்த சாதியர் உள்ளவற்றை ஒப்பிட்டு உயர்வையும் இழிவையும் கூறுவது அன்றி, ஒத்த சாதியர் இல்லாதவற்றை ஒன்றுக்கு ஒன்று உவமையாய் வைத்துக் கூறுபவர் யார்? எவரும் இலர் என்க.

அல்லதை - அல்லது + ஐ; ஐ - சாரியை. வகுத்தனர் - வகைப்படுத்தியவர். ஆருயிர் - அரிய உயிர். எழு பிறப்பு - எழு வகையான பிறவிகள். எழுவகையான பிறவிகளுள் முதன்மை யுடையது தேவ சாதி. ஆதலால் 'முற்படு தேவருள்' என்றார்.

தேவருள் முதல்வ்ன் என்று - தேவர்களுள் மேலானவன் என்று. இவ்வாறு சிவபெருமானை வேதங்கள் கூறும். இறைவன் கற்பனைக்கு அப்பாற்பட்டவன். ஆதலால் 'கற்பனை கடந்த' என்றார். பழிச்சும் - போற்றும். தொன் மறைக் குலங்கள் - பழைய வேதங்களின் தொகுதி.

முன்னியது எனப் பன்முறை தெரிப்பினும் பயன் கொள அரிதால் - தேவர்களுள் சிவபெருமான் மேலானவன் என்று வேதங்கள் கூறும். அவ்வாறு கூறுவதன் நோக்கம் யாது என்று பல முறை வேதங்கள் எடுத்துக் கூறினும் அதன் கருத்தை அறிந்து கொள்வது அரிதாக உள்ளது.

சிவபெருமான் எழுவகைப் பிறவிகளுள் ஒன்றான தெய்வப் பிறப்பை - தேவ பிறப்பைக் கடந்தவனைத் தேவப் பிறப்பில் வைத்து எண்ணுதல் தவறாகும்.

விலங்குகளுள் சிறந்தது கற்பக மரம் எனக் கூறுவது தவறு ஆதல் போல் தெய்வப் பிறப்பைக் கடந்த சிவனைத் தேவருள் சிறந்தவன் எனக் கூறுதல் தவறு எனக் கொள்க.

தேவரின் ஒருவன் என்று யாவரும் மருளுற நீயே நின்னிலை நிகழாது மறைத்துக் கூறியதாகும் - சிவபெருமான் தேவருள் ஒருவன் என்று எல்லாரும் மயங்குமாறு. நீயே நின் உண்மை நிலையை வெளிப்படக் கூறாது மறைத்துக் கூறியதாகும். தேறினர் - அறிவில் சிறந்தவர். மறை எனச் செப்பினர் - மறை என்று கூறியுள்ளனர்.

இறைவன் தேவருள் ஒருவன் என்று கூறுவது தகாது எனவும் அவன் அவருக்கும் அரிய நிலையினன் என்பதும் பொருள். (21)

## விடையே விடையாகும்

### நேரிசை வெண்பா

329. நல்லார் தொழும் கமலை நாதனே நாதன்எனக்
கல்லாதார் சொல்லும் கடாவிற்கு - வெல்லும்
விடையே விடையாக மெய்உணரா உரையுற்று
இடையே மயங்கும் இது என்? (22)

**தெளிவுரை**

நல்லவர் யாவரும் வணங்குகின்ற திருவாரூரில் வீற்றிருக்கின்ற நாதனோ முதல்வன் என்று கல்லாதவர் வினவும் வினாவுக்கு வெற்றி பெறும் சிவபெருமானைத் தாங்கும் காளையான திருமாலே விடையாய் விளங்க உண்மையை உணராதவர் ஐயம் கொண்டு உள்ளத்தில் மயக்கம் கொள்வது இது ஏன்?

**விளக்கம்**

• சிலர் திருமாலுக்கு முதன்மை கற்பித்துச் சிவபெருமானின் முதன்மைத் தன்மையில் ஐயம் கொண்டு வினவுவாரைக் கல்லா

தார் என்றார். அங்ஙனம் வினவுவார்க்கு விடை விடையாகும் என்றார். திருமால் காளையாக - விடையாக - சிவபெருமானைச் சுமக்கின்றார். ஆதலின் யார் முதன்மையுடையார் என்பதில் ஐயம் கொள்ள வேண்டியதில்லை. சிவபெருமானைத் திருமால் தாங்கும் செயலால் சிவபெருமானுக்குத் திருமால் அடங்கியவர் என்பதும் அதனால் சிவபெருமானே முதல்வன் என்பதும் போதரும். ஆதலால் விடையே விடை என்றார். விடை முதலில் உள்ளது திருமால். இரண்டாவது பதில்.

நிலை இதுவாக யார் முதல்வர் என்பதில் ஐயம் கொள்வது ஏன்? (22)

## பொதுவில் நிற்கும் ஆரூரில் வைகும்

### கட்டளைக் கலித்துறை

330. இதுவே பொருள்என்று எவர்எவர் கூறினும் ஏற்பதுஎது
அதுவே பொருள்என்று அறிந்துகொண்டு ஏனைப் பொருள் எவர்க்கும்
பொதுவேஎன் றாலும் பொருந்து மெல் லோர்க்கும் பொதுவினிற்கும்
மதுவே மலர்ப்பொழில் ஆரூரினும் வைகும் வைகலுமே. (23)

### தெளிவுரை

இதுவே பரம் பொருள் என்று பலவேறு சமயத்தார் ஏற்றுக் கொள்ளும் பொருள் எது? அதுவே பரம் பொருள் என்று நான் அறிந்து கொண்டேன். அப் பொருள் எல்லார்க்கும் பொதுவே யாகும். (பொதுப் பொருளே ஆகும்) எனினும் பொருந்தும் எல்லார்க்கும் சபையில் நிற்கும். (பொதுவான இடத்தில் நிற்கும்) கள் ஒழுகும் மலர்களை யுடைய சோலை சூழ்ந்த ஆரூரிலும் (யாருடைய ஊரிலும்) தங்கவும் தங்கும்.

### விளக்கம்

இதுவே பொருள் - இம் மூர்த்தியே பரம்பொருள்; மேலான இறைவன். எவர்எவர் - பலசமயத்தார். ஏற்பது - அவற்றை ஏற்றுக்

கொள்ளும் பொருள். பொதுவே - பொதுப் பொருளே. பொதுவில் நிற்கும் - சபையில் நிற்கும். (பொதுவான இடத்தில் நிற்கும்) ஆரூரினும் வைகும் - திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும்; (யாருடைய ஊரிலும் தங்கும்)

மது வேய் மலர்ப்பொழில் - தேன் பொருந்தியுள்ள பூஞ்சோலை. வைகும் - தங்கும். (23)

## தியாகர் என்பது இவர்க்கே தகும்

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

331. வையம் முழுதும் உழுது உண்ண
வல்லாற்கு அளித்து நவநிதியும்
கையில் ஒருவற்கு அளித்துஎமக்கே
கதிவீடு அளித்தோர் கன்னிகைக்கு
மெய்யில் ஒருகூறு அளித்தனரால்
விமலர் கமலைத் தியாகர் என்பது
ஐயர் இவர்க்கே தகும்முகமன்
அன்று புகழும் அன்றாமே. (24)

**தெளிவுரை**

உலகம் முழுவதையும் உழுது உண்ணவல்ல வல்லமையுடைய திருமாலுக்கு அளித்து, குபேரனுக்கு ஒன்பது வகையான செல்வங்களையும் கையில் அளித்து, எங்களுக்குக் கதியாக வீடுபேற்றை அளித்து, ஒப்பற்ற மங்கையான உமை யம்மைக்குத் தம் உடலில் ஒரு பகுதியை அளித்தார். ஆதலால் இங்ஙனம் அளித்த குற்றம் அற்ற இறைவரைத் திருவாரூர்த் தியாகர் என்பது தலைவரான இவர்க்கே தக்கதாகும். இவ்வாறு கூறுவது உபசார வார்த்தை அன்று; புகழ்ச்சியும் ஆகாது.

**விளக்கம்**

சிவபெருமான் நிலம், நிதி, வீடு, உடம்பில் ஒரு கூறு ஆகியவற்றை அளித்தவர் ஆதலால் இவரையே 'தியாகர்' எனக்

கூறுவது பொருத்தமாகும். தியாகர் - கொடையாளி; தனக்குள்ள வற்றையும் பிறர்க்கு அளிப்பவர்.

வையம் முழுதும் - திருமால் வராக அவதாரத்தில் நிலம் முழுவதையும் உழுது கண்ணனாக அவதரித்த போது திருவயிற்றில் பூமியை அடக்கினார். ஆகையால் திருமாலை உழுது உண்ண வல்லான் என்றார். உழுதது வராக அவதாரத்தில்; உண்டது கண்ண அவதாரத்தில்.

உழவுத் தொழில் செய்து அதன் விளைவு கொண்டு உண்பான் என்பது பொருள். அத்தகையவனுக்கு நிலம் பயன் படும்; ஆதலால் வையம் முழுதும் அளித்ததாகக் கூறினார். திருமாலுக்கு வையத்தை அளித்தலாவது அவர் மண்மகளை மனைவியாகப் பெறச் செய்தது.

ஒருவற்கு - குபேரனுக்கு. குபேரன் செல்வத்துக்குத் தலைவன் அவனுக்கு நவநிதி கொடுத்தார் என்றது நிதிக் கிழவனாய் அவனை நியமித்தது. நவநிதி - ஒன்பது வகையான செல்வம். நவநிதியாவன - 1. கச்சப நிதி. 2. கற்ப நிதி. 3. சங்க நிதி. 4. பதுமநிதி. 5. நந்த நிதி. 6. நீல நிதி. 7. மகா நிதி. 8. மகாபதும நிதி. 9. முகுந்த நிதி. ஓர் கன்னிகை - உமையம்மையார். மெய்யில் ஒரு கூறு - தம் உடலில் ஒரு பகுதி; இடப்பகுதி. விமலர் - மலம் அற்றவர்; குற்றம் அற்றவர். ஐயர் - தலைவர். முகமன் - உபசாரம். முகமனும் புகழும் அன்று என்பது அவருக்கு இயல்பே என்பதைப் புலப்படுத்துவது. (24)

## இத்திறத்தன் என மதிப்பிடல் அரிது!

### நேரிசை ஆசிரியப்பா

332. ஆமையோடு அணிந்து தலைஓடு ஏந்திக்
காமரு மடந்தையர் கடைதொறும் கடைதொறும்
பலிதேர்ந்து உண்ணினும் உண்ணும் ஒலிகழல்
பைந்துழாய் முகிலும் பழமறை விரிஞ்சனும்

5 இந்திரா தியரும் இறைஞ்சினர் நிற்ப,
மற்றவர் பதங்கள் மாற்றியும் வழங்கியும்
பற்றலர்ச் செகுத்தும் உற்றவர்த் தாங்கியும்
பரசுநர் பரசப், பணிகுநர் பணிய,
அரசுவீற் றிருப்பினும் இருக்கும் உரைசெயும்
10 யோக சாதனம் போகிகட்கு இன்மையின்
செஞ்சடை விரித்து வெண்பொடி பூசி
எருக்கம் கண்ணியும் சூடி விருப்புடை
இடப்பால் மடந்தை நொடிப்பொழுது தணப்பினும்
மடல்ஊர் குறிப்புத் தோன்ற விடலரும்
15 காமம் மீதூர வேமுற்று இரந்தவள்
தாமரைச் சீறடி தைவந்து அம்ம
புலவியில் புலந்தும் கலவியில் களித்தும்
போகம்ஆர்ந் திருப்பினும் இருக்கும் யோகிகட்கு
எய்தா ஒண்பொருள் கைவந்து கிடைப்ப
20 ஞான முத்திரை சாத்தி மோனமோடு
யோகுசெய் திருப்பினும் இருக்கும் மீகெழு
தமனிய மாடத்து அரமிய முற்றத்து
ஐங்கணைக் கிழவன் அரசியல் நடாத்தக்
கொங்கைமால் களிறும் கொலைக்கண் வாட்படையும்
25 சில்காழ் அல்குல் வெல்கொடித் தேரும்
பல்வகை உறுப்பும் படைஉறுப் பாகப்
பவக்குறும்பு எறியும் தவக்குறும்பு எறிந்து
நுணங்கிய நுசுப்பின் அணங்குஅனார் குழுமிக்
கைவகுத் திருந்து கழங்குஉறிந்து ஆட,
30 மைஉண் கண்கள் மறிந்துஎழுந்து அலமரல்
செம்முகத் தாமரைச் சிறைஅளிக் குலங்கள்
அம்மென் காந்தளின் அளிக்குலம் ஆர்த்துஎழக்
கலந்துடன் தழீஇக் காமுறல் நிகர்க்கும்
பொலன்செய் வீதிப் பொன்மதில் கமலை
31 அண்ணல் மாநகர்க் கண்ணுதல் கடவுள்
கற்பனை கழன்று நிற்றலின்
நிற்பதுஇந் நிலைஎனும் நியமமோ இன்றே. (25)

**தெளிவுரை**

(1-9) இறைவன் ஆமையினது ஓட்டை அணிந்து தலை யோட்டைக் கைக் கொண்டு விருப்புக்குரிய பெண்டிரின் வாயில் களில் எல்லாம் பிச்சை ஏற்று உண்டாலும் உண்பான். ஒலிக்கும் கழல் என்ற அணியை அணிந்த பசுமையான துழாய் மாலை பூண்ட கரிய முகில் போன்ற திருமாலும், பழைய வேதங்களை ஓதிய நான்முகனும் இந்திரன் முதலிய தேவர்களும் வணங்கி நிற்ப, அவர்தம் பதங்களை மாற்றினும் மாற்றுவர்; வலியதைத் தரினும் தருவார்.

பகைவரை வென்று அடைக்கலமாக அடைந்தவரைப் பாதுகாத்தலும் செய்வர்.

துதிப்பவர் துதிக்கப் பணிபவர் பணிய அரசு வீற்றிருந்தாலும் வீற்றிருப்பர்.

(10-18) நூலால் பேசப்படும் யோகம் செய்பவர்க்குரிய வேடம் முதலியன இல்லறத்தார்க்கு உரியன அல்ல. ஆகையால், சிவந்த சடையை விரித்து வெண்மையான திருநீற்றை அணிந்து எருக்கம்பூ மாலையும் சூடி விருப்பத்தையுடைய இடப்பக்கத்தில் வீற்றிருக்கும் உமையம்மை நொடிப் போது பிரிந்தாலும் மடல் ஏறும் குறிப்பு வெளிப்படக் கைவிடுவதற்கு அரிய நாமம் மேம் பட்டுத் தோன்ற அவளிடம் மயக்கம் கொண்டு இரந்து அவளது தாமரை போன்ற சிறிய திருவடிகளைத் தடவி ஊடல் கொண்டு ஊடியும், புணர்ச்சியில் மகிழ்ந்தும் இன்பம் அனுபவித்து இருப்பினும் இருப்பர்.

(18-37) யோகியர்க்கு அடையக் கூடாத சிறந்த பொருள் கையில் வரப் பெற்றிருக்கச் சின்முத்திரை மேற்கொண்டு மௌன மாய் யோகம் செய்து கொண்டு இருப்பினும் இருப்பார்.

மேல் தோன்றி விளங்கும் பொன் மாளிகையில் உள்ள நிலாமுகத்துக்கு, ஐந்து மலர் அம்புகளையுடைய காமன் தன் ஆட்சியைச் செலுத்தும்படி முலையாகிய பெரிய ஆண் யானைப்படையும், கொல்லும் செயலையுடைய கண் ஆகிய வாட்

படையும் சிலவடங்கள் அணிந்துள்ள அல்குலாகிய வெல்லும் இயல்பு கொண்ட கொடியையுடைய தேரும் மற்றும் பலவகை உறுப்புகளும் படையுறுப்புகளாகக் கொண்டு, பிறவிப் பகையை அழிக்கும் தவம் செய்பவராகிய பகைவரை அழித்து, நுட்பமான இடையையுடைய பெண் தெய்வம் போன்ற மங்கையர் ஒன்று கூடிப் பக்கம் பக்கமாகப் பிரித்துக் கொண்டு (படை வகுப்பு வகுத்து) கழங்குக் காயை எறிந்து மை தீட்டப் பெற்ற கண்கள் மடிந்து எழுந்து சுழலல், செம்முகத் தாமரையில் சிறகையுடைய வண்டுக் கூட்டங்கள் அழகிய மென்மையான காந்தள் மலரினின்று வண்டுக் கூட்டங்கள் ஆகியவை ஆரவாரித்து எழுந்து ஆட இருவகை வண்டுகளும் கலந்து தழுவி இன்பம் அனுபவிப்பதை ஒத்து விளங்கும் பொன்னால் ஆன வீதிகளையுடைய பொன் மதில் பொருந்திய திருவாரூர் என்ற தலத்தில் பெருமையுடைய பெருநகரத்தில் வீற்றிருக்கும் நெற்றியில் கண்ணையுடைய சிவபெருமான் கற்பனைக்கு அப்பாற்பட்டு நிற்றலால் அவரது நிலை இது என்று ஓர் வரையறை இல்லை.

**விளக்கம்**

சிவபெருமான் ஆமையோட்டை அணிபவர். தலையோடு - பிரம கபாலம். காமரு - காமம் மரு என்பதன் விகாரம்; விருப்பத்தைத் தரும் என்பது பொருள்.

கடை தொறும் - வீட்டு வாயில் தோறும். பலி தேர்ந்து - பிச்சை எடுத்து. உண்ணினும் உண்ணும் - உண்டாலும் உண்பார்.

தாருகாவனத்து முனிபத்தினியரிடம் சிவபெருமான் பிச்சைக் கோலத்தில் சென்றார். அது இங்குச் சுட்டப்படுகின்றது.

ஒலிகழல் - காலில் அணியும் ஒலிக்கும் ஒருவகை அணி. முகில் - மேகம் போன்ற கரிய நிறத்தையுடைய திருமால். பழமறை விரிஞ்சன் - பழைய மறைகளை அருளிய நான்முகன். இந்திரா தியர் - இந்திரன் முதலிய தேவர்கள். இறைஞ்சினர் நிற்ப - வணங்கி நிற்க. பதங்கள் - பதவிகள். வழங்குதல் - கொடுத்தல்.

பரசுநர் - துதிப்பவர். பணிகுநர் - வணங்குபவர். பற்றலர் - பகைவர். செகுத்து - அழித்து. உற்றவர் - அடைக்கலமாக அடைந்தவர்; நண்பர். தாங்கியும் - பாதுகாத்தும்.

உரை செயும் - பேசப்படும்.

யோக சாதனம் - யோகம் செய்பவர்க்குரிய கோலம் முதலியவை. போகிகள் - மங்கையருடன் இன்பத்தை அனுபவிப் பவர்கள். செஞ்சடை - சிவந்த சடை. வெண் பொடி - திருநீறு. எருக்கங்கண்ணி - எருக்கம்பூவால் ஆன மாலை இடப்பால் மடந்தை - இடப்பக்கத்தில் வீற்றிருக்கின்ற உமையம்மை. தணப்பினும் - பிரிந்தாலும். மடல் ஊர் குறிப்பு - மடல் ஏறும் குறிப்பு. தாம் விரும்பிய மங்கை கிட்டப் பெறாத போது பனை மடலால் ஆன குதிரை செய்து அதில் தான் விரும்பியவளின் படத்தை எழுதி வைத்து 'ஏறியூர்தல்' மரபு. அங்ஙனம் ஊரும் போது பெண்ணுடையார் அவனுக்கு அவன் விரும்பிய பெண்ணை மணம் செய்து தருவர். அங்ஙனம் நிகழாவிட்டால் அவன் பனை மட்டையால் அறுக்கப்பட்டு இறத்தல் நிகழும். இதுவே மடல் ஊர்தல். இங்ஙனம் மடல் ஊர்தல் செய்பவன் சடை விரித்தல், திருநீறு பூசுதல் முதலியன இயல்பு.

சிவபெருமான் சடை விரித்துத் திருநீறு பூசி எருக்க மாலையைச் சூடியுள்ளார் என்பதற்குக் கவிஞர் இங்கு ஒரு காரணத்தைக் கற்பிக்கின்றார். திருநீறு பூசுதல் முதலியவை யோக சாதனம் என்றால் போகியாகிய இறைவனுக்கு வேண்டுவன அல்ல. ஆதலால் அவை மடல் ஊரும் குறிப்பைக் காட்டும் என்றார்.

விடல் அரும் - கைவிடுதற்கு அரிய.

மீதூர - மேம்பட. ஏமுற்று - ஏம் + உற்று; மயக்கத்தை அடைந்து. அவள் - உமையம்மையார். தாமரைச் சீறடி - தாமரை போன்ற சிறிய அடி. தைவந்து - தடவி. அம்ம - அசைநிலை.

புலவியின் - ஊடலில். புலந்தும் - ஊடியும். கலவி - புணர்ச்சி. போகம் ஆர்ந்து - இன்பத்தை அனுபவித்து.

ஞான முத்திரை - சின் முத்திரை. யோகு - யோகம். மோன மோடு - மௌனத்துடன். மீகெழு - மேல் பொருந்திய. சிவ பெருமான் ஆசாரிய மூர்த்தியாய் விளங்கியதை உணர்த்தியது. தமனிய மாடம் - பொன் மாளிகை. அரமியம் - நிலா முற்றம். ஐங்கணைக் கிழவன் - ஐந்து மலர்களாகிய அம்புகளையுடைய மன்மதன். அரசியல் நடாத்த - அரசியலைச் செலுத்தும்படி. கொங்கை களிற்றுப்படை, கண் வாட்படை, அல்குல் தேர்ப்படை எனக் குறிப்பிட்டுள்ளார். மன்மதன் களிறு முதலிய படைகளைக் கொண்டு தவம் செய்பவரின் தவத்தை அழிப்பதாகக் குறிப்பிடுகிறார்.

கொங்கைமால் களிறு - கொங்கையாகிய பெரிய யானைப் படை. கொலைக்கண் வாட்படை - கொல்லும் தொழிலை உடைய வாட்படை. சில்காழ் அல்குல் - சில மணிவடங்களை அணிந்த அல்குல். வெல்கொடித் தேர் - வெற்றி பெறும் இயல்புடைய தேர். படையுறுப்பு - போர் செய்வதற்குரிய உறுப்புகளாக.

பவக்குறும்பு - பிறவியாகிய பகை. தவக்குறும்பு - தவம் செய்பவராகிய பகைவர்.

நுணங்கிய நுசுப்பு - நுட்பமான இடை. அணங்கனார் - பெண் தெய்வத்தைப் போன்றவர். கைவகுத்து - பக்கம் பக்கமாகப் பிரித்துக் கொண்டு. ஆட்டம் ஆடுபவர் தம்மைச் சில பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டு ஆடுதல் மரபு. படை வகுத்துக் கொண்டு என்பது வேறு ஒரு பொருள். கழங்கு - விளையாட்டுக் கருவி; கழற்சிக் காய் எனவும் உரைப்பர். எறிந்து ஆட - மேலே வீசி ஆட. அலமரல் - சுழலல்.

தாமரையினின்று மேலே எழும் வண்டுகளும் காந்தள் மலரினின்று எழும் வண்டுகளும் ஒன்றாகக் கூடித் தழுவி மகிழும்.

முகத்தில் உள்ள கண்கள் கையினின்று எழும் கழங்குகளைப் பார்த்து அவற்றுடன் உலவுதல் ஒரு தாமரையிலிருந்து எழுந்த வண்டுகள் காந்தள் பூவினின்று எழும் வண்டுகளுடன் கலந்து பயில்வதை ஒத்தது என்க. முகத்துக்குத் தாமரையும் கைக்குக் காந்தளும் கண்ணுக்கும் கழங்குக்கும் வண்டுகளும் உவமை.

சிறையளிக்குலங்கள் - இறகுகளையுடைய வண்டுக் கூட்டங்கள். அம்மென் காந்தள் - அம் + மென் + காந்தள் - அழகிய மென்மையான காந்தள் மலர்.

அளிக்குலம் - வண்டுக் கூட்டம். தழீஇ - தழுவி. நிகர்க்கும் - ஒக்கும். காமுறல் - காமம் கொள்ளல்; இன்பம் துய்த்தல். பொன்மதில் - பொன்னால் ஆன மதில்.

அண்ணல் மாநகர் - பெருமையுடைய பெரிய நகரம்.

கற்பனை கழன்று நிற்றல் - எல்லாக் கற்பனைகளுக்கும் அப்பாற்பட்டு நிற்றல்; கற்பனை கடந்து நிற்றல். நியமம் - வரையறை. (25)

## கூற்றுவன் பயம் அற்றவர்

### நேரிசை வெண்பா

333. இன்நீர் உலகத்துக்கு இன்உயிர்யாம் என்றுணர்த்தும்
நன்னீர் வயற்கமலை நாதனார்-பொன் ஆர்ந்த
சேவடிக்கு ஆளானார் சிலர் அன்றே தென்புலத்தார்
கோ அடிக்கு ஆளாகார் குலைந்து. (26)

**தெளிவுரை**

இனிய நீரையுடைய கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் உள்ளவர்க்கு இனிய உயிர் யாமே என்று உணர்த்தும் நல்ல நீரை யுடைய வயல் பொருந்திய திருவாரூர்ப் பெருமானின் பொன் போன்ற திருவடிகளுக்கு ஆட்பட்டவர் சிலரே ஆவர். அவர்கள் நிலை குலைந்து தென்திசைத் தலைவனான இயமனின் தண்டனைக்கு ஆளாக மாட்டார்.

**விளக்கம்**

தியாகப் பெருமானின் திருவடிகளை அடைந்தவர் இயம தண்டனை அடையார். வீடு பேற்றை அடைவர் என்பது கருத்து.

இன்னீர் உலகம் - இனிய நீரையுடைய கடல் சூழ்ந்த உலகம். பயன் அளிப்பதால் இன்னீர். நன்னீர்வயல் - வயலுக்கு நல்ல நீர் தேவை என்பதை உணர்த்த நன்னீர் வயல் என்றார். கமலை - திருவாரூர். தென்புலத்தார் கோ - யம தண்டனை. சேவடிக்கு ஆளானார் - சிவந்த திருவடிகளை. அடைந்தவர். குலைந்து - நடுங்கி. (26)

## சிவபெருமானின் கோலம்

### கட்டளைக் கலித்துறை

334. குலைவைத்த செவ்விளநீர்குளிர் பூம்பொழில் கொம்புக்கு இன்ப
முலைவைத்தது ஒக்கும் கமலேசர் வேணி முகிழ்தகை வெண்
தலைவைத்த ஏனல் புனம்ஒக்கும் கங்கைஅத் தண்புனத்தில்
நிலைவைத்த மாதரை ஒக்கும் கவண்ஒக்கும் நீள்பிறையே. (27)

**தெளிவுரை**

குளிர்ந்த பூஞ்சோலையான பெண்ணுக்குக் குலையாய் அமைந்த செவ்விள நீர்க்காய் முலையை வைத்தது போல் விளங்கும். திருவாரூர் தியாகரின் சடையில் உள்ள நகைப்புடன் கூடிய வெண்மையான தலை வைக்கப் பெற்ற தினைப்புனம் போல் விளங்கும். அந்தக் குளிர்ந்த புனத்தில் உள்ள கங்கை காவலுக்கு வைக்கப்பட்ட குறப் பெண்டிரைப் போல் விளங்கும். அப் பெருமானின் தலையில் உள்ள நீண்ட பிறை பறவைகளை ஒட்டும் கவணைப் போல் விளங்கும்.

**விளக்கம்**

பூம்பொழில் கொம்பு குளிர் - குளிர்ந்த பூஞ்சோலையான மங்கை. கொம்பு என்பது கொம்பு போன்ற சிறிய இடையையுடைய மங்கைக்கு ஆயிற்று; ஆகுபெயர்.

குலைவைத்த செவ்விளநீர் - குலையாய் விளங்கும் செவ்விளநீர். கமலேசர் - தியாகர். வேணி - சடை. சிவபெருமான்

சடையில் வெண் தலை உள்ளது. அது தினைப்புனத்தில் வண்ணம் தீட்டி வைக்கப்பட்ட தலை போல் விளங்கியது. ஏனல் புனம் - தினைப் புனம். நிலை வைத்த மாதரை ஒக்கும் - தினைப் புனத்தில் தினையைத் தின்ன வரும் பறவையை ஓட்ட மங்கையரைக் காவலாக வைப்பது வழக்கம். அவரைப் போல் சிவபெருமான் தலையில் உள்ள கங்கை விளங்கியது.

தண்புனம் - குளிர்ந்த புனம். கவண்- ஒரு கருவி; பயிரை உண்ண வரும் பறவைகளை ஓட்டப் பயன்படுவது. அது வளை வாக இருக்கும். ஆதலின் சிவபெருமான் தலையில் உள்ள பிறைச் சந்திரன் அக்கவணாகக் கூறப்பட்டது.

சிவபெருமானின் சடை ஏனற்புனம். கங்கை, அப்புனம் காக்கும் குற மங்கை. வெண்டலை - சிவபெருமானின் தலையில் அணியப்பட்ட சிரமாலை. (27)

## நீர் செய்த காரியம் என்னே!

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

335. பிறைஒழுக ஒழுகுபுனல் கங்கை ஆற்றின்
பேரணையில் தொடுத்துவிட்ட பெரும்பாம்பு என்னக்
கறை ஒழுகும் படஅரவம் படரும் வேணிக்
கண்ணுதலார் கமலையில்பைங் கமலை போல்வீர்
நறைஒழுகு மலர்ப் பொழில்குத் தகையாத் தந்தீர்
நான்இரண்டு மாவடுவு நாடிக் காணேன்
நிறைஒழுகும் இளநீரும் நிற்கக் காணேன்
நீர்செய்த காரியமென் நிகழ்த்து வேனே. 28

**தெளிவுரை**

பிறைச் சந்திரன் பொருந்திய சடையில் உள்ள கங்கை ஆற்றின் பெரிய அணை அமைக்கும் பொருட்டுப் பெரிய பாம் பாகும் என்று கூறும்படியாய் நஞ்சு பொருந்திய படத்தை யுடைய பாம்பு பொருந்தியுள்ள சடையை உடைய சிவபெருமானின்

திருவாரூரில் திருமகளைப் போன்ற மடந்தையே! தேன் சிந்தும் பூஞ்சோலையைக் குத்தகையாகப் பெற்றுள்ளீர்! நான் உம்முடைய மாம்பிஞ்சைப் போன்ற இரண்டு கண்களைக் காணேன் ஆயினேன். நீர் நிறைவுடைய இளநீர்க் காய்களையும் தோன்றக் காணேன். நீர் செய்த காரியம் என்னே.

**விளக்கம்**

இப்பாடல் 'புறங்காட்டல்' என்ற அகத் துறையாகும். தலைவனின் முன்பு இருப்பவள் பின் புறத்தைக் காட்டி நிற்றல் என்பது இதன் விளக்கமாகும். தலைவனிடம் உண்டான வெட்கத் தால் அவனுக்கு நேர் நிற்காமல் திரும்பி நின்றாள். அத்தகைய தலைவி ஒருத்தியை நோக்கித் தலைவன் ஒருவன் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

தலைவி தலைவனுக்கு முதுகு காட்டி நின்றதால் அவளுடைய இருகண்களையும் கொங்கைகளையும் நான் காணேன் என்று கூறினான்.

சடையில் உள்ள பாம்பு கங்கையாற்றுக்கு அணை போடும் பொருட்டு அமைந்த பாம்பைப் போன்றது. அணை கட்ட வைக் கோல் புரியை வைப்பது வழக்கம். வைக்கோலைப் பாம்பு என்று கூறுவர்.

அணைக்கு அணை கட்ட வைக்கோற் புரியை இடுவதைப் போல் கங்கையாற்றுக்குப் பாம்பை இட்டதாகக் கூறுகிறார் ஆசிரியர்.

கறை ஒழுகும் - நஞ்சு பொருந்திய. படவரவம் - படத்தை யுடைய பாம்பு. வேணி - சடை. கண்ணுதலார் - நெற்றியில் கண்ணை யுடைய சிவபெருமான்.

கமலையில் - திருவாரூரில்; பைங் கமலை போல்வீர் - திருமகளைப் போன்றவரே; பசுமையான தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் போன்றவரே. பசுமையான தாமரை மலரைப் போன்றவரே எனவும் கூறலாம்.

சோலையைக் குத்தகைக்கு விட்டு அதில் உள்ள மாவடுவையும் இளநீரையும் யான் பெறாமல் செய்வது தக்கது அன்று என்னும் ஒரு பொருள் தோன்றியதை உணர்க.

நறை ஒழுகு மலர்ப்பொழில் - தேன் ஒழுகும் பூஞ்சோலை.

மலர்ப்பொழில் என்றது கூந்தலை. இளநீர் - கொங்கை. இரண்டுமாவடு - இரண்டு மாம்பிஞ்சு போன்ற கண்கள். (28)

## நின் தன்மை அளப்பரிது

### நேரிசை யாசிரியப்பா

336. வேனிலான் உறுப்பின் மென்தசை இறைச்சி
தீநாக்கு அறியத் திருக்கண் திறந்தோய்
நான்மறை முனிவன் கான்முளை நிற்ப
விடற்குஅரும் பாசமோடு உடற்பொறை நீங்க
5 உயிர் உண் கூற்றுக்குத் திருவடி வைத்தோய்,
கருங்கடல் வண்ணன் வெள்விடை யாகி
அடிகள் தாங்கிய உதவிக்கு ஆங்கவன்
முழுஎன்பு சுமந்த கழுமுள் படையோய்,
தேவா சிரயன் திருக்கா வணத்து
10 மேவா நின்ற விண்ணவர் குழாங்கள்
உருத்திர கணங்கள்என்று ஓடினர் வணங்கி
அருக்கியம் முதல அகன்அமர்ந்து அளிப்ப
இத்தலத்து உற்றவர் இனித்தலத்து உறார்எனக்
கைத்தலத்து ஏந்திய கனல்மழு வுறழும்
15 மழுவுடைக் கைய ராகி விழுமிதின்
மாந்தர் யாவரும் காந்தியில் பொலியும்
வரமிகு கமலைத் திருநகர்ப் பொலிந்தோய்,
எழுதாக் கிளவிநின் மொழிஎனப் படுதலின்
நின் பெருந் தன்மை நீயே நவிற்றுதல்
20 மன் பெரும் புலமைத் தன்றே உம்பரின்
நின்னோர் அன்னோர் இன்மையின் நின்னிலை

கூறாய் நீஎனில் தேறுநர் இலரால்
தன்னுடை ஆற்றல் முன்னார் முன்னர்த்
தற்புகழ் கிளவியும் தகும்என்று அம்ம
25 நின்புகழ்ந்து இசைத்தனை நீயே யாக,
இருள்தீர் காட்சிப் பொருள்துணிந்து உணர்த்தாது
இயங்கா மரபின் இது இது பொருள்என
மயங்கக் கூறுதல் மாண்புடைத் தன்றே
அளவில் காட்சியை ஐயம்இன்று உணர்த்தலின்
30 தளரா நிலைமைத்து என்ப என்றலின்
தன்னுடை மயக்கம் திசைமேல் வைத்துச்
சென்னெறி பிழைத்தோன் திசைமயங் கிற்றுஎன
மொழிகுவது ஏய்ப்ப முதுக்குறை இன்மையின்
பழமறை மயங்கிற்று என்னா முழுவதும்
35 எய்யாது இசைக்குதும் போலும்
ஐயநின் தன்மை அளப்பரிது எமக்கே. (29)

### தெளிவுரை

(1-2) மன்மதனின் உடலின் மென்மையான இறைச்சியைத் தீ நாக்கானது அறியும்படி நெற்றிக் கண்ணைத் திறந்தவனே!

(3-5) நான்கு மறைகளில் வல்ல முனிவன் மிருகண்டுவின் மகனான மார்க்கண்டேயன் என்றும் பதினாறு வயது உடைய இளையனாய் வாழ, அவனது நீக்குதற்கு அரிய பாசக் கயிற்றுடன் உடல் சுமை நீங்க உயிரைப் பிரிக்கின்ற இயல்பையுடைய இயமனை உதைக்கக் காலை நீட்டியவனே!

(6-8) கரிய கடல் போன்ற நிறம் உடைய திருமால் வெண்மையான காளையாகி உம்மைச் சுமந்தான் அந்த உதவிக் காக அவனது முழு எலும்பையும் - கங்காளத்தையும் - தாங்கிய சூலப்படையை உடையவனே!

(9-36) திருவாரூரில் உள்ள தேவாசிரயன் என்ற மண்டபத்தில் வந்து கூடிய வானவர் கூட்டங்கள் திருவாரூரில் உள்ளவர்களை உருத்திர கணங்கள் என்று கருதி ஓடி வணங்கி

அருக்கியம் முதலியவற்றை மனம் மகிழ்ந்து கொடுக்க, இந்தத் திருவாரூரில் பிறந்தவர் இனி எந்தப் பூமியிலும் பிறக்க மாட்டார் என்று மழுவைக் கையில் ஏந்தியவராய்ச் சிறந்தவராய் மக்கள் யாவரும் பேரொளியுடன் விளங்கும் மேன்மையுடைய திருவாரூரில் விளங்குபவனே!

(18-36) எழுதப்படாதது எனப்படும் வேதம் நின் பொருளாகும் என்று கூறப்படுதலால் நின்னுடைய இயல்பை நீயே கூறிக் கொள்வது சிறந்த அறிவுடைய செயல் அன்று. தேவரில் நின்னைப் போன்றவர் எவரும் இலர். ஆதலால் நின் குணங்களை நீ கூறாய் என்று கூறினால், அதைத் தெளிபவர் இலர்.

தம் ஆற்றலை உணரார்முன் தானே எடுத்துக் கூறும் தற்புகழ்ச்சிச் சொல்லும் தக்கதே ஆகும் என்று நின் புகழை நீயே எடுத்துக் கூறினாய். ஆதலால் மயக்கம் நீங்கிய ஞானத்தால் அறியப்படும் உண்மைப் பொருளைத் தெளிவாக உணர்த்தாமல் மயக்கம் அற்ற நிலையில் இது இது பொருள் ஆகும் என மயக்கம் ஏற்படக் கூறுதல் சிறந்ததாகாது. அளவில்லாத காட்சியை ஐயம் இல்லாமல் உணர்த்துவதால் ஐயம் இல்லாத நிலைமையைக் கூறியது என்று அறிந்தோர் கூறுவர். ஆதலால் தன்னுடைய மயக்கத்தைத் திசையின் மீது வைத்துக் கூறுவது, வழிப்பயணி ஒருவன் வழி தவறிச் சென்ற போது 'திசை தப்பிவிட்டது' என்று கூறுவது போன்று முற்றும் உணராமல் எங்கள் மயக்கத்தை வேதத்தின் மேல் ஏற்றிக் கூறுகின்றோம். முற்றும் உணர்ந்தால் இவ்வாறு சொல்ல மாட்டோம். எனவே,பெருமானே நின் தன்மை எங்கட்கு அளவிடற்கு அரியது.

**விளக்கம்**

வேனிலான் - மன்மதன். உறுப்பு - உடல். மென் தசை இறைச்சி - மென்மையான தசையை. தீ நாக்கு அறிய - தீயின் நாக்குச் சுவைக்க; எரிய. திருக்கண் - அழகிய நெற்றிக்கண்.

நான்மறை முனிவன் - நான்கு மறைகளை உணர்ந்த மிருகண்டு என்ற முனிவன். கான்முளை - மகன்; மார்க்கண்டேயன். நிற்ப - உயிருடன் விளங்க.

விடற்கு அரும்பாசம் - விடுதற்கு அரிய பாசக்கயிறு. உடல் பொறை - உடல் சுமை. நீங்க - ஒழிய. உயிர் உண் கூற்று - உயிரைக் கவரும் இயமன். திருவடி வைத்தோய் - திருவடியை இயமன் மீது வைத்தவனே; அதாவது உதைத்தவனே.

கருங்கடல் வண்ணன் - கடல் போன்ற கரிய நிறம் உடைய திருமால். வெள் விடையாகி - வெண்மையான காளையாகி. அடிகள் தாங்கிய - தங்களைச்சுமந்த. உதவிக்கு - உதவும் செயலுக்கு. முழு என்பு - முழு எலும்பு; கங்காளம். கழுமுள்படை - சூலப்படை.

தேவாசிரயன் - திருவாரூர் கோயிலில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தின் பெயர். தேவர்களால் ஆசிரயப்படுதலின் இப்பெயர். ஆசிரயம் - அடுத்திருக்கை; தங்கியிருக்கை. மேவாநின்ற - பொருந்திய. விண்ணவர் குழாங்கள் - வானவர் கூட்டம். என்று - என்று திருவாரூரில் உள்ளவரைக் கருதி. திருவாரூரில் பிறந்தவர் யாவரும் சிவ கணங்கள் ஆவர் என்று கருதப்படும். எனவே சுந்தரரும் 'திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்' என்று கூறினார். 'இத்தலத்து உற்றவர் இனித் தலத்து உறார்' - இந்தப் பதியில் பிறந்தவர் பின்பு வேறொரு ஊரில் பிறக்க மாட்டார் என்று அவர்கள் கையில் மழுவுடைய வராகத் தோன்றுவர். ஓர் உண்மையை நிலை நிறுத்தற் பொருட்டு மழு ஏந்துதல் உலக வழக்கம். ஆதலால் அவர்கள் மழுவேந்தியிருத்தல்; ''இத்தலத்தில் பிறந்தார் இனிப் பிறவியை அடையமாட்டார்'' என்ற உண்மையை நிலை நிறுத்துவதற்காகத் தோன்றும் என்றார்.

தலத்து உறார் - பூமியில் பிறக்க மாட்டார். காந்தி - பேரொளி. பொலியும் - விளங்கும். வரம் - மேன்மை. பொலிந்தாய் - விளங்குபவனே.

எழுதாக்கிளவி - வேதம்; அது சிவபெருமான் திருவாக்கு என்பர். நவிற்றுதல் - கூறுதல். மன்பெரும் புலமைத்தன்று - சிறந்த அறிவுடைய செயல் அன்று. 'தன் புகழைத் தானே கூறுதல் தக்கதன்று என்பதால் மன்பெரும் புலமைத்தன்றே' என்றார்.

உம்பர் - தேவர். நின்னோர் அன்னோர் - உன்னைப் போன்றவர். நின்னிலை கூறாய் நீ எனின் தேறுநர் இலர் - நின் இயல்பை நீ எடுத்துக் கூறினால் அன்றி நின் தன்மையைத் தெளிபவர் எவரும் இலர். தேறுநர் - தெளிவு அடைபவர்; ஆல் - அசை நிலை.

'தன்னுடை ஆற்றல் முன்னார் முன்னர் தற்புகழ் கிளவியும் தரும்' - தன்னுடைய ஆற்றலை அறியாதவர் முன்பு தன் புகழை ஒருவன் எடுத்துக் கூறுதலும் தக்கதே ஆகும் என்பது பொருள்.

'தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்
தன்னைப் புகழ்தலும் தகும்'

என்பது பனம்பாரனாரின் நூற்பா.

நின் இயல்பை நீயே எடுத்துக் கூறினாலன்றி நின் இயல்பை அறிபவர் இலர். ஆதலால் நீயே நின் இயல்பை உரைத்தது பொருந்தும் என்பார் 'நின் புகழ்ந்திசைத்தனை' என்றார்.

இறைவர் தானே தன் இயல்பையுணர்த்திட இதனை அறியாதவர் வேதம் பொருள் மயங்க உரைத்தது என்று இயம்பு கின்றார். எனவே மயக்கம் தீர்ந்த ஞானத்தால் அறியப்படும் உண்மைப் பொருளைத் தெளிவாக உணர்த்தாமல் வேதத்தில் கூறப்படும் உண்மை மயக்கத்தைத் தருவது என்று சிலர் கூறுகின்றனர். அது தவறு. வேதம் ஐயம் அற்று அளவற்ற இறைவன் இயல்பை உணர்த்துவதால் ஐயம் இல்லாத நிலைமையை உடையது என்றே அறிந்தோர் உரைப்பர்.

பின் வேதம் மயங்கக் கூறுகிறது என்பது எதைப் போன்றது என்றால் வழி தப்பிய ஒருவர் திசை தவறியது (மாறியது) என்று தன் குற்றத்தைத் திசை மீது ஏற்றிக் கூறுவதைப் போன்றதாகும். பேரறிவு இல்லாமையால் அவர்கள் கூறுகின்றனர். முற்றும் உணர்ந்தால் அங்ஙனம் கூறமாட்டார்.

இசைத்தனை - கூறியுள்ளாய். இருள் தீர் காட்சிப் பொருள் துணிந்து உணர்த்தாது - மயக்கம் அற்ற ஞானத்தால் அறியப்படும் உண்மைப் பொருளைத் தெளிவாக உணர்த்தாமல். தளரா

நிலைமைத்து - ஐயம் இல்லாத நிலைமையை உடையது. என்ப - என அறிந்தவர் உரைப்பர். என்றலின் - என்று கூறுவதால். மாண்புடைத் தன்றே - சிறந்தது அன்றே.

சென்னெறி - செல் + நெறி; செல்லும் வழி. பிழைத்தோன் - தவறியவன். மொழிகுவது ஏய்ப்ப - கூறுவதைப் போல. முதுக் குறைவு - முதிர்ந்த அறிவு. என்னா இசைக்குதும் - என்று எங்கள் மயக்கத்தை வேதத்தின் மீது ஏற்றிக் கூறுகின்றோம். முழுவதும் உணரின் இவ்வாறு கூறமாட்டோம்.

அளப்பரிது - மதித்தற்கு அரியது. அதாவது இயலாதது. (29)

## நண்ணிலாதாரை நகைக்கும்

### நேரிசை வெண்பா

337. அள்ளல் கருஞ்சேற்று அகன்பணைசூழ் ஆரூரர்
வெள்ளப் புனல்சடைமேல் வெண்திங்கள் - புள்உருவாய்
நண்ணிலா தாரை நகைக்கும் நகையை அன்றோ
தண்ணிலா என்னும் சகம். (30)

**தெளிவுரை**

குழைவையுடைய கரிய சேற்றையுடைய அகன்ற வயல் சூழ்ந்த ஆரூரரின் கங்கை வெள்ளநீர் பொருந்திய சடையின் மீது வெண்மையான பிறைச்சந்திரன் அன்னப் பறவை வடிவாய் வந்து இறைவர் முடியைக் காணாத பிரம தேவனை நோக்கி யான் கண்ட முடியை நீ காணவில்லையே என்று நகைக்கும் நகை அன்றோ உலகம் குளிர்ந்த நிலவு என்று கூறுவது?

**விளக்கம்**

அள்ளல் கருஞ்சேறு - குழைவையுடைய கரிய சேறு. அகன் பணை - அகன்ற வயல். வெள்ளப்புனல் - கங்கையாகிய நீர் வெள்ளம். புள் உருவாய் - அன்னத்தின் வடிவாய், நான்முகன்

அன்னப்பறவையின் வடிவு கொண்டு சிவபெருமானின் முடியைக் காணச் சென்று அது கை கூடாமையை எண்ணி நகைப்பது போல் சந்திரன் விளங்குகிறது எனத் தற்குறிப்பேற்றமாய் உரைத்தார். நண்ணிலாதாரை - முடியை அடையாதவரை. தண்ணிலா - குளிர்ந்த நிலவு (30)

## கண்மலர் சாத்தியும் காண்பரிதான கழல் மலர்

### கட்டளைக் கலித்துறை

338. தண்மல ரும் பொழில் தென்கம லேசர்க்குச் சாத்துகின்ற
ஒண்மலர் சொன்மலர்க்கு ஒவ்வாது போலும் மற்று ஓர்புலவன்
பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த
கண்மலர் சாத்தியும் காண்புஅரி தான கழல்மலரே. (31)

**தெளிவுரை**

குளிர்ச்சி பொருந்திய மலர்கள் மலரும் சோலை சூழ்ந்த அழகிய கமலேசர்க்குச் சாத்தும் ஒளியுடைய மலர் தோத்திரமாகிய மலர்க்கு நிகராகாது போலும்! எதனால் என்றால் திருமால் சிவந்த தன் கண்ணை மலராகச் சாத்தியும் இறைவன் திருவடியாகிய மலரைக் காண்பதற்கு அரியவனானானே! அதனால் ஒரு புலவனான சுந்தர மூர்த்தி நாயனார் தேவாரமாகிய இசைமிக்க மலரைச் சாத்தி இறைவரைப் பணி செய்யுமாறு செய்து கொண்டது என்னே வியப்பு!

**விளக்கம்**

தண் மலரும் - குளிர்ந்த மலர்கள் மலரும். பொழில் - சோலை. ஒண்மலர் - ஒளியுடைய மலர். சொன்மலர் - தோத்திர மாகிய மலர்.

ஓர் புலவன் - சுந்தர மூர்த்தி நாயனார். பண் மலர் சாத்தி - தேவாரப் பதிகங்களான இசை நிறைந்த மலர்களை இறைவனுக்குச் சாத்தி.

சுந்தரர் இறைவனைத் தம் மனைவியான பரவையாரிடம் தூது போகும்படி பணித்தார். ஆதலால் இறைவனை அவர் தனக்கு ஆட் செய்ய வைத்தது வியப்புடையது. ஆதலால் 'பணி கொண்ட வா' என வியந்தார். ஏவல் செய்யுமாறு செய்து கொண்டது என்னே வியப்பு!

இறைவனே சுந்தரரைத் தன்னைக் குறித்துப் பாடல் பாடும்படி பணித்தார்.

> 'அற்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
> சொற்றமிழ் பாடுகென்றார் தூமறைபாடும் வாயார்
>
> *(பெரிய புராணம் - தடுத்தாட் - 70)*

பச்சை மால் - பச்சை நிறத்தையுடைய திருமால். கண்மலர் சாத்தி - திருமால் இறைவனைப் பூக்கொண்டு வணங்கிய போது ஒருமலர் குறைய அதனால் தன் கண்ணையே பறித்து மலராகக் கருதி இறைவனுக்குச் சாத்தி வணங்கினார்.

கழல் மலர் - திருவடித் தாமரைமலர். காண்பரிதான - காண்பு + அரிதான; காணுதற்கு அரிய. சாத்துதல் - அணிதல். கண் மலர் - கண்ணாகிய மலர்; கள்ளையுடைய மலர். தூது சென்றவை இறைவனின் திருவடிகளே, ஆதலால் அவை இறைவனைப் பணி கொண்டதாகக் கூறினார். இதனால் சொல் மலரே சிறந்தது எனக் கூறினார். (31)

## அகில காரணராய் விளங்குதல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

339. மல்லல்வளம் கனிந்தபுகழ்க் கமலேசர் திருவுருவும்
வாம பாகத்து
அல்லமர்பைங் குழலுமையாள் திருவுருவும் இருவருக்கும்
அமுத மான
கொல்அயில் வேல் பசுங்குழவி திருவுருவும் மருவுருவாம்
குணங்கள் மூன்றின்
நல்உருவா தலின் அன்றோ இவர்அகில காரணராய்
நவில்கின் றாரே. (32)

## தெளிவுரை

மிக்க வளம் பொருந்திய புகழ் மிக்க கமலேசர் திருவடிவமும், அவர்தம் இடப்பாகத்தில் இருளைப் போன்ற பசுமையான கூந்தலை உடைய உமையம்மையின் திருவடிவும், அவ்விருவருக்கும் அமுதத்தைப் போன்று விளங்கும் கொல்லும் தன்மையுடைய கூரிய வேற்படையை உடைய இளங் குழந்தை யான முருகப் பெருமானின் திருவடிவும் அருவத்தையே உருவமாகக் கொண்ட பெற்ற குணங்கள் மூன்றின் நல்ல உருவம் ஆதலால் அன்றோ இவர்கள் முக்குணம் உடைய மும்மூர்த்தி களால் உலகத்தின் படைப்பு முதலிய மூன்றும் நடைபெறுதலால் அகில காரணர் என்று கூறுகின்றனர்!

## விளக்கம்

மல்லல்வளம் - மிக்கவளம். கனிந்த - முதிர்ந்த; மிக்க. கமலேசர் - தியாகர். வாமபாகம் - இடப்பாகம். அல்அமர் பைங் குழல் - இருள் போன்ற பசுமையான கூந்தல். உமையாள் - உமையம்மையார். அமுதமான - அமுதம் போல் இனியவரான. கொல்அயில்வேல் - கொல்லும் தொழிலையுடைய கூரிய வேலாயுதம். பசுங்குழவி - பசுமையான குழந்தை; முருகப் பெரு மான். அரு உருவாம் குணங்கள் மூன்றின் நல் உரு ஆதலின் - அருவத்தையே உருவமாகக் கொண்ட குணங்கள் மூன்றின் நல்ல உருவம் ஆதலால். மூன்று நிறங்கள்: வெண்மை, நீலம், சிவப்பு. சிவபெருமானின் வெண்ணிறம் சத்துவ குணத்துக்கும், உமையம்மையின் நீல நிறம் தாமத குணத்துக்கும், முருகக் கடவுளின் செந்நிறம் ரஜோ குணத்துக்கும் உரியன. எனவே மேற் கண்டவாறு கூறினார்.

உலகப்படைப்பு, காப்பு, அழிப்பு ஆகியவை நடைபெறுவது முக்குணம் உடைய மும்மூர்த்திகளால். அம் முக்குணத்துக்கும் வடிவம் போன்ற இவர்கள் அவற்றை நடத்துவது போல் விளங்கினர். அகிலகாரணர் - உலகத்தின் படைப்பு, காப்பு, அழிப்பு ஆகியவை நடைபெறக் காரணமானவர். (32)

## நமனார் செய்த நற்றவம் பெரிது!

### நேரிசை ஆசிரியப்பா

340. நவமணி குயின்ற நாஞ்சில் சூழ் கிடக்கும்
உவளகம் கண்ணுற்று உவாக்கடல் இஃதுஎனப்
பருகுவான் அமைந்த கருவிமா மழையும்
செங்கண் மால் களிறும் சென்றன படிய
5 வெங்கண்வாள் உழவர் வேற்றுமை தெரியார்
வல்விலங்குஇடுதலின் வல்விலங்கு இதுஎனச்
செல்விலங் கிடஎதிர் சென்றனர் பற்றக்
காக பந்தரில் கைந்நிமிர்த்து எழுந்து
பாகொடும் உலாவிப் படர்தரு தோற்றம்
10 நெடுவேல் வழுதி நிகளம் பூட்டிக்
கொடுபோ தந்த கொண்டலை நிகர்க்கும்
சீர்கெழு கமலைத் திருநகர் புரக்கும்
கார்திரண் டன்ன கறைமிடற்று அண்ணல்
மூவர்என்று எண்ணநின் முதல்தொழில் பூண்டும்
15 ஏவலின் செய்தும்என்று எண்ணார் ஆகி
அடங்கா அகந்தைக்கு அறிவெலாம் வழங்கி
உடம்பு வேறா உயிர்ப்பொறை சுமந்து
நாளும் நாளும் நேடினர் திரிந்தும்
காணாது ஒழிந்ததை நிற்க நாணாது
20 யாவரும் இறைஞ்ச இறுமாப்பு எய்துபு
தேவர்என்று இருக்கும் சிலர்பிறர் தவத்தினும்
மிகப்பெருந் தொண்டரொடு இகலிமற்று உன்னொடும்
பகைத்திறம் பூண்ட பதகனே எனினும்
நின்திருப்பாதம் நேர்வரக் கண்டு
பொன்றின னேனும் புகழ்பெற் றிருத்தலின்
இமையா முக்கண்எந் தாய்க்கு
நமனார் செய்த நல்தவம் பெரிதே. (33)

## தெளிவுரை

வயிரம் முதலிய ஒன்பது வகைப்பட்ட மணிகள் அழுத்தப் பட்ட மதில் சூழப்பெற்ற அகழியைப் பார்த்து இது நீர் நிறைந்த கடலாகும் என்று எண்ணி மின் தொகுதியையுடைய மேகக் கூட்டமும் சிவந்த கண்களையுடைய யானைகளும் நீர் அருந்துவதற்காகப் போய்ப் படிந்தன. அதனால் கொடுமை யுடைய வாளையுடைய வீரர் அவ்விரண்டுக்கும் வேற்றுமை தெரியாமல் வலிய விலங்கைப் பூட்டினர். வலிய விலங்கான யானை இது என்று அறிந்து மேகம் நீங்க, காகங்கள் ஒன்றாகக் கூடிப் பரவியுள்ள பரப்பில் - பந்தலில் - மேகமானது நிமிர்ந்து பாகருடன் சென்றது. அக்காட்சி நீண்ட வேலையுடைய உக்கிர குமார பாண்டியன் விலங்கைப் பூட்டிக் கொண்டு வந்த மேகம் போல் விளங்கியது. இத்தகைய இயல்புடைய திருவாரூர்த் திருநகர் காக்கும் மேகம் திரண்டது போல் விளங்கும் கரிய நஞ்சுக் கறையுடைய சிவபெருமான் நின்னொடு சேர்ந்து மூவர் என்று எண்ணும்படி சங்காரத் தொழிலுக்கு முற்பட்ட படைப்பு காத்தல் ஆகியவற்றை மேற்கொண்டும் ஏவலரால் அவற்றை நடத்து கிறோம் என்று எண்ணாமல், தம் அறிவையெல்லாம் அடங்காத அகந்தைக்கு இடம் தந்து (செருக்குக் கொண்டு) உடம்புகளை வெவ்வேறாக உயிர்ச்சுமைகளைச் சுமந்து நாளும் நாளும் தேடித் திரிந்தும் காணாது கைவிட்டனர். அங்ஙனமாக, நாணம் இல்லாது எல்லாரும் வணங்க இறுமாப்பு அடைந்து, தேவர் என்ற பெயர் பூண்ட பிற சிலர் நான்முகன் திருமால் ஆகிய இருவர், தவத்தாலும் மிகப் பெருந் தொண்டரொடு மாறுபட்டு அதனுடன் அமையாது உன்னுடனும் பகைமை கொண்ட பாவியாயினும், நின் திருவடியில் நேரே வரப்பெற்று இறந்தானாயினும் புகழ் பெற்று விளங்குகிறான். ஆதலால் இமைக்காத மூன்று கண்களையுடைய எம் தந்தையான நினக்கு இயமன் செய்த நல் தவம் மிகவும் பெரிதாகும்.

## விளக்கம்

நவமணி - ஒன்பது வகைப்பட்ட மணி; அவை வருமாறு: 1. கோமேதகம், 2. நீலம், 3. பவளம், 4. புட்பராகம், 5. மரகதம், 6.

மாணிக்கம், 7. முத்து, 8. வைடூரியம், 9. வைரம். இந்நவமணிகள் மதிலில் பதிக்கப் பெற்றிருந்தன என்பது திருவாரூரின் செல்வ வளத்தை உணர்த்தும்.

குயின்ற - பதித்த. நாஞ்சில் - மதில். உவளகம் - அகழி. உவாக்கடல் - நீர் நிறைந்த கடல். பருகுவான் - குடிக்க. அமைந்த - பொருந்திய; முயன்று. கருவிமாமழை - மின்னல் முதலிய தொகுதி களையுடைய கரிய மேகம். செங்கண் மால் களிறு - சிவந்த கண்களையுடைய யானை. சென்றன படிய - சென்று பொருந்த. வெங்கண் வாள் உழவர் - கொடுமையுடைய வாளை ஏந்திய வீரர்.

வேற்றுமை தெரியார் - வேற்றுமையை உணராதவராய்.

மேகத்துக்கும் விலங்குக்கும் வேறுபாடு அறியாதவராய்.

வல்விலங்கு இடுதலின் - வலிய விலங்கைப் பூட்டுதலால். வல்விலங்கு - கொடிய மிருகம். இதுஎன - இது என்று எண்ணி. செல்விலங்கிட - மேகமானது நீங்கிப் போக. எதிர் சென்றனர் பற்ற - எதிரே போய்ப் பற்றிட. காக பந்தரின் - காகங்களால் இடப்பட்ட பந்தலைப் போன்று. கைந்நிமிர்ந்து எழுந்து - கைந் நிமிர்ந்து எழுந்து போய். பாகொடும் - பாகனோடும். உலாவி - திரிந்து. படர்தரு தோற்றம் - வானத்தில் மேகம் செல்லும் காட்சி.

வழுதி - உக்கிரகுமார பாண்டியன். நிகளம் - விலங்கு. கொடு போதந்த - கொண்டு வந்த. கொண்டலை - மேகத்தை.

யானைக்கும் மேகத்துக்கும் வேற்றுமை தெரியாமல் இரண்டுக்கும் விலங்கை இட்டனர். மேகம் நீங்கிச் சென்றது. அம்மேகம் காகப் பந்தரில் பாகனொடும் உலவும் காட்சி உக்கிர குமார பாண்டியன் விலங்கை இட்டு மேகத்தைக் கொணர்ந்தது போல் விளங்கியது என்றார்.

உக்கிர குமார பாண்டியன் மேகத்துக்கு விலங்கிட்டு அழைத்து வந்தது திருவிளையாடற்புராணத்தால் அறியலாகும்.

கார்திரண்டன்ன - கருமை ஒன்றாகச் சேர்ந்தாற் போல்.

திருநகர் புரக்கும் அண்ணல் என்றார் இறைவரின் ஆட்சி நடைபெறுவதால்.

கறைமிடற்று அண்ணல் - நஞ்சுக் கறையுடைய சிவ பெருமான். அண்ணல் - பெருமையுடையவன். முதல்தொழில் - அழித்தல் தொழிலுக்கு முற்பட்ட படைத்தல் காத்தல் செயல்கள். ஏவலின் செய்தும் என்று எண்ணாராகி - இறைவன் ஏவலால் இதைச் செய்கின்றோம் என்று திருமாலும் நான்முகனும் நினைக் காதவராகி.

அடங்கா அகந்தை - மேலும் மேலும் எழும் செருக்கு. உயிர்ப்பொறை - உயிரின் சுமையான உடல்.

யாவரும் தம்மை வணங்குதலால் தாம் சிவனை ஒத்தவர் என்று இறுமாப்புக் கொண்டனர் நான்முகனும் திருமாலும். சிலர் - நான்முகன், திருமால்.

ஒழிந்ததை - ஒழிந்தது + ஐ; கைவிட்டது. ஐ - சாரியை.

எய்துபு - அடைந்து; 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். இகலி - மாறுபட்டு. பதகன் - கொடியவன்; கீழானவன். பொன்றினனேனும் - இயமன் அழிந்தான் என்றாலும். இயமன் தண்டனையாகவேனும் நின் திருவடியின் தொடர்புடையவன் ஆதலால் அவன் செய்த தவம் பெரிது என்றார்.

தொண்டர் - மார்க்கண்டேயர். நமனார் - கூற்றுவன். (33)

## முக்கட் கரும்பே நற்கரும்பு

### நேரிசை வெண்பா

341. நற்கரும்பு முக்கண் கரும்புஎன்னும் நங்கைமீர்
விற்கரும்பன் கைக்கரும்போ வேம்புஎன்னும் - சொற் கரும்பின்
வாமக் கரும்பு மனைக்கரும்பாம் ஆரூரர்
காமக் கரும்பும் கரும்பு. (34)

### தெளிவுரை

செவிலித்தாய் கூற்று:

நங்கைமீர்! சொல்லாகிய கரும்பையுடைய இடப்பாகத்தில் உள்ள கரும்பு போன்றவளாகிய உமையம்மையையுடையவரான ஆரூர்ப்பெருமான், மீதுகொண்ட காமத்தின் பொருட்டு அரும்பிய கரும்பு போன்ற இவள் 'நல்ல கரும்பாவது மூன்று கண்களை யுடைய கரும்பே ஆகும் என்று உரைப்பர். கரும்பு வில்லை யுடைய மன்மதன் கையில் உள்ள கரும்போ வேம்பு (கசக்கிறது)' என்கின்றாள் என்று செவிலித் தாய் பிற பெண்டிரைப் பார்த்துக் கூறினாள்.

### விளக்கம்

முக்கண் கரும்பு - மூன்று கண்களையுடைய கரும்பு. கைக்கரும்போ வேம்பென்னும் - மன்மதனின் கையில் உள்ள வில்லாகிய கரும்பை வேம்பு என்று கூறுவாள்; அதாவது அதை வெறுக்கின்றாள். சொற்கரும்பின் வாமக்கரும்பு - சொல்லாகிய கரும்பையுடைய இடப்பாகத்தில் உள்ள கரும்பைப் போன்ற உமையம்மையார்.

காமக் கரும்புங்கரும்பு - ஆரூரரின் காமத்தின் பொருட்டு அரும்பிய கரும்பைப் போன்ற தலைவி. (34)

## இறைவனின் செயல்களுக்குக் காரணம்!

### கட்டளைக் கலித்துறை

342. கரும்புற்ற செந்நெல் வயற்கம லேசர்கண் டார்க்கும் அச்சம்
தரும்புற்றினில்குடி கொண்டிருந் தாரது தானுமன்றி
விரும்புற்று மாசுணப் பூணணிந் தார்வெவ் விடமும் உண்டார்
சுரும்புற்ற கார்வரைத் தோகைபங் கான துணிவு கொண்டே. (35)

**தெளிவுரை**

கரும்பைப் போன்ற நெல் வயலையுடைய திருவாரூர்ப் பெருமான் கண்டவர்க்கு அச்சம் அளிக்கும் புற்றில் குடி கொண்டிருந்தார். அதுவே அல்லாது பாம்பாகிய அணியை அணிந்தார். கொடிய பாற்கடலில் தோன்றிய நஞ்சையும் உண்டார். காரணம், வண்டுகள் மொய்க்கும் கரிய மலையில் வாழும் இயல்புடைய மயில் போன்ற உமையாள் ஒரு பங்காக இருக்கின்றாள் என்ற துணிவால்!

**விளக்கம்**

கரும்பு உற்ற செந்நெல் - கரும்பைப் போன்ற செந்நெல்; உற்ற - உவம உருபு.

இறைவன் தம் ஒருபாதியில் மயில் போன்றவள் இருக்கும் துணிவால் புற்றில் குடி கொண்டிருந்தார். அதுவன்றிப் பாம்பை அணியாக அணிந்தார். பாற்கடலில் தோன்றிய நஞ்சையும் உண்டார். மயிலின் முன் பாம்பு அடங்கும் என்பதால் இங்ஙனம் எம்பெருமான் செய்தார் என்க.

விரும்புற்று - விரும்பி. மாசுணப் பூண் - பாம்பாகிய அணி. வெவ்விடம் - பாற்கடலில் தோன்றிய கொடிய நஞ்சு. சுரும்புற்ற - வண்டுகள் மொய்க்கின்ற. கார் வரை - கரிய மலை. தோகை - மயில் போன்ற உமையாள். பங்கான துணிவு கொண்டே - ஒரு பாதியில் இருக்கும் தைரியத்தால். (35)

## ஒரு தலைவியின் செயல்

### எழுசீர்ச் சந்த விருத்தம்

*(தோழிகூற்று; செவிலி கூற்றுமாம்)*

343. கொண்டலை அலைத்த பல தண்டலை உடுத்தஅழகு
கொண்டக மலைப்ப தியுளார்க்கு
கண்டபின் எனக்குஇதழி தந்தனர் எனப்பசலை
கண்டுஉயிர் தளிர்த்த மடவாள்

அண்டர்அமுது ஒத்த அமு தந்தனை இருள்கடுவிது
அன்பரர் உண்மிச்சில் கொல்எனா
உண்டிடும் உளத்தில்அவர் உண்குவள் என்மிச்சில் என
உண்டதை மறுத்து மிழுமே. (36)

## தெளிவுரை

மேகத்தை ஊடுருவிச் சென்று வருத்திய பல சோலைகள் சூழப்பெற்ற அழகுடைய திருவாரூரில் வீற்றிருக்கின்ற தியாகப் பெருமானைக் கண்ட பின்பு எனக்குக் கொன்றை மாலையை அளித்தார் என்று பசலை கொண்டு உயிர் தழைக்கப் பெற்ற மங்கை யானவள்; தேவரின் அமுதத்தைப் போன்ற உணவைக் கரிய நஞ்சு என எண்ணி அது எம் பெருமான் உண்டதாகலின் அதனை உண்ணத் தக்கது என்று உண்டவள், என் மனத்தில் அவர் இருத்தலின் அவரும் இதனை உண்பர். யான் உண்டது எச்சிலாதலின் அவர் உண்ணுதல் தகாது என்று மீண்டும் அவ்வுண்ட உணவை உமிழ்ந்து விடுவாள் என்று தோழி தலைவியைப் பற்றிக் கூறினாள்.

## விளக்கம்

இச்செய்யுள் தோழி கூற்று என்னும் துறை; செவிலி கூற்றுமாம்.

இறைவனைக் கண்டு காதல் கொண்ட தலைவியின் செயலை இச்செய்யுள் விளக்குகிறது. தலைவனைக் கண்டபின் அவரது பிரிவால் அவளுக்குப் பசலை ஏற்பட்டது. அதைத் தலைவி இறைவன் தனக்குத் தந்த கொன்றை மாலை என்று எண்ணினாள்; மகிழ்ந்தாள்.

கொண்டலை - மேகத்தை. அலைத்த - வருத்திய. தண்டலை - சோலை. உடுத்த - சூழ்ந்த. கமலைப்பதியுளார் - திருவாரூரில் வீற்றிருக்கின்ற இறைவன். கண்ட பின் - பார்த்த பின்பு. எனக்கு இதழி தந்தனர் - எனக்குக் கொன்றை மாலையைத் தந்தார். பசலை கண்டு உயிர் தளிர்த்த மடவாள் - சிவபெருமானைக் கண்டவள்

அவர் மீது காதல் கொண்டாள். பின் அவர் கூடாததால் பசலை அவளுக்கு ஏற்பட்டது. அப்பசலை பொன்னிறமானது. ஆதலால் அதைச் சிவபெருமான் தனக்குத் தந்த கொன்றை மாலை என்று எண்ணி மகிழ்ந்தாள். பசலை பொன் நிறம் உடையது. எனவே அது கொன்றை மாலையாய் அவளுக்குத் தோன்றியது. தளிர்த்த - மகிழ்ந்த.

காதல் கொண்டவர்க்கு உணவு உண்ணுதல் நஞ்சு உண்பது போல்! அதனை உண்ண வெறுப்பர். இதே நிலை இம்மங்கைக்கு ஏற்பட்டது. அதனால் தேவரின் அமுதம் போன்ற உணவை நஞ்சு என வெறுத்தாலும் அதனைச் சிவபெருமான் உண்டதால் அஃது உண்ணத்தக்கதே என உண்ணலானாள். இறைவன் தன் நெஞ்சத்தில் இருப்பதால் தான் உண்ணும் உணவை இறைவனும் உண்பார். தான் உண்ட பின் அது எச்சில் ஆயிற்றே! அதை அவர் உண்ணக் கூடாது என்று உண்ட உணவை உமிழ்ந்து விடுவாள்.

அண்டர் - தேவர். அமுது ஒத்த அமுதம் - அமுதம் போன்ற உணவு. இருட்கடு - கரிய நஞ்சு. அன்பர் - தியாகேசர்.

> 'நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
> அஞ்சுதும் வேபாக் கறிந்து'

என்னும் குறள் கருத்து இங்கு ஒப்பிடத் தக்கது.

அன்பர் - காதலர்; இறைவர். உண்மிச்சில் - உண்ணும் எச்சில். உண்குவர் - உண்பார். உண்டதை - உண்ட உணவை. மறுத்து - மீண்டு. உமிழும் - உமிழ்ந்து விடுவாள். (36)

## அன்பர்கட்கு அளியர்

### நேரிசை ஆசிரியப்பா

344. உமிழ்தேன் பிலிற்றும் ஒள்இணர்க் கூந்தல்
அமிழ்துஉகு மழலை அம்மென் தீஞ்சொல்
சில்லரித் தடங்கண் மெல்லியல் ஒருத்தி
வரிசிலைத் தடக்கைக் குரிசில்மற் றொருவன்

5 பொன்நெடு மார்பில் பொலன்கலன் இமைப்பத்
தன்உருத் தோற்றம் தரிக்கலள் வெகுண்டு
மாலாயி னன்என வணங்கினன் இரத்தலின்
தோலா மொழியை வாழியை பெரிதுஎனப்
புலந்தனள் எழுதலும் கலங்கினன் வெரீஇக்
10 கண்மலர் சிவப்ப மெய்பசப்பு எய்தலின்
தானும் மாலாம் தன்மையள் கொல்எனத்
தேறினன் தாழ்ந்து சிலம்படி திருத்திப்
பஞ்சியிற் பொலிந்த குஞ்சியன் இரப்பக்
கூடினள் அல்லள் கூடாள் அல்லள்
15 கைம்மிகு சீற்றமும் காதலும் அலைப்ப
வெள்ளப் புணர்ச்சியின் வேட்கை உள்அடக்கி
உள்ளப் புணர்ச்சியள் ஊடினள் நிற்பது
தாதுஅவிழ் தெரியல் சாக்கியர் பெருமான்
காதலுள் கிடப்பக் கல்எறிந் தற்றே
20 இத்திற மகளிர் இளைஞரோடு ஆடும்
நித்தில மாடம் நீள்மறு குடுத்த
அம்மா முகில்தவழ் மணிமதில் கமலைப்
பெம்மான் அருமைப் பெருமாள் ஆயினும்
ஊன்உண் வாழ்க்கைக் கானவர் குருசில்
25 செஞ்சிலை சுமந்த கருமுகில் ஏய்ப்ப
உண்டுஉமிழ் தீநீர் உவந்தனர் ஆடியும்
விருப்புஅடிக் கொண்ட மிச்சில்ஊன் மிசைந்தும்
செருப்படிக்கு அடிகள் செம்மாந் திருந்தும்
தொல்புகழ் விசயன் வில்லடி பொறுத்தும்
30 அருந்தமிழ் வழுதி பிரம்புஅடிக்கு உவந்தும்
நள்இருள் யாமத்து நாவலர் பெருமான்
தள்ளாக் காதல் தணித்தற்கு அம்ம
பரவை வாய்தலில் பதமலர் சேப்ப
ஒருகால் அல்ல இருகால் நடந்தும்
35 எளியரின் எளியர் ஆயினர்
அளியர் போலும் அன்பர்கள் தமக்கே. (37)

### தெளிவுரை

(1-19) வெளிப்படும் தேனைச் சிந்தும் மலரை அணிந்த கூந்தல், அமிழ்தத்தை வெளிப்படுத்தும் மழலை, அழகிய மென்மையான இனிய சொல், சிலவாகிய வரிகளையுடைய பெரிய விழி மென்மை பொருந்திய தலைவி ஒருத்தி, கட்டப்பட்ட வில்லை உடைய பெருங்கை பொருந்திய தன் தலைவரான ஆண்மகன் ஒருவனின் மார்பில் பொன்னால் ஆன அணி ஒளிவிட, அதில் அவளது உருவம் தோன்றியது. அதை வேறொருத்தி தன் காதலனின் மார்பில் உள்ளதாக எண்ணிப் பொறுக்க மாட்டாமல் சினந்தாள். இவன் வேறொருத்தியிடம் காதல் கொண்டான் என்று ஊடல் கொண்டாள். அவன் அவளது ஊடலைக் கண்டு வணங்கித் தான் தவறு செய்யவில்லை என்று கூறித் தன்னை மன்னிக்குமாறு சொல்லி 'மாலாயினேன்' என்றான். அதைக் கேட்ட அத்தலைவி அவன் தன் மார்பில் திருமாலைப் போல் ஒரு பெண்ணை வைத்துள்ளான் என எண்ணி ''நீ சொன்னது உண்மையே. நீ பொய்யே கூறாத இயல்புடையை வாழி'' என்று சொல்லிச் சினந்தாள்; எழுந்தாள். அதைக் கண்டு கலக்கம் கொண்டு அஞ்சிக் கண் சிவந்தாள். உடல் பசப்பு அடைந்தாள். அதனால் அவள் கண் சிவந்ததாலும் மெய்யில் பசப்பு உண்டான தாலும் திருமால் ஆயினாளோ என்று அத்தலைவன் ஐயம் கொண்டான். அதனால் அவளை வணங்கிச் சிலம்பு அணிந்த அடியைத் தொட்டுத் தடவிச் செம்பஞ்சுக் குழம்பினால் சிறந்து விளங்கும். தலை மயிரையுடைய அவன் பின்னும் இரந்து நின்றான். அவனுடன் உடல் புணர்ச்சியை மேற்கொள்ளவில்லை. உள்ளப் புணர்ச்சியால் அவனுடன் கூடாதவளும் அல்லள். அளவு கடந்த சினமும் காதலும் அவளை வருத்தின. அதனால் வெள்ளம் போன்ற உடல் புணர்ச்சி ஆசையை உள்ளத்துள் அடக்கிக் கொண்டு உள்ளப் புணர்ச்சியால் ஊடி - சினந்து நின்றாள். அங்ஙனம் நிற்பது, மகரந்தம் சிந்தும் மாலையைச் சூடிய சாக்கிய நாயனார், சிவபெருமானிடம் கொண்ட பக்தி மனத்துள் கிடக்க, அப்பெருமான் மீது கல்லை எறிந்ததை ஒத்ததாகும்.

(20-36) இத்தகைய மகளிர் இளைஞரான ஆடவருடன் ஆடும் இயல்புடைய முத்துக்கள் பதிக்கப் பெற்ற மாளிகைகள் பொருந்திய நெடிய தெருக்கள் பொருந்தியுள்ள கரிய பெரிய மேகம் தவழ்கின்ற மணிகள் பதிக்கப் பெற்ற மதிலால் சூழப் பெற்ற திருவாரூர்ப் பெருமான். அருமைப் பெருமாள் என்ற பெயர் உடைய தியாகர் ஆயினும், ஊனுண்டு வாழ்கின்ற வாழ்க்கையை யுடைய வேடவரான கண்ணப்ப நாயனார் - சிவந்த வில்லை யுடைய கரு மேகத்தைப் போன்றவர், தம் வாயால் உண்டு உமிழ்ந்த இனிய நீர்க்கு மகிழ்ந்து ஆடினர்.

அன்பை அடிப்படையாகக் கொண்டு எச்சிலான அக் கண்ணப்பர் படைத்த ஊனையும் உண்டார்.

அவர்தம் செருப்பணிந்த காலைத் தம் மீது வைத்ததற்கு மகிழ்ந்தும் விளங்கினார்.

பழைய புகழ் கொண்ட விசயன் வில்லால் அடித்த அடியையும் பொறுத்துக் கொண்டார்.

அரிய தமிழை விரும்பும் பாண்டியன் அடித்த பிரம்படிக்கு மகிழ்ச்சியும் கொண்டார்.

நடுஇரவில் நடுச் சாமத்து நாவலர் பெருமானான சுந்தர மூர்த்தி நாயனார் குறையாத காதலைத் தணித்தற்காக அவர்தம் மனைவி பரவை நாச்சியார் வீட்டு வாயில் தம் தாமரை மலர் அடிசிவப்ப, ஒருமுறை அல்ல இருமுறை நடந்து போனார்.

இவற்றால் தியாகர் அன்பு கொண்ட எளியவர்க்கு எளியராய் ஆயினார். எனவே அவர் அன்பர்களுக்கு அருமைப் பெருமாளாயினும் எளியர் போலும்!

**விளக்கம்**

பிலிற்றும் - சிந்தும். ஒள் இணர் - ஒளியுடைய பூங்கொத்து. அமிழ்து உகு - அமிழ்தத்தை வெளிப்படுத்தும். மழலை அம் மென் தீஞ்சொல் - மழலைச் சொல்லைப் போன்ற அழகிய மென்மை

யான இனிய சொல். சில்லரி - சில வரிகளை உடைய. தடங்கண் - பெரிய கண். ஒருத்தி - ஒரு மங்கை; இது எழுவாய்.

வரிசிலை - கட்டப்பட்ட வில். தடக்கை - பெரிய கை. குரிசில் - மற்று ஒருவன் ஆன தலைவன். மற்று - அசைநிலை.

பொன்நெடுமார்பு - அழகிய பெரிய மார்பு; பொன் அணி அணிந்த மார்புமாம். பொலன் கலன் - பொன் அணி. இமைப்ப - ஒளிர. தன் உருத் தோற்றம் தரிக்கலள் - அத்தலைவன் மார்பில் உள்ள அணியில் மங்கையின் உருவம் பிரதிபலித்தது. அதனை அவள் வேறொரு பெண் என எண்ணிப் பொறுத்துக் கொள்ள முடியாதவளாய்.

வெகுண்டு - சினம் கொண்டு. மாலாயினன் - வேறொரு பெண்ணை விரும்பியதாக எண்ணி ஊடல் கொண்டாள். அதைக் கண்ட தலைவன் நான் நின்னிடம் காம மயக்கம் அடைந்தேன் என்ற பொருள்பட 'மாலாயினன்' என்றான். அது கேட்ட தலைவி அவன் தன் மார்பில், 'திருமாலைப் போல் ஒரு பெண்ணை வைத்திருக்கிறான்' என்று எண்ணி, ''நீ சொன்னது உண்மையே. நீ பொய்யே கூறாத இயல்பு உடையாய்'' என்று சொல்லிச் சினந்தாள்.

வணங்கினன் இரத்தலின் - வணங்கி வேண்டியதால்.

தோலா மொழியை - தோல்வி இல்லாத சொல்லை உடையாய்; உண்மையான மொழியை உடையாய். (இது இகழ்ச்சிக் குறிப்பு)

மாலாயினேன் - திருமாலாயினேன் என்பது அவனது உட்கோள் பொருள்.

புலந்தனள் - ஊடல் கொண்டு; முற்றெச்சம். கலங்கினன் வெரீஇ - கலங்கி அஞ்சி.

கண்மலர் சிவப்ப - விழியான மலர் சிவக்க. மெய் பசப்பு எய்தலின் - உடல் பசலையை அடைந்ததால். தானும் மாலாந் தன்மையள் கொல் - அவளும் திருமாலாயினளோ.

கண் சினத்தால் சிவந்தது. மெய் தலைவனின் பிரிவால் பசலை அடைந்தது. எனவே கண் சிவப்பும் உடல் பசப்பும் அவளும் திருமால் ஆயினாளோ என்ற ஐயத்தை உண்டாக்கியது.

தேறினன் தாழ்ந்து - எண்ணி வணங்கி. சிலம்படி - சிலம்பு அணிந்த அடி. திருத்தி - அடி வருடி. பஞ்சியின் பொலிந்த குஞ்சியன் இருப்ப - அம் மங்கையின் காலில் அவன் விழுந்து வணங்கியதால் அவ்வடியில் உள்ள செம்பஞ்சுக் குழம்பு படிந்த தலைமயிரை உடையவனாய் யாசிக்க.

கூடினள் அல்லள் - கூடவில்லை; கூடலாள் அல்லள் - கூடாதவளாயும் இல்லை. அதாவது உடலால் கூடவில்லை; உள்ளத்தால் அவனைக் கூடினாள்

கைம்மிகு சீற்றம் -கையைக் கடந்த சினம்; அளவற்ற சினம். அலைப்ப - வருத்த.

வெள்ளப் புணர்ச்சியின் வேட்கை உள் அடக்கி - வெள்ளத்தைப் போல் எழும் புணர்ச்சி ஆசையைத் தன் மனத்துள் அடக்கி.

உள்ளப் புணர்ச்சியாள் - மனம் ஒத்து நிற்றல். சினம் கொண்டதால் மெய்யுறு புணர்ச்சியை ஒழித்தாள்; காதல் அலைத்ததால் உள்ளப் புணர்ச்சியை உடையவள் ஆயினாள்.

ஊடினள் நிற்பது - ஊடல் கொண்டு நிற்பது. ஊடினள் - முற்றெச்சம். தாது அவிழ் - மகரந்தம் சிந்தும். தெரியல் - மாலை. சாக்கியர் பெருமான் - சாக்கிய நாயனார். அவர் சிவலிங்கத்தின் மீது கல் எறிந்தவர்.

காதல் உள்கிடப்ப - அன்புப் பெருக்கு உள்ளத்தில் இருக்க. கல் எறிந்தற்றே - இறைவனான சிவலிங்கத்தின் மீது கல் எறிந்தாற் போன்றது.

தலைவி மனத்துள் தலைவன் மீது அன்பு கொண்டிருந்தும் சினம் கொண்டு நிற்பது, சாக்கிய நாயனார் மெய்அன்பு உள்ளத்தில் கொண்டிருந்தும் கல் எறிந்தது போன்றதாகும் என இயைகின்றது. நிற்பது கல் எறிந்தற்று எனக் கூட்டுக.

கமலைப் பெம்மான் அருமைப் பெருமாளாயினும் - திருவாரூர்த் தியாகர் அருமைப் பெருமாள் ஆயினும். மேற்கண்ட வண்ணம் செல்வச் சிறப்பால் அருமை உடையவராயினும், 'அருமைப் பெருமாள்' என்பது தியாகரின் திருநாமங்களுள் ஒன்று.

கானவர் குருசில் - வேடர் தலைவனான கண்ணப்ப நாயனார். அவர் ஊனை உண்ணும் இயல்பினர் - ஆதலால் 'ஊனுண் வாழ்க்கைக் கானவர் குருசில்' எனக் கூறப் பெற்றார்.

செஞ்சிலை சுமந்த கருமுகில் ஏய்ப்ப - சிவந்த வில்லைக் கையில் கொண்டுள்ள கரிய மேகத்தைப் போல.

கண்ணப்ப நாயனார் காளத்தி மலையில் இறைவனைக் கண்டார். அவரை நீராட்டுதற்குத் தம் வாயில் நீர் கொண்டு திருமுழுக்காட்டினார். அதை இறைவர் விரும்பி ஏற்றுக் கொண்டார். 'ஆதலால்' உண்டு உமிழ் தீ நீர் உவந்தனர் ஆடியும் என்றார்.உண்டு உமிழக் கூடிய இனிய நீர். உவந்தனர் ஆடியும் - விரும்பி நீராடியும். விருப்புக் கொண்ட - அன்பினை அடியாகக் கொண்ட. மிச்சில் ஊன் - எச்சிலான ஊன். மிசைந்தும் - உண்டும்.

கண்ணப்பர் தாம் இறைச்சியைச் சுவைத்துப் பார்த்து அதில் சுவையுள்ளதை இறைவர்க்குப் படைத்தார். ஆதலால் அது 'மிச்சில் ஊன்' (எச்சிலான ஊன்) எனப்பட்டது.

செருப்படிக்கு அடிகள் செம்மாந்திருந்தும் - கண்ணப்ப நாயனார் தம் இரண்டாம் கண்ணைத் தோண்டும் போது செருப்பணிந்த காலை அடையாளத்துக்காகச் சிவலிங்கத்தின் மீது வைத்தார். அடிகள் - இறைவர். செருப்பு அடிக்கு - செருப்பு அணிந்த காலுக்கு. செம்மாந்து இருத்தல் - விரும்பியிருத்தல். விசயன் - அருச்சுனன்; அவன் ஒரு காட்டில் பன்றியை வீழ்த்தினான். வேடராக அங்கு வந்த இறைவரும் அதன் மீது அம்பு எய்தார். இருவரும் தாம் தாம் அதை வீழ்த்தியதாகக் கூறினர். சினம் கொண்ட அருச்சுனன் வேடராக வந்த இறைவரை வில்லால் அடித்தான். அது இங்கே 'விசயன் வில்லடி பொறுத்தும்' எனக் கூறப்படுகின்றது. பொறுத்தும் - பொறுத்துக் கொண்டும்.

வழுதி பிரம்படிக்கு உவந்தும் - பாண்டியன், கூலியாளாய் வந்து கரை அடைத்த இறைவனைப் பிரம்பால் அடித்தான். இறைவர் வந்தி என்ற கிழவியின் வையைக்கரைப் பங்கை அடைக்க வந்தார். வந்தவர் கரையை அடைக்காமல் விளையாடிக் கொண்டிருந்தார். ஆதலின் சினம் கொண்ட பாண்டியன் அவரைப் பிரம்பால் அடித்தான். அதனையும் இறைவர் விரும்பி ஏற்றுக் கொண்டார். நள்ளிருள் யாமம் - இரவின் நடுச்சாமம். நாவலர் பெருமான் - சுந்தர மூர்த்தி நாயனார். தள்ளாக் காதல் தணித்தற்கு - குறைவு படாத நீக்கித்தள்ள முடியாத சுந்தரரின் காதலைத் தணிப்பதற்காக. அம்ம - அசை.

பரவை வாய்தல் - பரவை நாச்சியாரின் வீட்டு வாயில். சுந்தரர்க்காக இறைவர் பரவை நாச்சியாரின் ஊடலைத் தணிக்க அவர் மனைவாயிலுக்குச் சென்றார். வாய்தல் - வாயில். பதமலர் - திருவடித் தாமரை. சேப்ப - சிவக்க. ஒருகால் - ஒருமுறை. இருகால் - இருமுறை. எளியரின் எளியர் ஆயினர் - எளியவர்க்கு எளியவராய் ஆனார். அளியர் - எளியர்; இரங்கத் தக்கவர்; கருணை உடையவர். (37)

## தனியாய் நீராடுவோம்

### நேரிசை வெண்பா

345. தம்மேனி வெண்பொடியால் தண்அளியால் ஆரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே - அம்மேனி
மானே யமுனையந்த வாணிநதி யும்குமரன்
தானே குடைவேம் தனித்து. (38)

**தெளிவுரை**

இறைவர் தம் மேனியில் அணியப் பெற்ற திருநீற்றினாலும் குளிர்ந்த கருணையாலும் அவர் மேனி சிவந்ததாயினும் கங்கை நதியேயாகும். அழகிய திருமேனியையுடைய மான் போன்ற உமை யம்மையார் யமுனை ஆற்றை ஒப்பாள். சிவந்த நிறம் உடைய முருகப் பெருமான் அச்சிவப்பு நிறம் கொண்ட வாணி என்ற நதியைப் போன்றவன் ஆவான். இம்மூன்று நதிகளும்

திரிவேணி சங்கமமாக இருத்தலால் இதில் நாம் தனித்து நீராடுவோம்.

**விளக்கம்**

திரிவேணி சங்கமம் என்பது கங்கை, யமுனை, வாணி ஆகிய மூன்றும் கலக்கும் இடம் ஆகும். அது புண்ணியம் மிகவுடையது. அது போல் இம்மூவரும் திரிவேணி சங்கமம் போல விளங்குதலால் அதில் 'நீராடுவோம்' என்றார்.

மூவரையும் ஒருங்கே தியானிப்போம் எனச் சுட்டியவாறு.

வெண்பொடி - திருநீறு. தண் அளியால் - குளிர்ந்த கருணையால். கங்கைக்கு வெண்மை நிறமும் குளிர்ச்சியும் உண்டு. ஆதலால் வெண்ணீறும் கருணையும் உடைய இறைவர் திருமேனி கங்கை ஆறாகக் கூறப்பட்டது. அம்மேனி - அழகிய மேனி. மானே - மானைப் போன்ற உமையம்மை. வாணி நதி - சரசுவதி நதி; வாணி - சரசுவதி. குமரன் - முருகப் பெருமான். குடைவேம் - நீராடுவோம்.

உமையம்மையின் மேனி நீலநிறம் கொண்டது. எனவே அவள் நீலநிறம் உடைய யமுனை ஆறாகக் கூறப்பட்டாள். குமரன் செம்மேனியன். வாணி நதி சிவந்த நிறம் உடையது. ஆதலால் குமரன் வாணி நதியாகக் கூறப்பட்டான்.

தனித்து - தனியாய்; மனம் இறைவரிடம் ஈடுபடும் போது தனித்து ஈடுபடல் வேண்டும் என்பது சொல்ல வேண்டியதில்லை.

(38)

## பெருமானின் சடை

### கட்டளைக்கலித்துறை

346. தன்ஒக்கும் செல்வக் கமலைப் பிரான்செஞ் சடாடவி மற்று
என் ஒக்கும் என்னின் எரிஒக்கும் கொன்றை எரியில் இட்ட
பொன்ஒக்கும் வண்டு கரி ஒக்கும் கங்கைஅப் பொன் செய்விக்கும்
மின் ஒக்கும் பொன்செய் கிழக்கொல்லன் ஒக்கும் அவ்
வெண்பிறையே. 39

**தெளிவுரை**

தன்னைத் தானே ஒக்கும் செல்வச் சிறப்பையுடைய திருவாரூர்ப் பெருமான் சிவந்த சடையாகிய காடு எதைப் போன்றது என்றால் அது தீயைப் போன்றதாகும். அவர் திருமுடியில் அணியப் பெற்ற கொன்றை மலர் தீயில் இடப்பட்ட பொன்னைப் போன்றதாகும். கொன்றை மலரில் மொய்க்கும் வண்டுகள் கரியைப் போன்றவையாகும். அங்கே உள்ள கங்கை மங்கை யானவள் பொன் அணியைச் செய்து கொள்ளும் பெண்ணைப் போன்றவள் ஆவாள். அச்சடையிலுள்ள வெண்மையான பிறைச் சந்திரன் கிழக் கொல்லன் ஆவான்.

**விளக்கம்**

தன் ஒக்கும் செல்வக் கமலை - தன்னைத் தானே ஒத்து விளங்கும் செல்வத்தையுடைய திருவாரூர். செஞ்சடாடவி - செம்மை + சடை + அடவி; சிவந்த சடை. என் ஒக்கும் - எது போன்று விளங்கும்?

சிவபெருமான் சடையில் மாலையாக அணிந்த கொன்றைமலர் தீயில் அணி செய்யும் பொருட்டு இடப்பட்ட பொன்னை ஒக்கும். ஆதலால் 'எரியொக்கும் கொன்றை எரியில் இட்ட பொன் ஒக்கும்' என்றார். நிறத்தால் உவமை கூறப்பட்டது.

கொன்றை மலரில் மொய்க்கும் வண்டுகள் கரிய நிறம் உடைமையால் தட்டான் தீச் சட்டியில் உள்ள கரி போல் விளங்கு வதாகக் கூறினார். இதனை 'வண்டு கரி ஒக்கும்' என்ற தொடர் விளக்குகிறது.

கங்கை அப் பொன் செய்விக்கும் மின் ஒக்கும் - கங்கை ஆனவள் பொன் அணியைச் செய்து கொள்ளும் பெண்ணைப் போல் விளங்கும். மின் - மின்னலைப் போன்ற பெண்; உவமை ஆகுபெயர். பொன் - பொன் அணி.

கிழக் கொல்லன் ஒக்கும் அவ்வெண்பிறையே - பெருமானின் சடையில் உள்ள வெண்மையான பிறைச்சந்திரன் கிழக் கொல்லன் ஆவான்.

பிறைச்சந்திரன் வெண்மையான நிறத்தாலும் உடல் வளைவாய் இருப்பதாலும் நரையும் கூனும் உடைய கிழத் தட்டானை ஒத்தது என்றார். (39)

## இறைவரின் இரு கொங்கை மலை

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

347. வெண்ணிலவு கொழித்து எறிக்கும் செஞ்சடைமோ
லியர்வீதி விடங்கர் ஆரூர்க்
கண்ணுதல்பொன் புயவரைசேர் தனவரைகள்
இரண்டுஅவற்றுள் கனக மேரு
அண்ணல்புய வரைக்குடைந்து குழைந்துதலை
வணங்கிடுநம் அன்னை பார
வண்ணமுலைத் தடவரைஅவ் வரைகுழையப்
பொருவதல்லால் வணங்கி டாதே. (40)

**தெளிவுரை**

வெண்மையான நிலவு ஒளியைப் பரப்பும் சிவந்த சடையையே முடியாய் உடையவரும் வீதி விடங்கரும் ஆன ஆரூரர் நெற்றிக் கண்ணையுடைய பெருமானுடைய அழகிய தோள்களில் சேரும் தனவரைகள் இரண்டு. அவற்றுள் ஒன்று பொன் மயமான மேருமலை எம் பெருமானின் தோள் மலைக்குத் தோற்றுக் குழைந்து நாணித் தலை வணங்கும். நம் தாயான உமை யம்மையின் அழகிய முலையான பெரிய மலை பெருமானின் தோள் மலை குழையப் போரிடுவதே அல்லாது வணங்காது.

**விளக்கம்**

சிவபெருமானுக்கு உரிய தன மலைகள் இரண்டு. அவற்றுள் ஒரு மலை அவருடைய தோளால் குழையும். மற்றொன்று அவர் தோளைக் குழைந்திடச் செய்யும் என்க.

வெண்ணிலவு கொழித்து எறிக்கும் - வெண்மையான நிலவு ஒளி வீசும். செஞ்சடை மோலியர் - சிவந்தை சடையை முடியாக உடைய சிவபெருமான். மோலி - முடி; மகுடம். மௌலி என்பதும் அது.

பொன் புயவரை சேர் - தோளாகிய பொன் மலையைச் சேர்கின்ற. தனவரை - பொன்னாகிய மலை; கொங்கையாகிய மலை. கனக மேரு - தோளாகிய மலை. உடைந்து - தோற்று. மேரு வில்லானதால் குழைந்துதலை வணங்கிடும் என்றார். அவ்வாறு வளைந்தமைக்கு அவர் தோள் மலைக்குத் தோற்று வணங்கியதாக வேறொரு காரணத்தைக் கூறுகிறார். அவ்வரை - அந்தத் தோளாகிய மலை. குழைய - தோற்க; வணங்க. பொருவது அல்லால் - போரிடலே அல்லாது; மோதுவதே அல்லாது. வணங்கிடாது - தோற்காது; நிமிர்ந்து நிற்கும்.

அம்மை தழுவ எம்பிரான் குழைந்த நிகழ்வு காஞ்சியில் நிகழ்ந்தது. (40)

## நமர்காள் இறைஞ்சுமின்

### நேரிசை ஆசிரியப்பா

348. வண்டுகூட் டுண்ண நுண்துளி பிலிற்றித்
தண்தேன் உறைக்கும் தடமலர்ப் பொதும்பரின்
விழுக்குலை தெறிப்ப விண்புலத் தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகின்
5 செடிபடு முல்லைக் கொடிபடர்ந்து ஏறித்
தலைவிரித் தன்ன கிளைதொறும் பணைத்து
மறிந்து கீழ் விழுந்துஅந் நறுந்துணர்க் கொடிகள்
நாற்றிசைப் புறத்து நான்றன மடிந்து
தாற்றிளங் கதலித் தண்டினில் படரஅப்
10 பைங்குலைக் கமுகின் படர்சிறை விரித்தொரு
கண்செய் கூந்தல் களிமயில் நடிப்ப
நெடுந்தாள் மந்திகள் குடங்கையின் தூக்கி

முள்புறக் கனிகள் தாக்கக் கொட்புறும்
வானரம் ஒன்று வருக்கைத் தீங்கனி
15 தான்எடுத்து ஏந்துபு தலைமேற் கொண்டு
மந்திகள் தொடர மருண்டுமற்று அந்தப்
பைந்துணர்க் கொடியின் படர்தரு தோற்றம்
வடஞ்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்து
அணங்குஅனாள் ஒருத்தி ஆடினள் நிற்பப்
20 பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்
குடந்தலைக் கொண்டுஒரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனின் நடக்கும் வண்ணமது ஏய்க்கும்
பூம்பணை மருதத் தீம்புனல் கமலைத்
திருநகர் புரக்கும் கருணைஅம் கடவுள்
25 அன்புஎனும் மந்தரத்து ஆசை நாண் பிணித்து
வண்துழாய் முகுந்தன் மதித்தனன் வருந்த
அருட்பெருங் கடலில் தோன்றி விருப்பொடும்
இந்திரன் வேண்ட உம்பர்நாட்டு எய்தி
அந்தம் இல் திருவொடு மரசவற்கு உதவி
30 ஒருகோல் ஓச்சி இருநிலம் புரப்பான்
திசைதிசை உருட்டும் திகிரியன் சென்ற
முசுகுந் தனுக்கு முன்நின் றாங்குப்
பொன்உலகு இழிந்து புடவியின் தோன்றி
மன்உயிர்க்கு இன்அருள் வழங்குதும் யாம்என
மேவர வழங்குமால் மன்ற
யாவரும் நமர்காள் இறைஞ்சுமின் நீரே. (41)

**தெளிவுரை**

(1-22) வண்டுகள் ஒன்று கூடிக் கொள்ளையிட நுண்மை யான குளிர்ந்த தேன் துளிக்கும் பெரிய பூஞ்சோலையில் சிறந்த குலை தெறிக்கும்படி வானவர்க்குப் பாக்குக் காயை ஏந்துகின்ற பசுமையான இளைய பாக்கு மரம். அம் மரத்தின் மீது செடியைப் போல் பரவிப் படர்ந்த முல்லைக் கொடி ஏறித், தலையை விரித்தாற்போன்ற கிளை தோறும் - மட்டை தோறும் - பருத்து

மடங்கிக் கீழே விழுந்து அந்த நறுமணம் உடைய பூங் கொத்தினை உடைய கொடிகள் நான்கு திசைகளிலும் தொங்கினவாய் வளைந்து, கீழே குலைகளையுடைய வாழைத் தண்டில் படரும். அந்தப் பைங்குலைப் பாக்கு மரத்தின் படரும் சிறகு விரித்து ஒப்பற்ற கண்களையுடைய தோகை பொருந்திய மயில்கள் நடிக்கும். பெண் குரங்குகள் முள்ளைப் புறத்தில் உடைய பலாப் பழத்தைத் தம் உள்ளங் கையில் எடுத்து அதை அடிக்கும். சுழன்று வருந்தும் ஆண் குரங்கு ஒன்று பலாப்பழத்தை தான் எடுத்தபடி ஏந்தித் தலையின்மீது வைத்துக் கொண்டு தன்னைப் பெண் குரங்குகள் தொடர்ந்து வர, மயங்கிக் கமுக மரத்தினின்று தாழ்ந்து வாழை மரத்தில் படர்ந்த முல்லைக் கொடியில் செல்லும். அந்தக் காட்சி, கயிறு சூழ்ந்து கிடந்த நீண்ட பெரிய கம்பத்தில் பெண் தெய்வத்தைப் போன்ற பெண் ஒருத்தி ஆடியபடி நிற்க, பெரிய பறையைத் தாங்கிப் பக்கத்தில் இருந்து வாசிக்க, குடத்தைத் தலையில் எடுத்துக் கொண்டு ஒரு கழைக் கூத்தாடி கயிற்றில் நடக்கின்ற காட்சியைப் போல விளங்கும்.

(23-36) அழகிய வயல்களையுடைய இனிய நீர் பொருந்திய திருவாரூர்த் திருநகரைக் காக்கும் அருள் நிறைந்த கடவுளான சிவபெருமான், அன்பு என்ற மந்தர மலையில் ஆசை என்ற கயிற்றைக் கட்டி வளப்பம் உடைய துளசியை அணிந்த திருமால் கடைந்து வருந்த அரிய பெரிய அருட் கடலில் தோன்றி னார். விருப்பத்தோடும், இந்திரன் வேண்டத் தேவர் நாட்டினை அடைந்தார். எல்லையில்லாத செல்வத்துடன் அந்த மன்னனுக்கு உதவி, ஒப்பில்லாத செங்கோல் செலுத்திப் பெரிய வுலகத்தைக் காத்தற் பொருட்டுப் பல திக்குகளிலும் செலுத்தும் ஆணைச் சக்கரத்தை உடைய பெருமன்னனாய் விளங்கிய முசுகுந்தன் என்பானுக்குத் தேவர் உலகத்தினின்று இறங்கி இம்மண் உலகத்தில் தோன்றி உயிர்க் கூட்டங்களோடு யாம் இனிய அருளை வழங்குவோம் என்று விரும்பி வந்து அருள் கடவுள் கருணையை வழங்குவார். ஆதலால் நம்மவர்களே நீவிர் யாவரும் அவரை வணங்குவீராக!

**விளக்கம்**

(1-22 அடிகள் மலர்ச் சோலையில் நிகழும் காட்சியை விளக்குகின்றன.)

(1-9) வண்டு கூட்டுண்ண - வண்டுகள் கொள்ளையிட. நுண்டுளி - நுண்மை + துளி; நுட்பமான துளி; சிறிய துளி. பிலிற்றி - சிந்தி. தண்டேன் - குளிர்ந்த தேன். உறைக்கும் - துளிக்கும். தடமலர்ப் பொதும்பர் - மலர்கள் பொருந்திய பெரிய சோலை. பொதும்பர் - மரச்செறிவு. விழுக்குலை - சிறந்த குலை. தெறிப்ப - தெறிக்கும்படி. விண்புலத்தவர்க்கு - தேவர்க்கு. பழுக்காய் - பாக்கு. பச்சிளங் கமுகு - பசிய இளைய பாக்கு. செடிபடு முல்லைக் கொடி - செடியைப் போலப் பரந்து வளர்ந்த முல்லைக் கொடி. சோலையில் உள்ள பாக்கு மரத்தில் முல்லைக் கொடி படர்ந்து ஏறி.

தலைவிரித்தன்ன - தலையை விரித்தது போல். கிளை - பாக்கு மரப்பட்டை. பணைத்து - பருத்து. மறிந்து கீழ் விழுந்து - மடிந்து கீழே விழுந்து. நறுந்துணர்க் கொடிகள் - நறுமணம் உடைய மலர்க் கொத்துகளையுடைய கொடிகள். நான்றன மடிந்து - தொங்கி வளைந்து. தாற்று இளங்கதலி - குலையையுடைய இளைய வாழை. தண்டு - மரம். படர - பரவிப் படர.

முல்லைக் கொடி பாக்கு மரத்தில் ஏறி அதன் பட்டைகளில் பொருந்திப் பருத்து மடிந்து கீழே விழுந்து வளைந்து வாழை மரத்தில் படர்ந்தது.

(10-22) பைங்குலை - பசுமையான குலை. கமுகில் - பாக்கு மரத்தில். சிறை - சிறகு. படர் - பக்கங்களில் பரவிய. கண் செய் கூந்தல் - கண்களையுடைய தோகையைப் பெற்ற.• கூந்தல் - தோகை. களிமயில் - மகிழ்ந்து ஆடும் மயில்.

பாக்கு மரத்தில் மயில்கள் ஆடின.

மந்திகள் - பெண் குரங்குகள். குடங்கை - உள்ளங்கை. தூக்கி - எடுத்து. முட்புறக் கனிகள் தாக்க - முள்ளை புறத்தே உடைய பலாப்பழத்தில் அடிக்க.

பெண்குரங்குகள் பலாக்கனியை அடித்தன. குரங்கின் இயல்பு அது. கொட்புறும் - சுழன்று வரும். வானரம் - ஆண் குரங்கு. வருக்கைத் தீங்கனி - பலாப்பழம்.

ஏந்துபு - ஏந்தி; 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

அந்தப் பைந்துணர்க் கொடியில் - கமுக மரத்திலிருந்து தாழ்ந்து வாழை மரத்தின் மேல் படர்ந்த முல்லைக் கொடியில். படர்தரு தோற்றம் - படரும் காட்சி.

மந்திகள் தொடர - பெண்குரங்குகள் பின் தொடர்ந்து வர.

வடம் - கயிறு. நெடும் பெரும் கம்பம் - நீண்ட பெரிய தூண். அணங்கு - தீண்டி வருத்தும் பெண் தெய்வம். ஆடினள் நிற்ப - ஆட.

பெரும்பணை - பெரிய பறை. மருங்கினர் கொட்ட - நெருங்கி வாசிக்க. குடம் தலைக் கொண்டு - குடத்தைத் தலையில் எடுத்துக் கொண்டு. கழைக் கூத்தன் - கழைக் கூத்தாடி. வடந்தனில் நடக்கும் - கயிற்றின் மீது நடக்கும். ஏய்க்கும் - ஒக்கும்.

பாக்கு மரத்துக்கு நீண்ட கம்பமும், வாழை மரத்துக்குச் சுற்றிலும் அடிக்கப்பட்ட முளைகளும், இடையே படர்ந்த முல்லைக் கொடிக்கு, முளைக்கும் தூணுக்கும் இடையே கட்டப் பட்ட கயிறும், கமுகின் மேல் ஆடும் மயிலுக்குக் கம்பத்தின் மீது நடிக்கும் பெண்ணும் பலாக்கனிகளைக் கையில் எடுத்து அடிக்கும் மந்திகளுக்குப் பறை அடிப்போரும், தலையில் பலாப்பழத்தைக் கொண்டு முல்லைக் கொடியின் மீது நடந்து செல்லும் ஆண் குரங்குக்குக் குடத்தைத் தலையில் கொண்டு வடத்தின் மேல் நடக்கும் கழைக் கூத்தாடியும் உவமைகள்.

பெரும்பணை - பெரிய வயல். மருதம் - மருதநிலம். தீம் புனல் - இனிய நீர். புரக்கும் - பாதுகாக்கும்.

அன்பு எனும் மந்தரம் - அன்பாகிய மலை. ஆசை நாண் - ஆசை என்ற கயிறு. பிணித்து - கட்டி. வண்டுழாய் முகுந்தன் -

வளம் உடைய துழாய் மாலையைச் சூடும் திருமால். மதித்தனன் வருந்த - கடைந்து வருந்த. அருட்பெருங்கடலில் - அருளாகிய பெரிய கடலில். தோன்றி - சிவபெருமான் தோன்றி. இந்திரன் வேண்ட - இந்திரன் சிவபெருமானை வேண்டிக் கொள்ள. இந்திரன் சிவபெருமானைத் தன் நாட்டுக்கு வரவேண்டும் என வேண்டிக் கொண்டான். உம்பர் நாடு - பொன்னுலகு. அந்தம் இல் திரு - எல்லை அற்ற செல்வம். அரசற்கு - மன்னனான முசுகுந்தனுக்கு. புரப்பான் - பாதுகாக்க. திகிரியன் - பெரு மன்னன். முசுகுந்தன் - சோழ மன்னன். அவன் இந்திரனிடம் இறைவனைத் தன் நாட்டுக்கு அனுப்ப வேண்டும் என வேண்ட அவனும் அங்ஙனமே அளித்தான்.

பொன்னுலகு இழிந்து - தேவர் உலகினின்று இழிந்து. புடவியில் - மண் உலகத்தில். தோன்றி - வந்து. இன் அருள் வழங்குதும் யாம் என் - இனிய அருளை அளிப்போம் யாம் என்று. மேவர - விரும்ப. கடவுள் வழங்கும். இறைஞ்சுமின் - வணங்குங்கள். நமர்காள் - நம்மவர்களே. வழங்குமால் - வழங்கும் + ஆல்; ஆல் - அசை.

இங்குத் தியாகர் திருமாலிடத்தினின்று திருவாரூர்க்கு எழுந்தருளிய வரலாறு கூறப்படுகின்றது.

திருமால் அன்பாகிய மலையில் ஆசை என்ற கயிற்றைக் கட்டிக் கடைந்தார். அப்போது அருளாகிய கடலில் அமுதம் போல் சிவபெருமான் தோன்றினார். இந்திரன் வேண்டுகோளால் தியாகப் பெருமான் தேவர் உலகத்துக்குச் சென்றார். அங்கிருந்து அவ்விந்திரனால் தரப் பெற்று முசுகுந்தனுக்கு அருள் செய்யப் பூவுலகத்துக்கு வந்தருளினார். (41)

*திருவாரூர் நான்மணிமாலை மூலமும், தெளிவுரையும் விளக்கவுரையும் முற்றுப் பெற்றன.*